THE SECRETS OF CHIMNEYS

Agatha Christie

# அந்தப் புதையல் எங்கே?



அகதா கிறிஸ்டி

கண்ணதாசன் பதிப்பகம்



# அந்தப் புதையல் எங்கே?

*(The Secrets of Chimeys)*

அகதா கிறிஸ்டி

தமிழில்:

**கொரட்டூர் கே.என்.ஸ்ரீனிவாஸ்**

**கண்ணதாசன் பதிப்பகம்**

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017
போன் : 2433 2682

*கிளைகள்:* மதுரை ❖ பாண்டி ❖ கோவை ❖ வேலூர்

கண்ணதாசன் பதிப்பக வெளியீடு எண்: 641
முதற் பதிப்பு : ஜூலை, 2010


E-mail: kannadhasanpathippagam@gmail com
Our website : www.kannadhasanpathippagam.com

பதிப்பாசிரியர் - **காந்தி கண்ணதாசன்**



*Published in arrangement with* **Agatha Christie Ltd, a Chorion Company U.K.**

**விலை : 150/-**

**ANTHA PUTHAIYAL ENGE?** - Tamil

Translated from the English Original **'The Secrets of Chimeys'**

- Written by : **Agatha Christie**
- Translated by : **Dr. Korattur K.N. Srinivas**
- First Edition : July, 2010
- Publishing Editor : **GANDHI KANNADHASAN**
- Published by : **KANNADHASAN PATHIPPAGAM**
  23, Kannadhasan Salai, T. Nagar, Chennai - 17.
  Ph: 2433 2682, 2433 8712

ISBN : 978-81-8402-585-9

- Our Branches
  - No. 1212, Range Gowder Street, **Coimbatore - 641 001.** Ph: 0422-2479774
  - No.1, Annai Complex, III Street, Vasantha Nagar, **Madurai - 625 003.** Ph. 0452 - 2373793, 2373180
  - No. 37, Bharathy Street, **Puducherry - 605 001.** Ph: 0413-4200143
  - No. 32 & 33, Old Bus Stand, Municipal New Shopping Complex, Ist Floor, **Vellore - 632 004.** Ph: 0416 - 2223312
- Our Bankers : State Bank of India, T. Nagar, Chennai-17.

---

- Laser Typeset : **SIVAM'S**, Phone : 9444232005
- Printed at : **PTS Bind Graphics**, Chennai-5. Ph: 9840529974

# மொழிபெயர்ப்பாசிரியரின் உரை

சிம்னீஸ் எனும் மாளிகையைப் பின்னணியில் கொண்டு அகதா கிறிஸ்டி தந்துள்ள நாவல்களில் ஒன்றான The Secrets of Chimneys நாவலே நேயர்களின் கைகளில் 'அந்தப் புதையல் எங்கே?' என்று ரீமேக் ஆகி அமர்ந்துள்ளது.

இளைய காளை ஒருவன் எதிர்பாரா விதமாக வெளியுறவுத் துறையின் ரகசியம் குறித்து ஒரு கசிவு, ப்ளாக் - மெயில் மற்றும் இவையிரண்டையும் இணைக்கும் ஒரு கொலை ஆகியவற்றில் சிக்கிக் கொண்டு விடுகின்றான்.

இவன் எதற்கும் அஞ்சா நெஞ்சன் என்பது ஒரு ப்ளஸ் பாயிண்ட். இப்படியெல்லாம் கசமுசாவென்று எதிலாவது அகப்பட்டுக் கொண்டு, பிறகு, இதற்கெல்லாம் காரணம் யார் என்று குற்றவாளியைத் தேடி துப்பறிய வேண்டும் என்பது இவனது நீண்ட நாள் அவா.

இதை இந்த சந்தர்ப்பத்தில் தீர்த்துக் கொள்கின்றான் இந்த இளையவன்.

கதையோடு ஒத்து வரும் திருப்பங்களும் முடிச்சுகளும் மிக அழகாக அகதாவால் வேயப்பட்டுள்ளன. அவற்றை அவர் அவிழ்க்கும் விதம், விநோதம்.

ஒரு வாழ்க்கை சரிதம் - அதனை பாதுகாக்கப் படும்பாடு, ஒரு கொலை - அதற்கான துப்பாக்கி தரும் திருப்பங்கள், மறைக்கப்பட்டுள்ள அரசாங்க சங்கேத குறிப்புகள் - அப்புதையலைக் கண்டுபிடிக்கும் மேதமை...

இத்தனை துப்பறிதல்கள் உண்டு இக்கதையில்.

அனைத்தும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து சுவார்ஸ்யமாய் குழப்பாமல் நகர்வது, அகதாவின் திரைக்கதை திறமைக்கு ஓர் எடுத்துக்காட்டு.

அந்தப் புதையல் எங்கே?

*கதையின் மையப்பகுதிகளைப் படபடப்பாய் நான் மொழிபெயர்த்த அனுபவம் மாறாது பரபரப்பாய் உங்கள் கைகளில் தருகிறேன்...*




*அன்புடன்*

**முனைவர் கொரட்டூர் கே.என்.ஸ்ரீனிவாஸ், Ph.D.**

*மனை எண் 252, இரண்டாவது தெரு,*

*கொரட்டூர், சென்னை - 600 080*

*தொலைபேசி: 044 - 2635 8948*

*மின்னஞ்சல்:* srinivaskns@yahoo.co.in

# முக்கிய கதாபாத்திரங்கள்

| | |
|---|---|
| *சிம்னீஸ்* | - *கதை நடைபெறும் மாளிகை* |
| *லார்ட் கேட்டர்ஹாம்* | - *சிம்னீஸின் சொந்தக்காரர்* |
| *மிஸ் பண்டில்* | - *லார்ட் கேட்டர்ஹாமின் மகள்* |
| *ஜார்ஜ் லொமெக்ஸ்* | - *வெளியுறவு அமைச்சகத் தலைவர்* |
| *பில் எவர்ஸ்லே* | - *ஜார்ஜின் காரியதரிசி* |
| *ஜோ (ஆண்டனி கேட்)* | - *வீரதீர சாகசம் தேடும் இளைய வாலிபன்* |
| *ஓல்ட் ஜிம்மி மேக்ரத் (ஜேம்ஸ்)* | - *ஆண்டனியின் நண்பன்* |
| *விர்ஜீனியா ரேவல்* | - *பணக்காரி - ஆண்டனியின் காதலி* |
| *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* | - *பால்கன் பகுதியின் ஒரு மாநிலம்* |
| *கவுண்ட் ஸ்டைல்பிச்* | - *பாபோஃப்ஸ்கி நகரத்தின் பிரபு* |
| *ஓப்லோவிட்ச் (இளவரசர் மைக்கேல்)* | - *இளவரசர்* |
| *பேரான் லாலோப்ரெட்ஜ்ஸெல்* | - *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவைச் சேர்ந்தவள்* |
| *கியூசப் மணாலி* | - *ஓட்டல் வெயிட்டர்* |

*மற்றும் மிஸ்டர் ஹெர்மன் ஐஸக் ஸ்டீன், கேப்டன் ஆன்ட்ரஸ்ஸி, மேடம் ப்ரன், ப்ரூட்டயில் பிரதேசத்து ராணி, இன்ஸ்பெக்டர் பேட்க் - ஒர்த்தி, மிஸ்டர் ஹிராம் ஃபிஷ், ஸ்காட்லாண்டு யார்ட் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில், பிரான்ஸ் துப்பறியும் அதிகாரி லெமன் ஆகியோர்.*

# பொருளடக்கம்

அத்தியாயம் 1

# ஆண்டனி கேட் அறிமுகம்

"ஹே, *ஜென்டில்மேன் ஜோ!"*

*"ஏய், ஹலோ! இது, ஓல்ட் ஜிம்மி மேக்ரத் இல்லே!"*

*சோகை தட்டியது போல் சோர்ந்து ஆழ்ந்து இருக்கும் ஏழு பெண்கள். அவர்களுடன் இருக்கும் வியர்த்து விறுவிறுத்துப் போன அந்த மூன்று ஆண்கள்... மாளிகை டூர் கம்பெனியால் அனுப்பப்பட்டிருக்கும் இவர்களனைவரும் போதுமான ஈடுபாடு கொடுத்து கவனித்தனர். இவர்களுடைய மிஸ்டர் ஆண்டனி கேட், அவருடைய பழைய நண்பர் ஒருவரைப்பார்த்திருப்பது வெளிப்படையாக தெரிகிறது. இவர்கள் பத்து பேருமே மிஸ்டர் ஆண்டனி கேட்-ஐப் பிரமிப்பவர்கள். அவரது கட்டுக்கடங்கா உயரம், ஸ்லிம்மாக அசத்தும் உடல்வாகு, சூரியனாய் தகதகக்கும் முகம், இவர்களுக்குள் மூளும் பிரச்சினைகளையெல்லாம் அவருக்கே உரித்தாக்கியிருக்கும் லகுவான குணாதிசயத்தால் பொறி கிளம்பாமல் தீர்த்துத் தரும் அழகு - என எல்லாமே சீரியவைதான். ஆனால் தற்போது அறிமுகமாகும் அவருடைய நண்பர் விசித்திரமாய் தோன்றினார். மிஸ்டர் கேட்டின் உசரத்துக்கேயிருந்தாலும் அவரது தடிமனான புறத்தோலும், ஒழுங்கற்ற உடலமைப்பும் அவருக்கு அழகு சேர்க்கவில்லை. புத்தகங்களில் மிகச் சாதாரணமாக வர்ணிக்கப்படும் பாதசாரி போன்ற அமைப்பு, இருந்தாலும் இன்ட்ரஸ்டிங்தான். டூரிஸ்ட்டுகள் பத்து பேருமே புலவாயோ என்றாலே கசக்கும்படி இப்போது ஆகிவிட்டார்கள். சூரியன் தாளவே முடியாத வண்ணம் கொளுத்துவது ஒரு புறம்... அசௌகரியம் மிக்கதாய் அமைந்து விட்ட*

ஓட்டல் மறுபுறம்.மெட்டோபாஸ் பகுதிக்குத் தப்பித்து ஓட மோட்டார் வண்டி வந்து சேரும் வரை இங்கேயிருந்து தப்பிக்கவோ அல்லது வேறு ஏதாவது இடத்தைப் போய் பார்த்து நேரங்கழிக்கவோ வழியில்லை என்றே பட்டது. இந்த 'போரடிக்கும்' சூழலில் அதிர்ஷ்டவசமாக மிஸ்டர் ஆண்டனி கேட் அழகிய படங்கள் அடங்கிய போஸ்ட் கார்டுகளை ஆலோசித்திருந்தார். அப்படிப்பட்ட அழகுமிகு படங்கள் அதிகம் தரப்பட்டன.

ஆண்டனி கேட்டும் அவரது நண்பரும் சற்றுத் தள்ளி நகர்ந்துக் கொண்டார்கள்.

''என்னடாயிது... இப்படிப்பட்ட ஒரு பொம்பளைக் கூட்டத்துல நீ என்ன பண்ணிக்கிட்டிருக்கே?'' அதிகாரமாய் கேட்டது, மேக்ரத். ''ஏதாவது அந்தப்புரம் ஆரம்பிக்கப் போறியா?''

முகஞ்சுளித்த ஆண்டனி, ''இதுங்களை வெச்சுக்கிட்டு, ஆங்..!'' என்றார். ''இதுங்களை நல்லா பார்த்துட்டுத்தானே இந்தக் கேள்வியைக் கேட்கிறீங்க?''

''பார்த்தேன், பார்த்தேன். உனக்கு கண் பார்வை மங்க ஆரம்பிச்சாச்சுன்னுதான் நினைக்க முடிஞ்சது!''

''என் பார்வை அப்ப ஸைட் அடிச்சபோது எப்படியிருந்ததோ அப்படியேதானிருக்கு. இது மாளிகை டூர் கம்பெனி சுற்றுலா. நான் அதுல இருக்கேன்.''

''கண்றாவி. அதுல என்னடா உனக்கு வேலை?''

''பணத் தேவைப்பா எல்லாம். என் குணத்துக்கு இது ஏத்ததே கிடையாதுனு நானே ஒத்துக்கிறேன்.''

''ஆங், அப்புறமெதுக்கு?'' என முகஞ்சுளித்தார் ஜிம்மி. ''பைசா பிரயோஜனம் கிடையாதுடா, நீ.''

இந்த அவதூறை ஒதுக்கித் தள்ளினார் ஆண்டனி. ''இருந்தாலும், நல்லதா ஏதாவது கிடைக்கும். ஆமாம்'' என்றார் நம்பிக்கையாய். ''எனக்குத் தோணுது.''

ஜிம்மி நக்கலாய் உச்சுக் கொட்டினார். ''ஏதாவது ஒரு கலகம் உருவாகிக்கிட்டிருக்குனா, உடனடியாவோ அல்லது கொஞ்சங் காலந் தாழ்த்தியோ நிச்சயமா ஆண்டனி கேடும் அதுல ஓரங்கமா இருப்பான். ஐ

நோ தட்'' என்றார். ''சச்சரவுனா விழுந்தடிச்சுக்கிட்டு ஓடும் குணம் உன் ரத்தத்துலேயே கலந்திருக்கு.''

தற்சமயம் பெருமூச்செறிந்த ஆண்டனி, ''பிதற்றிக்கிட்டு ஊர் சுத்தும் இதுங்களைக் கூட்டிட்டு நான் இப்ப பெரிய கல்லறைக்குப் போகணும்'' என்றார்.

''நல்ல கூட்டம்'' என்றார் ஜிம்மி. ''எல்லாத்தையும் பார்த்துட்டு தொஞ்சுபோய் திரும்பு - எப்படா படுப்பம்னு. அப்ப தான் உனக்கு ஒழியும். நாம ரெண்டு பேரும் தனியாகி சேதியைப் பகிர்ந்துக்கவும் நேரங் கிடைக்கும், ரைட்?''

''ரைட், ஜிம்மி.''

ஆண்டனி அவருடைய மந்தையோடு போய் சேர்ந்துக் கொண்டார். அனைவரிலும் மிக இளையவளான மிஸ் டைலர் அவரை உடனடியாய் மடக்கினாள்: ''என்ன மிஸ்டர் கேட்... பழைய ஃப்ரண்டோ?''

''ஆமா, மிஸ் டைலர். எனது அப்பழுக்கற்ற இளமைக் காலத்தின் முக்கிய நண்பன்.''

'கெக்கெக்கே' என சிரித்தாள் டைலர். ''வயசுப் பருவத்துல அவர் ஜம்முனு இருந்திருப்பார்னு தோணுது.''

''இப்படி நீங்க சொன்னீங்கனு நான் அவர்கிட்டே சொல்லிடறேன்.''

''ஓ, மிஸ்டர் கேட்... கோமாளியா நீங்க? என்ன ஐடியாப்பா உங்களுக்கு! அது சரி... என்ன பேர் சொல்லி அவர் உங்களை அழைச்சாரு?''

''ஹேற, ஜென்டில்மேன் ஜோ!''

''ஆங், ஆங்! அப்ப, உங்க பேர் என்ன ஜோவா?''

''என் பேர் ஆண்டனி அப்படினு உங்களுக்குத் தெரியும்னு நினைக்கிறேன், மிஸ் டைலர்?''

தனது வேலையில் ஆண்டனி நன்கு தேறியிருந்தார். பிரயாணத்துக்குத் தேவையான அனைத்து அடிப்படை வசதிகளையும் இவர்களுக்கு செய்து கொடுப்பதோடு மட்டுமல்லாது, தங்களது மரியாதைக்கு இழுக்கு நேர்ந்து விட்டதாய் வயதான பெருசுகள் எகிறும் போது அவர்களை சமாதானப்படுத்துவது... வயதான பெண்மணிகள், படங்கள் அடங்கிய போஸ்ட் கார்டுகள் வாங்கிக் கொள்ள தேவையான வாய்ப்புகளை உண்டு

பண்ணித் தருவது... அனைவரையும் ஈர்த்து வைக்கும்படி பசப்பாய் பேசுவது... என பல வகைகளில் தேறியிருந்தார். வலிக்காது, இப்போது ஆண்டனி சொன்ன மறுபதிலே அவரது தேர்ச்சிக்கு ஒரு சிறந்த உதாரணம்.

மிஸ் டைலர் தனது கேள்விகளாலான முற்றுகைக்கு இப்போது மீண்டும் திரும்பியிருந்தாள். ''அப்படினா அவர் ஏன் உங்களை ஜோனு கூப்பிடணும்?''

''ஏன்னா, அது என் பேர் கிடையாது.''

''ஐயய்யோ... இது என்ன பதில்? சரி... எதுக்காக ஜென்டில்மேன் ஜோ?''

''மேற்சொன்ன அதே காரணம்தான்.''

''ஓ, மிஸ்டர் கேட்'' என இதற்கு எதிர்ப்பு காட்டிய டைலர், வருத்தப்பட்டவளாய் பேசினாள். ''அப்படி நீங்க சொல்லவே கூடாது. நேத்து ராத்திரிதான் உங்களுக்கு எத்தகைய ஜென்டில்மேன் தகுதிகள்லாம் இருக்குனு அப்பா பட்டியல் போட்டு சொன்னார்.''

''உங்க அப்பா ரொம்ப கனிவானவராயிருக்கணும், மிஸ் டைலர்.''

''அதுக்கு, நாங்க எல்லாருமே, நீங்க ஒரு சரியான ஜென்டில்மேன் அப்படினு ஆமோதிச்சோம்.''

''எனக்கு தலைகால் புரியாம பண்றீங்க!''

''ஆனா, ரியலி... நாங்க சொல்வது முகஸ்துதி கிடையாது... நெஜந்தான்.''

''கனிவான இதயங்களின் அருகாமைக்கு முன்னாடி எத்தனை சொத்து சுகமிருந்தாலும் அது ஈடாகாது'' என்ற ஆண்டனி, லஞ்ச் நேரம் வந்து விட்டது என்பதை உற்சாகம் கரை புரள சொன்னார்.

''ஆஹ்...கவிதை நயம் பொங்க பேசறீங்க, கேட். கவிதை நிறைய வருமோ?''

''கொஞ்சம் கொஞ்சம். 'எரியும் டேபிள்ல நின்னான் பையன்... உஷ்ணம் தாங்காம இப்படி அப்படி ஓடினான்' இதை அடிக்கடி பாடுவேன்; அவ்ளோதான். உங்களுக்கு வேணும்னா ஆக்ஷனோட! 'எரியும் டேபிள்ல நின்னான் பையன்..' உஷ், உஷ், உஷ்.. ஆ.. ஆ.. ஆ..! (ஜ்வாலை அடிக்குதில்லே!) 'உஷ்ணம் தாங்காம இப்படி இப்படி ஓடினான்!

இதுக்காக நான்அடிபட்ட நாய் போல் நாலு திசையிலும் ஓடுவேன் - இப்படி!''

மிஸ் டைலர் சிரிப்பால் உடைந்தாள். கத்திக் கதறி சிரித்தாள். ''ஏய், ஏய்... எல்லாரும் இங்கே வந்து கவனிங்க, மிஸ்டர் கேட் கோமாளியாகிட்டார்.''

''அட விடுங்க! இப்படி வாங்க, ஒரு காபி அடிப்போம். அடுத்த தெருவுல ஒரு சூப்பர் கஃபே இருக்கு.''

''இந்த செலவும் டூர்ல அடங்கிடுமில்லே?'' - அங்கிருந்த மிஸஸ் கால்டிகாட் ஆழ்ந்த குரலில் சொன்னார்.

''தனியா நழுவி போய் காபி சாப்பிட்டா...'' என்று தனக்கே உரிய அலுவலக குரலில் சிறு அதிகாரமாய் குறிப்பிட்ட ஆண்டனி, ''அது, எக்ஸ்ட்ரா..'' என்றார்.

''கேவலப்படுத்தறீங்கப்பா.''

இதற்கு ''வாழ்க்கையே பணத்தால ஆக்கப்பட்டதுதானே'' என்றார் ஆண்டனி, பழைய உற்சாகத்தோடு.

மிஸஸ் கால்டிகாட்டின் கண்கள் பளபளப்பு கொண்டன. நீரூற்று பொத்துக் கொண்டு பொங்கும் தினுசில் - ''இப்படியொரு பதிலை எதிர்பார்த்தேன்'' என்றார். ''அதனால் தான் காலைல காபி தந்தபோதே அதுல கொஞ்சத்தை எடுத்து தனியா வெச்சுக்கிட்டேன். அதை சுட வெச்சு குடிச்சா அது எனக்குப் போதும் - வாழ்க்கையே பணத்தால ஆக்கப்பட்டது தானே; என்ன சொல்றீங்க?''

மிஸ்டர் மற்றும் மிஸஸ் கால்டிகாட் ஓட்டல் நோக்கி வெற்றி முழக்கத்தோடு திரும்பினார்கள்.

''அடக் கடவுளே'' என்று உதிர்த்தார் ஆண்டனி. ''இந்த உலக ஆக்கத்துக்கு எப்படிப்பட்ட கோமாளிங்கள்லாம் தேவைப்படுது.''

மிச்சமிருந்த அனைவரையும் கஃபே நோக்கி வரிசைப்படுத்தினார் ஆண்டனி. இவரருகிலேயே வருமாறு நடந்த மிஸ் டைலர் தனது தீராத வம்பளப்பைத் தொடர விட்டாள். ''உங்க அந்த நண்பரை நீங்க சந்திச்சு ரொம்ப காலமாகுதோ?''

''ஏழு வருஷத்துக்கும் மேலே.''

''ஆப்பிரிக்காவுலேயா அவர் நட்பு உங்களுக்குக் கெடச்சுது?''

''யெஸ், இங்கே கிடையாது. முதல் முதலா நான் ஜிம்மி மேக்ரத்தைப் பார்த்தபோது,அவரை மூட்டை கட்டி சமைக்கத் தயாரா வெச்சிருந்தாங்க. ஆப்பிரிக்காவின் உட்பகுதிகள்லேயிருக்கும் சில காட்டுவாசிகள் நரமாமிசம் சாப்பிடுபவர்கள், தெரியுமா! சரியான நேரத்துல நாங்க அங்கே போய் சேர்ந்தோம்.''

''அச்சச்சோ, என்ன நடந்தது?''

''சின்ன கைகலப்பு, கடைசியில பிடிச்சோமா விட்டோமா - ஓட்டத்தை!''

''ஓ, மிஸ்டர் கேட். என்ன மாதிரியான வீர தீரசாகச வாழ்க்கையை நீங்க வாழ்ந்திருக்கணும்!''

''ஆயினும் ரொம்ப அமைதியாய்தான் வாழ்ந்தேன்.''

இதனை அந்தப் பெண் நம்பவில்லை என்பது துல்லியமாகவே தெரிந்தது.

★ ★ ★

ஜிம்மி மேக்ரத் வகை வகையான பாட்டில்களை வரிசைப்படுத்தி வைத்துக் கொண்டிருந்த அவரது சின்ன அறைக்குள் ஆண்டனி கேட் நுழைந்தபோது மணி இரவு பத்து. ''நல்லா ஸ்ட்ராங்கா போடுங்க, ஜேம்ஸ்'' என்றார். ''எனக்கு இப்ப அப்படித்தான் வேணும்.''

''உனக்கு ஒரு வெட்டு வெட்டணும்னு இருக்கும்னு எனக்குத் தெரியும்; மை பாய். நீ இப்பப் பார்க்கிற மாதிரி ஒரு வேலையை நான் என் ஜென்மத்துல எடுத்துக்க மாட்டேன், தெரியுமா?''

''பேசாதீங்க. வேற ஒரு வேலையைக் காட்டுங்க. நீங்க காட்டி முடிக்கிறதுக்குள்ளே உடனே அதுக்கு நான் ஜம்ப் பண்றேனா இல்லையானு பாருங்க. அதுவரைக்கும் - ஏதாவது பண்ணி வாழ்ந்து தானே ஆகணும்.''

மேக்ரத் அவராகவே ஒரு கோப்பை முழுக்க நிறைத்தார்... அதனை வெகு பழக்கப்பட்ட தினுசில் பக்கத்திலிருப்பவருக்கு தள்ளினார்... அடுத்து இன்னொரு கோப்பையை நிரப்பினார்... பிறகு சொன்னார்: ''நெஜமா நீ இப்படிப்பட்ட ஒரு நினைப்பிலதான் இருக்கியா, ஸன்?''

''எப்படிப்பட்ட நினைப்பு?''

''இன்னொரு வேலை கிடைச்சா, இப்ப நீ பார்த்துக்கிட்டிருக்கிற இந்த வேலையை உதறி விடும் நினைப்பு.''

''நீங்க தறீங்க, ஆங்? கையில இருக்கும் அந்த ஜாப், தெருத் தெருவா பிச்சையெடுப்பதுனு சொல்லிட மாட்டீங்களே? அப்படித்தான்னா, அதை நீங்களே பிடிச்சுக்குங்க.''

''நான் பிடிச்சேன் - ஆனா அதுல அப்படி ஈர்க்கும் விஷயம் எனக்கெதுவும் படலே. அதனால தான் அதை அப்படியே உனக்கு நான் பார்ஸல் பண்றேன்!''

ஆண்டனி இப்போது சந்தேகம் தொனிக்க முறைத்தார். ''அப்ப நீங்க? ஏதாவது சாயங்கால வகுப்புகள்ல பாடம் கத்துக் கொடுக்கப் போறீங்களா?''

''யாராவது மனமுவந்து என்னைப் பாடம் போதிக்கக் கூப்பிடுவாங்கன்னா நினைக்கிறே?''

''உங்களைப் பற்றி நல்லா தெரிஞ்சிருந்தா - நிச்சயமா, நோ.''

''வம்பு வளக்காம, சொல்றதைக் கவனி. இது ஒரு நல்ல ஜாப். எந்தவிதமான குற்றங் குறையும் இல்லாத வேலை.''

''அதிர்ஷ்டவசமா... இது தென் அமெரிக்காவிலேயா? எனக்கு எப்பவுமே தென் அமெரிக்காவுல ஒரு கண்ணு. அதுல இருக்கிற சின்ன குடியரசுகள் ஒண்ணுல, ஒரு புரட்சி வெடிக்கக் காத்திருக்கு.''

மேக்ரத் கடுப்பாய் முறைத்தார். ''உனக்கு எப்பவுமே இந்தப் புரட்சி கிரட்சியிலே தான் கவனமெல்லாம். ஏதாவது ஒண்ணுல போய் சேர்ந்து கலகம் பண்ணனும்.''

''என் திறமைகள் அங்கு தான் பாராட்டப்படுதுனு நான் நம்பறேன். கவனிச்சுக்குங்க ஜிம்மி... புரட்சிகள் தான் நான் ஜாலியா விரும்பி பண்ணும் பணி - அதனாலதான் அங்கே நான் எடுபடறேன்..''

''எப்படியோ போ, ஆனா இந்த வேலை தென் அமெரிக்காவில எல்லாம் கிடையாது. இங்கிலாந்துல.''

''இங்கிலாந்து? நீண்ட நெடுநாட்களுக்குப் பிறகு பிறந்த நாடு திரும்பும் ஹீரோ, ஆங்?''

''வெல்... இதைப் பற்றி மேற்கொண்டு கேட்க உனக்கு விருப்பமா?''

''நிச்சயமா, நீங்களா ஏன் ஆரம்பிக்க மாட்டீங்கறீங்க என்பது தான் என் வியப்பு.''

''சுருக்கமா - நான் தங்கங்களைப் பின்தொடர்ந்துக்கிட்டிருக்கேன், ஆண்டனி - ரொம்ப உட்புறப் பிரதேசங்கள்ல.''

இப்போது விஸிலடித்த ஆண்டனி அவரைக் கூர்ந்து பார்த்தார். ''உங்களை நான் என்னிக்குத் தெரிஞ்சுக்க ஆரம்பிச்சேனோ அன்னிலேந்து கவனிக்கிறேன் ஜிம்மி... நீங்க எப்பவுமே தங்கத்துப் பின்னால தான், இது உங்களுடைய பிடித்தமான அம்சமாயிருக்கலாம் - ஆனா இது தான் உங்கள் பலஹீனம். எனக்குத் தெரிஞ்ச யாரையும் விட இந்த விஷயத்துல காட்டுத்தனமா இயங்கியிருப்பது, நீங்க தான்.''

''கடைசியில ஜெயிச்சுடுவேன், யூ நோ.''

''வெல்... ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு ஹாபி. உங்களுக்குத் தங்கம், எனக்கு கலவரம்.''

''முழு கதையையும் நான் இப்ப உனக்கு சொல்லிடறேன். *ஹெர்ஸோ -ஸ்லோவாக்கியா* பகுதி உனக்குத் தெரியும்னு நினைக்கிறேன்.''

ஆண்டனி சட்டென கூர்மையானார். ''*ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா?*'' – கேட்ட அவரது குரலில் ஆவல் கலந்த எழுச்சியிருந்தது.

''யெஸ். அதைப் பற்றி ஏதாவது தெரியுமா?''

ஆண்டனி இதற்குப் பதில் தருவதற்கு முன் அங்கு பாராட்டும்படியான ஓர் இடைவெளி விளைந்து நிலைத்தது. பிறகு அவர் மெதுவாய் சொன்னார்:

''எல்லோருக்கும் எத்தனை தெரியுமோ அத்தனை தான் எனக்கும் தெரியும். இது, பால்கனின் ஒரு மாநிலம், இல்லே? (பால்கன் என்பது தென்கிழக்கு இங்கிலாந்து பகுதி). இதன் முக்கிய ஆறுகள் தெரியலே. முக்கிய மலைகள்- இதுவும் தெரியலே; ஆனா நிச்சயமா ஏகமானவை. தலைநகர்: எகரெஸ்ட், மக்கட் தொகை - முக்கியமாய் கொள்ளைக் காரர்கள். கடைசி மகாராஜா - நிகோலஸ் IV, ஏழு வருடங்களுக்கு முன்னால் சதிகாரர்களால் கொலையானவர். அதிலிருந்து குடியரசாகி விட்டது; மொத்தத்துல ஒரு ருசிகரமான இடம்தான்.''

''ஓ.கே. கவுண்ட் ஸ்டைல் - பிச் பற்றி எப்பவாவது கேள்விப் பட்டதுண்டா?''

''கவுண்ட்? நம் பிரிட்டிஷ் நாட்டுல மகாராஜாவுக்கு நிகரான பெரும் உயர் பதவி!'' என்று தனக்குள் விளக்கிக் கொண்ட ஆண்டனி, ''ஹெர்ஸோ -ஸ்லோவாக்கியா பற்றி கேள்விப்படாத பேர்கள் கூட கவுண்ட் ஸ்டைல்பிச் எனும் பேரைக் கேட்ட மாத்திரத்தில் பிரகாசமாகிடுவாங்க'' என்று நச்சடியாய் துவங்கினார். ''பால்கன் மாகாணத்தின் முதிய முதிர்ந்த கிழ - மகன். நாகரீக காலகட்டத்தின் மாபெரும் பிரதிநிதி. இன்னும் தொங்கவிடப்படாத பெரும் வில்லன். யெஸ், எந்த நியூஸ் பேப்பரை நீங்க கையிலெடுத்தாலும் அது தரும் கணிப்புகள், இவையாதானிருக்கும். கூடவே இன்னொண்ணும் உங்களுக்கு நினைவிருக்கட்டும், ஜேம்ஸ்... நீங்களும் நானும் பஸ்பமாகி நீண்ட நெடுங்காலம் ஆகிட்ட பிறகும் கூட கவுண்ட் ஸ்டைல்பிச்நினைவு கூரப்படுவார். யெஸ், மத்திய கிழக்குப் பகுதிகள்ல கடந்த இருபது வருஷமா இடம் பெற்று வரும் ஒவ்வொரு நகர்த்தல்களும், அவற்றின் அடியில் ஓடும் ஆதார மின்சாரமா கொண்டிருப்பது கவுண்ட் ஸ்டைல்பிச்'சைத்தான். அவர் கட்டளையிட்டே காய்களை நகர்த்தும் கமாண்டராயிருந்திருக்கார். தேசபக்தராக இருந்திருக்கார்... பிரதிநிதியாகவும்! இப்படியெல்லாம் சொல்லப்பட்டாலும், நரிபோல தந்திரமா இயங்கி இங்கேயும் அங்கேயும் பிணக்கு ஏற்படுத்துவதுல அவர் ஒரு கிங் என்பதைத் தவிர, நிஜத்துல அவர் என்ன பண்ணிக்கிட்டிருந்தார்னு ஒருத்தருக்குத் தெரியாது. வெல், வெல்.. அவருக்கென்ன இப்ப?''

''அவர், ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின் பிரதம மந்திரியா இருந்தவர் - இந்த காரணத்தாலதான் நான் சொன்னதே.''

''உங்களுக்கு எதுக்கு முக்கியத்துவம் தரணும் எதுக்கு அப்படி தரக் கூடாது என்கிற விவஸ்தையே கிடையாது ஜிம்மி. ஸ்டைல்பிச் பிரதேசத்தை ஒப்பிடும்போது இந்த ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா ஒண்ணுமே கிடையாது. அது, அவர் பிறந்தயிடமா அமைஞ்சது... பொது வாழ்க்கையில அவர் ஈடுபட ஒரு பதவியை உண்டு பண்ணித் தந்துச்சு. இதெல்லாம் இருக்கட்டும்... பய மண்டையைப் போட்டாச்சுன்னு இல்லே நான் நினைச்சுக்கிட்டிருக்கேன்?''

''அவர் போயாச்சு. ரெண்டு மாசத்துக்கு முன்னாடி, பாரீஸ்ல. நான் சொல்லிக்கிட்டிருப்பதாலும் கொஞ்ச வருஷத்துக்கு முன்னாடி நடந்தவை.''

''இப்போதைய கேள்வி..'' என்ற ஆண்டனி கேட்டார்: ''என்கிட்டே நீங்க எதைப் பத்தி சொல்லிக்கிட்டிருக்கீங்க?''

ஆண்டனியிடமிருந்து விளைந்த இந்த அதட்டலை அனுமதித்த ஜிம்மி, அவசரமாய் மேற்கொண்டு போனார்: ''விஷயம் இப்படிப் போகுது: நான் பாரீஸ்ல இருந்தேன் - ரொம்ப கரெக்டா சொல்லணும்னா நாலு வருஷத்துக்கு முன்னாடி. தனிமையான ஓர் இரவுப் பொழுதுல நான் மட்டும் தனியா காலாற அப்படியே நடந்துக்கிட்டிருந்தேன். அந்த சமயத்துல, ஒரு டஸனுக்கும் மேலான ரௌடிப் பயலுக பார்ப்பதற்கு ஜென்டில்மேன் போல தோன்றிய ஒருத்தரைப் போட்டு மொத்து மொத்துனு மொத்தியெடுத்துக்கிட்டு இருந்தானுங்க. பார்த்துக் கடுப்பான நான், அந்தக் களேபரத்துக்குள்ளே நுழைஞ்சு, அந்தப் பயலுங்களை சாத்த ஆரம்பிச்சேன். இதுக்கு முன்னாடி இப்படி அவனுங்க தடாலடியா கோதாவில இறங்கியது கிடையாது போல - பப்ளிக் நடுவுல புகுந்ததும், பயந்து அலறி பனி போல உருகிக் காணாமப் போயிட்டானுங்க.''

''கலக்கிட்டீங்களா ஜேம்ஸ்?'' என்று மிருதுவாய் குறிப்பிட்ட ஆண்டனி, ''பார்க்க நானில்லாம போயிட்டேனே!'' என்றார்.

''ரொம்ப புகழாதே'' என்று பெருந்தன்மையாய் குறிப்பிட்டுக் கொண்ட ஜிம்மி, ''என்னோட முகவரி பெயர் இதையெல்லாம் அந்த மயக்கத்திலும் கேட்டுத் தெரிஞ்சுக்கிட்ட அந்த வயசானவர், மறுநாள் என்னைத் தேடிப் பிடிச்சு வந்து தேங்க்ஸ் பண்ணினார்'' என்றார். ''இந்த நன்றியைக் கூட மேட்டுமையா, ஸ்டைலாத்தான் பண்ணிட்டுப் போனார். அந்த சமயத்துலதான் அவர் கவுண்ட் ஸ்டைல்னு நான் கண்டுபிடிச்சேன்.''

ஆண்டனி ஆமோதித்துத் தலையசைத்தார்: ''யெஸ். கிங் நிக்கோலஸ் கொல்லப்பட்ட பிறகு கவுண்ட், பாரீஸ் போயிட்டார். இவர் அப்புறமா நாட்டுக்குத் திரும்பி ப்ரெஸிடெண்ட் பதவி வகிக்கணும்னு எல்லாரும் வேண்டிக் கேட்டுக்கிட்டாங்க. ஆனா இவர் போகலே. அவரோட ஏகாதிபத்திய கொள்கையை உடும்பா பிடிச்சிக்கிட்டிருந்தார். பால்கனில் நடந்த அத்தனை பின்னணி சமாச்சாரங்களிலும் இவர் கை பிரமாதமா ஓங்கியிருந்தது என்பதுதான் சேதி. ஆழமானவன், மறைந்த கவுண்ட் ஸ்டைல்பிச்.''

''நிக்கோலஸ் IV.... ஆஹ், இவந்தானே கோமாளித்தனமான முறையில பொண்டாட்டிகளை வெச்சிருந்தவன்?'' திடீரென்று கேட்டார் ஜிம்மி.

''யெஸ்'' என ஆமோதித்தார் ஆண்டனி. ''அவனுக்கு அப்படி நடந்ததே... அதிர்ஷ்டக்காரன்! பாரீஸ்ல மேடையேறி ஆடிப் பொழச்ச ஒருத்தியோட ஒதுக்கப்பட்ட மகள் அவ - ஜோடிப் பொருத்தம் இல்லாட்டாலும் கல்யாணம் ஆனா போதும்னு வீட்லேந்துத் தள்ளிக் கழிப்பாங்களே... அப்படிப்பட்ட கலியாணத்துக்குக் கூட பொருத்த மில்லாத இணை. ஆனா இந்த நிக்கோலஸ் அவ காலே கதினு இல்லே விழுந்துக் கிடந்தான். ஸோ, அவ - ராணியாவதற்கு தயார்படுத்தப்பட்டா. கோமாளித்தனமா படும் - ஆனா நடந்ததே. ரோமன் நகரத்து ரத்தம் அவ உடம்புல ஓடுதுனு சொல்லிக்கிட்டு பாபோஃப்ஸ்கி நகரத்தின் ராணியாவே ஆக்கினான். எகரெஸ்ட் கத்தீட்ரல் சர்ச்லதான் அவளை நிக்கோலஸ் கைப்பிடிச்சான் - இதுல விருப்பமேயில்லாத நாலஞ்சு பாதிரியார்கள் மந்திரம் ஓத! ராணியாக முடிசூட்டலும் நடந்தது. ராணி வராகா - இதுதான் அவளுக்கு சூட்டப்பட்ட பட்டத்துப் பேர். மந்திரிகளையெல்லாம் தன்னோட திட்டத்துக்கு ஒத்துக்குமாறு வளைச்சு அடிபணிய வெச்சாலும் அவருக்கிருந்த கீர்த்தியை அவர் பாதுகாக்கத் தவறி விட்டார். *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* மக்கள் பழைய பஞ்சாங்கங்கள்... மேலும், உணர்ச்சிவசப்படும் கூட்டம். அவர்களுடைய ராஜாவும் ராணியும் சிறந்த முன்னுதாரணப் பொருளா இருக்கணும் என்பது அவங்களுடைய தலையாய விருப்பம். இதுல தவறிட்டா தாங்கிக்க மாட்டாங்க. திருப்தியற்ற மக்கள் சஞ்சலமடைஞ்சாங்க. முணுமுணுப்புகள் பெருகின. உணர்ச்சிக் கொந்தளிப்புகள் அடக்கி மறைக்கப்பட்டன. எல்லாம் ஒண்ணா சேர்ந்து ஒரு கடும் சூறாவளியா அரண்மனையைத் தாக்க... ராஜாவையும் ராணியையும் கொன்னுப் போட்டுட்டுக் குடியரசைக் கொண்டு வந்தாங்க. அன்னிலேந்து அது குடியரசா இருந்தாலும் சில பல கொடூரங்கள் இல்லாமலில்லை. தங்கள் கை ஓங்கியேயிருக்குனு காட்டிக்க, அப்பப்ப ப்ரெஸிடெண்டுகளை சதிக் கொலை பண்ணிக்கிட்டிருப்பானுங்க.''

''யெஸ், இதுதான் முழு வரலாறும். நான் திரும்பி ஆப்பிரிக்காவுக்கே வந்தேன். அதுபற்றி அப்புறம் நான் நினைச்சே பார்க்கலே - ரெண்டு வாரத்துக்கு முன்னாடி வரைக்கும். எத்தனை நாட்கள் அது என்னைத் துரத்திக்கிட்டு ஊரூரா அலைஞ்சிருக்கும் என்பது அந்த ஆண்டவனுக்கே வெளிச்சம் - அப்படியொரு பார்ஸல்... சந்தேகப்பட வைக்கும் பார்ஸல் ஒண்ணு எனக்குவந்தது. கவுண்ட் ஸ்டை ஸ்பிச் சமீபத்துல பாரீஸ்ல

காலமானார் என்ற சேதி கொண்ட ஒரு தாள்ல அது கட்டப்பட்டு வந்தது. இந்த பார்ஸல் அவரைப் பற்றிய சரித்திரக் குறிப்புகள் (அல்லது வாழ்க்கைக் குறிப்புனு சொல்வதா..?) அடங்கிய விஷயங்களை உள்ளடக்கியிருந்தது. அதுல ஒரு குறிப்பு. அக்டோபர் 13க்குள்ளே இந்தப் பார்ஸலைக் கொண்டு போய் லண்டனின் ஒரு குறிப்பிட்ட பப்ளிஷர்ங்ககிட்டே நான் கொடுத்துட்டா, எனக்கு ஆயிரம் பவுண்டுகள் தந்துடணும்னு அவனுங்களுக்குக் கட்டளையிடப்பட்டிருக்கு என்றொரு குறிப்பு."

"ஆ... ஆ... ஆயிரம் பவுண்டுகள்? நீங்க ஆயிரம் பவுண்டுகள்னா சொன்னீங்க, ஜிம்மி?"

"அப்படித்தான் சொன்னேன், மை ஸன். இது ஒரு பொய்ப் பித்தலாட்டமா இருக்கக் கூடாதுனு நான் வேண்டாத தெய்வங்களையெல்லாம் வேண்டிக்கிட்டேன். எங்கெல்லாமோ சுத்திட்டு இப்ப கடைசியா பார்ஸல் என்கிட்டே வந்திருப்பதாலே, மேலும் காலத்தை வீணாக்க எனக்கு அவகாசம் கிடையாது. இருந்தாலும் ஒரு சிக்கல். இந்த ட்ரிப்ல வந்திருக்கும் இதுங்களை நான் ஆழமான பகுதிகளுக்குக் கூட்டிட்டுப் போவதா வாக்கு கொடுத்திருக்கேன். இதைப் பண்ணித்தான் ஆகணும். எனக்கு மறுபடியும் இப்படி ஒரு நல்ல கூட்டமோ சான்ஸோ கிடைக்காது."

"உங்களைத் திருத்தவே முடியாது, ஜிம்மி. கற்பனை தங்கத்துக்கு பதிலா கை மேல விழும் ஆயிரம் பவுண்டுகள் அதிர்ஷ்டம்ப்பா..."

"ஒருவேளை இது வெறும் பம்மாத்து வேலையாயிருந்தா? இருந்தாலும், கவனி... நான் கேப்-டவுன் வரைக்கும் போக பிரயாண டிக்கெட், ஏற்பாடுகள் எல்லாமும் தயாரா பண்ணியாச்சு. நான் கௌம்பியாகணும்."

"அப்படியா சங்கதி.." என்ற அந்தோணி எழுந்து ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். "உங்களுடைய திட்டத்தைக் கொஞ்சமா உள்வாங்கிக்கிட்டேன், ஜேம்ஸ். நீங்க, திட்டமிட்டபடி, தங்க வேட்டையில முன்னேறுவீங்க. நான், உங்களுக்காக அந்த ஆயிரம் பவுண்டுகளை வாங்கி வரணும், ஆஹ்... அப்ப எனக்கு அதுல எவ்ளோ வரும்?"

''கால் பங்கு.. என்ன சொல்றே?''

''இருநூற்றைம்பது பவுண்டுகள் -இன்கம் டாக்ஸ் இல்லாம!''

''அப்படியே.''

''டன்! பண்ணிடறேன்! உங்க வயித்தெரிச்சலைக் கொட்டிக்க ஒண்ணு சொல்றேன் - வெறும் நூறு பவுண்டுக்கே நான் ஸலாம் போட்டுக்கிட்டு ஓடிப் போய் செஞ்சு முடிச்சிருப்பேன். அடடா, இப்படி ஏமாந்துட்டோமேனு வெதும்பி படுக்கையில மண்டையைப் போட்டுட மாட்டீங்களே, ஜேம்ஸ் மேக்ரத்?''

''இது - பணம் அல்லவா? சொன்னது சொன்னதுதான்.''

''அப்படியே ஆகட்டும். நான் தயார்.''

இருவரும் கோப்பையை இடித்துக் கொண்டு குடிக்க ஆரம்பித்தார்கள்.

அத்தியாயம் - 2

# வருத்தத்தில் ஒரு பெண்

"ஹேலோ, இதுதான் திட்டம்" என்றான் ஆண்டனி. தனது கோப்பையை முடித்து டேபிளில் வைத்தபடி, "எந்தக் கப்பல்ல பிரயாணம்?"

"கிரானார்த் மாளிகை."

."உங்க பேர்ல் தான் பிரயாணம் முன் பதிவாகியிருக்கனும். ரைட்? ஆக, நான் ஜேம்ஸ் மேக்ரத்தாக பிரயாணம் பண்ணனும். இதுல நாம பாஸ்போர்ட் பிரச்சினை பற்றி சிந்திக்கவே இல்லை."

"பாதகமில்லே. நீயும் நானும் ரெட்டைப் பிறவி போல ஒரே மாதிரியானவங்க கிடையாது. ஒத்துக்கிறேன் - ஆனா நடை உடை பாவனையில, நாம ரெண்டு பேரும் ஒரே மாதிரி தானிருப்போம். உயரம் ஆறடி, கேசம் ப்ரவுன், கண்கள் நீலம், நாசி கூரானது, முகவாய் சாதாரணம்."

"இத்தனை வர்ணிப்பு இருந்தாலும் உங்களுக்கு ஒண்ணே ஒண்ணை மட்டும் ஞாபகப்படுத்த விரும்பறேன். இங்கே என் வேலைக்குப் பல விண்ணப்பங்கள் வந்து சேர்ந்திருந்த போதிலும், என்னோட அட்டகாசமான அழகு தோற்றத்துக்காகவும் நல் நடத்தையாலும்தான் எனக்கு முதலிடம் தந்து என்னை தேர்ந்தெடுத்திருக்காங்க."

ஜிம்மி முறைத்தார். "உன் நல்நடத்தையைத்தான் நான் இன்னிக்குக் காலையில பார்த்தேனே.."

"யூ டெவில்."

ஆண்டனி எழுந்துக் கொண்டார். அறையின் மேலும் கீழுமாய் நடக்கலானார். அவரது புருவங்கள் சுருக்கம் கண்டிருந்தன. அவர் மேற்கொண்டு பேச சில நிமிடங்கள் ஆயின. "ஜிம்மி..." என இறுதியில்

அழைத்தார். ''கவுண்ட் ஸ்டைல் பிச் காலமானது பாரீஸ்ல. ஆனா அந்தக் கையெழுத்துப் பிரதியை பாரீஸ்லேர்ந்து லண்டனுக்கு எதுக்காக ஆப்பிரிக்கா வழியா அனுப்பியிருக்கணும்?''

ஏதும் பிடிப்பின்றி தலையை மறுத்து அசைத்தார் ஜிம்மி. ''ஐ டோண்ட் நோ..''

''அதை அழகான ஒரு சின்ன பார்ஸலா பண்ணி தபால்லயே அனுப்பியிருக்கலாமே.''

''அனுப்பியிருக்கலாம் தான்.'' இந்த ராஜாக்களும் ராணிக்களும் அரசாங்க அதிகாரிகளும், சின்னதா நேரடியா பண்ணக் கூடிய தபால் வேலைகளையெல்லாம் ஒரு பெரிய திருவிழா போல் சடங்கெடுத்துப் பண்ணுவாங்கன்னு எனக்கு நல்லாவே தெரியும். தூதுவன் என்பவனே இதுக்குத்தானே. ஒருத்தன்கிட்டே பத்திரமா கொண்டு போகணும் எனும் அறிவுறுத்தலின் பேரில் ஒரு பக்கக் கடுதாசியை அனுப்புவானுங்க. அது நடுவிலேயே வேற ஒரு ஒற்றன் கைக்கு மாற்றப்படும் - முதலாமவனை யாராவது பின் தொடர்ந்திருந்தா அவன் ஏமாந்துப் போக! இரண்டாவதா கைமாறிய இந்த ஒற்றன் அந்த ஒற்றைத் தாளைத் தூக்கிக்கிட்டுப் பதுங்கிப் பதுங்கி வேற போவான், ச்சே!''

ஜிம்மி கொட்டாவி விட்டார்.

''ராஜாங்க உண்மைகளைச் சொல்வது உங்களுக்கு ருசிகரமா இல்லே போல! அப்ப, கவுண்ட் விஷயத்தையே தொடருவோம். பிரான்ஸிலிருந்து ஆப்பிரிக்கா வழியா இங்கிலாந்து - இதை ஒரு அரசாங்க பட்டுவாடாவா எடுத்துக்கிட்டாகூட சாத்தியப்படாத ஒண்ணாத்தான் தோணுது. இன்னொரு விஷயம்! அப்படி அவர் நிச்சயமா உங்களுக்கு ஆயிரம் பவுண்டுகளை விட்டு வெக்கணும்னு நினைச்சிருந்தா அதுக்கு அழகா அவரோட உயில்லேயே ஓரிடம் தந்திருக்கலாமே. கவுண்ட் ஸ்டைல்பிச் குழப்பவாதியா இருக்கணும்.''

''அப்படியா நீ நினைக்கிறே, ஆங்?''

ஆண்டனி சின்னதாய் முகத்தைச் சுளித்துவிட்டு பட்டென்று கேட்டார்: ''அதுல இருந்த சங்கதிகளை நீங்க படிச்சீங்களா?''

''எதைப் படிச்சிருக்கணும்?''

''அந்தக் கையெழுத்துப் பிரதி.''

''அட கடவுளே, நோ அதையெல்லாம் போய் நான் எதுக்காகப் படிக்கணும்னு நீ எதிர்பார்க்கிறே?''

''படிச்சிருக்கலாமோனு கற்பனை பண்ணிப் பார்த்தேன். தட்ஸ் ஆல்'' என சிரித்தார் ஆண்டனி. ''ஒரு நபரைப் பற்றிய இதுபோன்ற வாழ்க்கை வரலாறுகளெல்லாம் ஏகமாய் பிரச்சினைகளைக் கிளப்பி விடும் தெரியுமோ? புத்தி கெட்டத்தனமா துளிகூட கவலைப்படாம எல்லாத்தையும் சொல்லியிருப்பானுங்க. வாழ்க்கை முழுக்க 'மூடிய முத்து லோகம் பெறும்' என்பது போல பேசாமலேயிருந்துட்டு, மண்டையைப் போட்டுட்ட பிறகு இப்படிப்பட்ட பிரதிகளின் மூலமா விஷயங்களைக் கக்கி, வசதியா பிரச்சினைகளை உண்டு பண்ணிடுங்க. ஆங், ஜிம்மி.. எப்படிப்பட்ட மனுஷன், இந்த கவுண்ட் ஸ்டைல்பிச்? நீங்க அவனைப் பார்த்திருக்கீங்க... பேசியுமிருக்கீங்க... மேலும் மனித இயல்புகள் குறித்து ஜட்ஜ் பண்ண சரியான ஆள், நீங்கதான். அவரை, ஒரு பழிவாங்கும் கிழவனா உங்களால சிந்திக்க முடியுதா?''

ஜிம்மி மறுத்துத் தலையசைத்தார். ''இதை சொல்வது கஷ்டம். கவனி... அந்த மொத ராத்திரியன்று அவர் கூனிக் குறுகி போயிருந்தார். மறுநாள் அனைத்து அதிகாரங்களும் கொண்ட ஆளா எழுந்து, எத்தனை அழகா என்னைப் பாராட்ட முடியுமோ அப்படியெல்லாம் என்னைத் தூக்கி வெச்சார்... நான் என்னையே மறந்துப் போகுமளவுக்கு இதமானவரா நடந்துக்கிட்டார்.''

''அவர் குடிச்சிருந்தபோது உங்க கவனத்தை ஈர்க்கும் வகையில் அவர் எதையும் பேசலே?''

முன் நெற்றியைச் சுருக்கம் விழும் அளவுக்கு நன்கு தூக்கி நினைவுகளைப் பின்னுக்குத் தள்ளிப் போனார் ஜிம்மி. பிறகு இதைப் போய் சொல்லலாமா எனும் சந்தேகம் தொனிக்க, ''தனக்கு கோஹினூர் எங்கேயிருக்குனு தெரியும்னார்'' என்றார்.

''ஓ'' என்றார் ஆண்டனி. ''இது தான் நம்ம எல்லோருக்கும் தெரியுமே'' என்றார். ''அந்த நகையை டவரின் உச்சியிலே வைப்பாங்க இல்லே? கனமான கண்ணாடி மற்றும் இரும்பாலான குண்டு குண்டுக் கம்பிகள் கொண்ட அடைப்புக்கு உள்ளே! அதுலேந்து யாரும் எதையும் எடுத்துடாம

இருக்க விதவிதமான மாறுவேடங்கள்ல அதைச் சுற்றிலும் ஒற்றர்கள்! ஆஹ்ம்!''

''சரியா சொல்றே!'' என்றார் ஜிம்மி.

''இந்தக் கோணத்துல கவுண்ட் ஸ்டைல்பிச் ஏதாவது சொன்னாரா? ஏதாவது நகை களவாடப்பட்டு அது இந்த நகரத்துல இருக்கு என்பது போல...''

ஜிம்மியால் மறுப்பாய் தலையசைக்கத்தான் முடிந்தது.

''ஹம்!'' என்றார் ஆண்டனி. இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்ட அவர் மறுபடியும் அறையின் மேலும் கீழுமாய் நடக்க ஆரம்பித்தார்.

''நீங்க பேப்பரே படிப்பதில்லைனு நினைக்கிறேன்?''

''தெனமும் உக்காந்து படிப்பது கிடையாது'' என்று லகுவாய் சொன்னார் ஜிம்மி மேக்ரத். ''சொல்லப் போனா, எனக்கு ஈடுபாடு ஏற்படுத்தும் வகையில அதுங்கள்ல எதுவும் இருப்பது கிடையாது.''

''நன்றி கடவுளே, என்னை நாகரீமாகனவனா படைச்சதுக்கு'' என்றான் ஆண்டனி. ''சமீப காலமா நியூஸ் பேப்பர்ங்கள்ல ஹெர்ஸோ - ஸ்லோவாக்கிய பிரதேசம் பற்றி நிறைய குறிப்பிடப்படுது. அதுலேயெல்லாம் மறுபடியும் மன்னராட்சி பற்றிய குறிப்புகள் தென்படுது.''

''நிக்கோலஸ் IV, மன்னராட்சி தொடர ஒரு பிள்ளையை விட்டு வைக்கலையே'' என்றார் ஜிம்மி. ''ஆனாலும், முதல் தலைமுறை பெரியப்பா பையன், ரெண்டாவது தலைமுறை சித்தி பையன், மூணாவது தலைமுறை அத்தை பையன், நாலாவது தலைமுறையில் அஞ்சாவது பொண்டாட்டி பையன். இப்படினு பல உறவுகள் தலைதூக்கியிருப்பதும் உண்மையே.''

''ஓஹ்ஹ... அப்படினா ஒரு புது ராஜா கிடைப்பது ஒண்ணும் சிரமம் கிடையாது.''

''துளிகூடனு சேர்த்து சொல்வேன்'' என மறுபதிலளித்தார் ஜிம்மி. ''குடியரசாக இருந்து பார்த்துட்டு ஓய்ஞ்சுட்டானுங்க பயலுங்க. வீராவேசத்தோடு ரத்தம் கொதிக்கக் கொதிக்க உலா வந்து ராஜா ஆட்சியை ருசி கண்டுவிட்ட அந்த நாட்டு மக்களுக்கு ஒரு ப்ரஸிடெண்ட்டைத்

தெரிவு செஞ்சு அமர்த்திட்டு கையையும் காலையும் அடக்கிக்கிட்டு உட்கார்வதென்பது - இயலவே இயலாத ஒன்று. ஆங்.. ராஜா பற்றி பேசும்போது அன்னிக்கு ராத்திரி கவுண்ட் ஸ்டைல்பிச் சிந்திய இன்னொன்னு எனக்கு நினைவுக்கு வருது! அவரைக் குறி வெச்சுக்கிட்டிருக்கிற கூட்டத்தைப் பற்றி அவருக்குத் தெரியும்னார். இது - ராஜா விக்டரின் மக்கள்னார் அவர்.''

''என்ன?'' சட்டென்று ஒரு வட்டமடித்துத் திரும்பினார் ஆண்டனி.

ஒரு சின்ன இறுக்கமான சிரிப்பு ஜிம்மி மேக்ரத்தின் முகத்தில் விளைந்தடங்கியது.

''ஆஹ்.. சின்னதா உலுக்கப்பட்டுட்டே, இல்லையா ஜென்டில்மேன் ஜோ!''

''கழுதை மாதிரி பேசறீங்க, ஜிம்மி. கவனியுங்க... நீங்க ஜஸ்ட் இப்ப, முக்கியமான ஒரு சங்கதியை சொல்லியிருக்கீங்க...''

இப்படிச் சொன்ன ஆண்டனி ஜன்னல் வரை போய் அங்கிருந்தபடி வெளியே பார்த்துக் கொண்டு நின்றார்.

''எப்படியிருந்தாலும் சொல்லு ஆண்டனி... யாரந்த கிங் விக்டர்?'' பதில் தேவை என்பது போல கேட்டார் ஜிம்மி. ''பால்கன் பகுதியின் இன்னொரு ராஜா.''

''நோ'' என மெதுவாய் சொன்னான் ஆண்டனி. ''அப்படிப்பட்ட ராஜா கிடையாது அவன்...''

''அப்ப எப்படிப்பட்டவன் அவன்?''

இங்கு சிறு தாமதம் விளைந்தது. பிறகு ஆண்டனி பேசலானார்.

''அவன் ஒரு பொறுக்கி, ஜிம்மி. பெயர் பெற்ற, உலமறிந்த, மாபெரும் நகைக் கொள்ளைக்காரன். எதுக்கும் அஞ்சாதவன்... எதனாலும் பயமுறுத்த முடியாதவன், அதேசமயம் டார்லிங் அவன்... இனிமையானவன். கிங் விக்டர் என்பது அவன் பாரீஸாரால் அறியப்பட்ட புனை பெயர்! அவன் கூட்டத்தோட தலைமையகம் பாரீஸ்தான். அங்கேதான் அவனைப் புடிச்சாங்க... ஏதோ ஒரு சின்ன வழக்குல ஏழு வருஷத்துக்கு அவனை உள்ளே தள்ளி வெச்சிருந்தாங்க. முக்கியமான பல கொள்ளைகள்ல அவனுக்கெதிரா எதையுமே அங்கே நிரூபிக்க முடியலே. ஸோ.. அவன் சீக்கிரம் வெளியே வந்துடுவான்; இல்லே இதுக்குள்ளேயே கூட வெளியே வந்திருக்கலாம்!''

''கவுண்ட் ஸ்டைல்பிச் இவனுங்களை ஒண்ணுமில்லாம பூண்டோட ஒழிச்சுட இயங்கியிருப்பாரோ? நீ என்ன நினைக்கிறே? ஒருவேளை, இதை மனசுல வெச்சுக்கிட்டுத்தான் அவரைப் போட்டுத் தள்ள விக்டர் கூட்டம் அன்னிக்கு ராத்திரி வந்திருக்குமோ? பழி வாங்க?''

''எனக்குத் தெரியாது'' என்றார், ஆண்டனி. ''நேரடியா பார்த்தா நீங்க சொல்றா மாதிரி எதுவும் வெளிப்படையா தெரியலே. எனக்குத் தெரிஞ்சு, ஹெர்ஸோ-ஸ்லோவாக்கியா அரசரின் கிரீட நகைகளை கிங் விக்டர் திருடலே. ஆனா நடந்துள்ள எல்லாத்தையும் கோர்த்துப் பார்த்தா, வெளிச்சம் கிடைக்கத்தான் செய்யுது... என்ன சொல்றீங்க? கவுண்ட் ஸ்டைல்பிச்சின் மரணம், அவரோட வாழ்க்கைக் குறிப்பு வருவது, பேப்பர்கள்ல வரும் புரளிகள்... எல்லாம் விளக்க முடியாமத்தான் இருக்கு. ஆனா இண்ட்ரஸ்டிங்கா! இதுக்கெல்லாம் மகுடம் வெச்சா மாதிரி இன்னொரு பெரும் புரளி - ஹெர்ஸோ ஸ்லோவாக்கியாவுல எண்ணெய் கிணறுகள் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதா! அந்த முக்கியமற்ற சின்ன நாட்டின் மீது மக்கள் அனைவரின் கண்களும் இப்போ பதிஞ்சிருப்பதா எனக்கொரு நினைப்பு, ஜிம்மி.''

''இதையெல்லாம் போட்டு அரைச்சு நீ இப்ப எதைத் தேடிக்கிட்டிருக்கே?''

''ம்.. ஒரு சுலபமான விஷயத்தைப் போட்டுக் கூடுமான வரைக்கும் சிக்கலாக்குவதைத்தான்!''

''கவனி... வாழ்க்கைக் குறிப்படங்கிய ஒரு சின்னக் கையெழுத்துப் பிரதி பார்ஸலைக் கொண்டு போய் பப்ளிஷர் கையில் கொடுப்பதுல நிச்சயம் எவ்வித ஆபத்துகளும் கிடையாது, இல்லையா?''

''நோ'' என்றார் ஆண்டனி. ''இதுல எந்த ஆபத்தும் வந்து இடைபுகும்னு எனக்குப் படலே. ஆனா, ஜேம்ஸ்... அந்த எனக்கான இருநூற்றைம்பது டாலரை எடுத்துக்கிட்டு நான் எங்கே போகப் போறேன்னு சொல்லட்டுமா?''

''தென் அமெரிக்கா?''

''நோ, என் தோழா! ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவுக்கு... குடியரசோடு சேர்ந்துடுவேன்னு நினைக்கிறேன்.''

''சேர்ந்து?''

''அந்நாட்டின் ப்ரஸிடெண்ட்டா ஆகிடுவேன்னு படுது.''

''குடியரசே போதும்னு அறிவிச்சுட்டு, கூடவே நீதான் அடுத்த வாரிசுனு கொடி தூக்கி, பேசாம ஏன் *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின்* ஒப்லோவிட்ச் மகாராஜாவா நீ ஆகிடக் கூடாது!''

''நோ ஜிம்மி. ராஜாக்கள்னா தொடர்ந்து நீடிக்கணும். ஆயுசுக்கும்! நோ, அது வேணாம். ப்ரஸிடெண்ட் தான் பெஸ்ட். நாலு வருஷத்துக்கு ஒரு தடவை மாறும். தப்பிச்சுடலாம். *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* போன்ற ஒரு ராஜாங்கத்தை நாலு வருஷத்துக்கு ஆள்வது எனக்கு அத்தனை அதிசயமான அனுபவமா அமையும்.''

''வளவளங்காதே. உன்கிட்டே நான் முதல்லேயே சொல்லாம விட்டுட்டேன். ஆண்டனி, உனக்குத் தர நான் இன்னொரு சின்ன உத்தரவும் வெச்சிருக்கேன்.''

தன்னை ஒரு நாற்காலியில் போட்டுக் கொண்டு உட்கார்ந்து ஆண்டனி அவரைக் கடுமையாய் பார்த்தார். ''எதையோ இருட்டுக் குள்ளேயே தான் நீங்க வெச்சுக்கிட்டு வர்றீங்கன்னு ஆரம்பத்திலிருந்தே எனக்குத் தெரியும். அது இப்ப கையில கனிஞ்சு விழுது.''

''அப்படியெல்லாம் எதுவும் கிடையாதுப்பா. ஒரு பொண்ணுக்கு உதவுவதற்காக பண்ண வேண்டிய ஜஸ்ட் ஒரு சின்ன சமாச்சாரம்.''

''அடிச்சு சொல்லிடறேன் ஜேம்ஸ்... இந்தக் கண்றாவி காதல் கீதல்லேயெல்லாம் என்னை நான் வீணா நுழைச்சுக்க சம்மதிக்கவே மாட்டேன்.''

''இது காதல் விவகாரம் கிடையாதுங்கறேன். அந்தப் பொண்ணை நான் பார்த்தது கூட கிடையாது. முழு கதையையும் சொல்றேன், கேளு மொதல்ல.''

''உங்களோட நீளமான கழுத்தறுக்கும் கதையை நான் கேட்டுத்தான் ஆகணும்னா.. ம்'' என்று கோப்பையை நீட்டினார் ஆண்டனி. அதிகாரத்துடன் ஆண்டனி நீட்டிய கோப்பைக்கு அடிபணிந்து இயங்கிவிட்டு ஜேம்ஸ் ஜிம்மி ஆரம்பித்தார். ''உகாண்டாவுல நானிருந்தபோது நடந்தவை. ஓர் இத்தாலியன் அல்லது டச்சுக்காரன் அவன். டாகோ இனம்னு சொல்லிக்கிறாங்க. அவனோட வாழ்க்கையை நான் காப்பாற்றினேன்.''

''ஒரு நிமிஷம், ஒரு நிமிஷம். நான் மட்டும் நீங்களா இருந்தால், 'நான் காப்பாற்றிய வாழ்க்கைகள்' என்ற தலைப்புல ஒரு குட்டி புத்தகம் போட்டிருப்பேன். இன்னிக்கு சாயங்காலத்துலேயே நான் கேட்கும் ரெண்டாவது 'காப்பாற்றுதல்' இது.''

''ஓ, வெல், இந்தத் தடவை நான் அப்படி ஒண்ணும் பெருசா பண்ணிடலே. அந்தாளை நதிலேருந்து இழுத்துப் போட்டேன். எல்லா டாகோக்களையும் போல இவனால நீந்த முடியலே.''

''மறுபடியும் ஒரு நிமிஷம்... நான் செய்ய வேண்டிய அந்த முதல் பணியோட இதுக்கு ஏதாவது சம்பந்தமிருக்கா?''

''இதுவரைக்கும் இல்லேனு நான் நினைச்சுக்கிட்டிருந்தேன். ஆனா, இப்ப எப்படியோ சின்ன தொடர்பு வருது. அந்தாளு *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியன்.*''

உதாசீனமாய் தலையசைத்தான் ஆண்டனி. ''ம்...வேலையைத் தொடருங்க, ஜேம்ஸ்.''

''பயங்கர நன்றி விசுவாசத்தோட இருக்க ஆரம்பிச்சான் அவன். காலையே நாய் போல சுத்திச் சுத்தி வந்தான். ஆறு மாசம் கழிஞ்ச பிறகு காய்ச்சல் வந்து காலமாயிட்டான் அவன். நான் அப்ப அவன் பக்கத்துல இருந்தேன். கடைசியா, மூச்சுக் காத்துக்கு அவன் அல்லாடிக்கிட்டிருந்த சமயத்துல, என்னை சைகையால கூப்பிட்ட அவன் ஏதோவொரு ரகசியத்தைப் பற்றி பரபரப்பா என் காதுல பிதற்றினான். ஒரு தங்கச் சுரங்கம்னு அவன் சொன்னதா எடுத்துக்கிட்டேன். அவன் தோலுக்கு அடுத்தபடியா வரும்படி அவன் எப்பவும் வெச்சுக்கிட்டிருந்த ஒரு பளபள ப்ளாஸ்டிக் உரையை என் கையில் திணிச்சான். வெல், அப்ப நான் இதைப் பற்றி ரொம்பல்லாம் யோசிக்கலே. ஒரு வாரம் போச்சு. அந்த உறையை நான் பிரிச்சேன். அதுக்கப்புறம் நான் ஆர்வமா ஆனேன் - யெஸ்.''

''தங்கச்சுரங்கம்னு சொல்லியிருக்கான். இது போதுமே... உங்க நெஞ்சுப் படபடனு துடிச்சிருக்குமே'' - இடை புகுந்து சொன்னார் ஆண்டனி.

''ஆனா என் வாழ்க்கையில இது உண்டாக்கினது போல இன்னொண்ணு அப்படியொரு வெறுப்பை உண்டாக்கியிருக்காது! நாய் பய... அவனுக்கு வேணும்னா அது ஒரு தங்கச் சுரங்கமா இருந்திருக்கலாம்.

ஆனா எனக்கு? அதுல என்ன இருந்தது தெரியுமா? ஒரு கடிதம்... ஒரு பெண்ணோட கடிதம்.. ஓர் ஆங்கிலேயப் பெண்ணவ. அந்த நாய் அவளைப் ப்ளாக் மெயில் பண்ணி மிரட்டிக்கிட்டிருந்திருக்கான். இத்தனை அசிங்கம் பிடிச்ச பிஸினஸை நாய் சாகும்போது என்கிட்டே தள்ளிவிட்டுட்டுப் போக அவனுக்கு எவ்ளோ தைரியமிருக்கணும்! அதுதான் *தங்கச்சுரங்கம்!''*

''நீங்க சூடாவதற்கான காரணத்தை என்னால நல்லா புரிஞ்சுக்க முடியுது, ஜிம்மி... ஆனா இந்த டாகோ பயலுக எப்பவும் இப்படித்தான். அவனைப் பொறுத்தவரைக்கும் உங்களுக்குப் பேருதவி பண்ணிட்டுப் போறதா அவன் நினைச்சது அவ்ளோ சரி, தெரியுமா! நீங்க அவன் உசுரைக் காப்பாத்தியிருக்கீங்க - அவன் அதுக்குக் கைமாறா வாழ்க்கை முழுக்க உங்களுக்குப் பண வரவு இருக்கும்படி வழி வகைப் பண்ணிட்டுக் கிளம்பிடறான்... உங்களோட உயர் ஜாதி பிரிட்டிஷ் ஐடியாக்களெல்லாம் அவனோட மண்டைக்குள்ளே நுழையவேயில்லை.''

''வெல்... அதுக்காக இந்த நாராசத்தை வெச்சுக்கிட்டு நான் என்னைத்தைப்பா பண்றது? சரி... எரிச்சுடலாம். இதைத்தான் நான் முதல்ல நினைச்சேன். அப்புறம் தான் எனக்கு பொறி தட்டிச்சு. அந்தப் பொம்பளை! பாவம் அவ. எரிச்சதைப் பற்றித் தெரியாம என்னிக்காவது ஒரு நாள் இந்த டாகோ பய திரும்பி வரக் கூடும் எனும் பிரளய பயத்துலேயே வாழ்ந்துக்கிட்டிருக்கும்படி ஆகிடும்.''

''நான் நினைச்சதை விடவே உங்களுக்கு நிறைய கற்பனைத் திறனிருக்கு, ஜிம்மி'' - ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தபடி சொன்னார் ஆண்டனி. ''முதல்ல தெரிஞ்சதை விட நீங்க இப்ப சொல்லி முடிச்சுட்ட பிறகு இந்த கேஸ்ல நிறைய சிக்கல்கள் இருப்பது நல்லாவே விளங்குது. இதை அப்படியே அவங்களுக்கு தபால்ல அனுப்பிட்டுக் கமுக்கமா இருந்துடலாமே! என்ன சொல்றீங்க?''

''முழுமையா எந்த வேலையையுமே செய்யத் தெரியாத எல்லாப் பொண்ணுங்களையும் போலவே, எந்தக் கடுதாசியிலும் அந்தம்மா தேதி குறிப்பிடலே... முகவரியையும் எழுதலே. ஒரேயொரு லெட்டர்ல மட்டும் ஒரு விதமான முகவரி இருந்தது. அது, ஜஸ்ட் ஒரேயொரு வார்த்தை, *சிம்னீஸ்.* இதுதான் அது.''

சிகரெட்டை எரிந்துக் கொண்டிருந்த கனப்புக்குள் விட்டெறிய ஆண்டனி ஓங்கிய கையை அப்படியே நிறுத்திக் கொண்டு ஸ்தம்பித்தார். சில நொடிகள்... விரலை நெருங்கியிருந்த சிகரெட் நெருப்புக்கண் சுட்டுவிட அதை உதறி விட்டார், 'சிம்னீஸ்?' என்று கேட்டார் அவர். ''இது அசாதாரணம்.''

''ஏன், உனக்குத் தெரியுமா?''

''அது இங்கிலாந்தின் மதிப்புக்குரிய தங்குமிடம், டியர் ஜேம்ஸ். ராஜாக்களும், ராணிக்களும் அரசியல் அதிகாரிகளும் பர்சனலாகவும் அலுவலக ரீதியாகவும் கலந்துப் பேச வார இறுதி நாட்கள்ல போய் தங்கும் இடம்.''

''இந்த ஒரு காரணத்துக்காகத்தான் எனக்குப் பதிலா நீ இங்கிலாந்துக்குப் போவதுல எனக்கு அவ்ளோ சந்தோஷம். உனக்கு இந்த மாதிரி எல்லா விஷயங்களும் தெரிஞ்சிருக்கு'' என்றார் ஜிம்மி. ''என்னை மாதிரி கனடாவின் உட்புற குக்கிராமத்துல வந்தவனால ஒரு மண்ணும் ஆகாது. உன்னை மாதிரி பலதும் தெரிஞ்சவனால மட்டும் தான் இப்போ என் காரியம் பலிதமாகும். ஆங்.. அக்கடிதங்களை நேரடியா நான் ஏன் அவங்களுக்கு தபால்ல அனுப்பியிருக்கக் கூடாதுனு நீ கேட்டே. வெல்.. அப்படி செய்வதுல ஆபத்து இருப்பதா உணர்றேன். எனக்குக் கிடைச்ச தகவல்களின்படி அவ கணவன் ஒரு பொறாமைப் பேர்வழி. ஒருவேளை அவன் கடிதங்களைப் பிரிச்சுட்டா..! அந்தப் பாவப்பட்ட பொண்ணு அப்புறம் எங்கே போவா? அவ சாக வேண்டியதுதான்... ஏன்னா, இந்தக் கடிதப் பரிவர்த்தனைக் கொஞ்ச காலமாகவே இடம் பெற்றுக்கிட்டிருக்கு என்பது தெளிவா தெரியுது. ஆக, நான் போட்ட திட்டம் போலவே எல்லாத்தையும் அள்ளிக்கிட்டு யாராவது இங்கிலாந்துக்குப் போகணும். அத்தனையையும் அவ கையில திணிச்சுட்டு வரணும்.''

கையிலிருந்த சிகரெட்டைத் தூக்கியெறிந்து விட்டு அறையின் குறுக்கே நடந்து நண்பனை நெருங்கியிருந்த ஆண்டனி அவரை அன்பாய் முதுகில் தட்டித் தந்தார்.

''நீங்க நெஜமாகவே கருணை ரொம்பக் கொண்டவர், ஜிம்மி. உங்களோட அந்தக் கனடா குக்கிராமம், உங்களால பெருமை யடையணும்.''

''அப்ப இதையும் நீ செஞ்சு முடிச்சுடறியா?''

''பின்னே!''

எழுந்துக் கொண்ட ஜிம்மி மேக்ரத் அங்கிருந்த மேஜையொன்றின் டிராயரைத் திறந்து அதனுள்ளிருந்து ஒரு கொத்துக் கடிதங்களை எடுத்தார்.

''இங்கே வா, நீயும் அவற்றைப் படிக்கலாம்.'

''இது அவசியமா? ம்ம், நான் மாட்டேன்.''

''வெல்... இந்த *சிம்னீஸ்* பகுதி பற்றி நீ சொன்னதிலிருந்து அவங்க அங்கே தான் இருக்கணும்னு தோணுது. ஆண்டனி, நாம லெட்டர்ங்களைப் படித்து விடுவது நல்லதுனு படுது... அவங்க வழக்கமா எங்கெல்லாம் இருப்பாங்க என்பது பற்றி க்ளு ஏதாவது தெரிய வரலாம்.''

''ம், நீங்க சொல்வதும் சரிதான்.''

அக்கடிதங்களை அவர்கள் கவனம் பொறுத்துப் படித்துவிட்டு, எதைத் தேடினார்களோ, அது கிடைக்காமலே முடித்தார்கள். அவையனைத் தையும் சிந்தனையுடன் சேர்த்துக் கட்டினார் ஆண்டனி. ''பரிதாபமான பொம்பளை'' என்ற குறிப்பு தந்தார் அவர். ''என்னமா பயந்துக் கிட்டிருக்கா!''

ஜிம்மி ஒப்புதலாய் தலையசைத்தார். ''அவங்களை நல்ல நிலைமையில் கண்டுபிடிச்சுடலாம்னு உனக்குத் தோணுதா?'' என பரபரப்பாய் கேட்டார் அவர்.

''அப்படி நடக்கிற வரைக்கும் நான் இங்கிலாந்தை விட்டு நகரப் போவதில்லே. நீங்க அவங்க மேல ரொம்பப் பரிவா இருக்கீங்க, ஜேம்ஸ்!''

இதற்கு, ஜிம்மி அவரது விரலை கடிதத்திலிருந்த கையொப்பத்தில் சிந்தனையாய் ஓட்டினார். ''இது ஓர் அழகான பேர்'' என்றார் நேர்மையாய், ''*விர்ஜீனியா ரேவல்.*''

## அத்தியாயம் 3

# உயரிடத்தில் பரபரப்பு

"சரியா சொன்னீங்க, ரொம்ப சரியா சொன்னீங்க" என்றார் லார்ட் கேட்டர்ஹாம்.

இதே வாக்கியத்தை இவர் மூன்று முறை ஏற்கெனவே உபயோகப்படுத்தி விட்டார், ஒவ்வொரு தடவையும் இது எப்படியாவது உரையாடலை முடிக்க உதவி அவரைத் தப்பிக்க வைத்து விடும் என்ற எதிர்பார்ப்போடு! இவர்ஒரு அங்கத்தினராய் சம்பந்தப்பட்டுள்ள லண்டன் க்ளப்பின் படிக்கட்டுகளில் வற்புறுத்தி நிற்க வைக்கப்பட்டு, முடிவேயற்று நீளும் மதிப்பிற்குரிய ஜார்ஜ் லொமெக்ஸின் நீண்ட உரையாடலைக் கேட்டு கொண்டேயிருப்பதை இவர் வெறுத்தார்.

க்ளமெண்ட் எட்வர்ட் அலிஸ்டர் ப்ரண்ட் - கேட்டர்ஹாம் பரம்பரையின் ஒன்பதாவது பிரபு. அழுக்காய் உடையணிந்திருக்கும் ஒரு ஜென்டில்மேன். பிரபுத்துவம் உள்ளவர் பற்றி பரவலாக அறியப்பட்டுள்ள எவ்வித அறிகுறியும் அவரிடம் இருப்பதாய் தோன்றாது. அவரது கண்கள் சோர்ந்த நீலநிறத்தவை... மெலிந்த சுரத்தற்ற நாசி... விளங்க முடியாத ஆனால் கருணை மிகுந்திருக்கும் நடவடிக்கை.

இப்படிப்பட்ட ஒரு சாதாரணமானவரின் மிகப் பெரிய துரதிர்ஷ்டம், இவரைப் போலல்லாது படோடோபமாய் வாழ்ந்த இவருடைய சகோதரரான எட்டாவது கேட்டர்ஹாமுக்கு அடுத்து பட்டம் வகிக்க வேண்டி வந்ததுதான். முந்தைய பிரபுவான எட்டாவது கேட்டர்ஹாம் நிஜப் பிரபு என்பதற்கான ஓர் அடையாளமாய் திகழ்ந்தவர். இங்கிலாந்தின் அனைத்து வீடுகளிலும் தினசரி வார்த்தையாய் புழங்கிய பெயர், அவர் பெயர். அவர் வெளியுறவு அமைச்சரின் செகரட்டரியாக பணியாற்றிய போது இங்கிலாந்து மன்னரின் பல சந்திப்புகளில் பங்காற்றியிருக்கிறார்.

அவருடைய கிராமப்புறத்து தங்குமிடமான *சிம்னீஸ்* விருந்தோம்பலுக்கு உகந்த எடுத்துக்காட்டாய் திகழ்ந்தது. அவரது மனைவியான பெர்த் நாட்டு மன்னரின் மகள், மிகப் பிரமாதமாய் ஒத்துழைத்ததன் காரணமாய் *சிம்னீஸில்* அலுவலக மற்றும் அலுவலக சம்பந்தமற்ற சந்திப்புகள் பலவற்றை நிகழ்த்தினார். அங்கு போய் தங்கியிராத ஒருவரைச் சுட்டிக் காட்ட முடியாது எனுமளவுக்கு அதன் புகழ் ஓங்கியிருந்தது.

இவையெல்லாம் நல்லது தான். ஒன்பதாவது கேட்டர்ஹாமுக்கு தனது அண்ணன் மீது அளவு கடந்த மதிப்பும் மரியாதையும் உண்டு. ஆனால் *சிம்னீஸை* ஒரு தனிப்பட்ட சொத்தாக கருதாமல் அதை ஒரு அரசாங்கப் பொருளாக அண்ணன் கொண்டாடியது தான் தற்போதைய லார்ட் கேட்டர் ஹாமுக்குப் பிடிக்காதது. ஏனென்றால் இவருக்கு அரசியல் பிடிக்காது.. அரசியல்வாதிகள் பிடிக்காது.. ஆகவே இப்போது மதிப்பிற்குரிய ஜார்ஜ் லொமெக்ஸினுடனான உரையாடல் பிடிக்காது. எங்கும் எதிலும் இயைந்துப் போய் விடும் மனிதன் லொமெக்ஸ். சிவந்த முகமும், பிதுங்கிவிடும் போன்ற விழிகளும், மிக அதிகமாக தான் மட்டுமே பிரதானம் எனும் எண்ணமும் கொண்டவர்.

''சொன்ன பாயிண்ட்டைப் பிடிச்சுட்டீங்களா, கேட்டர்ஹாம்! எவன் எதை வேணும்னாலும் எழுதிக் கலவரம் உண்டு பண்ணிட்டுப் போகட்டும்... ஆனா, இப்போதைக்கு அப்படிப்பட்ட எந்தவிதமான அவதூறுகள் வெளியிடப்படுவதையும் நாம அனுமதிக்க முடியாது. இப்போ இருக்கிற நிலைமை மிக மிக நுண்மையானது.''

''எப்பவுமே இங்கே நிலைமை என்ன வாழுதாம்?'' என்று சூடாய் சொன்னார் கேட்டர்ஹாம்.

''மை டியர் ஸார்... எல்லாத்தையும் *தெரிஞ்சுக்க வேண்டிய* பதவியில நானிருக்கேன்!''

''சரியா சொன்னீங்க, ரொம்ப சரியா சொன்னீங்க'' என்று தன்னுடைய பழைய பாதுகாப்புக் கவசத்தை மீண்டும் கையிலெடுத்துக் கொண்டார் கேட்டர்ஹாம்.

''இந்த *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* பிஸினஸ்ல ஒரு தடவை நாம வழுக்கிட்டாக் கூட போதும்.. அவ்ளோதான். அப்புறம் தலைதூக்கவே முடியாது. எண்ணெய்க் கிணறு சம்பந்தப்பட்ட அத்தனை தள்ளுபடிகளும்

பிரிட்டிஷ் கம்பெனிகளுக்குத்தான் தரப்பட வேண்டும் என்பது ரொம்ப முக்கியம்.''

''ஆமாமாம்... ஆமாமாம்...''

''ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின் ஓப்லோவிட்ச் இளவரசர் மைக்கேல் அடுத்த வார இறுதியில வரார். அவரை அப்படியே தூக்கிகிட்டு டென்னீஸ் போயிடணும் - ஏதோ ஒரு படப்பிடிப்பு எனும் போர்வையில.''

''நான் இந்த வாரம் வெளிநாடு போகணும்கிற திட்டத்துல இருக்கேன்'' என்றார் கேட்டர்ஹாம்.

''நான்சென்ஸ் கேட்டர்ஹாம்! எவனும் அக்டோபர் மாசம் கிளம்பி ஃபாரின் டூர் போகவே மாட்டான். என்ன குளிர்!''

தூரத்தில் நகர்ந்துக் கொண்டிருந்த ஒரு டாக்ஸியை ஏக்கத்துடன் பார்த்தபடி ''என் டாக்டர்தான் நான் கிளம்பி ஓய்வா போயிட்டு வருவதுதான் சிறந்ததுனு நினைக்கிறார்'' என்றார்.

தன்னுடைய சுதந்திரத்தில் தலையிட வேண்டாம் என்று வெளிப்படையாய் சொல்லிவிட்டு நகரத்தான் கேட்டார்ஹாமால் இப்போது முடியவில்லை. படு முக்கியத்துவம் கொடுத்துதான் பேசிக் கொண்டிருக்கும் நபரைக் கழுத்தில் கை வைத்து இழுத்துப் பிடிப்பது போல் நிறுத்தி வைக்கும் கெட்டப் பழக்கம் லொமெக்ஸுக்கு உண்டு. நீண்ட கால அரசியல் அனுபவத்தின் பலன். இவ்விஷயத்திலோ லார்ட் கேட்டர்ஹாமின் கோட்டிலேயே கையைப் பதித்து நிறுத்தி வைக்குமளவுக்கு சென்றிருந்தார் லொமெக்ஸ்.

''மை டியர் மேன், நான் அரசாங்க ரீதியாகவே சொல்லிடறேன். நம்மை நெருங்கிக் கொண்டிருப்பதைப் போன்ற ஒரு தேசிய நெருக்கடியின் போது...''

இருப்புக் கொள்ளாமல் நெளிந்தார் கேட்டர்ஹாம். இப்படி நின்றுக் கொண்டு லொமெக்ஸ் எப்போதோ எங்கோ கொடுத்த உரையின் ஒரு பகுதியை அவரது வாயாலேயே கேட்டுக் கொண்டிருப்பது லார்டைப் பாடாய்ப் படுத்திற்று. லார்டுக்கு முன்னனுபவம் உண்டு. மூச்சு விடாது, முற்றுப் புள்ளியும் அற்று தொடர்ந்து இருபது நிமிடங்கள் மதிப்பிற்குரிய ஜார்ஜ் லொமெக்ஸால் பேச முடியும் என்று. எனவே, ''ஆல் ரைட்'' என்று சம்மதித்து விட்டார், அவசரத்தில். ''நீங்கள் எல்லா ஏற்பாடுகளையும் பண்ணிடுவீங்க, இல்லே?''

''இதுல ஏற்பாடெல்லாம் பண்ணுவதற்கு ரொம்ப கிடையாது. எப்பவும் *சிம்னீஸ்* தயாராவேயிருக்கும். நான் அந்தயிடத்திலிருந்து ஏழு கல் தள்ளி தங்கியிருப்பேன். அந்த அளவளாவலில் நானும் ஓர் அங்கமா வந்திருப்பதென்பது இயலாது.''

''ஆமாமாம்'' என்றார் மறுபடியும். ஆனால், ஏனப்படி இருக்கக் கூடாது என்ற அறிதல் இல்லாமலே! இப்போதைக்கு ஏனப்படி என்று தெரிந்துக் கொள்ளவும் அவருக்கு ஈடுபாடு கிடையாது.

''பில் எவர்ஸ்லேவும் கூடயிருப்பதை நீங்க ஆட்சேபிக்க மாட்டீங்கன்னு நினைக்கிறேன். சேதிகளை அனுப்புவதில் அவர் உபயோகமாயிருப்பார்.''

''பேரானந்தம்'' என்றார் கேட்டர்ஹாம். ''பில் ஒரு டீஸண்ட் ஆள்... மேலும் பண்டிலுக்கும் அவருக்கும் பிடிக்கும்..''

''ஷூட்டிங்னு போடும் நாடகம் இல்ல இதுல முக்கியம். அந்தப் போர்வையை நாம எதை மறைக்கப் போடறோமோ அது முக்கியம்.''

லார்ட் கேட்டர்ஹாம் மறுபடியும் மனம் சிதைந்தவராய் ஆனார்.

''அப்ப எல்லாம் முடிஞ்சது! இளவரசர், அவரோட பரிவாரம், பில் மற்றும் ஹெர்மன் ஐஸக்.''

''யாரு?''

''ஹெர்மன் ஐஸக். நான் உங்ககிட்டே இப்ப பேசிக்கிட்டிருந்த உயர் நிலை ஆலோசனைக் குழுவின் ஒரு பிரதிநிதி.''

''எல்லாம் பிரிட்டிஷார் மட்டுமே ஆன குழு?''

''யெஸ், ஏன்?''

''நத்திங், நத்திங். கேட்டேன். விதம் விதமா பெயர் வெச்சுக்கிறாங்க இவங்க.''

''அப்புறம் நிச்சயமா ஓரிரு நபர்கள் வெளியிலிருந்தும் இடம் பெறணும். அப்பதான் அது ஷூட்டிங் எனும் ஊகத்தை வலுக்க வைக்கும். மிஸஸ் எஸ்லீன் சரிபட்டு வருவாங்க.. சின்னவ. விமர்சனமெல்லாம் தெரியாதவ. முக்கியமா அரசியல் ஞானம் கிடையாது.''

''இதை பண்டில் ஏற்பாடு பண்ணிடுவா.''

ஏதோ ஒரு புது ஐடியாவால் அகப்பட்டுக் கொண்டவரைப் போல ஆன லொமெக்ஸ் ''இப்ப எனக்கு விந்தையா படுது'' என்றார். ''நான் ஜஸ்ட் இப்ப உங்ககிட்டே பேசிக்கிட்டிருந்த விஷயம் ஞாபகத்தி லிருக்கா?''

''நீங்க எதையெல்லாமோ பேசிக்கிட்டிருந்தீங்க.''

''நோ, நோ. தப்பான நேரத்துல இப்ப தேவையேயில்லாம நடந்துட்டிருக்கிற சமாச்சாரத்தை சொன்னேன்'' என்றவர், மர்மமான முறையில் முணுமுணுப்பாய் பேச தனது குரலை வெகுவாய் தாழ்த்திக் கொண்ட அவர், ''வரலாறு- வாழ்க்கை வரலாறு - கவுண்ட் ஸ்டைல் பிச்சின் வாழ்க்கை வரலாறு'' என்றார்.

''இதைப் பற்றிய உங்க கணிப்பு தவறு'' என்றார் லார்ட், விளைந்த கொட்டாவியை மட்டுப்படுத்தியபடி, ''மக்களுக்கு அவதூறுகளும் கோள் சொல்லும் படைப்புகளும் மிகவும் பிடிக்கும். அவங்களை விடுங்க... நானே கூட வாழ்க்கை வரலாறுகளை மிகவும் சுவாரஸ்யமாக படிப்பேன். கொண்டாடுவேன்.''

''மக்கள் அப்படிப்பட்ட சரிதைகளைப் படிப்பாங்களா மாட்டாங்களா என்பது கிடையாது இப்ப பிரச்சினை - அவங்க படிக்கத்தான் செய்வாங்க - யாருக்குத்தான் மத்தவங்க வாழ்க்கையில ஈடுபாடு கிடையாது! ஆனா அதை இப்ப வெளியிடுவது எல்லாத்தையும் மூழ்கடிச்சுடும். யெஸ், எல்லாத்தையும் அழிச்சுப் பாழாக்கிடும். *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* மக்கள் மறுபடியும் மன்னராட்சிக்கே திரும்பிட ஆவலா இருக்காங்க. பிரின்ஸ் மைக்கேலுக்கு பட்டம் சூட்ட துடிச்சுக்கிட்டிருக்காங்க. அவருக்கு ஊக்குவிப்பும் ஆதரவும் மன்னர் கிட்டேயிருந்து இருக்கு.''

இப்படிப் பேசிவிட்டு சற்று அமைதியான லொமெக்ஸ் திடீர் நினைவு வந்தவராய், ''இதை விடவும் மோசமானதெல்லாம் நடக்கலாம்...'' என்றார். ''யாராவது - துரதிர்ஷ்டவசமா காணாம போயிட்ட அதைப்பற்றி யாராவது மறுபடியும் கிண்டினா? என்ன சொல்றேன்னு புரியுதா?''

லார்ட் கேட்டர்ஹாம் இதுவரை எதுவும் விளங்காதது போலவே இதுவும் புரியவில்லை என்பது போல விழித்தபடி, ''நோ'' என்றார். ''எது தொலைஞ்சது?''

''அதைப் பற்றி நீங்களும் கேள்விப்பட்டிருக்கணுமே? சொல்லப் போனா அவங்க *சிம்னீஸ்ல* இருந்தபோதுதான் அது நடந்தது. ஆங்!

ஹென்றி இதனால ரொம்பவும் உடைஞ்சுப் போனார். அவரை ஒண்ணுமேயில்லாம இல்லே இது ஆக்கிடுச்சு.''

''பரபரனு எனக்குள்ள ஈடுபாடை நீங்க வளர்க்கிறீங்க'' என்றார் லார்ட். ''யார் அல்லது எது காணாப் போனது?''

நன்றாய் வளைந்து முன்னால் வந்த லொமெக்ஸ் அவரது இதழ்களை லார்ட் கேட்டர் ஹாமின் காதுகளுக்குள் முழுக்கவும் செருகி ஓதினார்.

''கடவுளே... புண்ணியமாப் போகும். இப்படி காதுல வந்து குதறாதீங்க...''

''அது கெடக்கட்டும். நான் சொன்னதுக் கேட்டுது இல்லே?''

''யெஸ், கேட்டேன்'' என்றார் லார்ட் எதிர்ப்பாய். ''அது நடந்தப்ப அதைப்பற்றி என்னவோ கேள்விப்பட்டது இப்ப எனக்கு நினைவுக்கு வருது. விசித்திரமான சமாச்சாரம். யார் அதைப் பண்ணியிருப்பாங்கன்னு எனக்கு ஆச்சரியமாயிருக்கு. அது அப்புறம் கண்டுபிடிக்கப்படவே இல்லையா?''

''இல்லவே இல்லை. இந்த விஷயத்தை நாம படு ஜாக்கிரதையா கையாளணும். தொலைஞ்சுப் போனது பற்றிய ஒரு சின்ன குறிப்பு கூட கசிஞ்சிடக் கூடாது. ஆனா ஸ்டைல்பிச் அப்ப இருந்தார். அவருக்கு இந்த சமாச்சாரம் பற்றி என்னவோ தெரியும். முழுசும் இல்ல... ஆனா என்னவோ தெரியும். நாங்க ஒரு சில சந்தர்ப்பங்கள்ல டச்சுக்காரங்க விஷயத்துல அவர்கிட்டே அறிவில்லாம நடந்துக்கிட்டிருக்கோம். ஒருவேளை அந்த வன்மத்தால எல்லாத்தையும் எழுதித் தந்துடணும்னு அவர் முடிவெடுத்திருந்தால்? அது விளைவிக்கக் கூடிய இறுதி முடிவு... இதைப்பற்றி கொஞ்சம் நினைச்சுப் பாருங்க. எல்லாரும் இப்ப புதுசா முழிச்சுக்கிட்டு கேட்பாங்க: எதுக்காக அது அவசர அவசரமா அப்படி மூடி மறைக்கப்பட்டது?''

''பின்னே! நிச்சயமா ஊருலகம் எல்லாமும் தான் கேட்கும்'' என்றார் லார்ட், வெளிப்படையாய் தெரியும் முழு உற்சாகத்தோடு.

பேச்சு வாக்கில் உயர்ந்துப் போயிருந்த தன்னுடைய குரலைத் தற்போது மட்டுப்படுத்திக் கட்டியிழுத்து, ''நான் சாந்தமாயிருக்கணும்'' என்றார் முணுமுணுப்பாய். ''நான் சாந்தமா இருந்தாகணும். ஆனா ஒரேயொரு கேள்வி உங்களுக்கு, மை டியர் ஃபெல்லோ! இதுல, அதாவது

வாழ்க்கை சரிதத்துல சொல்றேன் - கிறுக்குத்தனமா விளையாட அவர் நினைத்திராத பட்சத்துல, எதுக்காக, அதை லண்டனுக்கு இப்படி உலகத்தையே ஒரு சுத்து சுத்தி அனுப்பு வெச்சிருக்கணும்?''

''விசித்திரமாத்தான் இருக்கு.''

''அதானே, நம்ம ஏஜெண்டுங்க தான் பாரீஸ்லேயும் இருக்காணுங்களே. வாழ்க்கை குறிப்பு, மிக ரகசியமான முறையில, அவர் மண்டையைப் போடுவதற்கு ஒரு சில வாரங்களுக்கு முன்னாடி அனுப்பப்பட்டிருக்கு.''

''யெஸ். அதனால தான் அதுல என்னவோ விஷயங்கள் இருக்குனு சொல்றேன்'' என்றார் லார்ட், சற்று நேரத்துக்கு முன்னால் வெளிப்படையாய் அவர் காட்டிய அதே கொண்டாட்டத்தை மீண்டும் பிரதிபலித்தபடி.

''அந்தப் புத்தகம், ஜம்மி அல்லது ஜேம்ஸ் அல்லது மேக்ரத் எனும் ஆளுக்கு அனுப்பப்பட்டுள்ளதாய் நாங்க கண்டுபிடிச்சுட்டோம். கனடா ஆளு... ஆப்பிரிக்கால இருக்கான்.''

''ஆஹா'' என்றார் லார்ட் புன்னகையாய்.

''ஜேம்ஸ், *கிரானார்த் மாளிகையில* நாளைக்கு, வியாழக்கிழமை, வரான்.''

''இப்ப விஷயத்தை எப்படி கையாளப் போறீங்க?''

''உடனடியா நாம போய் அவனை சந்திச்சுடலாம். இதனால் விளையவல்ல அபாயகரமான விளைவுகளை எடுத்துச் சொல்லலாம். குறைந்தபட்சம் ஒரு மாசத்துக்காவது அந்த வாழ்க்கைக் குறிப்பை வெளியிடுவதைத் தாமதமாக்கும்படி கெஞ்சலாம். எப்படியாவது, நாட்டத்துக்கு உட்பட்டு அந்தப் புத்தகத்தை எடிட் பண்ணிவிடும்படி மன்றாடலாம்.''

''ஒருவேளை அதெல்லாம் ஒரு மண்ணும் முடியாதுனு அவன் சொல்லிட்டான்னா..?'' ஆலோசித்தார் லார்ட் கேட்டர்ஹாம்.

''அதை நினைச்சாத்தான் எனக்கு பயமாயிருக்கு'' என்று விட்டார் லோமெக்ஸ். ''இதனால தான் அவனையும் சிம்னீஸ்க்கு வர வைப்பதுதான் புத்திசாலித்தனம்னு சட்டுனு எனக்கு தோணிச்சு. ப்ரின்ஸ் மைக்கேலையே நேரா பார்க்க வைப்பதில் அவன் சுருண்டுடலாம்... நம்ம வேலையும் சுலபமா முடியும்.''

''இதுக்கு நான் அனுமதி தர முடியாது'' என்று அவசரமாய் சொன்னார் கேட்டர்ஹாம். ''எனக்கும் கனடாகாரனுங்களுக்கும் எப்பவுமே ஒத்துப் போவது கிடையாது. எப்பவுமே. அதிலும் குறிப்பா ஆப்பிரிக்காவில வாழ்ந்த கனடாக்காரனுங்களோட!''

''ஆனா இவன் ஓர் அற்புதமான ஆளா உங்களுக்கு ஆகிடலாம்.''

''நோ லொமெக்ஸ். இந்த விஷயத்துல நான் ஸ்திரமா நிற்கிறேன். வேற யாராவதும் தான் அவனை சமாளிச்சாகணும்.''

''அப்ப...'' என்ற லொமெக்ஸ், ''இதுக்கு ஒரு பெண் தான் சிறப்பா உதவுவானு எனக்குப் படுது. ஒரு பெண்ணால தான் இந்த விஷயத்தை நுண்மையாவும், தந்திரமாகவும் கையாள முடியும். இப்ப நிலைமை எப்படியிருக்கோ, அதை அப்படியே, அவன் கொஞ்சமும்கோபங் கொள்ளாதபடி அழகா அவன் முன்னாடி வெக்கவும் முடியும். இதுக்காக பொம்பளைங்களை அரசியலுக்குள் நான் அனுமதிக்கிறேன்னு எடுத்துக்க வேண்டாம். ஆனா, பெண்கள், அவங்களுக்கான வட்டத்துக்குள்ளே இருந்தபடியே அதிசயங்களை நிகழ்த்திக் காட்ட முடியும். ஹென்றியின் மனைவியையும் அவ அவனுக்குப் பண்ணியதையுமே உதாரணமா கொள்ளலாம். மரீக்கா, ஓர் அற்புதம்... தனித்துவமிக்கவ... துல்லியமான ஒரு அரசியல் பணிப்பெண்.''

''இந்த பார்ட்டியிலே மரீக்காவும் வரணும்னு நீங்க கூப்பிடப் போறதில்லே, இல்லையா?'' சன்னமாய் கேட்டார் லார்ட் கேட்டர்ஹாம். அவருடைய மச்சினியைக் குறிப்பிட்டதும் சற்றே வெளிறினார்.

''நோ, நோ நீங்க தப்பா புரிஞ்சுக்கிட்டீங்க. பெண்கள் பொதுவா ஏற்படுத்தவல்ல தாக்கத்தைப் பற்றி நான் பேசறேன். நான் ஆலோசிப்பது ஓர் இளைய பொண்ணை. வசீகரம், அழகு, சாந்தம் எல்லாம் சேர்ந்த பெண்ணை.''

''பண்டிலை மனசுல வெச்சுக்கிட்டு நீங்க பேசலியே? பண்டில் இதுக்கெல்லாம் லாயக்கற்றவ. இணக்கமா இருக்கணும்னு அமைதியும் ஒற்றுமையும் பேசறவ. அவகிட்டே போய் இதை பேசினா வெடியா சிரிப்பா.''

''உங்க பொண்ணு, கேட்டர்ஹாம், வசீகரமான தான்- ஆனா குழந்தை. நமக்குத் தேவை வேற மாதிரி - சமநிலைப்பாடு கொண்ட... உலக ஞானம்

பிக்க... அதாவது, அதாவது.. ஆஹ் ஆங்... என் உறவுக்காரப் பொண்ணு விர்ஜீனியா மாதிரி!''

''மிஸஸ் ரேவல்?'' - லார்ட் கேட்டர்ஹாம் பிரகாசமானார். பார்ட்டியை இவரும் கூட சேர்ந்து கொண்டாடலாம் என்ற நப்பாசை அப்போ அவருக்குள் ஊறியது. ''சரியான ஆளை சொன்னீங்க, மிஸ்டர் லொமெக்ஸ். லண்டனில் இருக்கும் நெ 1 வசீகரப் பெண்.''

''ஹெர்ஸோஸ்லோவாக்கியா சமாச்சாரத்துல கூட அவ இருந்திருக்கா. அவரோட, கணவர் அங்கிருந்த தூதரகத்துல இருந்தவர், நினைவிருக்கா? அப்புறம், நீங்க சொன்ன மாதிரி, தனிப்பட்ட முறையில கவர்ந்திழுக்கும் தனிப்பட்ட மனுஷி.''

''இதமான, பார்த்த மாத்திரத்தில் பிரியமுண்டாக்கும் படைப்பு.''

''அப்ப எல்லாம் நல்லபடியா ஆகிடுது.''

கேட்டர்ஹாம் தோளிலிருந்த பிடியினை தற்சமயம் மிஸ்டர் லொமெக்ஸ் தளர்த்த கிடைத்த வாய்ப்பைத் தவற விடாது பயன்படுத்திக் கொண்டார் லார்ட். ''அப்ப நான் கிளம்பறேன், லொமெக்ஸ்!'' தொடர்ந்தார். ''எல்லா ஏற்பாடுகளையும் நீங்களே பார்த்துப்பீங்க, இல்லையா? பை - பை.''

ஒரு டாக்ஸிக்குள் தாமதியாது குதித்தேறி விட்டார் அவர்! அறுத்தெடுத்த லொமெக்ஸை வெறுத்தார் லார்ட் கேட்டர்ஹாம். அவருடைய குண்டு சிகப்பு முகத்தை வெறுத்தார். கொத்துக் கொத்தாய் அவர் விடும் மூச்சுக் காற்றை வெறுத்தார். முந்திக் கொண்டு கொட்டும் அவருடைய கோலிக்குண்டு விழிகளை வெறுத்தார். எதிர்வரும் வாரக் கடைசியை நினைக்கும்போதே அவருக்கு பெருமூச்சு உண்டானது. நாராசம், தாளாத நாராசம். அப்போது விர்ஜீனியா ரேவல்லை நினைத்துக் கொண்ட அவர் குதூகலமானார்.

''பார்த்த மாத்திரத்தில் கவர்ந்து விடும் படைப்பு'' - சொல்லிக் கொண்டார். ''சிலிர்க்க வைக்கவென்றே இருக்கும் அதியற்புத படைப்பு.''

அத்தியாயம் - 4

# வசீகரமான ஒரு பெண் அறிமுகமாகிறார்

ஜார்ஜ் லொமெக்ஸ் நேராக வெள்ளை மாளிகைக்கு திரும்பி விட்டார். அமைச்சக வேலைகளை அவர் கவனித்துக் கொண்டிருந்த ஆடம்பரமான அந்த விலையுயர்ந்த மாளிகைக்குள் அவர் நுழைந்தபோது, அங்கு குழப்பமான ஓசை நிலவிக் கொண்டிருந்தது.

பில் எவர்ஸ்லே கடிதங்களை வெகு ஊக்கமாய் ஃபைல் பண்ணிக் கொண்டிருந்தான். அனைவராலும் வெகுவாய் 'விரும்பப்படும் இளங்காளை, பில். அனுமானித்தால் வயது 25... வெகுவாய் ஊதி வளர்ந்து விட்டபடியால் அவனை அவனாகவே நகர்த்திக் கொள்ளக் கூட கஷ்டப்படுகிறான்... ஈர்க்கும் முகம்... பிரகாசமாய் டாலடிக்கும் பல் வரிசைகள்.. உண்மை பேசும் ஒரு ஜோடி ப்ரவுன் விழிகள்.

''அந்த ரிப்போர்ட்டை ரிச்சர்ட்சன் அனுப்பிட்டாரா?''

''நோ, ஸார். அதைப் பற்றி அவன்கிட்டே நான் கேட்கட்டுமா?''

''அவ்ளோ ஒண்ணும் முக்கியம் கிடையாது. விட்டுடு. ஏதாவது டெலிபோன் சேதிகள்?''

''அதை மிஸ் ஆஸ்கர்தான் கவனிச்சுக்கிறா. மிஸ்டர் ஐஸக்டீன் நாளைக்கு சவ்வாய் ஓட்டல்ல அவரோட உங்களால லஞ்ச் எடுத்துக்க முடியுமானு கேட்டிருக்கார்.''

''மிஸ் ஆஸ்கர்கிட்டே சொல்லி என்னோட என்கேஜ்மெண்ட் புக்கை ஒரு தடவை பார்க்க சொல்லு. எனக்கு எந்த முன் பதிவும் இல்லேனா போன் பண்ணி ஒத்துக்க சொல்லு.''

''யெஸ், ஸார்.''

''இதெல்லாமிருக்கட்டும் மிஸ்டர் எவர்ஸ்லே. இப்ப எனக்காக நீ ஒரு போன் பண்ணனும். மிஸஸ் ரேவல், 487, பாண்டு தெரு. இந்த முகவரிக்கான நம்பரை பிடி.''

டெலிபோன் புத்தகத்தை அபகரிப்பது போல எடுத்துக் கொண்ட பில், கண்மண் தெரியாமல் மளமளவென்று பெயர்களை அலசி, பிறகு இடியோசையாய் அப்புத்தகத்தை மூடி, தொலைபேசியை நாடி பாய்ந்தான். அதன் மீது கையை வைத்ததும் அப்போதுதான் எதுவோ நினைவில் பட்டதைப் போல, தயங்கினான். ''ஓ, ஸார், இப்பத்தான் எனக்கு நினைப்பே வருது. அவங்க போன் வேலை பண்ணலே. அவுட் ஆஃப் ஆர்டர். மிஸஸ் ரேவல்லை சொல்றேன். இப்பத்தான் அவங்களுக்கு போன் பண்ண நான் முயற்சித்தேன்.''

ஜார்ஜ் லொமெக்ஸின் முகம் வாடியது. ''வெறுப்பேத்துது'' என்றார். ''அப்படி வெறுப்பேத்துது.'' முடிவெடுக்க இயலாதவராய் மேஜையைக் குத்தினார்.

''ஏதாவது முக்கியமான சமாச்சாரமாயிருந்தா, ஒரு டாக்ஸியைப் புடிச்சுக்கிட்டு, நானே நேரா அங்கே போயிட்டு வந்துடறேன் ஸார். காலை வேளையில இந்த நேரத்துல அவங்க நிச்சயமா இருப்பாங்க.''

சமாச்சாரத்தை மண்டையில் போட்டு யோசித்தபடியே ஜார்ஜ் லொமெக்ஸ் தயங்கினார். பதில் மட்டும் அனுசரணையாய் வந்து விட்டால் பாய்ந்து வெளியேற தயாராய் நின்றுக் கொண்டிருந்தான் பில்.

கடைசியாய், ''இதுவும் நல்லாதான் படுது'' என்றார் லொமெக்ஸ். ''நல்லது. அங்கே போக ஒரு டாக்ஸியை வெச்சுக்க. ஒரு முக்கியமான சமாச்சாரத்தைப் பற்றிப் பேச நான் அவங்களைப் பார்க்க வேண்டிய அவசரத்துல இருப்பதால் இன்னிக்கு சாயந்தரம் நாலு மணிக்கு அவங்க வீட்ல இருப்பாங்களானு கேட்டுட்டு வா.''

''ரைட், ஸார்.''

பில், அவனுடைய தொப்பியை அள்ளிக் கொண்டு ஓடோடி விட்டான்.

பத்து நிமிடங்கள் கழித்து அவனை ஒரு டாக்ஸி 487, பாண்டு தெருவில் இறக்கி விட்டது. அழைப்பு மணியையும் அடித்து விட்டு டமால் டிமீல் என்று கதவைத் தட்டவும் செய்தான். பில்லுடன் நீண்ட நாள் பழக்கம் இருந்தபடியால் கதவைத் திறந்தப் பணியாள் ஆமோதிப்பாய் இருந்தான்.

''மிஸஸ் ரேவல் உள்ளே தானே இருக்காங்க?''

''வெளியே கிளம்பிக்கிட்டிருப்பதா நினைக்கிறேன், ஸார்.''

அங்கிருந்த மாடிப்பகுதியிலிருந்து ஒரு குரல், ''யாரது பில்'லா?'' என்றது. ''அத்தனை கட்டுமஸ்தான அடி கதவுல விழும்போதே நினைச்சேன். மேல வா, பேசலாம்.''

மேலிருந்து கீழ்நோக்கி அவனைப் பார்த்துப் புன்னகைத்துக் கொண்டிருந்த முகத்தை இங்கிருந்து பார்த்தான் இவன். இவனை மட்டுமல்ல... பார்க்கும் எவரையும்வாய் குழற வைத்துக் கிறங்கடிக்கும் சிரிப்பு அது.

இரண்டிரண்டு படிகளாய் தாண்டி மேலே ஓடியவன், அவனை நோக்கி நீட்டப்பட்ட இரண்டு கைகளையும் இறுக்கமாய் அள்ளிக் கொண்டான்.

''ஹலோ, விர்ஜீனியா!''

''ஹலோ, பில்!''

வசீகரம் என்பது மிக முக்கியமான ஒரு விஷயம். ஆயிரமாயிரம் பேர், விர்ஜீனியா ரேவலை விடவும் அழகு பொங்குபவர்கள், பில்லுக்கு ஹலோ சொல்லியிருக்கலாம்... ஆனால் எதுவும் எவ்வித விளைவையும் உண்டுபண்ணியிருக்காது. ஆனால் அந்த இரண்டேயிரண்டு வார்த்தைகள், அவை விர்ஜீனியாவால் சொல்லப்பட்டதால், பில்லை மயக்கிப் போடும் வசியத்தை செய்தன.

விர்ஜீனியா ரேவல், இப்போதுதான் இருபத்தியேழைத் தொட்டிருக் கிறாள். உடல் முழுவதையும் சரியான விகிதாச்சாரத்தில் விண்டு வைக்கும் இவளுடைய கொடியிடை உடலமைப்பினை, ஒரு கவிதையாக்லகாம்.அவளுடைய கூந்தல் நிஜ வெண்கல நிறம்.. அதன் நடு நடுவில் தங்கமும் பச்சை நிற பளபளப்பும். சின்ன முகவாய். அற்புத நாசி. சாய்ந்து விழும் நீலநிற விழிகள். சுவையூறிய இதழ்கள். கவர்ந்திழுந்து நிறுத்தும் வற்றாத ஜீவன் அவருடைய முகத்தின் ஸ்பெஷல். விர்ஜீனியா ரேவல்லை ஒத்துக்குவதென்பது எவராலும் இயலாத ஒன்று.

அருகிலிருந்த பலவண்ண வரவேற்பறைக்கு பில்லை இழுத்துப் போனார் அவர்.

''பில் டார்லிங்'' - சொன்னார் விர்ஜீனியா. ''இங்கே வந்துட்டா ஆபீஸ்ல யார் வேலையைக் கவனிப்பாங்க? நீயில்லாட்டா அங்கே எவனுக்கும் கையும் ஓடாது.. காலும் ஓடாதே..''

''கோலிக் கண்ணன் கிட்டேயிருந்து உனக்கு நான் ஒரு சேதி கொண்டு வந்திருக்கேன்'' – இவ்வாறு மட்டு மரியாதையின்றி தனது ஆபீஸரைச் சொன்ன பில், ''ஆங், விர்ஜீனியா... ஒருவேளை அவர் கேட்டா நினைவா சொல்லிடு - இன்னிக்குக் காலையிலே உன் போன் அவுட் ஆஃப் ஆர்டர்னு'' என்றான்.

''ஆனா, அப்படியேதும் கிடையாதே.''

''எனக்கும் அது தெரியும். ஆனா நான் அப்படித்தான்னு சொல்லியிருக்கேன்.''

''ஏன்? விளக்கு'' - ரேவல் அவருடைய எதிர்க்கும் பார்வையை பில் மீது வீசினார்.

''அப்பத்தான் என்னால இங்கே வரை வந்து, உன்னை பார்க்க முடியும்!''

''ஓ, டார்லிங் பில்.. எத்தனை பெரிய முட்டாள்தான்! எவ்ளோ இனிமையானவன் நீ!''

''நீ வெளியில போவதா சொன்னான், காவக்காரன்.''

''நெஜந்தான். ஒரு புது கடை வந்திருக்கு. அவங்ககிட்டே அற்புதமான இடுப்புப் பட்டைகள் வந்திருக்காம்.''

''இடுப்புப் பட்டைகள்?''

''ம், இ-டு-ப்-பு, இடுப்பு, ப-ட்-டை-க-ள், பட்டைகள், இடுப்பை இறுக்கி குறைக்க, தோலை ஒட்டி உறவாடும் அந்தரங்கம்.''

''ஷட், விர்ஜீனியா. உன்னோட எந்தவொரு உறவுமில்லாத ஓர் இளைய ஆடவன் கிட்டே போய் உன்னோட உள்ளாடை சமாச்சாரங்களையெல்லாம் நீ பேசக் கூடாது. இது நாகரீகம் கிடையாது.''

''ஏய், பில் டியர். இடுப்புப் பட்டைகள்ல எவ்வித அநாகரீகமும் கிடையாது. நம்ம எல்லாருக்கும் பெருசா இடுப்பு இருக்கு. இருந்தாலும் எங்களைப் போன்ற பெண்கள் அப்படியேதும் இல்லையேனு பாசாங்கு பண்ணிக்கிட்டுத்தான் அலையறோம். சிகப்பு ரப்பர்ல வரும் இடுப்புப்

பட்டையை முட்டிக்கு மேல போட்டுக்கணும். இதைப் போட்டுக்கிட்டு நடக்கவே முடியாது, தெரியுமா?''

''என்ன கொடூரம்!'' என்றான் பில், ''அப்புறம் எதுக்கு அது உனக்கு?''

''இடுப்புக் குறையும் ஒரு நம்பிக்கை கொடுக்குது இல்லே! சரி, சரி.. என்னோட இடுப்புப் பட்டை ஒரு பக்கம் இருக்கட்டும். ஜார்ஜ் சொன்ன சேதியை எனக்குத் தா.''

''இன்னிக்கு சாயந்திரம் நாலு மணிக்கு நீ இங்கேயிருப்பியானு அவருக்குத் தெரியணுமாம்..''

''ம்ம். ரான்லாக் போறேன். இப்படி ஓர் அலுவலக ரீதியான அழைப்பு எதுக்கு? கட்டிக்கிறியானு என்னைக் கேட்கப் போறாரா என்ன?''

''கேட்டால், நான் ஆச்சரியப்பட மாட்டேன்.''

''அப்படி கேட்டா, துடிதுடிப்பா சட்டுனு இயங்கும் ஆட்களுக்குத் தான் நான் சம்மதிப்பேன்னு சொல்லிடு.''

''என்னைப் போல?''

''துடிதுடிப்பு, உனக்கு வரும் ஓர் உணர்வு கிடையாது, பில். அதுவே, நீதான்.''

''விர்ஜீனியா.. அப்ப, நீ..''

''நோ, நோ,நோ பில். என்னை, ஒரு தாய் ஸ்தானத்திலிருக்கும் நடுத்தர வயசு பெண்ணொருத்தி உன் மீது முழு ஈடுபாடு கொண்டிருப்பதா நீ பார்க்கப் பழகு.''

''விர்ஜீனியா, நான் உன்னை ரொம்ப காதலிக்கிறேன்.''

''எனக்குத் தெரியும், பில், எனக்குத் தெரியும். என்னை யாராவது விரும்புவதை, விரும்புபவள் நான். இது ரொம்ப வஞ்சகமான ஒண்ணுதான் இல்லையா? உலகத்தின் அற்புதமான ஆண்மகன், என்னைக் காதலிக்கணும்னுதான் நினைக்கிறேன் நான்.''

''எல்லாப் பெண்களுமே இப்படித்தான்'' என்றான் பில், இருளடைந்து.

''ஆனா ஜார்ஜ் என்மேல காதலா இல்லே என்பது என் நம்பிக்கை. அப்படி என்னை விரும்பவும் அவரால் முடியாது என்பது என் கணிப்பு.

.அவரோட தொழில் மேல அந்த அளவுக்கு அவர் பின்னிப் பிணைஞ்சுட்டார்.வேறென்ன சொன்னார் அவர்?''

''பேச வேண்டியது ரொம்ப முக்கியமானதுனு.''

''நான் ஏதோ வலைக்குள்ளே விழற மாதிரி தோணுது, பில். ஜார்ஜ் எதையெல்லாம் முக்கியமானதுனு நினைக்கிறாரோ, அதுக்கெல்லாம் ஓர் எல்லையிருக்கு.இதை அவர் புரிஞ்சுக்க மாட்டேங்கிறார். நான் புரிய வெக்கணும். ஓகே... ரான்லாக் போவதைத் தள்ளிப் போடறேன். அதுக்கு நாளைக்குக் கூடப் போய்க்கலாம். சரியா நாலு மணிக்கு நான் அவருக்காகக் காத்திருப்பேன்னு சொல்லிடு.''

பில் கைக் கடியாரத்தைப் பார்த்தான். ''லஞ்சுக்குள்ளே அங்கே திரும்பிட முடியும்னு தோணலே. வெளியே என்கூட வந்து ஏதாவது சாப்பிடலாமே, விர்ஜீனியா?''

''நான் வேற இடத்துக்கு லஞ்ச் சாப்பிடப் போறேன்.''

''ஓகே... பாதகமில்லே. ஒருநாள் ஒதுக்கி உன் கூட சாப்பிட வரணும்.''

''அது ரொம்ப இனிமையானதா அமையும்'' என்றார் அவர் சிரித்தபடி.

''விர்ஜீனியா, நீ ஒரு டார்லிங் தான். நீ என்னை விரும்பத்தான் செய்யறே. அப்படித்தானே? வேற யாரையும் விடவும், ஆங்?''

''பில், உன்னை நான் பிரமிக்கிறேன். நான் யாரையாவது மணக்கணும்னு முடிவு பண்ணினா, உன்னை உடனடியா தேர்ந் தெடுத்துடுவேன். சொல்வேன்: 'உடனடியா பில்லை எனக்குக் கொடுங்க' எப்படி?''

''வெல், அப்போ..''

''ஆனா நான் யாரையும் கல்யாணம் கட்டிக்கப் போறதில்லே. விதவையாவே இருந்துட்டுப் போறேனே.''

''நீ இப்ப என்னெல்லாம் பண்ணிக்கிட்டிருக்கியோ, அவையனைத் தையும் தொடர்ந்து பண்ணலாம். எங்கே போகணும்னு நீ நினைக்கிறியோ அங்கெல்லாம் போ.. இத்யாதி. நான் ஒருத்தன் வீட்டிலிருப்பதே தெரியாது. அப்படி நடந்துப்பேன்.''

''பில், உனக்குப் புரியலே. கலியாணம் பண்ணிக்கணும்னு முடிவெடுத்துட்டா, மிக உற்சாகமா பண்ணிக்கும் வகையை சார்ந்தவ நான்.புருஷன் ஒரு தடைனு நினைக்கும் வகையில்ல நான்.''

பில் ஒரு வெற்றிட உறுமலை வெளியிட்டான். ''நான் என்னையே சுட்டுக்கிட்டு சாக வேண்டியதுதான் போல'' என முணுமுணுத்தான்.

''நோ, அப்படியெல்லாம், நீ பண்ணிக்க மாட்டே, பில் டார்லிங். மாறாக நீ ஓர் அழகுப் பொண்ணை டின்னருக்குக் கூட்டிட்டுப் போவே - நேற்றைய முன்தின இரவில் நீ பண்ணினது மாதிரி.''

கண நேரம் குழம்பிப் போனான் பில். ''யார், டோரத்தி பாட்ரிக்கையா சொல்றே? அவ நல்ல பொண்ணு. வெளிப்படையானவ. இதுல ஒண்ணும் தப்பில்லே.''

''பில் டார்லிங், ஆமாம் - இதுல தப்பு இல்லே தான்! நீ மகிழணும்னு நான் உன்னை விரும்பறேன். ஆனா இதனால நான் உன் மனசுக்குள்ளே அம்பெய்திட்டேன்னு ரொம்ப ஸீன் போடாதே. அவ்ளோதான்.''

மிஸ்டர் பில் எலர்ஸ்லே அவனுடைய மதிப்பினை மீட்டுக் கொண்டான். ''நீ புரிஞ்சுக்கவே இல்லே, விர்ஜீனியா'' என்றான். ''ஆண்கள்...''

''பலதாரர்கள்! அவங்க அப்படிதான்னு எனக்குத் தெரியும். சில சமயங்கள்ல நானே கூட அப்படிப்பட்டவதானோனு எனக்கு ஒரு துள்ளலான சந்தேகம் வருவதுண்டு. ஏய், பில், நீ உண்மையாவே என்னைக் காதலிச்சேன்னா - உடனே வெளியே லஞ்சுக்கு என்னைக் கூட்டிட்டுப் போ.''

அத்தியாயம் - 5

# லண்டனில் ஆரம்ப இரவு

நுணுக்கமாய் திட்டமிடும் நகர்த்தல்களில் எப்போதுமே ஒரு வீழ்ச்சி எப்படியாவது இடம் பெற்று விடுகின்றது. ஜார்ஜ் லொமெக்ஸ் ஒரு தவறு பண்ணி விட்டார் - அவருடைய திட்டமிடல்களில் ஒரு பலஹீனமான பகுதி இருந்து விட்டது. அந்த சத்தற்ற பகுதி - பில்.

பில் எவர்ஸ்லே மிக மிக நேர்த்தியான காளை. அவன் ஒரு குட் கிரிக்கெட் ஆட்டக்காரன். மற்றும் கோல்ஃப் ப்ளேயர். எல்லோரிடமும் ரம்மியமாகவும் இணக்கமாயும் பழகும் விதமும், தண்மையான சிலுசிலு குணாதிசயமும் கொண்டவன். ஆனால் வெளியுறவு அலுவலகத்தில் இவன் பெற்றிருக்கும் நல்ல பெயர், இவன் பெற்றுள்ள புத்திசாலித் தனத்தால் அன்று... அது, இவனுக்குள்ள தொடர்புகளினால். இவன் என்ன வேலை பண்ணுவதற்காக பணியமர்த்தப்பட்டுள்ளானோ அதற்கு இவன் மட்டுமே மிக உகந்தவன். ஏறக்குறைய ஜார்ஜின் நாய் இவன். சிந்தித்துச் செயல்பட வேண்டிய வேலைகளையோ அல்லது அதிக பொறுப்புள்ள பணிகளையோ இவன் செய்வது கிடையாது. எப்போதும் ஜார்ஜின் தோளிலேயே இவன் தொத்திக் கொண்டிருக்க வேண்டும்... இதுதான் இவனது வேலை. அப்படி தொத்திக் கொண்டு, ஜார்ஜ் பார்க்க விரும்பாத முக்கியமற்ற ஆட்களை சந்தித்து திருப்பி அனுப்புவது, விசேஷ செய்திகளைப் பரப்புவது... அதாவது, சரியாய் சொல்ல வேண்டு மென்றால், எப்படியாவது ஒரு வகையில் தன்னை உபயோகமானவனாய் அமைத்துக் கொள்வது. ஜார்ஜ் இல்லாதபோது, அங்கிருக்கும் பெரிய நாற்காலியில் முடிந்த வரை தனது உடலை நீட்டி இழுத்துப் படுத்துக் கொண்டு விளையாட்டு சஞ்சிகைகளைப் படிப்பது இவனுக்கு மிகப் பிடிக்கும்.

செய்திகளைப் பரப்பவும் அல்லது அறியவும் பில்லை அனுப்பிப் பழக்கப்பட்டிருந்த ஜார்ஜ், 'கிரானார்த் மாளிகை' கப்பல் எப்போது வருகிறது என்று கண்டுவர இவனை அனுப்பியிருந்தார். மேல்தட்டு இங்கிலீஷ்காரர்கள் காட்டிக் கொள்வது போல், இனிமை ததும்பும் ஆனால் என்ன பேசுகிறான் என்றே கேட்காதபடி குரலை வைத்துக் கொண்டான் பில். உச்சரிப்பு ஆசிரியர் யாராயிருந்தாலும் பில் 'கிரானார்த்' என உச்சரித்த விதத்தில் நிச்சயம் தப்புக் கண்டுபிடித்திருப்பார். சொன்ன கப்பல் பெயர் என்னவாக வேண்டுமானாலும் இருக்கலாம் என்பது போல் போனது பில் சொன்ன விதம், க்ளர்க், *கார்ன்ஃபேரே* என எடுத்துக் கொண்டான்.

*கார்ன்ஃப்ரே கப்பல்* வரும் வியாழக்கிழமை வந்து சேர்வதாய் திட்டமாகியிருந்தது. குமாஸ்தா அப்படித்தான் சொன்னான். பில் தேங்க்ஸ் சொல்லிவிட்டுக் கிளம்பி விட்டான். கிடைத்த இத்தகவலை ஏற்றுக் கொண்ட ஜார்ஜ் லொமெக்ஸ் இதற்கேற்றாற் போல் திட்டங்களை வகுக்கத் துவங்கி விட்டார். நிச்சயமாய் ஜேம்ஸ் மேக்ரத் வியாழக்கிழமை வந்து சேர்ந்து விடுவான் என்றே எடுத்துக் கொண்டார் அவர்.

எனவே, தற்போதைக்கு, இந்த புதன்கிழமை காலையில், விடாது பேசுவதற்காக க்ளப் படிகளில் லார்ட் கேட்டர்ஹாமைப் பிடித்து இழுத்து வைத்துக் கொண்டிருந்த ஜார்ஜ், முந்தைய நாள் மதியமே கிரானார்த் மாளிகை கப்பல் வந்து சவுத் - ஹம்ப்டன் பகுதியில் நிறுத்தப்பட்டிருப்பதை அறிந்தபோது, ஆச்சரியப்பட்டுத்தான் போயிருப்பார். இதே மத்தியானம் இரண்டு மணிக்கு, ஜிம்மி மேக்ரத் என்கிற பெயரில் பிரயாணித்துக் கொண்டிருந்த ஆண்டனி கேட், வாட்டர்லூ நிலையத்தில் ட்ரெயினி லிருந்து இறங்கி, ஒரு டாக்ஸியை அமர்த்திக் கொண்டு, அப்படியே ஒருசில கண தயக்கத்துக்குப் பிறகு, நேராய் ஓட்டல் ப்ளீட்ஸுக்கு ஆணையிட்டார்.

''ஒருத்தன் வெளியூர்ல வசதியா தங்கணும்''- தனக்குத்தானே சொல்லிக் கொண்டார் ஆண்டனி, ஈடுபாடாய் டாக்ஸி ஜன்னல் வழியே வெளியே பார்த்தபடி.

லண்டனுக்கு ஆண்டனி வந்து சரியாக 14 வருடங்கள் ஆகிவிட்டன.

ஓட்டலை வந்தடைந்த ஆண்டனி ஒரு ரூமை ஏற்பாடு பண்ணி விட்டு ஒரு சிறு நடைக்குப் போனார். லண்டனுக்குத் திரும்பியது இன்பம்தான்.

எல்லாமும் மாறியுள்ளன. அங்கேயொரு ரெஸ்டாரண்ட் இருந்தது... யெஸ், அங்குதான் பல பயல்களோடு சேர்ந்துக் கொண்டு ஆண்டனி அடிக்கடி சாப்பிட்டது. அப்போது ஸோஷலிஸ்ட்டாக இருந்தார். அமைதியை நாடியபடி ரெட் •நிற 'டை' ஒன்றை அதன் சார்பாய் அணிந்தபடி. அப்போது இளையவர் இவர் - மிக இளையவர்.

மீண்டும் ப்ளீட்ஸுக்கு திரும்பி நடந்தார். அங்கு சாலையைக் கடக்கும்போது ஒரு மனிதன், ஆண்டனி நிலை தடுமாறிவிடுமளவுக்கு அவர் மீது மோதினான். இருவரும் உடனே தங்களை ஆசுவாசப்படுத்திக் கொள்ள, அந்த மனிதன் ஏதோ முணுமுணுப்பாய் மன்னிப்பினை உதிர்த்தான். மிக நெருக்கத்தில் ஆண்டனியின் முகத்தைப் படித்தான். அவன் ஒரு குள்ள, வலுவேறிய சாதாரண மனிதன்... அவன் நடவடிக்கையில் அந்நிய நாட்டுச் சாயல் அதிகமிருந்தது.

தன்னுடைய ஓட்டல் அறைக்கு நுழையும்போது எதனால் அப்படி ஒரு தேடும் பார்வையை அவன் பார்த்திருப்பான் என்று யோசித்தபடி போனார் ஆண்டனி. ம்ம்... விளக்கமேதும் சாத்தியப்படவில்லை. இவர் முகத்தில் இருக்கும் ஆழ்ந்த நிறம் இங்கிருக்கும் லண்டன் மக்களுக்கில்லாத ஒன்றாய் உள்ளதால் ஒருவேளை அது அவனுடைய கவனத்தை ஈர்த்திருக்கலாம். அறைக்குள் போனவர், திடுமென விளைந்த ஓர் உந்துதலால் அங்கிருந்த நிலைக் கண்ணாடி முன் போய் தன் முகத்தைப் பார்த்தார். பழைய நண்பர்கள் யாராவது இப்போது ஆண்டனியை முகத்துக்கு முகம் பார்த்தால் பிசகில்லாது 'இது ஆண்டனிதான்..' என அவர்களால் அடையாளம் கண்டுவிட முடியுமா? மறுத்து, மெதுவாய் தலையசைத்துக்கொண்டார்.

லண்டனை விட்டு ஆண்டனி கிளம்பியபோது வயது வெறும் 18 தான். வெள்ளை வெளேரென்றிருந்த சற்றே குண்டான பையன். அவ்வளவே. அந்தப் பையனை, ஒல்லியாகவும், ப்ரவுன் நிறமாய் மாறி விட்ட முகத்துடனும் இருக்கும் ஒரு புதிர் போன்றவனிடம் கண்டுபிடிப்பது இயலாத ஒன்று.

படுக்கைக்கு அருகேயிருக்கும் டெலிபோன் அலற, அதன் ரிஸீவருக்கு நகர்ந்தார் ஆண்டனி.

''ஹல்லோ!''

*ரிஸப்ஷனிலிருந்த நபரின் குரல் வந்தது: ''மிஸ்டர் ஜேம்ஸ் மேக்ரத்?''*

*''ஸ்பீக்கிங்.''*

*''ஒரு ஜென்டில்மேன் உங்களைப் பார்க்க வந்திருக்கார்.''*

*அதிசயித்துப் போனார் ஆண்டனி, ''என்னைப் பார்க்கவா?''*

*''யெஸ் ஸார். அயல்நாடு போல தெரியுது.''*

*''அவர் பேர் என்ன?''*

*ஒரு சிறு தாமதம் விளைந்து பிறகு ரிஸப்ஷனிஸ்ட் சொன்னார்: ''பையன்கிட்ட அவரோட கார்டைக் கொடுத்தனுப்பறேன்.''*

*ரிஸீவரை வைத்துவிட்டு ஆண்டனி காத்திருந்தார். சில நிமிடங்களில் கதவில் ஒரு 'டொக்' விழ பிறகு சிறுவன் ஒருவன் உள்ளே வந்தான்.*

*ஆண்டனி கார்டை வாங்கிக் கொண்டார். பின்வரும் பெயர் தான் அதில் பொறிக்கப்பட்டிருந்தது.*

**பேரான் லாலோப்ரெட்ஜ்ஸெல்**

*எதற்காக ரிஸப்ஷனிஸ்ட்டிடம் தயக்கம் விளைந்தது என்பதையும் பிறகுகூட அவன் ஏன் பெயரை உச்சரிக்கவில்லை என்பதற்கான காரணத்தையும் இப்போது நன்றாய் புரிந்து கொண்டார் ஆண்டனி. என்ன பெயரிது?*

*ஓரிரு நிமிடங்கள் கார்டைப் பிடித்தபடி நின்றுக் கொண்டிருந்த அவர் பிறகு வந்திருக்கும் ஜென்டில்மேனை உள்ளே விடும்படி பணித்தார்.*

*''யெஸ், ஸார்.''*

*போன சிறுவன், சிலநொடிகளில் பேரான் லாலோப்ரெட்ஜ்ஸெல் - வுடன் வந்து அவரை உள்ளே அனுமதித்தான். குண்டான, பெரும் தாடி கொண்ட, நிறைய முன் வழுக்கை கண்ட மனிதனவர்.*

*ஷூவின் சப்தமெழுப்ப நடந்து வந்து வணக்கம் தெரிவித்த அவர் வணங்கினார். ''மிஸ்டர் மேக்ரத்?'' என்று கேட்டார் அவர்.*

*இதற்கு ஆண்டனி மிக ஒப்புதலாய் நெருங்கி வந்தார். ''பேரான்'' என பெயர் சொன்னார். பிறகு ஒரு பெரிய இருக்கையைத் தங்கள் பக்கமாய் இழுத்துக் கொண்டு, ''உட்காரணும், ப்ளீஸ்'' என்றார். ''உங்களை இதுக்கு முன்னால பார்த்துப் பழகும் சந்தப்பம் அமைஞ்சதில்லேன்னு நினைக்கிறேன்.''*

''யா'' என ஒப்புக் கொண்டார் பேரான். ''அது என் துரதிர்ஷ்டம்'' என்றும் நாகரீக மரியாதையோடு குறிப்பிட்டார்.

அதே பாவத்தில், ''நானும் அப்படியே கருதறேன்'' என்றார் ஆண்டனி.

''இப்ப நாம பிஸினஸுக்குள்ளே எறங்கிடுவோம்'' – சொன்னார் பேரான். ''ஹெர்ஸோ ஸ்லோவாக்கியாவின் ராஜ விசுவாசிகள் சார்பாக இயங்குவோரின் லண்டன் பிரதிநிதியா நான் பணியாற்றிக் கிட்டிருக்கேன்.''

''அதுவும் பிரமிக்கத்தக்க விதமா... எனக்கு நிச்சயமா தெரியும்'' என கிசுகிசுத்தார் ஆண்டனி.

இந்தப் பாராட்டுக்கு மனமுவந்த நன்றியை முதுகு வளைத்து ஒப்புக் கொண்டார் பேரான். ''நீங்க மிக கனிவானவர்'' என்றார் விறைப்பாய். ''மிஸ்டர் மேக்ரத்... நான் உங்களிடமிருந்து எதையும் மறைக்க விரும்பலே. மன்னராட்சியை மறுபடியும் கொண்டு வந்து ஸ்தாபிக்க வேண்டிய காலகட்டம் வந்தாச்சு. மாண்புமிகு ராஜாதிராஜா மெஜஸ்டி நிக்கோலஸ் IV ன் நினைவாக. இது எங்களோட உடனடி இலக்கு.''

ஆமோதிப்பாய் கேட்டுக் கொண்டிருந்தார் ஆண்டனி.

''பட்டத்துல மாண்புமிகு மெஜஸ்டி ப்ரின்ஸ் மைக்கேல் ஏற்றப் படுவார். அவருக்கு உங்க பிரிட்டிஷாரின் சாதகமான பக்க பலமும் இருக்கு.''

''பிரகாசமான நிலை தெரியுது'' என்றார் ஆண்டனி. ''இதெல்லாத்தையும் என்கிட்ட சொல்வதற்கு நன்றி.''

''எல்லாம் ஏற்பாடாகியாச்சு - இப்பப் பார்த்து நீங்க வர்றீங்க... சங்கடங்களை உருவாக்க...''

சொன்ன பேரான், ஆண்டனியின் மீது நிலைக்குத்திய பார்வையைப் பதித்தார்.

''மை டியர் பேரான்'' என அவர் சொன்னதை எதிர்க்க ஆண்டனி ஆரம்பிக்க, ''யெஸ், யெஸ்'' என இடைபுகுந்து கொண்ட பேரான், ''நான் என்ன பேசறேன்னு புரிஞ்சுதான் பேசிக்கிட்டிருக்கேன்'' என்றார். ''மறைந்த கவுண்ட் ஸ்டைல்பிச்சின் வாழ்க்கை வரலாற்றின் பிரதியை நீங்க வெச்சிருக்கீங்க.'' குற்றம் சுமத்தும் பார்வையை ஆண்டனியின் மீது வீசினர் அவர்.

''என்கிட்டே இருந்துட்டா? அதுக்கென்ன? கவுண்ட் ஸ்டைல்பிச்சின் வாழ்க்கை சரித்திரம் மைக்கேலின் எதிர்காலத்துல பண்ணப் போவது தான் என்ன?''

''அது பெரும் புரளிகளை வெடிக்கச் செய்யும்.''

''எல்லா பெரிய மனுஷர்களின் வாழ்க்கை வரலாறுகளும் பண்ணுவது தானே இது.'' மிருதுவாய் சுட்டிக் காட்டினார் ஆண்டனி.

''ப்ச், இது வேற. அவருக்குப் பரம ரகசியங்கள் பற்றிய அறிதல்கள் இருந்திருக்கு. அதுல ஒரு கால் பகுதியை அவர் வெளியே எடுத்து விட்டால் கூட போதும்... ஐரோப்பா கண்டம் போர்ல விழ வேண்டியது தான். வேற வழியே கிடையாது.''

''ஓஓஓ... கவனியுங்க'' என்றான் ஆண்டனி. ''நான் அத்தனை கொடூரமானவனா இருக்க மாட்டேன்.''

''ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின் ஒப்லோவிட்ச், அதாவது இளவரசர் மைக்கேலின் ஆதரவுக்கு எதிரான சேதிகள் பரவும். ஆங்கிலேயர்களுக்குள்ள 'குடியரசு' என்பதன் மீதான நம்பிக்கை அத்தகையது.''

''என்னால் புரிஞ்சுக்க முடியுது'' என்ற ஆண்டனி. ''சுருக்குனு நொடிப் பொழுதுல பத்திப்பானுங்க, ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா பயலுங்க. அவங்க ரத்துத்துலேயே அத்தகைய வெடிக்கும் குணமிருக்கு. பால்கன் மக்கள்கிட்டேயிருந்து இப்படியாப்பட்ட குணாதிசயத்தைத்தான் இங்கிலாந்தும் எப்பவுமே எதிர்பார்க்குது. ஏன் அப்படினு தெரியலே - ஆனா இருக்கு'' என்றார்.

''உங்களுக்குப் புரியலே'' என்றார் பேரான். ''சுத்தமா. யெஸ் - சுத்தமா உங்களுக்கு விளங்கலே. என் உதடுகளும் திறக்க முடியாதபடி பூட்டப் பட்டிருக்கு'' என்று விட்டு பெருமூச்செறிந்தார்.

''நீங்க குறிப்பா எதைப்பற்றி பயப்படறீங்க?'' – கேட்டார் ஆண்டனி.

''வாழ்க்கை சரித்திரத்தைப் படித்துப் பார்க்கும் வரை என்னால சொல்ல முடியாது'' என்றே சுலபமாய் சொல்லிவிட்டார் பேரான். ''ஆனா அதுல நிச்சயமா என்னவோ இருக்கு என்பது மட்டும் நிஜம். இந்தப் பெரிய ராஜாங்க அரசர்கள் எப்பவுமே விவஸ்தையற்றவர்கள். சொல்லிட்டா என்ன விளையும் என்ற [illegible] இல்லாத பதர்கள்.''

''கொஞ்சம் என்னைப் பாருங்க'' என்று கனிவாய் சொன்னார் ஆண்டனி. ''இந்த விஷயம் முழுக்கவும் பயந்துப் பயந்து தப்பான கோணத்துலேயே நீங்க பார்க்கிறீங்க. எனக்கு இந்த பப்ளிஷர்ஸ் பற்றி நல்லாவே தெரியும். கோழி உக்காந்து உக்காந்து முட்டை போடற மாதிரி ஒரு புத்தகத்தை வெளியிடுவானுங்க இவனுங்க. இந்த புத்தகமும் அப்படித்தான். தட்டச்சுப் பணி எல்லாம் முடிஞ்சு வெளியாக குறைஞ்சது ஒரு வருஷம் ஆகும்.''

''நீங்க, ஒண்ணு சூதுவாது நிறையவுள்ள ஒரு வஞ்சக மனுஷனா யிருக்கணும்... இல்லே, எல்லாமும் நல்லபடியாகவே நடக்கும்னே நினைக்கிற ஒரு ஸிம்பிளான மனுஷனாயிருக்கணும். இந்த ஞாயிற்றுக்கிழமை நியூஸ் பேப்பர்ல அந்த வாழ்க்கை வரலாறு வெளியாவதற்கு வேண்டிய அத்தனை ஏற்பாடுகளும் நடந்தாச்சு.''

''ஓ!''- ஆண்டனி அறையப்பட்டு பின்னால் தள்ளப்பட்டவரைப் போலானார். ''ஆனா, அதுல வரும் எல்லாம் தவறுனு நீங்க சுத்தமா மறுக்கலாம் இல்லையா?'' என்றார் நம்பிக்கையுடன்.

வருத்தமாய் மறுத்துத் தலையசைத்தார் பேரான். ''புரிஞ்சுக்காம இஷ்டத்துக்குப் பேசறீங்க நீங்க. ஓகே -நேரடியா பிஸினஸ்க்குள்ளே ஏறங்கிடுவோம் ப்ளீஸ். ஓராயிரம் பவுண்டுகள் உங்களுக்குத் தரப்படணும், இல்லையா? இந்தப் பணையத் தொகைக்கு உங்களுக்கு சிறப்பான ஒரு நல்ல சேதியை நான் இப்ப தரப் போறேன்.''

''ஓ... உங்க ராஜ விசுவாச கழகத்தின் உளவுத் துறையை நான் வெகுவா பாராட்டறேன். என்னமா துப்பு கண்டுபிடிச்சு வெச்சிருக்கீங்க..''

''நான் உங்களுக்கு ஆயிரத்து ஐநூறு பவுண்டு தரேன்.''

ஆச்சரியம் பொங்க அவரைப் பார்த்த ஆண்டனி பிறகு இரக்கம் தொனிக்க மறுப்பாய் தலையசைத்தார். ''இப்படியெல்லாம் இப்ப மாத்திக்க முடியாதுனு நினைக்கிறேன்'' என்றார் சிறு புலம்பலாய்.

''நல்லது, அப்ப ரெண்டாயிரம் பவுண்டு தரேன்.''

''என்னைத் தூண்டி விடறீங்க பேரான், தூண்டி விடறீங்க. ம்ம்... முடியாது, இப்பவும்.''

''அப்ப என்னதான் விலை வேணும்னு நீங்களே சொல்லுங்க.''

''என் நிலைமையை நீங்க கொஞ்சமும் புரிஞ்சுக்கலேனு நினைக்கிறேன். எதையும் தரவல்ல... எத்தனை வேண்டுமானாலும் அள்ளித் தரவல்ல தேவதைகள் கட்சியில நீங்க இருக்கீங்கனு எனக்குத் தெரியும். உங்க பக்கத்து இலக்கினை இந்த வாழ்க்கைச் சரிதம் சேதப்படுத்தி விடலாம். இத்தனையிருந்தாலும் நான் ஒரு வேலையைப் பண்ணி முடிச்சுத் தருவதா சொல்லி அதுக்காக இங்கே வந்திருக்கேன். விளங்குதா? இந்த நிலையில இன்னொரு பக்கத்துக்கு நான் என்னை நானே வித்துட முடியாது - கூடாது. இது தப்பு.''

பேரான் ஈடுபாடு கொடுத்து கவனித்தார். ஆண்டனி பேசி முடித்ததும் பலமுறை ஆமோதிப்பாய் தனது தலையை அசைத்துக் கொண்டார் அவர்.

''விளங்குது. ஓர் ஆங்கிலேயன் விசுவாசம், ஆங்?''

''அப்படினு என்னை மட்டும் சொல்லிட முடியாது'' என்றார் ஆண்டனி. ''சொல்லப் போனா நாம ரெண்டு பேருமே நீங்க குறிப்பிடும் இதே படகுல தான் போய்க்கிட்டிருக்கோம்.''

பேரான் எழுந்து கொண்டார். ''அப்ப இதை வேற வழியில முயற்சி பண்ணனும்னு தோணுது. ஓகே குட் மார்னிங்.''

வணக்கம் தெரிவித்துக் கொண்டு சட்டென்று திரும்பியவர் விறைப்பாய் உடலை வைத்தபடி வெளியேறினார்.

''கடைசியில என்ன உணர்த்தினார்னு விளங்கலே'' என முணுமுணுத்துக் கொண்டார் ஆண்டனி. ''பயமுறுத்தல்? இதுபோன்ற லாலிபாப் பயமுறுத்தலுக்கெல்லாம் பயப்படறவன் நானில்லே. ஓ, அவன் பேரை மாத்திட வேண்டியதுதான்... லாலிபாப் பேரான்! வாவ், நல்ல பேர் இது.''

அடுத்து என்ன பண்ணுவது என்ற நிச்சயமற்று அறையில் இப்படியும் அப்படியுமாய் நடக்கலானார் ஆண்டனி. கைப்பிரதியைக் கொண்டு போய் கொடுக்க வைக்கப்பட்டுள்ள தேதிக் கெடு, ஒரு வாரம் தாண்டியதும் வந்து விடும். இன்று அக்டோபர் 5. அந்தக் கடைசிக் கெடு வருவதற்கு முன்னமேயே கைப்பிரதியைக் கொண்டு போய் ஒப்படைத்து விடுவதில் ஆண்டனிக்கு சம்மதம் கிடையாது. உண்மையாய் சொல்லப் போனால், அதில் அப்படி என்னவெல்லாம்தான் குறிப்பிடப்பட்டள்ளன என்பதைப் படித்து விடுவதில் காய்ச்சல் கண்டனைப் போன்ற வேகம் ஆண்டனிக்குள்

விளைந்துள்ளது. படகில் வந்துக் கொண்டிருக்கும்போதே இதை செய்துவிடத்தான் துடித்துக் கொண்டிருந்தார்... ஆனால் அடக்கியே வாசித்து விட்டார். உள்ளூர உறுத்தல் கவ்விக் கொண்டிருக்கும் போது சீக்கிரத்தில் விளங்காத கையெழுத்தில் எழுதப்பட்டிருந்த அதை பொதுயிடத்தில் படிக்க ஆண்டனியால் துணிய இயலவில்லை. ஆனால் இப்போது எப்போதுமில்லாத துணிச்சல் உள்ளே புகுந்துவிட இக்குழப்பத்துக்கெல்லாம் என்னதான் அடித்தளம் என கண்டு விடுவதில் முடிவாய் ஆனார்.

கூடவே இன்னொரு வேலையும் தலையில் உள்ளது.

ஓர் உந்துதல் அழுத்தித் தள்ள டெலிபோன் புத்தகத்தைக் கையிலெடுத்துக் கொண்டு அதில் மிஸஸ் ரேவல் என்ற பெயரைத் தேடினார். ஆறு ரேவல்கள் இருந்தன. மருத்துவர்கள் மண்டிக் கிடக்கும் ஹேர்லி தெருவின் அறுவை சிகிச்சை நிபுணர் மிஸஸ் எட்வர்டு ரேவல்; ஜேம்ஸ் ரேவல் அண்ட் கம்பெனி; ஹேம்ப்ஸ்டெட் பகுதியின் லென்னாக்ஸ் ரேவல்; ஈலிங் பகுதி முகவரி தாங்கிய மிஸ் மேரி ரேவல்; 487, பாண்ட் தெருவின் மாண்புமிகு திருமதி ரேவல் மற்றும் மிஸஸ் வில்ஸ் ரேவல். ஜேம்ஸ் ரேவல் மற்றும் மிஸ் ரேவல் ஆகியோரை ஒதுக்கி விடும்படி ஆண்டனிக்கு நான்கு பேர் மிஞ்சினார்கள். மேலும் அந்தப் பெண்மணியான ரேவல் லண்டனில் தானிருக்க வேண்டும் என்று நம்பிக் கொள்வதில் அர்த்தமேதும் இல்லை! ஒரு சிறு மறுப்பான தலையசைப்போடு புத்தகத்தை மூடினார் ஆண்டனி.

''இப்போதைக்கு இதை அப்படியே விட்டுடப் போறேன்'' என்று சொல்லிக் கொண்டார் அவர். ''சில சமயங்கள்ல - *தானா கனியும்!*''

இப்படிப்பட்ட நம்பிக்கைகளில் நிறைய அளவு அடங்கியுள்ளது, ஆண்டனியின் அதிர்ஷ்டம். இந்த ஆண்டனியின் ஜாதகம், அரை மணி நேரத்துக்குள்ளாகவே அவர் ஒரு செய்தித்தாளைப் புரட்டிக் கொண்டிருக்கும்போது ஊர்ஜிதமாயிற்று. அதில் வந்திருந்த ஆடையலங்காரங்கள் கொண்ட ஒரு படத்துக்குக் கீழேயிருந்த குறிப்பு:

***மாண்புமிகு திருமதி திமோத்தி ரேவல். திருமணத்துக்கு முன் திருமதி ரேவலின் பெயர்: மாண்புமிகு விர்ஜீனியா காவ்த்ரான். சீமான் எட்ஜ்பேஸ்ட்டானின் மகள்.***

ஆண்டனி அப்படத்தைக் கொஞ்ச நேரம் பார்த்த வண்ணமிருந்தார். பிறகு இரு உதடுகளையும் சீட்டியடிக்கும் பாணியில் குவித்தார். பிறகு அப்பக்கம் முழுதையும் கிழித்தெடுத்துக் கொண்ட அவர், அதனை மடித்து தன்னுடைய பாக்கெட்டில் வைத்துக் கொண்டார். மீண்டும் மாடிக்குப் போன அவர் சூட்கேஸை எடுத்து அதனுள்ளிருந்த ஒரு கடிதக் கொத்தினை வெளியிலெடுத்தார். அதைக் கட்டியிருந்த கயிறுக்கு அடியில் மடித்து பாக்கெட்டில் வைத்திருந்த செய்தித்தாள் பக்கத்தினைச் செருகினார்.

பிறகு, பின்புறத்திலிருந்து எதிர்பாராமல் விளைந்த சப்தத்தைக் கேட்டு, உடனே ஒரு வட்டமடித்து சட்டென திரும்பினார் அவர். ஓர் ஆள் வாசல் கதவினை அடைத்தபடி நின்றுக் கொண்டிருந்தான். சதுரமாய், கொடூரம் நிறைந்து, பேயறைந்தாற் போலிருந்த முகம். வெறி நாய் போல கீழுதடு உள்வாங்கி பற்கள் துருத்திய முகவாய்.

''யாரய்யா நீ? என் அறை வாசலில் வந்து என்ன பண்ணிக் கிட்டிருக்கே?'' என கேட்டார் ஆண்டனி. ''இங்கே மாடி வரை வர உன்னை யார் அனுமதிச்சது?''

''எனக்கு எங்கே போகணும்னு தோணுதோ அங்கே தான் நுழைஞ்சிருப்பேன்'' என்றான் அந்த அந்நியன். அவன் குரல் கரகரப்பாகவும் இங்கிலாந்துக்கே உரிய ஆங்கிலேயத் தன்மை அற்றுமிருந்தது.

''இன்னொரு டாகோ போல'' எண்ணிக் கொண்டார் ஆண்டனி.

''வெளியே போடா, ஃபூல்'' - குரல் அக்கம் பக்கத்தில் கேட்குமாறு கத்தினார் ஆண்டனி. ''யாரங்கே? எவன் இவன் உள்ளே வந்திருப்பது?''

கையில் கொத்தாய் ஆண்டனி பிடித்துக் கொண்டிருந்த கடிதக் கொத்தின் மீது அவனுடைய பார்வை பதிந்திருந்தது.

''நான் எதுக்காக வந்திருக்கேனோ அது என் கையில் கிடைச்சதும் நான் தானா வெளியேறிடுவேன்.''

''அது என்ன?''

அடிகள் எடுத்து வைத்து நெருங்கியிருந்தான் அவன். ''கவுண்ட் ஸ்டைல்பிச்சின் வாழ்க்கை வரலாறு.''

''அதை இங்கேயிருந்து எடுத்துக்கிட்டு உன்னால வெளியேறிட முடியாது'' என்றார் ஆண்டனி. ''நீ ஒரு பக்கா அமெச்சூர் நாடக

வில்லன்டா, முட்டாள். நீ வந்திருக்கும் தோரணை எனக்கு ரொம்ப பிடிக்குது - வெரி குட் ஒப்பனை. யார் உன்னை அங்கே அனுப்பினது? பேரான் லாலிபாப்?''

''பேரான்?'' – கோபமாய் சில வார்த்தைகளை சரசரவென அள்ளி விட்டான் அவன்.

''இப்படித்தான் நீ அந்தப் பேரை உச்சரிப்பே, இல்லையா.. குரைப்பினூடே சீறலாய் கத்தும் தெருநாய் போல. உன்னைப் போல என்னால அப்படியே சொல்ல முடியும்னு தோணலே... என் தொண்டை அதுக்குத் தயாராகலே... அவனை நான் லாலி பாப்னே சொல்லிக்கிறேன். ஆக அவன் தான் உன்னை இங்கே அனுப்பியிருக்கான், ஆங்?''

ஆனால் இதற்குப் பதிலாய் ஆண்டனிக்கு மறுப்புதான் கிடைத்தது. பிறகு பாக்கெட்டிலிருந்து ஒரு தாளை எடுத்த அந்த அந்நியன் அதைத் தூக்கி மேஜையில் எறிந்தான். ''பார்'' என்றான். ''பார்த்துட்டு, டியர் இங்கிலீஷ்மேன், குலை நடுங்கிப் போ.''

அது அப்படி என்னதான் என பார்க்க சற்று மெனக்கெட்டு முன்னால் வந்த ஆண்டனி, வந்தவன் மேற்சொன்ன இரண்டாவது பகுதியை பூர்த்தி செய்யும்படி எதுவும் செய்யவில்லை. அத்தாளில் அசிரத்தையாய் ஒரு மனிதக் கை சிகப்பு நிறத்தில் வரையப்பட்டிருந்தது.

''இது ஒரு கை போல தோணுது'' என்று குறிப்பிட்டார் அவர். ''ஆனா எனக்கு எப்படி தோணுது தெரியுமா... வடதுருவத்தில் நிகழும் சூரிய அஸ்தமனம் போல இருக்கு.''

''*சிகப்புக் கை கூட்டாளி* என்பதைக் காட்டும் அடையாளக் குறி அது. யெஸ் நான் *சிகப்புக் கை கூட்டத்தின் கூட்டாளி*.''

''நீ அப்படி சொல்லிக்காதே'' என்றார் ஆண்டனி, அவனை அதிக ஈடுபாடு கொடுத்து பார்த்தபடி. ''உன் கூட்டத்துல எல்லாமே உன்னைப் போலத்தானா?''

வந்தவன் கோபமாய் உறுமினான். ''நாயே'' என்றான், ''அதை விட கேவலமான சொறிநாய். மன்னராட்சி கூட்டம் கொடுத்துள்ள கூலிக்கு மாரடிக்கும் அடிமை. அந்த வாழ்கையை வரலாறைக் குடு. ஒரு துளி சிராய்ப்பு இல்லாம தப்பிப்பே. எங்க கூட்டத்தின் வலிமை அத்தகையது.''

''நன்றி'' என்ற ஆண்டனி சொன்னார்: ''நீ தவறான திசை நோக்கி உன் உழைப்பை செலவழிச்சிக்கிட்டேயிருக்கேனு தோணுது. இந்த வாழ்க்கை வரலாறை உன்னைப் போன்ற ஒரு சாதுவான கூட்டத்தின் கையில கொணடு போய் குடு என்பதல்ல எனக்கிடப்பட்டுள்ள கட்டளை. ஒரு குறிப்பிட்ட பப்ளிஷர்கிட்டே தரணும்.''

''பாஹ்'' – வெடியாய் சிரித்தான் அவன். ''அந்த ஆபீஸைப் போய் நீ அடையும் வரை உன்னை உயிரோடே விட்டு வெச்சிருப்போம்னா நினைக்கிறே? முட்டாள் பேச்சு இதுக்கு மேலும் வேணாமே, ம்.. அந்தக் கைப்பிரதிகளைக் குடு... இல்லேனா சுட்டுடுவேன்.''

ஒரு சின்ன ரிவால்வரைப் பாக்கெட்டிலிருந்து எடுத்த அவன், காற்றில் தூக்கி அதனைக் குறி வைத்துப் பிடித்தான்.

ஆனால் இப்படி செய்வதில் அவனுக்கு முன்னாலிருக்கும் ஆண்டனி கேட்டை அவன் தவறாய் கணித்து விட்டான். வேகமாய் இயங்கும் மனிதர்களை - அல்லது, அவர்கள் நினைத்ததை விடவும் படு வேகமாய் இயங்கவல்ல மனிதர்களை இதற்கு முன் அனுபவத்தில் அந்த அந்நியன் சந்தித்ததில்லை. ரிவால்வர் தூக்கப்பட்டு அவர் முன் குறி வைக்கப்படும்வரை ஆண்டனி காத்திருக்க விரும்பவில்லை. அந்தப் புதியவன் அதை பாக்கெட்டிலிருந்து எடுத்து ஸ்திரமாவதற்குள் முன்னோக்கி பாய்ந்த ஆண்டனி, அதனை அவன் கையிலிருந்து தெறித்து சிதறி விழுந்து விடும்படி ஒரு குத்து விட்டார். விட்ட அடி, அந்த ஆளை சிலமுறை ஊஞ்சலாட விட்டது. கடைசியில், ஆண்டனி பக்கமாய் முதுகு இருக்கும்படி தள்ளாடி நின்றான் அவன்.

இந்த சந்தர்ப்பம் நழுவவே விடக் கூடாத ஒன்று. சரியாய் இலக்குக் குறிக்கப்பட்ட ஆழமான குத்தில், அந்த ஆள் வாசற் கதவு வழியாய் பறந்துப் போய் வெளியே விழும்படி செய்தார் ஆண்டனி. ஒரு மூட்டையாய் அங்கு சிதைந்துப் போனான் அவன்.

அவனைப் பின்தொடர்ந்து அங்கு ஆண்டனி போய் சேர... ஆனால் சிகப்புக் கையின் கூட்டாளி மேற்கொண்டு வாங்கிக் கட்டிக் கொள்ள பிரக்ஞையோடு இல்லை. நொண்டியபடி, வெளியேறும்வழியில் கரைந்தான் அவன்.

''சிகப்புக் கையின் கூட்டாளியோட சக்தி இவ்ளோதான்'' என அவன் முதுகுக்குப் பின்னால் குறிப்பிட்டா ஆண்டனி. ''வாட்டசாட்டமான

ஓவியம் போலத்தான் இருக்கான். ஆனா ஒரே அடி போதும், நாயைக் கடாச! எப்படி அவன் உள்ளே வந்தான்? எனக்கு ஆச்சரியமா இருக்கு. ஒண்ணு மட்டும் இப்ப தனித்துவமா விளங்குது. இது நான் நினைச்ச மாதிரி அத்தனை சுலபமான விஷயமா இருக்கப் போவதில்லே. அமைதி விரும்பும் கூட்டம்... மற்றும் புரட்சிகரக் கூட்டம்... ரெண்டு பேர் கிட்டேயும் நான் மாட்டியாச்சு. அடுத்து தேசியவாதக் கூட்டம் வரும். விடுதலை விரும்பிகள்னு எவனாவது தூது வரலாம். ஆக ஒரு முடிவு இப்ப ஸ்திரமாகுது. நான் இன்னிக்கு ராத்திரியே அந்த வாழ்க்கை சரிதத்தைப் படிக்க ஆரம்பிச்சுடணும்!''

இவ்வாறெல்லாம் பேசிக் கொண்டார் ஆண்டனி. கைக்கடியாரத்தைப் பார்த்து மணி ஒன்பது என அறிந்து கொண்ட அவர், இருக்குமிடத்திலேயே இரவுச் சாப்பாட்டினை முடித்து விடலாம் என முடிவெடுத்துக் கொண்டார். இனி எவரும் உள்ளே வர மாட்டார்கள் என்ற கணிப்பு அவருக்குள் விளைந்தாலும் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள எடுக்க வேண்டிய முஸ்தீப்புக்களை அவர் தவிர்த்து விட விரும்பவில்லை. கீழே சாப்பிடப் போகும் நேரத்தில் எவனாவது உள்ளே வந்து சூட்கேஸை அபகரித்துக் கொண்டுவிட ஆண்டனிக்கு சம்பந்தமில்லை. எனவே அழைப்பு மணியையடித்த அவர் வந்த வெயிட்டரிடம் சாப்பிடத் தேவையானவற்றை சொல்லி அனுப்பினார்.

சாப்பாடு வரும்வரை காத்திருக்கும் நேரத்தில் கைப்பிரதியடங்கிய பையை எடுத்து மேஜையில் கிடந்த கடிதக் கொத்தோடு வைத்தார்.

கதவில் சில குட்டுகள்... தொடர்ந்து அந்த வெயிட்டர் சிறு டேபிள் ஒன்றுடனும் சாப்பாடு மற்றும் தட்டு கரண்டியுடனும் உள்ளே நுழைந்துக் கொண்டிருந்தான். ஆண்டனி அங்கிருக்கும் அலமாரி வரை நகர்ந்துப் போய் நின்றுக் கொண்டிருந்தார். வாசல் பக்கமாய் முதுகு இருக்கும்படி நின்றுக் கொண்டிருந்த அவர், அங்கு அருகிலிருந்த நிலைக் கண்ணாடியில் எதேச்சையாய் பார்வையைத் திருப்பினார். கண்களில் ஆச்சரியப்படுத்தும் காட்சி தென்பட்டது.

கைப்பிரதி அடங்கியிருந்த பையின் மீது வெயிட்டரின் பார்வை நிலைகுத்தியிருந்தது. அசையாதிருந்த ஆண்டனியின் முதுகு பக்கமாய் பார்வையைப் பதித்தபடி டேபிளைச் சுற்றி காற்றாய் நகர்ந்தான் அவன். அவனது கைகள் துடிப்பிலிருக்க வறண்டுப் போயிருந்த உதடுகளின் மீது

இரை கண்ட நாயாய் ஈர நாக்கினை ஒட்டிக் கொண்டான். இப்போது அவனை இன்னும் நெருக்கமாய் கவனித்தார் ஆண்டனி. அவன் நல்ல உயரமான ஆசாமி. எல்லா வெயிட்டர்களையும் போலவும் கூப்பிட்ட குரலுக்கு வளைந்து இணக்கமாகும் மரியாதை தெரிந்தவன். சுற்றுவட்டாரத்தைக் கவனித்தபடி நகர்த்தலிலிருக்கும் மழுங்க சிரைத்த முகம். அவன் ஓர் இத்தாலியனாக இருக்க வேண்டும் என ஆண்டனி எண்ணிக் கொண்டார். ம்ம்... பிரெஞ்சு ஆளாய் இருக்க வாய்ப்பில்லை.

இந்த நெருக்கடியான நேரத்தில் முன்னறிவிப்பின்றி சட்டென திரும்பினார் ஆண்டனி. வெயிட்டர் சற்று துணுக்குற்றாலும், அங்கிருந்த உப்பு கிண்ணத்தோடு எதையோ செய்வதைப் போல பாசாங்கில் இறங்கினான்.

''உன் பேர் என்ன?'' என்றார் ஆண்டனி திடீரென்று.

''கியூசப், ஸார்.''

''கியூசப்? ஓ, இத்தாலியனா?''

''யெஸ், ஸார்.''

அதே நாட்டு மொழியில் ஆண்டனி பேசத் தொடங்கி விட அவனும் அதே மொழியில் சரளமாய் மறு பதில்கள் அளித்தான். துரிதமாய் எதையோ சிந்தித்தபடி கியூசப் பரிமாறிய அற்புதமான உணவினை சாப்பிட்டு முடித்திருந்த ஆண்டனி, பிறகு ஓர் ஆமோதிப்பான தலையசைப்போடு அவனை சுத்தம் பண்ண அனுமதித்தார்.

இவர் தான் தப்பாய் எடுத்துக் கொண்டு விட்டாரா? அங்கு மூட்டை போலிருந்த ஒரு பார்சலின் மீது அவனுக்கு உண்டான ஓர் ஆர்வ உந்துதல், சாதாரணமான ஒன்று தானா? இப்படியும் இருக்கலாம்... ஆனால் அந்த வெயிட்டருக்குள் அப்போது ஜுரம் கண்டவனைப் போல் உருவாகியிருந்த படபடப்பு கலந்த கிளர்ச்சியை எண்ணியபோது, இந்த நினைப்பையே ஒத்திப் போட்டார் அவர். என்னவாயிருந்தாலும் புதிர்ப் போடப்பட்டவராய் தான் ஆனார் ஆண்டனி.

''விட்டுத் தொலை எல்லாத்தையும்'' என தனக்குத்தானே சொல்லிக் கொண்டார் அவர். ''எல்லாருமா அந்த கைப்பிரதிக்குப் பின்னாலேயே ஓடிக் கிட்டிருப்பாங்க? நெறைய கற்பனை பண்றேன்.''

டின்னர் முடிந்து அனைத்தும் வெயிட்டரோடு வெளியேற்றப் பட்டதும் தன்னை அப்படியே அந்த வாழ்க்கை சரிதக் கட்டோடு ஐக்கியப்படுத்திக் கொண்டார் ஆண்டனி. அழகாய் அமையாது கிறுக்கலாய் போன காலஞ்சென்ற கவுண்ட் ஸ்டைல்பிச்சின் கையெழுத்தின் காரணமாக அதனைப் படிக்கும் வேலை மெதுவாய் தான் போனது. ஒன்றன் பின் ஒன்றாக கொட்டாவிகள் துரத்தின. நான்காவது அத்தியாயத்தைப் படித்து முடித்ததும் கீழே வைத்து விட்டார்.

ம்ம், இதுவரை நகராத பாறாங்கல்லாய் டல்லடித்துக் கொண்டு போயிருந்தது கைப்பிரதி. எவ்விதமான கிளர்ச்சி பற்றியோ போராட்டம் பற்றியோ ஒரேயொரு க்ளூவும் வரவில்லை.

மலையாய் டேபிளில் குவிந்துக் கிடந்த கடிதங்களையும் கைப்பிரதியின் தாள்களையும் அள்ளி வரிசையாக்கிய ஆண்டனி, அவற்றை சூட்கேஸுக்குள் போட்டு மூடினார். பிறகு எழுந்துப்போய் கதவினை மூடினார். தாளிட்டார். பூட்டினார். பிறகு கூடுதல் தற்காப்புக்காக ஒரு நாற்காலியை இழுத்து கதவுக்கு முன் ஒட்டினாற் போல் போட்டார். அதில் ஒரு குவளை தண்ணீரையும் பாத்ரூமிலிருந்து கொண்டு வந்து வைத்தார்.

பெருமையாய் இத்தனை முன்னேற்பாடுகளையும் கண்காணித்துக் கொண்ட அவர், உடைகளைக் களைந்து படுக்கையில் கவிழ்ந்தார். பிறகு மறுபடியும் இன்னொரு முறை கவுண்ட் ஸ்டைல் பிச்சின் கைப்பிரதியை எடுத்துப் படிக்க ஆரம்பித்தாலும் அவருடைய கண்ணிமைகள் எழுந்திருக்க சத்தற்றுக் குவிந்தன. அந்த சரிதத்தை அப்படியே தன்னுடைய தலையணைக்குக் கீழே திணித்து விட்டு விளக்கினை அணைத்தவர் படுத்த சடுதியில் உடனே தூங்கி விட்டார்.

நாலு மணி நேரம் போல் கடந்திருக்க வேண்டும். திடீர் துணுக்குறலோடு தூக்கிவாரிப் போட்டு எழுந்தார் அவர். எது அவரை இப்படி அதிர்ச்சியாய் எழுப்பியது என்பதை அவர் அறியார். ஏதோ ஓர் ஓசை செய்திருக்க வேண்டும். வீர தீர சாகசங்களையே வாழ்க்கையாக்கிக் கொண்டு வாழ்வோருக்குள் தானாகவே நிரந்தரமாகியிருக்கும் ஓர் அபாய அறிவிப்பாயிருக்கலாம்.

சில கணங்கள், தன்னுடைய ஊகத்தைச் சரிபார்த்துக் கொள்ளும் விதமாய் அப்படியே சிலையாய் படுத்தே கிடந்தார் அவர். நழுவிப்

போவதைப் போன்ற ஒரு நழுவலான ஓசையை அவரால் கேட்க முடிந்தது... பிறகு, அவருக்கும் ஜன்னலுக்கும்இடைப்பட்ட கருமையில் கறுப்பு உருவமொன்று அசைவது புலப்பட்டது. அங்கே, அந்த சூட்கேஸுக்கு அருகில்.

ஸ்பிரிங்கிலிருந்து விடுபட்ட பொருளாய் குதித்தெழுந்த அவர், அப்படியே விளக்கையும் தட்டி எரிய விட்டார். சூட்கேஸ் மீது குனிந்துக் கொண்டிருந்த ஓர் உருவம் தற்போது ஆண்டனி மீது பொதியாய் தாவியது.

அது வெயிட்டர் கியூசப். அவனது வலக்கையில் நீளமான பளபளக்கும் ஒரு கத்தி பிரகாசித்தது. இப்போது தனக்கு முன் இருக்கும் ஆபத்தினைச் சரியாக விளங்கிக் கொண்டிருந்த ஆண்டனியின் மீது அவன் சரியாய் குறி வைத்து பாய்ந்திறங்கினான். ஆண்டனி நிராயுதபாணி... ஆனால் அவனோ ஒரு ஆயுத ஏற்பாட்டோடு வந்திருப்பவன்.

சரியான நேரத்தில் ஆண்டனி ஒரு பக்கமாய் தள்ளிப் போய்விட, குறி தவறி விட்ட கியூசப் கத்தியோடு வீழ்ந்தான். அடுத்த நொடியில் இரு ஆடவர்களும் இறுக்கமாய் நெருக்கிய நிலையில் தரையில் புரண்டுக் கொண்டிருந்தனர். ஆண்டனியின் முழு ஆண் பலமும் கியூசப்பின் வலக்கையை நகர்த்த முடியாமல் இறுக்கிப் பிடித்து அவனைக் கத்தியை பிரயோகிப்பதிலிருந்து தவிர்த்து வைப்பதில் குவிந்திருந்தது. பிடித்திருந்த அவனுடைய கையை அப்படியே பின்னோக்கி முறுக்கித் திருப்பினார் அவர். அதே சமயத்தில் இத்தாலியனின் கை சரியாக அவருடைய குரல்வளையைப் பிடித்து இறுக்கி அவரை மூச்சுக் காற்றுக்காக அல்லாட விட்டது. இப்படியிருந்தும், வேறு வழியில்லாததால், அவனுடைய கையை உடைத்து விடுவது போல் பின்னோக்கி ஒடித்தார்.

கத்தி தரையில் சிதறும் கிண்கிணீர் ஓசை விளைந்தது. அந்த நொடிப் பொழுது சிந்தனை சிதறலைப் பயன்படுத்திக் கொண்டு ஆண்டனியின் இரும்புப் பிடியிலிருந்து தப்பி எழுந்தான் அவன். ஆண்டனியும் அவனுக்கு இணையாகவே துரிதமாய் துள்ளியெழுந்தாலும், அவனை வெளியில் தப்பியோட விட்டுவிடக் கூடாது என்ற நினைப்பில் சட்டென கதவு பக்கமாய் போய்விட்டார். ஆனால், அவர் நகர்த்தி வைத்திருந்த சேரும் தண்ணீர் குவளையும் துளியும் சிதையாது அப்படியே இருப்பதை உணர அவருக்கு சில நொடிகள் தேவைப்பட்டு விட்டன.

கியூசப் நுழைந்திருந்தது, ஜன்னல் வழியாக. ஆகவே அவன் இப்போது வேகமாய் ஓடியிருப்பது ஜன்னல் நோக்கி. கதவு பக்கமாய் தப்பாக ஓடி விட்ட ஆண்டனி உண்டு பண்ணித் தந்ததிலிருந்த ஆதாயத்தைப் பயன்படுத்திக் கொண்டு பால்கனியில் குதித்து, அங்கிருந்து சற்று தள்ளியிருந்த இன்னொரு பால்கனிக்குள்ளும் குதித்து, அதிலிருந்து சற்று தள்ளியிருந்த ஒரு ஜன்னல் வழியாக வெளியே குதித்து முடித்திருந்தான் அவன்.

எனவே அவனை இனி பின் தொடர்ந்து ஆண்டனியும் குதிப்பதிலெல்லாம் எந்த லாபமும் கிடையாது என்பதை இவரே உணர்ந்திருந்தார். திரும்பிப் போக வேண்டிய பாதை அவனுக்கு குழப்பமின்றித் தெரியும். ஆனால் ஆண்டனி முயன்றால் பாதை மாறி எங்காவது தான் போவார்.

படுக்கை வரை நடந்துப் போன ஆண்டனி மெத்தையில் அமர்ந்து தலையணைக்குக் கீழே கையை விட்டு சரிதத்தை வெளியிலெடுத்தார். நல்லவேளை சூட்கேஸுக்குள் இல்லாமல் இது இங்கே தலையணைக்குக் கீழேயிருந்தது. எழுந்துக் கொண்ட அவர், சூட்கேஸ் வரை போய், அதனுள்ளிருக்கும் கடிதங்களை வெளியிலெடுக்கும் திட்டத்தோடு அதனுள்ளே பார்த்தார்.

கடிதங்கள் போய்விட்டன.

அத்தியாயம் 6

# ப்ளாக் - மெயில் எனும் இனிய கலை

பாண்ட் சாலையிலிருக்கும் தனது இல்லத்துக்கு விர்ஜீனியா ரேவல் நுழைந்தபோது மணி நாலடிக்க ஐந்து நிமிஷம். மாற்றுச் சாவியைப் போட்டு கதவைத் திறந்து உள்ளே நுழைந்த அவர் உடனடியாய் வேலையாளை எதிர் கொண்டார்.

"மன்னிக்கணும் மேடம். வந்தவுடனே தொந்தரவு தருவதற்கு. ஆனா ஓர் ஆள் உங்களைப் பார்க்கணும்னு வந்திருக்கார்.."

ஒரு கணம், மிகப் பணிவான வார்த்தைகளைக் கோர்த்தெடுத்து வேலைக்காரன் சொன்ன சேதிக்கு, செவி சாய்க்காமல் தானிருந்தார் விர்ஜீனியா. "மிஸ்டர் லொமெக்ஸ்? எங்கே இருக்கார்? வரவேற்பறையிலா?"

"ஓ, நோ மேடம், வந்திருப்பது மிஸ்டர் லொமேக்ஸ் கிடையாது" - சிறு எதிர்ப்பு தொனிக்க சொன்னான் வேலைக்காரன். "வேற ஆள், அவனை உள்ளே விட நான் சம்மதமே தரலே. ஆனா அவந்தான் மிக முக்கியமான பிஸினஸா வந்திருக்கேன்னு அடம் பிடிச்சான். காலம் சென்ற கேப்டன் சம்பந்தமானு அவன் சொல்லித் தெரிஞ்சுக்கிட்டேன். அதனால நீங்க அவனைப் பார்க்க விரும்பலாம்னு கருதி நாந்தான் அவனை வரவேற்பறையில் உட்கார வெச்சிருக்கேன்."

சில நிமிடங்கள் சிந்தித்தவாறே நின்றுக் கொண்டிருந்தார் விர்ஜீனியா. சில வருடங்களாகவே விதவையாகத்தான் அவர் வாழ்ந்து வருகின்றார். அவருடைய கணவரைப் பற்றி அதிகமாக வெளியே பேசாமலிருக்கும்

விர்ஜீனியாவின் குணத்தை, அவரது மேட்டுமையான வாழ்க்கைக்கு அடியில் தாளாத சோகம் இருப்பதுதான் இதற்கு காரணம் என்று பலர் சொல்வதுண்டு. வேறு பலரால் ஜஸ்ட் இதற்கு நேர்மாறாய் கொள்ளப்பட்டதுண்டு. கேப்டன் ரேவலுக்காக விர்ஜீனியா என்றுமே கவலைப்பட்டவர் கிடையாது என்பது அவர்களுடைய கருத்து... ஆகவே தான் உள்ளூர உணராத ஒரு சோகத்தை அவளால் பொய்யாய் கூட காட்ட முடியவில்லை என்பார்கள் அவர்கள்.

''இன்னொரு விஷயத்தையும் நான் சொல்லிடணும் மேடம்'' என தொடர்ந்த வேலைக்காரன் ''அவனைப் பார்க்க அயல்நாட்டானைப் போலயிருக்கு மேடம். நம்ம ஊர் மாதிரி தெரியலே'' என்றான்.

விர்ஜீனியாவின் ஈடுபாடு சற்று கூடியது. அவருடைய கணவர் ரகசிய இலாக்காவில் பணியிலிருந்தார். *ஹெர்ஸோ ஸ்லோவாக்கியாவின்* ராஜாவும் ராணியும் படுகொலை செய்யப்பட்ட பரபரப்பான காலகட்டத்தில் இருவரும் *ஹெர்ஸோ ஸ்லோவாக்கியாவில்* தானிருந்தார்கள். வந்திருப்பவன் *ஹெர்ஸோ ஸ்லாவாக்கியா*-காரனாயிருக்கலாம். ஒரு பழைய நிஜ ஊழியன்...

''நீ சரியான காரியம் தான் பண்ணியிருக்கே'' என்றார் அவர் ஒப்புதலாய் தலையசைத்துக் கொண்டே. ''அவரை எங்கே உட்கார வெச்சிருப்பதா சொன்னே? வரவேற்பறை?''

அவருடைய ஓசையெழுப்பாத மெல்லிய அடிகளை எடுத்து வைத்து இந்த அறையைக் கடந்த விர்ஜீனியா அருகிலிருந்த ஒரு சிறு அறையின் மூடப்பட்டிருந்த கதவினைத் தள்ளித் திறந்தார்.

கனப்புக்கருகிலிருந்த இருக்கையில் வந்திருந்த பார்வையாளன் அமர்ந்திருந்தான். மிஸஸ் ரேவல் நுழைந்ததும் எழுந்துக் கொண்ட அவன் அவரை முறைத்தபடி நின்றான். முகங்களை நினைவில் தக்க வைத்துக் கொள்வதில் அதியற்புத சக்தி கொண்ட விர்ஜீனியா உடனேயே இந்த முகத்தை வேறெங்கும் பார்த்ததே கிடையாது என்று புரிந்துக் கொண்டு விட்டார். உயரமாயிருந்தான். கறுப்பு. பேயறைந்தார் போல முகம். சந்தேகத்துக்குத் துளியும் இடமின்றி இவன் ஓர் அந்நியன். இத்தாலி அல்லது ஸ்பானிஷ் என எடை போட்டார்.

''என்னைப் பார்க்க விரும்பினியா?'' என்றார் பட்டென்று. ''ஐ ஆம் மிஸஸ் ரேவல்.''

ஓரிரு நிமிடங்கள் அந்த மனிதன் எப்பதிலும் தரவில்லை. ஏதோ அவரை நெருக்கத்தில் எடை போடுபவனைப் போல் மிக மெதுவாய் ஆனால் முழுவதுமாய் கூர்ந்து கவனித்தான். வெளிப்படையான வஞ்சகத் தன்மை அவன் செயலில் இருந்தது. அதை அவர் விரைவாகவே கண்டு கொண்டு விட்டார்.

''என்ன பிஸினஸுக்காக வந்திருக்கேன்னு சொல்றியா?'' என சற்று பொறுமையிழந்தவராய் காட்டிக் கொண்டு கேட்டார் அவர்.

''நீங்கதானே மிஸஸ் ரேவல்? மிஸஸ் திமோத்தி ரேவல்?''

''யெஸ், அப்படித்தான் ஜஸ்ட் இப்ப நான் உங்கிட்டே சொன்னேன்.''

''ஆமாமாம். நீங்க என்னைப் பார்க்க சம்மதிச்சது ஒரு நல்ல முடிவு மிஸஸ் ரேவல். அப்படியில்லைனா, உங்க வேலைக்காரன்கிட்டே சொன்னதையே சொல்றேன்... நான் வந்த பிஸினஸை உங்க கணவர் மூலமா பண்ணி முடிக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு நான் தள்ளப் பட்டிருப்பேன்.

நம்ப முடியாத ஒன்றைப் பார்ப்பதைப் போல விர்ஜீனியா அவனைப் பார்த்தார். ஆனால் ஏதோ ஒரு சக்தி அவர் உதடு வரை வந்துவிட்ட உண்மையைத் தடுத்து நிறுத்தி சொல்ல விடாமல் செய்து விட்டது. உண்மையை வறண்ட ஒரு விமர்சனமாய் தருவதோடு நிறுத்திக் கொண்டார். ''அவரைக் கண்டுபிடிக்கறதுலே நீ நிறைய மெனக்கெட வேண்டியிருக்கும்.''

''அப்படியெல்லாம் எதுவும் கிடையாது. நான் பிடிவாதக்காரன். இப்போதைக்கு நான் வந்த விஷயத்தை சொல்லிடறேன். இது என்னனு உங்களுக்கு அடையாளம் தெரியுதா?''

அவன் கையில் செழிப்பாய் தாள்களை வைத்திருந்தான். அவற்றில் மேலாக இருந்ததை அதிக ஈடுபாடு கொடுக்காது பார்த்தார் விர்ஜீனியா.

''இது என்னனு உங்களால சொல்ல முடியுமா, மேடம்?''

''கடிதங்கள் போல தெரியுது'' என அவர் பதில் சொல்லும்போதே, ஒரு முடிவோடு உள்ளே நுழைந்திருக்கும் ஒரு மகா தைரியக்காரனுடன் தான் மோத வேண்டியிருக்கும் என்று புரிந்து கொண்டார்.

''மேலும், இக்கடிதம் யாருக்கு எழுதப்பட்டிருக்கு என்பதும் உங்களுக்குத் தெரியுதுல்லே?'' முகவரியைத் தெளிவாய் தெரியும்படி முக்கியப்படுத்திப் பிடித்துக் கொண்டு கேட்டான் அவன்.

''என்னால் படிக்க முடியுது'' என்றார் விர்ஜீனியா இனிமையாய். ''கேப்டன் ஓ நீல் என்பவருக்கு எழுதப்பட்டிருக்கும் கடிதம் இது. எண். 15 பாரீஸ் என்பது முகவரி.''

அவன் கண்களுக்கு இன்னமும் புலப்படாத ஏதோ ஒன்றை அவருடைய முகத்தில் பசியோடு தேடினான் அவன். கேட்டான்: ''இந்தக் கடிதத்தைப் பார்க்க முடியுமா, ப்ளீஸ்?''

விர்ஜீனியா அந்த உறையை அவனிடமிருந்து பெற்றுக் கொண்டார். உள்ளிருப்பதை உருவியெடுத்து சிறு நோட்டம் தான் விட்டிருப்பார்... உடனேயே இறுக்கமாகி அதனை அப்படியே அவனிடம் திருப்பித் தந்துவிட்டார்.

''இது ஓர் அந்தரங்கக் கடிதம். நிச்சயமாய் நான் படிக்க உகந்தது கிடையாது.''

அந்த ஆள் கிண்டலாய் உரக்கச் சிரித்தான்.

''உங்களோட அட்டகாசமான நடிகையர் திலகம் பங்களிப்புக்கு, மிஸஸ் ரேவல், என்னுடைய சிரந்தாழ்த்திய வந்தனங்கள். உங்களோட பாத்திரத்தைத் தலை மேல் தாங்கி நடிச்சுட்டீங்க. இருந்தாலும், நிச்சயமா இதனடியில் உள்ள கையொப்பத்தை உங்களால மறுக்க முடியாதுனு நினைக்கிறேன்.''

''கையொப்பம்?''

விர்ஜீனியா அக்கடிதத்தின் பின்பக்கத்தைத் திருப்பிப் பார்த்து வார்த்தையெழாத ஆச்சரியத்தில் மூழ்கடிக்கப்பட்டார். நுண்மையான சாய்வெழுத்துக்களில் போடப்பட்டிருந்த கையொப்பம். விர்ஜீனியா ரேவல்! ஆச்சரியத்தால் அவரிடமிருந்து விளைந்த கூவலைக் கட்டுப் படுத்திக் கொண்டு அக்கடிதத்தைத் தற்போது ஆரம்பத்திலிருந்து முழுக்கவும் படித்தார். பிறகு சிந்தனையில் தன்னையிழந்தவராய் ஒரு நிமிடம் அப்படியே நின்றுக் கொண்டிருந்தார். அக்கடிதம் போன விதம் இங்கு இப்போது எதைக் குறி வைத்து காட்சிகள் அரங்கேறிக் கொண்டிருக்கின்றன என்பதை அவருக்குத் தெளிவுப்படுத்தி விட்டது.

''சொல்லுங்க மேடம்..'' என்ற அவன் ''அது உங்கபேர், இல்லையா?'' என்றான்.

''ஓ, யெஸ்'' என்றார் வெர்ஜீனியா. ''அது என் பேர் தான்.''

''ஆனா அது என் கையெழுத்து கிடையாது'' என அவர் கூடுதலாயும் சொல்லியிருப்பார். ஆனால் பதிலாக தன்னைக் காண வந்திருந்த பார்வையாளனைப் பார்த்து அதிரடி சிரிப்பு ஒன்றினை வெளியிட்டார். ''இதைப் பற்றி'' என்று இளிப்பாய் பேசிய அவர் ''ஏன் நாம் உட்கார்ந்து விலாவாரியா பேசக் கூடாது'' என கேட்டார்.

அவன் புதிர்ப் போடப்பட்டவனாய் ஆனான். இந்த அளவுக்கு தாராளமாய் அவர் நடந்து கொள்ள முன்வருவார் என அவன் நினைத்திருக்கவில்லை. அவனைப் பார்த்து வெர்ஜீனியா துளியும் பயம் கொள்ளவில்லை என்று அவனுடைய உள்மனம் சுட்டிக் காட்டியது.

''முதல்ல எனக்குத் தெரிய வேண்டியது இதுதான்: நீ எப்படி என்னைக் கண்டுபிடிச்சே?''

''அது ரொம்ப ஈஸி.''

தன் சட்டைப் பையில் வைத்திருந்த கிழித்தெடுத்திருந்த அந்த சிறு செய்தி கிறுக்கினை வெளியிலெடுத்து அவன் அதை விர்ஜீனியாவிடம் கொடுத்தான். ஆண்டனி கேட் இருந்திருந்தால் அதனை அடையாளம் கண்டிருப்பார்.

''ஐ ஸீ'' என்றபடி ஒரு சிறு சிந்தனை பொதிந்த முகச் சுளிப்போடு அதனை திருப்பி அவனிடமே தந்தார் மிஸஸ். ''ரொம்பவும் சுலபமாத்தான் இருந்திருக்கு.''

''ம், புரியுதில்லே! இன்னொண்ணையும் புரிஞ்சுக்குங்க... இது ஒண்ணு மட்டும்தான் இத்தகைய கடுதாசி கிடையாது. இது மாதிரி ஒரு கொத்து இருக்கு.''

''டியர் ஸார்'' என்ற விர்ஜீனியா, ''இந்த விஷயத்துல நான் தனியாளா முடிவெடுக்க வேண்டியிருக்கு'' என்றாள்.

மீண்டும் அவர் சொன்ன தொனி அவனைப் புதிருக்குள்ளாக்கியதை மிஸஸ் ரேவலால் கவனிக்க முடிந்தது. தற்சமயம் நடக்கும் விஷயத்தில் அவர் தனைக்குள் தானே மகிழ்ந்துக் கொண்டிருந்தார்.

''என்னயிருந்தாலும்'' என அவனைப் பார்த்து மிகக் கனிவாய் புன்னகைத்த அவர் ''அத்தனை கடிதங்களையும் தூக்கிக்கிட்டு வந்து என்னிடமே ஒப்படைக்க நீங்க பட்டுள்ள சிரமம், பாராட்டுதற்குரியது'' என்றார்.

அவன் தொண்டையைச் செருமிக் கொள்ள எடுத்துக் கொண்ட அவகாசத்தில் சிறு இடைவெளி விளைந்தது. ''நான் ரொம்ப ஏழை, மிஸஸ் ரேவல்'' என்று இறுதியாய் அவன் சொன்னான்: இப்படி சொன்ன விஷயத்தை மிகவும் முக்கியப்படுத்தி முன் வைத்து, ''எந்த அனுகூலமும் இல்லாம இந்தக் கடிதங்களை நீங்க எடுத்துக்க நான் விட்டுத்தர மாட்டேன், மேடம்.''

''நீ தப்பா புரிஞ்சுக்கிட்டிருக்கன்னு நினைக்கிறேன். இந்தக் கடிதங்கள் இவற்றை யார் எழுதினாங்களோ அவங்களுடைய சொத்து.''

''தேவையில்லாம பேச்சை வளர்க்காதீங்க மேடம். நான் முட்டாள் கிடையாது. இக்கடிதங்களை... அதாவது ஒரு பெண் அவளுடைய காதலனுக்கு தேனொழுக எழுதிய இக்கடிதங்களை... நான் படிச்சுட்டேன். இவை அவளுடைய கணவன் கையில கிடைச்சா விளையக் கூடிய புயல் பற்றி எனக்குத் தெரியும். இவையத்தனையையும் தூக்கிக்கிட்டு நான் உங்க கணவன் கிட்டே போவதைத் தான் நீங்க விரும்பறீங்களா?''

''ஓ... ஒரு சாத்தியக் கூறை நீ கவனிக்காம விட்டிருக்கே. இக்கடிதங்கள் கொஞ்ச வருஷத்துக்கு முன்னாடி எழுதப்பட்டவை. ஒருவேளை அந்தக் காலகட்டத்திலிருந்து நான் ஒரு விதவையா ஆகியிருந்தால்..?''

தீர்மானமாய் மறுத்துத் தலையசைத்தான் அவன். ''அப்படினா, நீங்க பயப்பட ஒண்ணுமே கிடையாதுனா, இத்தனை நேரம் என்னை உட்கார வெச்சு நீங்க பேரம் பேச துணிஞ்சிருக்க மாட்டீங்க.''

விர்ஜீனியா சிரித்தார். ''சரி, உன்னோட விலை என்ன?''

''ஓராயிரம் பவுண்டுகள் தந்தீங்கன்னா, அந்தக் கடிதக் கொத்து முழுவதையும் நான் உங்ககிட்டே விட்டுட்டுப் போயிடுவேன். இதுக்கு நான் கேட்கும் விலை ரொம்ப மலிவானது. ஆனா, ஒண்ணு தெரிஞ்சுக்குங்க, அதிகமா கேட்கவும் ஏனோ எனக்கு மனசு வரலே.''

விர்ஜீனியா முடிவாய், ''உனக்குப் போய் நான் ஓராயிரம் பவுண்டுகள் தருவதைக் கனவுல கூட என்னால நெனச்சுப் பார்க்க முடியாது'' என்றார்.

''மேடம்... நான் பேரம் பேசுவது கிடையாது. ஓராயிரம் பவுண்டுகள்.. நான் கடிதங்களை உங்க கையில விட்டுடறேன்.''

விர்ஜீனியா சிந்தித்தார். ''இதுபற்றி சிந்திக்க நீ எனக்குக் கொஞ்சம் அவகாசம் விட்டுத் தரணும். அத்தனை பெருந்தொகையை உடனடியாக திரட்டுவது எனக்கு சிரமமான காரியம்.''

''ஒத்துக்கிட்டதுக்கு முன் பணமா இப்போதைக்குக் கொஞ்சம்... அம்பது பவுண்டுனு வெச்சுக்குவோமே கொடுங்க... பிறகு நான் திரும்பி வரேன்.''

விர்ஜீனியா கடியாரத்தை நிமிர்ந்து பார்த்தார். நாலடித்து ஐந்து நிமிடங்கள். கீழே அழைப்பு மணியடித்தது போல் தோன்றியது அவருக்கு.

''வெரி வெல்'' என்றார் அவசரமாய். ''நாளைக்கு மறுபடியும் வா. ஆனா இதைவிட காலந்தாழ்த்தி ஆறு மணி போல.''

குறுக்கே அறையைக் கடந்து போய் மேஜைக்கருகே நின்றார். பிறகு அதன் ஒரு டிராயரைச் சாவி போட்டுத் திறந்து இழுத்து அழுக்கேறிய கொத்து கரன்ஸி நோட்டுக்களை அள்ளினார்.

''நாப்பது பவுண்டு இருக்கும். இப்போதைக்கு இது போதும்.''

பெரும் விருப்பம் கொண்டு அந்நோட்டுக்களை அபகரிப்பது போல் பிடுங்கினான் அவன்.

''இப்போ உடனே கிளம்பிடு, போ.. போ..''

மரியாதையாய் அந்த அறையை விட்டு அகன்றான் அவன். திறந்த கதவின் வழியாக ஹாலில் ஜார்ஜ் லொமெக்ஸ் வந்திருப்பது அங்கு விர்ஜீனியாவுக்கு தெரிந்தது. அவர் மாடிப் பகுதிக்கு காவக்காரனால் அடையாளம் காட்டப்பட்டு அனுப்பப்பட்டுக் கொண்டிருந்தார்.

விர்ஜீனியா அவரை அழைத்தார். ''இப்படி இங்கே வாங்க ஜார்ஜ். ரெண்டு டீ கொண்டு வாப்பா.''

இரண்டு ஜன்னல்களையும் திறந்துவிட்டபடி விர்ஜீனியா அறைக்குள் நிற்க, ஜார்ஜ் உள்ளே நுழைந்தபோது, நடனமிடும் கண்களோடும் வீசிய காற்றின் வேகத்துக்கு சுழன்றாடிய கூந்தலோடும் அவர் அம்சமாய் தென்பட்டார்.

''கொஞ்ச நேரத்துல மூடிடறேன், ஜார்ஜ். ரூமுக்குள்ளே காற்றோட்டம் வேணும்னு எதிர்பார்த்தேன். ஆங்.. மாடிக்கு வர்ற வழியில் அந்த ப்ளாக் மெயிலரை நீங்க பார்த்தீங்களா?'

''யார், யார்?''

''ப்ளாக் - மெயிலர் ஜார்ஜ். ப்-ளா-க்-மெ-யி-ல-ர்... ரகசியம் எதையோ காரணமா வெச்சுக்கிட்டு மிரட்டுபவன்.''

''மை டியர் விர்ஜீனியா... விளையாடறியா?''

''ஓ, கிடையாது ஜார்ஜ், உண்மையா.''

''இங்கே வந்து அவன் யாரை ப்ளாக் மெயில் பண்ணினான்?''

''என்னை, ஜார்ஜ்.''

''ஓ, டியர் விர்ஜீனியா.. நீ என்ன பதில் தந்தே?''

''வெல், முதல் தடவை என்பதாலே, எதுவும் நான் பண்ணலே. வந்த அந்த ஆள் வேற யாருக்கு பதிலாவோ என்னை தவறா எடுத்துக் கிட்டிருக்கான்.''

''போலீஸுக்கு போன் பண்ணியிருப்பேன்னு நினைக்கிறேன்.''

''இல்லே. நான் பண்ணலே. அப்படி நான் பண்ணியிருக்கணும்னு நீங்க நினைப்பதா படுது.''

''வெல்..'' விஷயத்தை கனமான ஒன்றாய் கவனம் வைத்துக் கருதினார் ஜார்ஜ். ''நோ நோ, வேணாம்னு தான் தோணுது.நீ பண்ணினது தான் புத்திசாலித்தனம். இதையே ஒரு கேஸாக்கிடுவானுங்க. தேவையில்லாம உன் பேர்ல தப்பான விளம்பரம் உண்டாகிடும். ஆனா நீ அந்த பொறுக்கிப் பயலை என்ன பண்ணினே?''

''வெல் ஜார்ஜ்... அவனைக் கண்டு எனக்குள்ளே பயமிருந்ததாலே அவனைப் பண்ண விட்டேன்.''

''எதை?''

''என்னை ப்ளாக் - மெயில் பண்ண.''

ஜார்ஜின் முகத்தில் விளைந்த பயத்தைக் கண்ட மிஸஸ் ரேவல், கீழுதடை உள்ளுக்கு மடித்துப் பேசுவதைத் தடுத்துக் கொண்டார்.

''அய்யய்யோ... என்ன சொல்ல வரே? அவனை உடனடியா கட் பண்ணி துரத்த நீ முயற்சிக்கலையா?''

விர்ஜீனியா மறுப்பாய் தலையசைத்தபடி அவரை ஓரக் கண்ணால் நோட்டமிட்டார்.

''என்ன ஆளு நீ விர்ஜீனியா? கிறுக்கு பிடிச்சிடுச்சா?''

''உங்களுக்கு கிறுக்கு மாதிரிதான் படும்னு நான் நெனைச்சேன்.''

''ஏன் அப்படி? என்ன நடக்குதிங்கே?''

''பல காரணங்கள். முதல் காரணம் - அவன் என்னை அத்தனை தத்ரூபமா அழகா ப்ளாக் மெயில் பண்ணினது. ஒரு கலைஞன் அவனுடைய வேலையைக் கனக்கச்சிதமா பண்ணும்போது அதை இடைமறிக்க நான் விரும்பலே. அடுத்த காரணம், யூ ஸீ... என்னை இதுவரைக்கும் எவனும் ப்ளாக் மெயில் பண்ணினதில்லே.''

''அப்படியெல்லாம் எதுவும் நடக்கக் கூடாது, விர்ஜீனியா.''

''அதெப்படியிருக்கும்.. அந்த உணர்வு எப்படியிருக்கும்னு நான் உணர நினைச்சேன்.''

''கெட்டுது போ. உன்னைத் துளியும் என்னால புரிஞ்சுக்கவே முடியலே, விர்ஜீனியா..''

''உங்களால புரிஞ்சுக்க முடியாது என்பது எனக்குத் தெரிஞ்சதுதான்..''

''அவனுக்குக் காசையும் கொடுத்து நீ அனுப்பியிருக்க மாட்டேனு நம்பறேன்.''

''ஒரு கொசுறு'' - மன்னிப்புக் கோரும் தொனியில் சொன்னார் விர்ஜீனியா.

''அடப்பாவமே, எவ்ளோ?''

''நாப்பது பவுண்டுகள்.''

''விர்ஜீனியா...''

''மை டியர் ஜார்ஜ்... அது நான் சாயங்கால உடை வாங்க செலவிடும் பொடிப்பணம். ஒரு நல்ல பரபரப்பான அனுபவத்தைப் பெற சின்ன உடை வாங்க செலவழிக்கும் தொகையைச் செலவிடுவது ஒண்ணும் தப்பு கிடையாது. சொல்லப் போனா இன்னும் அதிகமா கூட செலவழிச்சிருக்கலாம்!''

மறுப்பாய் தலையசைத்துக் கொண்ட ஜார்ஜ் லொமெக்ஸ் அவருடைய கடுங்கோபத்தை வார்த்தைகளால் கொட்டும் காரசாரத்திலிருந்து, வேலைக்காரன் உள்ளே டீ கொண்டு வந்த தருணம் காத்து விட்டது. டீ தட்டை உள்ளே வைத்து விட்டு அவன் போன பிறகு, டீ கூஜாவை எடுத்து தேநீரைக் கோப்பைகளில் விர்ஜீனியா ஊற்றும்போது சமாச்சாரத்தை ஆரம்பித்தார்: ''இதுல எனக்கு இன்னுமொரு இலக்கும் உண்டு ஜார்ஜ் - பிரகாசமான பிரமாதமான ஒன்று. எங்களைப் போன்ற

பெண்களெல்லாம் பவ்யமா பூனை போல இருக்கணும்னு எதிர்பார்ப்புண்டு. ஆனா இன்னிக்கு மத்தியானம் நான் இன்னொரு பெண்ணைத் தலைகுப்புற ஆக்கிட்டு வந்திருக்கேன். ஆங், இந்த ஆள் இன்னொரு விர்ஜீனியா ரேவல்லைத் தேடிக்கிட்டுப் போகப் போவது கிடையாது. இந்த வேடன் தேடி வந்த பறவையைப் பிடிச்சாச்சு... ஆல் ரைட். இந்தக் கடிதத்தை எழுதின அவ அடையாளம் காட்டாத முகமூடியில் தான் இருந்திருக்கா. இருக்கட்டும். இப்ப கவனியுங்க. குற்றமற்ற சிறப்பான வாழ்க்கையை நடத்தியிருக்கும் அனுகூலத்தைப் பயன்படுத்திக்கிட்டு, ஜார்ஜ், நான் நிறைய.. நிறைய தந்திரத் திட்டங்கள் வகுக்கப் போறேன், யெஸ்.''

ஜார்ஜ் இன்னமும் மறுத்தே தலையசைத்துக் கொண்டிருந்தார். ''எனக்கு இது பிடிக்கலே'' என அழுத்தமாய் சொல்லிக் கொண்டிருந்தார். ''எனக்கு இது பிடிக்கலே.''

''வெல், அப்ப விட்டுடுங்க ஜார்ஜ் டியர். நீங்க இங்கே ப்ளாக் - மெயிலர்ங்களைப் பற்றிப் பேச வரலே. என்ன காரணத்துக்காக இங்கே வந்திருக்கீங்க? சரியான விடை: 'உன்னைப் பார்க்க'!''

''ஆமாம்... நான் உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்'' என தீவிரமாய் பதில் தந்தார் ஜார்ஜ். ''உன்னை நான் கவர்ச்சியும் போதிய ஈர்ப்புமுள்ள ஒரு பெண்ணாத்தான் கருதியிருக்கேன், விர்ஜீனியா.''

''ஓ, ஜார்ஜ்!''

''மேலும் நிறைய புத்திசாலித்தனமுள்ள ஒரு பெண்ணாகவும்...''

''ரியலி?''

''நாளைக்கு இங்கிலாந்துக்கு ஓர் இளைஞன் வந்து இறங்கப் போறான். அவனை நீ சந்திக்கணும்னு விரும்பறேன்.''

''ஆல் ரைட் ஜார்ஜ். ஆனா வர்றவன் உங்களோட பார்ட்டி - அப்படித்தானே?''

''உனக்குத் தேவைப்பட்டா உன்னுடைய ஈர்ப்பை நீ எத்தனை வேணும்னாலும் உபயோகப்படுத்திக்கலாம்... நிச்சயமா.''

விர்ஜீனியா அவருடைய தலையை ஒரு பக்கமாய் சாய்த்துக் கொண்டு பார்த்தார். ''ஜார்ஜ் டியர், நான் என்னுடைய ஈர்ப்பை ஒரு தொழிலா நடத்தலே, ஓகே! எனக்கு எல்லா மக்களையும் பிடிக்குது - அதனால,

அஃப்கொர்ஸ் அவங்களுக்கும் என்னை நல்லா பிடிச்சுப் போகுது. ஆனா என்னை நானே ஓர் அந்நியனைக் கிளுகிளுப்பாக்க போகப் பொருளாக காட்டிக்க முடியும்னு தோணலே. அப்படி நான் எதுவும் பண்ணுவது கிடையாது ஜார்ஜ், பண்ணுவது கிடையாது. இதுக்குன்னே பழக்கப்பட்ட வாடிக்கை ஆளுங்க உண்டு. என்னை விட அதுங்க நல்லா பண்ணும்.''

''அதெல்லாம் நமக்குத் தேவையற்ற பேச்சுக்கள் விர்ஜீனியா. இந்த இளைஞன் ஒரு கனடாக்காரன், பேர், மேக்ரத்...''

''ஓ...!''

''அவன், ஒரு நிஜ ஆங்கிலேயப் பெண்ணின் கவர்ச்சி மற்றும் நடவடிக்கைகளின் அலாதியைப் பார்த்துப் பாராட்டணும்னு நான் பிரியப்படறேன்.''

''அ[illegible]ரு நான்..?''

''எ[illegible]பாக்ட்லி.''

''ஏன்?''

''அப்படினா?''

''ஏன்னேன்? நம்மக் கடற்கரையில் வந்திறங்கும் ஒவ்வொரு கனடாக்காரனுக்கும் நம்ம இங்கிலீஷ் பொம்பளையைக் கொண்டு போய் நிறுத்தி நீங்க நாட்டுப் பெருமையை ஊதுவது கிடையாதே? இதுல மட்டும் அப்படி என்ன ஆழமான திட்டம், ஜார்ஜ்? வெளிப்படையாகவே கேட்கிறேன்... இதுலேந்து உங்களுக்கு என்ன கிடைக்கப் போகுது?''

''இது உனக்குத் தேவையான விஷயமா எனக்குப் படலை, விர்ஜீனியா.''

''எல்லா ஏன் மற்றும் எதுக்கு ஆகியவற்றுக்கு எனக்கு பதில் கிடைக்காத வரைக்கும் ஒரு பொன்மாலைப் பொழுதுல மினுக்கிக்கிட்டுப் போய் நான் ஓர் அந்நியனைக் கலகலப்பாக்க முடியாது.''

''விஷயங்களை அசாதாரண முறையில முன் வைக்கும் வழி தெரிஞ்சவ நீ, விர்ஜீனியா. வேற பொண்ணா இருந்தா...''

''வேற யாராவது பொண்ணாயிருந்தா இப்படி கேட்க மாட்டாளா என்ன? ப்பூ! கம் ஆன் ஜார்ஜ்... இன்னும் கொஞ்சம் விஷயத்தைக் கொட்டுங்க.''

''டியர் விர்ஜீனியா... இன்னும் துரிதலத்துல, மத்திய ஐரோப்பிய நாடுகள்ல, நிலவரங்கள் மிகவும் இறுக்கமாகப் போகுது. காரணங்கள் இப்போதைக்கு யாருக்கும் தெரிய வேணாம்; ஆனா, *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின்* தலைவிதி எழுதப்பட்டுள்ள வாழ்க்கை சரிதம் ஒன்று ஐரோப்பாவின் அமைதியைக் கருதி உடனடியா முடக்கப்பட வேண்டும்னு இந்த மிஸ்டர் மேக்ரத்தை உணர வெக்கணும்.''

''ஐரோப்பாவின் அமைதி.. சீர்குலைவு.. இதெல்லாம் சும்மா புஸ்வாணமான பேச்சு'' என்றார் வெர்ஜீனியா சாந்தமாய். ''ஒவ்வொரு வாழ்க்கை சரிதம் வெளியாகும்போதும் அதுக்கு சாதகமாத்தான் நான் இருப்பேன். அதிலும் *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* வாழ்க்கை சரித்திரம்னா, சொல்லணுமா? ஆக இதுல *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* ராஜா யாரோ சம்பந்தப்பட்டிருக்காங்க? யாரது?''

பதில் சொல்ல எதிர்ப்புக் காட்டினார் ஜார்ஜ். ஆனால் கேள்விகளைத் தவிர்க்கத்தான் அவருக்கு வழிகள் தென்படவில்லை. அவர் திட்டமிட்டப்படி இந்த சந்திப்பு செல்லவில்லை. விர்ஜீனியாவை, எதையும் ஏற்றுக் கொள்ளும், இவர் தரும் குறிப்புகளையெல்லாம் மறுக்காது ஒப்புக் கொள்ளும், தொண தொணப்புக் கேள்விகள் கேட்காத ஒரு பெண்ணாய்த்தான் எதிர்பார்த்திருந்தார். அப்படிப்பட்ட கணிப்புக்கு இங்கு நடப்பது மிகவும் அந்நியப்பட்டிருந்தது. அனைத்தையும் தெரிந்து கொள்வதில் ஒரு முடிவாய் இருந்தார் விர்ஜீனியா... ஆனால், பெண்களின் ரகசியக் காப்புப் பிரமாணத்தில் ரொம்பவும் நம்பிக்கையற்ற இந்த ஜார்ஜோ, எந்த உண்மையையும் சொல்வதைத் தவிர்த்து விடுவதிலேயே குறியாயிருந்தார். விர்ஜீனியா இந்தக் காட்சிக்கு உகந்தப் பாத்திரமே கிடையாது. அவர் கடுமையான சிரமங்களை உண்டு பண்ணி விடலாம். இதற்கு சாட்சியாய் ப்ளாக் - மெயிலரிடம் அவர் சற்றுமுன் நடத்திய உரையாடல்களே ஜார்ஜுக்கு நல்ல உதாரணமாய் நின்றது. நம்பவே முடியாத ஜீவன்... முக்கியமான விஷயங்களை முக்கியமாய் நடத்த வேண்டும் என்ற இங்கிதம் அற்றவர்.

''*பிரின்ஸ் மைக்கேல் ஒப்லோவிட்ச்*'' தனது கேள்விக்கு பதில் தேவை என உட்கார்ந்திருந்த விர்ஜீனியாவுக்கு இந்தப் பதிலைத் தந்தார். ''ஆனா ப்ளீஸ்.. இதுக்கு மேல எதுவும் வேணாம்..''

''முட்டாள் மாதிரி பேசாதீங்க ஜார்ஜ். இதுபற்றி பல க்ளுக்கள் ஏற்கெனவே எல்லா நியூஸ் பேப்பர்கள்லேயும் வர ஆரம்பிச்சாச்சு.

ஒப்லோவிட்ச் பரம்பரையைப் போட்டுடைக்கும் கட்டுரைகள். ஒரு ஒண்ணுமில்லாத ஆளுக்கும் மூன்றாந்தர நடிகைக்கும் பிறந்தவன் நிகோலஸ் IV என்பதையே மறந்துட்டு, ஏதோ அவர் ஒரு ஹீரோவுக்கோ அல்லது சாதுவுக்கோ பிறந்த உயர் குடிமகன் போல எழுதிக்கிட்டிருக்கானுங்க."

ஜார்ஜ் வியந்துக் கண்ணகல ஆனார். விர்ஜீனியாவின் உதவி தேவை என்று பட்டியலில் இவர் பெயரையும் சேர்த்துக் கொண்டது எத்தனை பெரிய தவறு என்பதை இப்போது பரிபூரணமாய் ஏற்றுக் கொண்டார். விர்ஜீனியாவை ஜார்ஜ் வெகு சீக்கிரம் நறுக்கி விட்டுவிட வேண்டும்.

கிளம்புவதற்கு ஆயத்தமாய் எழுந்துக் கொண்ட போதே, "யூ ஆர் ரைட், டியர் விர்ஜீனியா" என்றார் ஜார்ஜ். "உன்னை நாடி வந்து உன் முன் வைத்த வேண்டுகோளை நான் செஞ்சிருக்கக் கூடாது. ஆனா நாங்க இங்கே ரெண்டு நாடுகளின் கட்டுப்பாட்டுக்குள்ளும் வரும் ராஜ்ஜியங்கள் எல்லாம் ஒண்ணா சேர்ந்து இந்த *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* விஷயத்தை நேருக்கு நேரா சந்திக்கணும்னு எதிர்பார்க்கிறோம். மேக்ரத்துக்கு பத்திரிகை வட்டாரத்துல நல்ல செல்வாக்கு இருக்கு. நாட்டின் மீது உனக்குள்ள ஞானம் மற்றும் வாழ்க்கை சரிதங்களின் மீது உனக்குள்ள பற்று இவற்றைக் கருத்தில் கொண்டு நீ போய் அவனைச் சந்திப்பது உசிதமா இருக்கும்னு நான் நெனைச்சேன்."

"ஸோ, இது தான் முழு விளக்கமும்... அப்படித்தானே?"

"யெஸ். ஆனா, நான் அடிச்சு சொல்றேன், நீ இவனை லட்சியம் பண்ணலே..."

விர்ஜீனியா அவரை சற்று நேரம் முறைத்துப் பார்த்துவிட்டு கலகலவென சிரித்தார். "ஜார்ஜ்" என்றார். சொன்னார்: "நீங்க ஒரு அண்டப்புளுகன்."

"விர்ஜீனியா?"

"ஆகாசப் புளுகன். இதுபற்றிய அத்தனையையும் நான் கண்டுபிடிப்பேன். புவர் ஜார்ஜ், மிஸ்டர் மேக்ரத்தின் மர்மங்கள்! மீதியெல்லாம் அதுக்குப் பிறகு. இந்த வாரக் கடைசியில் *சிம்னீஸ்க்குப்* போகும்போது எனக்கு கொஞ்சமாவது க்ளூ கெடக்காமலா போகும்?"

"சிம்னீஸ்லியா? நீ *சிம்னீஸ்* போறியா?"

ஜார்ஜுக்கு அவருக்குள் ஏற்பட்ட படபடப்பினை அடக்கி வைக்க முடியவில்லை. இது பற்றிய எந்த இன்விடேஷனும் யாருக்கும் கொடுக்கப்படாமல் இருக்க வேண்டும் என்று சொல்ல, நேரத்தில் லார்ட் கேட்டர்ஹாமைப் பிடிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தார் இவர்.

''பண்டில் இன்னிக்குக் காலைல போன் பண்ணி என்னைக் கேட்டாள்.''

ஜார்ஜ், கடைசி அஸ்திரத்தை எய்து பார்க்க முடிவெடுத்தார். ''அது ஒரு உப்பு சப்பில்லாத பார்ட்டினு நினைக்கிறேன்'' என்றார். ''உன் வழிக்கு ஒத்து வராத வகை, விர்ஜீனியா.''

''டியர் ஜார்ஜ்.. என்னை நம்பி நீங்க ஏன் முழு விஷயத்தையும் சொல்லிடக் கூடாது? இன்னும் காலந்தாழ்ந்துடலே.''

ஜார்ஜ் அவருடைய கையை மெதுவாய் வாங்கிக்கொண்டு, ''நான் எல்லா உண்மைகளையும் சொல்லியாச்சு'' என்று விட்டு, விட்டு விட்டார்.

''அப்ப நல்லது'' என்றார் விர்ஜீனியா ஆமோதிப்பாய். ''ஆனா அது பத்தாது. கவனிங்க ஜார்ஜ், நீங்க குறிப்பிட்ட மாதிரி என் கவர்ச்சியை முழு அளவுக்குப் பயன்படுத்திக்கிட்டு - நான் *சிம்னீஸ்* போகத்தான் போறேன். வாழ்க்கை திடுப்புனு ரொம்பவும் ஆச்சரியங்கள் நிறைந்ததா மாறிடுச்சு. முதல்ல ஒரு ப்ளாக் - மெய்லர், அப்புறம் ஜார்ஜ், அரசியல் சார்ந்த சிக்கள்கள்ல! ரொம்பவும் கெஞ்சிக் கேட்கும் இந்த அழகான பெண்ணுக்காக அவர் அத்தனையும் சொல்லிடக் கூடாதா? ம்ம்.. கடைசி அத்தியாயம் வரை அவர் எதையும் சொல்ல மாட்டார் - மூச்! குட் பை, ஜார்ஜ். ஓர் ஆசை பார்வை. நீங்க கிளம்பறதுக்கு முன்னாடி! மாட்டீங்களா? ஓ, ஜார்ஜ், டியர், நோ ப்ராப்ளம்.''

நீளமான பெருமூச்சோடு முன்பக்கக் கதவு வழியாய் ஜார்ஜ் வெளியேறியதும், டெலிபோன் நோக்கிப் பாய்ந்தோடினார் விர்ஜீனியா. அவர் சுழற்றிய நம்பர் கிடைத்துவிட மிஸ் எய்லீன் ப்ரண்டுடன் பேச வேண்டும் என்றார்.

''நீயா பண்டில்? நாளைக்கு நான் *சிம்னீஸ்* வரேன். என்ன? எனக்கு போரடிக்குமா? ம்ம், அப்படியெல்லாம் இருக்காது. எந்த பெரிய மனுஷனாயிருந்தாலும் என்னை ஓரங்கட்ட முடியாது. ஸோ, *நான் இருப்பேன்!*''

அத்தியாயம் - 7

# மிஸ்டர் மேக்ரத் ஓர் அழைப்பினை மறுத்தார்

கடிதங்கள் போய்விட்டன!

அவை காணாமல் போய்விட்டன என்ற உண்மைக்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்ட பிறகு இந்த நிஜத்தை அப்படியே ஏற்றுக் கொள்வதைத் தவிர வேறொன்றும் செய்வதற்கில்லை. தங்கியிருக்கும் பிளிட்ஸ் ஓட்டலின் தாழ்வாரங்களெல்லாம் ஓடி கியூசப்பைப் பின்தொடர முடியாது என்பதை ஆண்டனி உணர்ந்தார். இப்படி செய்வதால் தேவையற்ற விளம்பரம் விளைவதோடு அவனைப் பிடிக்க வேண்டும் என்ற இலக்கிலும் தோற்றே விடலாம்.

காகிதங்கள் பாக்கெட்டுகளில் சுற்றப்படுவதைப் போல அக்கடிதங்களும் சுற்றப்பட்டிருந்ததால் அதனை வாழ்க்கை சரிதம் என்று அவன் தப்பாய் எடுத்துக் கொண்டு விட்டதாய் ஒரு முடிவுக்கு வந்தார் ஆண்டனி. எனவே, கடிதங்களைப் போய் தவறுதலாய் கொண்டு சென்று விட்டதை உணர்ந்ததும் வாழ்க்கை சரிதத்தை அபகரிப்பதற்காக,. அவன் மீண்டும் வர வாய்ப்பிருக்கிறது... இந்த முயற்சிக்கு தான் முழுதும் தயாராயிருக்க வேண்டும் என்று விளங்கிக் கொண்டார் அவர்.

அவருக்குள் உதித்த மற்றுமொரு திட்டம் என்னவென்றால், கொண்டுபோன அக்கடிதங்களை மீண்டும் கொண்டு வந்து தந்துவிடும்படி வேறுவழியின்றி ஒரு விளம்பரம் வெளியிடுவதாகும். ஒருவேளை கியூசப் சிகப்புக் கை படையின் கூட்டாளியாகவோ அல்லது இதற்கு எதிர்பதமான அமைதி நாடும் லாயலிஸ்ட் கட்சியின் கூட்டாளியாகவோ இருந்தால், நிச்சயம் அக்கடிதங்களால் இப்படைகளுக்கு ஆகப் போவது ஒன்றுமில்லை. ஆதலால், அவற்றை, ஏதோ கொஞ்சம் பணம் தந்தால்

மறுபடியும் கொண்டு வந்து திருப்பி விடுவதாய் ஒரு முடிவுக்கு அவன் தாவலாம் என நம்பினார் ஆண்டனி.

இப்படியெல்லாம் சிந்தனைகளை ஓட விட்டு படுக்கைக்குத் திரும்பிய அவர் காலை வரை படு நிம்மதியாக தூங்கினார். அதே இரவில் இன்னொரு தடவை நேருக்கு நேர் சந்திக்க கியூசப் துணிவான் என்று ஆண்டனி நம்பவில்லை.

அடுத்து செய்ய வேண்டிய திட்டங்களை வரிசைக்கிரமாக அடுக்கிக் கொண்டு எழுந்தார் ஆண்டனி. நல்ல சிற்றுண்டி சாப்பிட்டார். ஹெர்ஸோ -ஸ்லோவாக்கியாவில் புது எண்ணெய்க் கிணறுகள் கண்டுபிடிக்கப்பட்டன என்பதை முக்கியமாய் தாங்கி வெளியாகியிருந்த செய்தித் தாள்களைப் படித்தார். பிறகு ஓட்டல் மானேஜரைச் சந்திக்க வேண்டும் என்று சொல்லி அனுப்பினார். ஆண்டனி கேட் அல்லவா, ஆகவே அவர் ராசிப்படி தொட்டது துலங்கியது. அவர் கேட்டது கிடைத்தது.

எல்லையற்ற மரியாதையும் சாந்தமுமாய் இருந்த பிரெஞ்சு மானேஜர் பிரத்யேக அறையொன்றில் ஆண்டனியை ஏற்றுக் கொண்டார். ''என்னைச் சந்திக்கணும்னு பிரியப்பட்டதா சொன்னாங்க, மிஸ்டர் ஆங் - மேக்ரத்.''

''சொல்லியிருந்தேன். நேற்று சாயந்தரம் உங்க ஓட்டல்ல வந்து நான் தங்கினேன். இரவு சாப்பாடு ரூம் வரைக்கும் கொண்டு வரப்பட்டு கியூசப் எனும் வெயிட்டரால் எனக்குப் பரிமாறப்பட்டது.''

இங்கு தாமதித்தார் ஆண்டனி.

''யெஸ்... அப்படியொரு வெயிட்டர் எங்ககிட்டே வேலை பண்றார்.''

''அவனோட நடவடிக்கைகள்ல ஏதோ அசாதாரணமா எனக்குப் பட்டது. ஆனா அந்த சமயத்துல அதைப் பற்றி நான் மேற்கொண்டு சிந்திக்கலே. பிறகு, ராத்திரி, என் அறைக்குள்ளே யாரோ ஒலியெழுப்பாம நழுவுவது போல நடக்கும் சிறு அரசவம் கேட்டு நான் தூக்கம் கலைஞ்சு எழுந்தேன். விளக்கைப் போட்டேன். அங்கே கியூசப், என்னோட சின்ன பெட்டியை நோண்டிக்கிட்டிருக்கும் நிலையில நான் பார்த்தேன்.''

மானேஜரின் அமைதியான போக்கு சற்றே இங்கு குலைந்தது. ''ஆனால் இதைப் பற்றி எதுவுமே என் காதுகளுக்கு வரலியே?'' என்றார். ''ஏன் உடனேயே எனக்கு இந்த சம்பவம் கொண்டு வரப்படலே?''

''அந்த ஆளும் நானும் ஒரு சின்ன மோதல்ல ஈடுபட்டோம் - அவன் ஆயுதத்தோடு இருந்தான். கையில ஒரு கத்தி. பிடிச்சு வெக்கத்தான் பார்த்தேன். ஆனா இறுதியில ஜன்னல் வழியா தப்பிச்சு ஓடிடுவதுல அவன் ஜெயிச்சுட்டான்.''

''அப்புறமா நீங்க என்ன பண்ணினீங்க, மிஸ்டர் மேக்ரத்?''

''நான் என்னோட சூட்கேஸ்ல இருந்தவற்றைச் சரிபார்த்தேன்.''

''ஏதாவது களவு போயிருந்ததா?''

''முக்கியமான எதுவும் போகலே'' என்றார் ஆண்டனி மெதுவாய்.

மானேஜர் ஒரு நிம்மதி பெருமூச்சோடு பின்னுக்கு சாய்ந்துக் கொண்டார். ''நிம்மதியாயிருக்கு'' என்று குறிப்பு தந்தார். ''ஆனா மிஸ்டர் மேக்ரத்... இந்த சமாச்சாரத்துல உங்களோட அணுகுமுறையை என்னால புரிஞ்சுக்க முடியலேனு சொன்னா நீங்க வருத்தப்படக்கூடாது. சம்பந்தப்பட்ட ஓட்டல் அதிகாரிகளை எழுப்ப நீங்க முயற்சிக்கவே யில்லையா? திருடனைத் தொடர்ந்து பிடிக்க?''

ஆண்டனி அவருடைய தோள்களை வெறுமனே குலுக்கிக் காட்டினார். ''விலைமதிப்புள்ள எதுவும், நான் சொன்னது போல, காணாமப் போகலே. சொல்லப் போனா, எனக்கும் இது போலீஸ் வரை கொண்டு போக வேண்டிய ஒரு கேஸ்தான் என்பதும் தெரியும்...''

இங்கு அவர் நிறுத்த, எவ்வித உற்சாகமும் இன்றி ''போலீஸ் வரை - கொண்டு போக வேண்டிய..'' என்று சுரம் குறைத்து முணுமுணுத்தார் மானேஜர்.

''அந்த ஆள் சிறப்பா தப்பிச்சு ஓடடத் தெரிஞ்சவன்தான் என்பதுல எனக்கு சந்தேகம் இருக்கலே. மேலும் குறிப்பிட்டு எதுவும் களவு போகாததாலே - எதுக்கு போலீஸ்?''

இப்போதுதான் மானேஜரின் முகத்தில் கொஞ்சமாய் மலர்ச்சி வந்தது.

''போலீஸைக் கொண்டு வந்து இதுக்குள்ளே விடுவதுல எனக்குத் துளியும் விருப்பமில்லை என்பது, மிஸ்டர் மேக்ரத்... உங்களுக்கும் விளங்குதுனு நான் நினைக்கிறேன். என்னைப் பொறுத்தவரைக்கும் அது பெரும் குழப்பத்துலதான் போய் முடியும். இதுபோன்ற நல்ல ஆடம்பரமான ஓட்டல்கள்ல நடந்ததா ஏதாவது இந்த நியூஸ்

பேப்பர்காரனுங்க காதுல விழுந்தா போதும்... அது எத்தனை தான் முக்கியத்துவமற்ற துக்கடா விஷயமாயிருந்தாலும், நாக்குல ஜலத்தை ஊறவிட்டுக்கிட்டு ஓட வந்துடுவாங்க."

"ஒத்துக்கிறேன்" என்றார் ஆண்டனி. "என் அறையிலிருந்து எதுவும் களவு போகலைனு இப்ப நான் சொன்னது ஒரு வகையிலதான் நிஜம். திருடனுக்கு முக்கியமா உதவும் எதையும் அவன் கொண்டு போகலே எனும் வகையில! ஆனா அவன், எனக்கு மிகவும் போதுமான அளவு மதிப்புள்ள ஒரு முக்கியமானதை எடுத்துக்கிட்டுப் போயிருக்கான்."

"ஆஹ்!"

"கடிதங்கள், ஓகே?"

"விளங்குது, பர்ஃபெக்ட்லி" என்றார் மானேஜர். "இது போலீஸுக்குக் கொண்டு போக வேண்டிய மேட்டர் இல்லே."

"இந்த பாயிண்ட்ல் நாம ரெண்டு பேருமே ஒத்துப் போறோம். ஆனா அக்கடிதங்களை எப்படியாவது திரும்பப் பெற்றாகணும் எனும் துடிப்புல இருக்கேன் நான். இதை நீங்க புரிஞ்சுக்கணும். அதனால இப்ப உங்ககிட்டே நான் எதை எதிர்பார்க்கிறேன்னா, அந்த திருட்டுப் பயலான கியூசப் பற்றி நீங்க தரவல்ல அத்தனை தகவல்களையும்..."

ஓரிரு கணங்கள் தயக்கத்துக்குப் பிறகு "இதுல எனக்கு எந்த சங்கடமும் கிடையாது" என்றார். "உடனடியா நீங்க கேட்பவற்றை என்னால தந்திட முடியாது. ஆனா நீங்க சுமார் அரை மணி நேரம் கழிச்சு திரும்பி வந்தீங்கன்னா நீங்கள் வேண்டும் தகவல்களை உங்க முன்னாடி என்னால் விரிச்சுப் போட முடியும்."

"இது போதும் எனக்கு, தேங்க்யூ வெரி மச்."

மானேஜர் சொன்ன வாக்கைக் காப்பாற்றும் விதமாய் நடந்துக் கொண்டார். கியூசப் மணாலி பற்றிய அத்தனை தகவல்களும் ஒருசின்ன காகிதத்தில் பதிந்திருந்தன.

"எங்கிட்டே அவன் மூணு மாசங்களுக்கு முன்னாடி வந்திருக்கான், ஓகே? விஷயம் தெரிஞ்ச அனுபவமிக்க வெயிட்டர் அவன். முழு திருப்திகரமா இங்கே வேலை பார்த்திருக்கான். இங்கிலாந்துல ஐந்து வருஷமாயிருக்கான்."

இருவருமாய் சேர்ந்து அந்த இத்தாலிய திருடன் பணியிலிருந்த ரெஸ்ட்டாரண்டுகளடங்கிய பட்டியலைப் பார்வையிட்டனர். அதில், முக்கியத்துவம் மிகுந்ததாய் இருக்கலாம் என்று ஒரு குறிப்பிட்ட நிஜம் ஆண்டனியை அறைந்தது. அப்பட்டியலிலிருந்த இரண்டு ரெஸ்ட்டாரண்டுகளில், கியூசப் பணியிலிருந்த காலகட்டத்தில் பெரிய அளவு திருட்டு நடந்துள்ளது. ஆயினும் இரண்டு வழக்குகளிலும் எந்தவிதமான சந்தேகமும் இந்தப்பயல் மீது பதியப்படவில்லை. இருந்தாலும், இந்த நிஜம், குறிப்பிடும்படியான ஒன்றே.

எனில், கியூசப், சாதுர்யம் மிகுந்த வெறும் ஓட்டல் திருடன்தானா? அவனுக்குள்ளேயே இருந்த இக்குணத்தின் தாக்கம் தான், அவன் வந்து ஆண்டனியின் பெட்டியைத் துளாவியதன் காரணமா? ஆண்டனி விளக்கினைப் போட்ட தருணத்தில் அவன் கையில் அக்கடிதக் கொத்து இருந்திருக்க வேண்டும்... ஆனால் அவன் கைகளில் ஒன்றுமில்லை என்று காட்டிக் கொள்வதற்காக அவற்றை அவன் அவனுடைய சட்டைப் பைக்குள் செருகித் திணித்திருக்க வேண்டும். இப்படித்தானென்றால்... இது வெறும் திருட்டு.

ஆனால், முந்தைய நாள் மாலையில், டேபிளில் பரந்துக் கிடந்த தாள்களைப் பார்த்த மாத்திரத்தில் அவன் கண்களில் மிளிர்ந்த கிளிர்ச்சியும் துடிதுடிப்பும் இதற்கு மாறாய் நிற்கின்றன. சாதாரண திருடனின் கைகளைத் துறுதுறுக்க வைக்கவல்ல பணமோ அல்லது வேறெந்த காஸ்ட்லி பெருளோ மேஜையில் அப்போது கிடையாது.

எனவே, யாரோ ஒரு வெளியாளுக்கான கருவியாய் கியூசப் இயங்கியிருக்கிறான் என்ற கருத்தையே ஆண்டனி அனுமதித்தார். இவருக்கு மானேஜரால் அளிக்கப்பட்டுள்ள தகவல்களின் அடிப்படையில் இவரால் கியூசப்பின் தனிப்பட்ட வாழ்க்கை பற்றி அறிந்து கொள்ளும் வாய்ப்பு கிடைக்கலாம். அதன் மூலம் அவனையே கூட அடைந்து விடலாம். தகவல்கள் எழுதப்பட்டு மானேஜரால் தரப்பட்ட காகிதத்தை எடுத்துக் கொண்டு எழுந்தார் ஆண்டனி.

''தேங்க் யூ வெரி மச். ஒரு தேவையில்லாத கேள்வி. கியூசப் இன்னும் இங்கே வேலையில இருக்காரா?'

மானேஜர் சிரித்தார். ''அவர் இங்கே நேற்று ராத்திரி படுத்து தூங்கலே. அவரோட பொருட்களெல்லாம் இங்கேயே தானிருக்கு. உங்களைத் தாக்க

முயன்ற பிறகு அப்படியே அவர் வெளியேறிப் போயிருக்கணும். அவரை மறுப்படியும் பார்க்கும் சந்தர்ப்பமெல்லாம் மீண்டும் உங்களுக்கு அமையும்னு தோணலே.''

''ஆனா எனக்கு அப்படி தோணலே. ஓகே.. இப்போதைக்கு நான் இங்கேயேதான் தங்கப் போறேன்.''

''உங்க ஊகத்துல நீங்க வெற்றி அடையணும்னு நான் நினைச்சாலும், எனக்கு சந்தேகமாயிருக்கு.''

''நான் எப்பவுமே பெஸ்ட் எதுவோ அதை மட்டுமே நினைப்பவன்.''

முதலில் ஆண்டனி மேற்கொண்டது, கியூசப்புடன் நெருங்கியிருந்த மற்ற வெயிட்டர்களை விசாரித்துப் பார்ப்பதாகும். ம்ம்... மேற்கொண்டு போக எவ்விதமான சிறந்த தகவல்களும் இவர் விசாரித்த எவரிடமிருந்தும் வரவில்லை. ஏற்கனவே இவர் திட்டமிட்டிருந்தபடி அந்த விளம்பரத்தை அதிகம் படிக்கப்படும் ஐந்து செய்தித்தாள்களுக்கு அனுப்பி வைத்தார். கியூசப் முன்பு பணியிலிருந்த ரெஸ்ட்டாரண்டுக்குப் போய் விசாரிக்க ஆண்டனி கிளம்பிக் கொண்டிருந்தார்... ஜஸ்ட் அப்போது டெலிபோன் மணியடித்தது.

''ஹலோ.. யாரது?''

ஒரு 'பாவமற்ற' குரல் ஒலித்தது: ''நான் மிஸ்டர் மேக்ரத்கிட்ட பேசிக்கிட்டிருக்கேனா?''

''ஆமாம், நீங்க யார்?''

''இது பால்டர்ஸன் மற்றும் ஹட்கின்ஸ் நிறுவனம். ஒரு நிமிஷம்... பால்டர்ஸன்னுக்கு இணைப்பு தரேன்.''

'பப்ளிஷர்ஸ்' - எண்ணிக் கொண்டார் ஆண்டனி. ''ஆக, அவங்களுக்கு கவலை வர ஆரம்பிச்சிருக்கு. தேவையில்லாத கவலை. கடந்து போக இன்னும் ஒரு வாரமிருக்கு.''

ஒரு குதூகலமான குரல் திடுமென்று ஆண்டனியின் காதுகளை அறைந்தது. ''ஹலோ... இது மிஸ்டர் மேக்ரத்?''

''பேசிக்கிட்டிருக்கேன்.''

''நான், பால்டர்ஸன் மற்றும் ஹாட்க்கின்ஸ் நிறுவனத்தின், மிஸ்டர் பால்டர்ஸன் பேசறேன். அந்த கைப்பிரதி என்ன ஆச்சு, மிஸ்டர் மேக்ரத்?''

''வெல்'' - குறிப்பிட்டார் ஆண்டனி.''அதுக்கென்ன இப்ப?''

''எல்லாமே அதைப் பற்றி தான். நாட்டின் இந்தப் பகுதிக்கு நீங்க ஜஸ்ட் இப்பத்தான் தென் ஆப்பிரிக்காவிலிருந்து வந்து சேர்ந்திருப்பதா அறிகிறேன். அப்படித்தான்னா.. இப்போதைய நிலைமையை நீங்க அறிந்திருக்க முடியாது. அந்தக் கைப்பிரதி பற்றி பிரச்சினை கிளம்பப் போகுது மிஸ்டர் மேக்ரத்... பெரிய பிரச்சனை. அதை எங்க பதிப்பகம் எடுத்திருக்கக்கூடாதுனு கூட நான் சில சமயங்கள்ல எண்ணுவதுண்டு.''

''அப்படியா?''

''அப்படித்தான்னு நான் அடிச்சு சொல்றேன். எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை சீக்கிரத்துல அந்தக் கைப்பிரதியை நான் அடைஞ்சுடணும்னு துடிக்கிறேன். ரெண்டு மூணு பிரதிகள் எடுத்து வெச்சுடணும்னு படபடப்பாயிருக்கு. அப்போதான் ஒரிஜினல் காணாம அடிக்கப்பட்டாலும்- எந்த பாதகமும் நேராது.''

''டியர் டியர்'' என்றார் ஆண்டனி.

''யெஸ்- இது உங்களுக்கு முட்டாள்தனமாபடும்னு எனக்குத் தெரியும். மிஸ்டர் மேக்ரத், உங்களுக்கு இன்னும் நிலைமையின் தீவிரம் விளங்கலே. அந்தக் கைப்பிரதி எங்க அலுவலகத்தை அடைஞ்சுடவே கூடாதுனு தீர்மானமா முயற்சிகள் நடந்துக்கிட்டிருக்கு. வெளிப்படை யாகவே சொல்லிடறேன்... அதை நீங்களே எடுத்துக்கிட்டு நேரடியா எங்ககிட்டே ஒப்படைக்கணும்னு கிளம்பினாலும், எங்களை வந்து நீங்க அடைவதென்பது, பத்தில் ஒரு பங்கு தான் சாத்தியம்.''

''இதை நான் ஏத்துக்க முடியாது'' என்றார் ஆண்டனி. ''எங்கே போகணும்னு நான் நினைச்சாலும், அது எனக்கு வாடிக்கையா கைகூடிடும்.''

''ப்ச்.. கவனியுங்க. நீங்க மிக ஆபத்தான கூட்டத்துக்கு எதிரா நின்னுக்கிட்டிருக்கீங்க. இப்படி நான் குறிப்பிடுவதை நானே கூட ஒரு மாசத்துக்கு முன்னாடி வரைக்கும் நம்பாமத்தானிருந்தேன். மிஸ்டர் மேக்ரத்.. நாங்க பேரம் பேசப்பட்டோம். மிரட்டப்பட்டோம். கெஞ்சப் பட்டேம். ஏன், நயமாப் பேசி மயக்கவும் பட்டோம். எங்களுக்கே நாங்க என்ன பண்றதுனு தெரியாத அளவுக்கு விதம்விதமா முடக்கப்பட்டோம். ஓகே... என் ஆலோசனை இதுதான்... அந்த கைப்பிரதியை இங்கே

எடுத்துக்கிட்டு வரும் முயற்சியை நீங்க பண்ண வேண்டாம். எங்களுடைய ஓர் ஆள் உங்களைத் தேடிக்கிட்டு ஓட்டலுக்கு நேரடியா வந்து அதை வாங்கிப்பான்.."

"ஒருவேளை அந்தக் கூட்டம் அவன்கிட்டேயிருந்து பிடுங்கிட்டா?" - கேட்டார் ஆண்டனி.

"அதுக்கான பொறுப்பு அப்ப எங்களுடையதா இருக்கும் - உங்களுடையதாக அல்ல. அதுக்கு முன்னாடி நீங்க அந்த கைப்பிரதியை எங்களுடைய முகவர்கிட்டே கொடுத்து, கொடுத்ததுக்கான அத்தாட்சியையும் எழுத்து பூர்வமா வாங்கியிருப்பீங்க. கைப்பிரதியின் அந்த இறந்துவிட்ட ஆசிரியரின் கட்டளைகளின்படி, உங்களுக்குத் தரவேண்டும்னு குறிப்பிடப்பட்டிருக்கும் அந்த ஆயிரம் பவுண்டு களுக்கான காசோலை, வரும் புதன்கிழமை வரைக்கும் ரெடியாயிருக்காது. ஆனா நீங்க கட்டாயப்படுத்தினா ஆயிரம் பவுண்டுகளுக்கான என்னோட காசோலையைநான் அந்தத் தூதுவனோடவே அனுப்பி வைக்க முடியும்."

ஆண்டனி ஓரிரு நிமிடங்கள் எடுத்துக் கொண்டார். தரவேண்டிய கடைசி நாள் வரையில் கைப்பிரதியைத் தன்னுடனே வைத்துக் கொள்ள வேண்டும் என்றுதான் பிரியப்பட்டார் ஆண்டனி. இப்படி நடக்கும் கூத்து என்ன என்பதை நேரிலேயே பார்க்க அவருக்குள்ளிருந்த ஆவல்தான் காரணம். இருந்தபோதிலும் பதிப்பகத்தாரின் வாக்குவாதத்திலிருந்த வீரியத்தையும் கவனிக்க ஆண்டனி தவறவில்லை.

ஒரு சிறு பெருமூச்சுக்கு இடையே 'ஆல் ரைட்' என்றார். "உங்க வழிக்கே வரேன். உங்க ஆளை அனுப்பி வையுங்க. காசோலையும் அவன் கூடவே அனுப்பி வெச்சீங்கன்னா வாங்கிக் கொள்வதுல எனக்கு ஆட்சேபணை கிடையாது... அப்படினா வர்ற புதன்குள்ளேயே நான் இங்கிலாந்து கிளம்பிடுவேன்."

"நிச்சயமா மிஸ்டர் மேக்ரத். நாளை காலைல விடிஞ்சதும் விடியாததுமா எங்களுடைய ரெப்ரஸெண்டேட்டிவ் உங்களை வந்து பார்ப்பான். இங்கே எங்க அலுவலகத்திலிருந்தே ஓர் ஆளைக் கிளம்பி உங்க இடத்துக்கு அனுப்புவது அத்தனை புத்திசாலித்தனமா படலே. எங்களுடைய மிஸ்டர் ஹோம்ஸ் என்பவர் தெற்கு லண்டன்ல வசிக்கிறார். அலுவலகத்துக்கு வரும் வழியிலே உங்களை வந்து சந்திக்கும் அவர் பாக்கட்டைப் பெற்றுக் கொண்டு அதுக்கான ரசீதும் தந்துடுவார்.

இன்னிக்கு ராப்பொழுதுக்கு கைப்பிரதியில்லாத வேறு தாள்கள் கொண்ட ஒரு டம்மி பாக்கெட்டை நீங்க பொட்டியில வெச்சுக்குமாறு கேட்டுக்கிறேன். அவனுங்க மறுபடியும் திருட முயற்சித்தாலும் எந்த அசம்பாவிதமும் நடந்துடாது.''

''வெரி வெல். உங்க வழிகாட்டுதல் மாதிரியே நான் செஞ்சுடறேன்.''

சிரித்தபடி ரிஸீவரைக் கொக்கியில் மாட்டினார் ஆண்டனி.

பிறகு தடைப்பட்டுவிட்ட, நழுவியிருக்கும் கியூசப் பற்றிய தகவலறிவதைத் தொடருவதில் இறங்கினார் அவர். இதில் முழு தோல்வியைத்தான் கண்டார். ஆண்டனி தேடிப் போன ரெஸ்டாரண்டில் தான் முன்னர் கியூசப் பணியாற்றியிருக்கிறான் என்றாலும் அவனுடைய தனிப்பட்ட வாழ்க்கை பற்றியோ அல்லது அவனுடைய இன்ன பிற தொடர்புகள் பற்றியோ அங்கிருந்த ஒருவருக்கும் எதுவும் தெரியவில்லை.

''ஆனா உன்னை பிடிக்கிறேனா இல்லையானு பார், மகனே..'' என முணுமுணுத்துக் கொண்டார் ஆண்டனி. ''எத்தனை ரகசியமா நீ இருந்தாலும்- புடிக்கிறேன் பார். கொஞ்சம் டைம் கொடு!''

லண்டனில் ஆண்டனியின் இரண்டாவது இரவு முழு அமைதியில் கழிந்தது.

தொடர்ந்த காலைப் பொழுதின் ஒன்பது மணிக்கு, பால்டர்ஸன் மற்றும் ஹாட்க்கின்ஸ் நிறுவனத்தின் மிஸ்டர் ஹோம்ஸ் எனும் பிரதிநிதியின் அடையாள அட்டை ஆண்டனியின் அறைக்கு ரிஸப்ஷனிஸ்ட்டால் அனுப்பி வைக்கப்பட்டது. பிறகு ஹோம்ஸே.

குள்ள, வெண்ணிற, சாந்தமான குணாதிசயம் கொண்டவராயிருந்தார் ஹோம்ஸ். ஆண்டனி வாழ்க்கை சரித்திரம் அடங்கிய கைப்பிரதி முழுவதையும் அவரிடம் ஒப்படைத்துவிட்டு இதற்கு மாற்றாக ஆயிரம் பவுண்டுகளுக்கான காசோலையை அவரிடமிருந்து பெற்றுக் கொண்டார். கையோடு கொண்டு வந்திருந்த சின்ன ப்ரவுன் நிற பையில் கைப்பிரதியை அடக்கிக் கொண்ட ஹோம்ஸ், ஆண்டனிக்கு 'குட் டே' வைத்துவிட்டு வெளியேறினார். இந்த முழு இயக்கமும் சுரத்தின்றி நடந்து முடிந்தது.

''போற வழியில மனுஷனைப் போட்டுத் தள்ளினாலும் தள்ளிடுவாங்க - கொலை'' என சற்று உரக்கவே முணுமுணுத்துக் கொண்டார் ஆண்டனி, ஜன்னல் வழியே வெளியே பார்த்தபடி. ''யெஸ் - எனக்கு அப்படித்தான் தோணுது.''

ஓரிரு வரிகள் எழுதிய குறிப்பினை இணைத்து வந்த காசோலையை ஓர் உறைக்குள் போட்டு மூடினார் ஆண்டனி. புலவாயோவில் ஆண்டனியைச் சந்தித்த சமயத்தில் நல்ல பணப் புழக்கத்திலிருந்த ஜிம்மி, ஆண்டனிக்கு உதவட்டுமே என்று குறிப்பிடும்படியான தொகையை அனுப்பி வைத்திருந்தார்... அது இன்னமும் தொடப்படவேயில்லை.

''ஒரு வேலை முடிஞ்சாலும் இன்னும் ஒரு வேலை அப்படியே முடியாமத்தானிருக்கு'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டார் ஆண்டனி. ''இதுவரைக்கும் அதை நான் பண்ணாமலே டிமிக்கி கொடுத்துக்கிட்டிருந்தேன். ஆனா நிரந்தரமா - ஒத்திப் போடலே. பொருத்தமான ஒரு மாறு வேஷத்துல, நேரா கிளம்பி, 487 பாண்ட் தெரு போய்ப் பார்த்துட்டா என்ன?''

அவருடைய சாமான்களைப் பேக் செய்துக் கொண்டார். கீழிறங்கிப் போய் கட்ட வேண்டிய தொகைகளை சரி கட்டினார். ஒரு டாக்ஸியை அழைத்து அவருடைய லக்கேஜினை ஏற்றுமாறு ஆணையிட்டார். வெளியேறும் வழியில் நின்றுக் கொண்டிருந்த ஒரு சில வெயிட்டர் களுக்கு, அவர்களால் எவ்வித உபகாரமும் நடந்திருக்காவிட்டாலும், நல்ல தொகையை டிப்ஸாகத் தந்தபடி, டாக்ஸிக்குள் ஏறிக் கிளம்பும் கட்டத்தில், உள்ளேயிருந்த ஒரு பையன் கையில் கடிதமொன்றைத் தூக்கிக் கொண்டு ஆண்டனி நோக்கி ஓடி வந்தான்.

''இப்பத்தான், ஜஸ்ட் இப்பத்தான், இக்கடிதம் உங்களுக்கு வந்துது ஸார்.''

ஒரு பெருமூச்சோடு அவனுக்கும் ஒரு ஷில்லிங் பைசாவைத் தந்தார் ஆண்டனி. பெரிய உறுமல் ஒன்றோடு இடி போன்ற ஓசையைத் தந்த கியர்களின் இயக்கங்களுக்கு மத்தியில் டாக்ஸி முன்னேறத் துவங்கியது. ஆண்டனி கடிதத்தைத் திறந்தார்.

அது ஒரு விசித்திரமான ஆவணம். அதில் என்னதான் குறிப்பிடப் பட்டிருக்கின்றது என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ள அதனை நாலு முறை படிக்க வேண்டி நேர்ந்தது ஆண்டனிக்கு. அரசாங்க அலுவலர்களால் உபயோகப்படுத்தப்படும் மொழியிலும் வார்த்தைப் பிரயோகத்திலும், கரடு முரடாய் ஆக்கப்பட்டிருந்தது அது. சரியான மொழியில் சொல்ல வேண்டுமென்றால், அது, வியாழக்கிழமை, அதாவது இன்று, தென் ஆப்பிரிக்காவிலிருந்து மேக்ரத் இங்கிலாந்து வந்து இறங்குவதாகவும், கவுண்ட் ஸ்டைல் பிச்சின் வாழ்க்கை சரித்திரம் பற்றி தாறுமாறாகவும்,

மேலும், மிஸ்டர் ஜார்ஜ் லொமேக்ஸைச் சந்தித்து தனிப்பட்ட உரையாடல் நிகழ்த்தும் வரை வாழ்க்கை சரித்திரம் பற்றி மேற்கொண்டு எதுவும் செய்யக் கூடாது என்று பிரசுரத்தை மிகவும் கெஞ்சியும் அமைந்திருந்தது அக்கடிதம். சில பார்ட்டிகள் பற்றிய பிரம்மாண்டமான வெளிப்படையற்ற குறிப்புகளும் தரப்பட்டிருந்தன. மறுநாள், வெள்ளிக்கிழமையன்று லார்ட் கேட்டர்ஹாமின் நட்பாக சொல்லிக் கொண்டு, *சிம்னீஸ்* வரை கட்டாயமாய் போய்வருமாறு அதில் அழைப்பு விடப்பட்டிருந்தது.

விளங்காத மேலும் மர்மமான தகவல். இப்படியும் ஒருகடிதமா என ஆண்டனி அதை கொண்டாடினார்.

''டியர் ஓல்ட் இங்க்லாண்ட்'' என அன்பொழுக முணுமுணுத்தார் ஆண்டனி. ''ரெண்டு நாளிருக்கு இன்னும். தப்பான போர்வையில என்னால *சிம்னீஸ*ுக்குப் போக முடியாது. அதுக்குப் பக்கத்துல ஏதாவது தங்கும் விடுதி இருக்குமானு தெரியலே. மிஸ்டர் ஆண்டனி கேட், வேற யாரும் கண்டுபிடிச்சுட முடியாதவண்ணம், அங்கே தங்கிக்கலாம்.''

இப்படியெல்லாம் தனக்குள் சொல்லிக் கொண்ட அவர், வளைந்து முன் வந்து ஜன்னல் வழியாய் எட்டிப் பார்த்தபடி டாக்ஸி ஓட்டுநருக்கு புது வழிகளைச் சுட்டிக் காட்ட, டிரைவரும் சிரத்தையாய் அவ்வழியே பயணப்பட்டான்.

லண்டனின் மிகவும் குறுகலான மங்கலான களையற்ற பகுதி... அங்கொரு விடுதியின் முன் டாக்ஸி நுழைந்து நின்றது. வாடகைத் தொகை தரப்பட்டு டாக்ஸி அனுப்பப்பட... விடுதியில் ஆண்டனி கேட் எனும் பெயரில் ரூம் ஒன்று அமைத்துக் கொண்ட ஆண்டனி, ஓட்டல் ப்ளிட்ஸ் என்ற தலைப்பு கொண்ட தாள் ஒன்றினை எடுத்துக் கொண்டு, அதில் எழுதத் துவங்கினார்.

அக்கடிதத்தில், முந்தைய நாளான வியாழனன்று வந்து இறங்கி விட்டதாகவும், கைப்பிரதியினை பால்டர்ஸன் மற்றும் ஹாட்கின்ஸ் நிறுவனத்திடம் ஒப்படைத்து விட்டதாகவும், உடனடியாய் இங்கிலாந்தை விட்டுக் கிளம்ப வேண்டியுள்ளதால் லார்ட் கேட்டர்ஹாம் அளித்திருந்த அழைப்பை ஏற்றுக் கொள்ள இயலாததற்கு மன்னிப்பையும் விவரித்தார். தங்கள் அன்புள்ள என்று எழுதி ஜேம்ஸ் மேக்ரத் என கையொப்ப மிட்டார்.

''இனிமேல்..'' என்றபடி உறையின்மீது அஞ்சல் தலையை ஒட்டிய ஆண்டனி, ''அடுத்த பிஸினஸ*ுக்கு!'' என்றார். ஜேம்ஸ் மேக்ரெத் வெளியேற்றம், ஜேம்ஸ் ஆண்டனியின் நுழைவு.

## அத்தியாயம் 8

# ஓர் இறந்த மனிதன்

---

அதே வியாழனன்று மத்தியானம் ரேன்லே பகுதியிலிருந்த மைதானத்தில் டென்னிஸ் விளையாடி விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார் விர்ஜீனியா ரேவல். வீட்டுக்குத் திரும்ப பிரயாண நேரம் சற்று நீண்டபோது, ஆடம்பரம் மிகுந்த அவருடைய காரில் நன்றாய் சாய்ந்து அமர்ந்து வந்துக் கொண்டிருந்த விர்ஜீனியாவின் உதடுகளில் புன்னகை விளைந்தது... எதிர் கொள்ளவிருக்கும் உரையாடலின்போது இவருடைய பங்கினை ஒருமுறை மீட்டிப் பார்த்ததால் வந்த புன்முறுவல் இது. ப்ளாக் - மெயில் செய்தவன் வராமலே போய்விடுவான் என்பது சற்றே சந்தேகத்துக்கு இடமளிக்கும சாத்தியக் கூறாகும். அவனது ப்ளாக் - மெயிலுக்குத் தன்னை ஓர் இரையாக வசதியாய் காண்பித்துக் கொண்டுவிட்டார் விர்ஜீனியா. வெல், இம்முறை அவனுக்கு சிறு ஆச்சரியம் காத்திருக்கலாம்!

வீட்டுக்குள் கார் முன்னேறி நின்றதும், வேலைக்காரனிடம் பேசுவதற்காக திரும்பினார் அவர். ''உன் பொண்டாட்டி எப்படியிருக்கா, வால்ட்டன்? கேட்கவே மறந்துட்டேன்.''

''நல்லாயிருக்கிற மாதிரிதான் தோணுது மேடம். டாக்டர் அவளை ஆறரை மணிக்குப் பார்ப்பதா சொல்லியிருக்கார். உங்களுக்கு மறுபடியும் கார் தேவைப்படுமா மேடம்?''

விர்ஜீனியா ஒரு நிமிடம் யோசித்தார். ''இந்த வார இறுதியில் நான் வெளியில போறேன். பாடிங்டன் ரயிலடியிலிருந்து 6.40க்குக் கிளம்பறேன். அதுக்கு நீ வேணாம்னு நினைக்கிறேன் - ஒரு டாக்ஸி

போதும். நீ போய் டாக்டரைப் பார்ப்பதே நல்லதுன்னு எனக்குப் படுது. வார இறுதியில அவளை எங்கேயாவது கூட்டிட்டுப்போவது தான் அவளுக்குச் சிறந்ததுனு டாக்டர் நினைச்சார்னா, வால்ட்டன், அவளைக் கூட்டிட்டு எங்கேயாவது போய்ட்டு வா. நான் செலவை ஏத்துக்கிறேன்.''

அவனது தேங்க்ஸை ஏற்றுக் கொள்ளும் பொறுமை கிடையாது என்பதை தனது சிறு தலையசைவால் உணர்த்திய அவர், படிகளேறி நிலைக்கதவு வரை போய் தன்னுடைய கைப்பைக்குள் மாற்று சாவிக்காக மளமளவென துழாவினார். பிறகு, தான் கையோடே கொண்டு போகவில்லை என்பது அவரது நினைவுக்கு வர, அழைப்பு மணியை மாற்றி மாற்றியடித்தார்.

அடித்த மணிக்கு உடனடியாய் விடை கிடைக்கவில்லை... ஆனால் அப்போது நேர்ந்த காத்திருத்தலின் போது ஒரு மனிதன் விர்ஜீனியாவை நாடி படிகளேறி வந்தான். அசுத்தமாய் உடையணிந்திருந்த அவன் கைகளில் கொத்தாக ஏதோ பிரச்சாரத் துண்டுகள் இருந்தன. அதன் தலையில் எழுதியிருந்தது என்ன என்பது தெளிவாய் தெரியும்படி ஒரு பிரச்சாரத்தை விர்ஜீனியாவுக்கு நேராய் தூக்கிப் பிடித்தான் அவன். அதில்: ''நான் எதற்காக என் நாட்டுக்காக உழைக்கிறேன்?'' அவனது இடக்கையில் ஓர் உண்டியலிருந்தது.

அவனிடம், ''இந்த சகிக்காத கவிதையை நான் ரெண்டு வாங்க முடியாது'' என்று குறிப்பிட்டுக் காட்டினார் விர்ஜீனியா. ''இன்னிக்குக் காலைல தான் நான் ஒண்ணு வாங்கினேன். நிறைய காசு தந்தேனாக்கும்.''

வந்திருந்த அந்த இளையவன் சிரித்தான். விர்ஜீனியாவும் அவனுடைய இடிச் சிரிப்பில் பங்கு கொண்டார். அப்போது அவன் மீது பார்வையை ஓட்டிய விர்ஜீனியா, வழக்கமாய் லண்டனில் காணப்படும் வேலை யற்றவர்களை விடவும் மாறுபட்ட மனோஹரமான பர்ஸனாலிட்டி என நினைத்துக் கொண்டார். அவனுடைய ப்ரவுன் நிற முகத்தையும் உடலின் ஒல்லியான இறுக்கத்தையும் அவர் விரும்பினார். அவனுக்குத் தர தன்னிடம் ஒரு வேலையில்லாமல் போய்விட்டதே என ஆதங்கப்படு மளவுக்குப் போனார் அவர்.

அந்தக் கணத்தில் கதவு திறக்கப்பட்டது. கதவினைத் திறந்தது அவருடைய வேலைக்காரி எலிஸி என்பது ஏற்படுத்திய ஆச்சரியத்தால்,

*அந்த நேரத்தில் அவருக்குள் ஓடிக் கொண்டிருந்த வேலையில்லா இளைஞன் போன்ற கருத்தெல்லாம் காணாமல் போனது.*

*''சில்வர்ஸ் எங்கே?'' என அதிகாரமாய்க் கேட்டார் உள்ளே நுழைந்தபடி.*

*''அவர் போயிட்டார் மேடம் - மத்தவங்களோட சேர்ந்து.''*

*''என்ன அது மத்தவங்க? எங்கே போயிருக்கான் அவன்?''*

*''என்ன மேடமிது... டேட்செட் பகுதிக்குத்தான். காட்டேஜுக்கு உங்க தந்தி தந்த ஆணையின்படி...''*

*''உளறாதே. என் தந்தி?'' - நடுக்கடலில் தள்ளப்பட்டவராய் கேட்டார் அவர்.*

*''மேடம் ஒரு தந்தி அனுப்பலே? ஒரு மணி நேரத்துக்கு முன்னாடி வந்தது அது.''*

*''நான் எந்த எழவையும் அனுப்பலே. என்ன இருந்தது அதுல?''*

*''ஆங், அது இன்னும் டேபிள்ல தான் இருக்குனு நினைக்கிறேன், மேடம்.''*

*சொல்லிவிட்டு விலகிய எலிஸி அதை தாவியெடுத்தாள். வெற்றி மிளிர அதனை தனது முதலாளியம்மாவுக்குக் கொண்டு வந்து கொடுத்தாள்- ''இதோ மேடம்.''*

*தந்தி, சில்வர்ஸுக்கு அனுப்பப்பட்டிருந்தது. பின்வருமாறு சென்றது:*

**தட்டுமுட்டு சாமான்கள் கொஞ்சத்தை எடுத்துக்கிட்டு உடனே காட்டேஜுக்குப்போ. வாரக் கடைசியில் ஏற்பாடாகியிருக்கும் பார்ட்டிக்கான ஏற்பாடுகளை அங்கே செய். 5.49 ட்ரெயினைப் பிடி.**

*இதில் எதுவும் அசாதாரணமாய் கிடையாது. இப்படிப்பட்ட தந்தி சேதிகளை அடிக்கடி அனுப்புவர்தான் மிஸஸ் ரேவல். திடுதிப்பென்று அவர் ஏற்பாடு பண்ணிவிடும் பார்ட்டிகளின் போது அதை நடத்த நதிக்கரையோர பங்களாவில் தேவையான வசதிகளைப் பண்ணச் சொல்லி இதே போன்ற தந்திகள் சிலவற்றை முன்பு அனுப்பியிருக்கிறார். அப்போதெல்லாம் இங்கு வீட்டிலிருக்கும் அத்தனையையும் தூக்கிக் கொண்டு காட்டேஜுக்கு விரைந்து விடுவார் விர்ஜீனியா. வந்த தந்தியில் எவ்வித தவறும் இருப்பதாய் சில்வர்ஸ் எண்ண எதுவும்*

இருந்திருக்காதுதான்... நல்ல சேவகனாய் தனக்கிடப்பட்ட கட்டளையை அவன் செய்து முடித்திருப்பான்.

''நான் இங்கேயே தங்கிட்டேன்'' என்ற எலிஸி, ''மேடம் பேக் பண்ண என் துணை நாடலாம்னு நினைச்சேன்'' என்றான்.

தந்தியைக் கோபமாய் தரையில் விட்டெறிந்த விர்ஜீனியா, ''இது ஒரு அறிவு கெட்ட ஏமாத்து வேலை'' என்றார். ''நான் சிம்னீஸுக்குப் போவது தான் உனக்கு நல்லாவே தெரியுமே, எலிஸி. இன்னிக்குக் காலையில் நான் அப்படித்தானே உன்கிட்டே சொன்னேன்.''

''மேடம், மனசை மாத்திக்கிட்டீங்களோனு நினைச்சேன். சில சமயம் அப்படி நடந்ததுண்டு, இல்லையா?''

சின்னதாய் சிரித்தபடி, சுமத்தப்பட்ட குற்றச்சாட்டின் உண்மையை ஏற்றுக் கொண்டார் விர்ஜீனியா. அசாதரணமான முறையில் நடந்திருக்கும் இந்த ஏமாற்று வேலைக்கான காரணத்தை அறிவதில் இறங்கினார் அவர். இதற்கு எலிஸி ஓர் ஆலோசனையை முன் வைத்தாள்.

''திருடனுங்க வேலையா இருக்கும்!'' என அலறியே விட்டாள் அவள். ''இப்படித்தான் பொய்த் தந்தியை அவனுங்க அனுப்புவானுங்க. வீட்டு சாமானையெல்லாம் வெளியே கொண்டு போய்ட்ட பிறகு, திருடிடுவாங்க.''

சந்தேகமாய் இதனை ஏற்றுக் கொண்டார் விர்ஜீனியா.

''யெஸ், யெஸ் மேடம், சந்தேகமில்லாம இதுதான் தினம் தினம் இப்படிப்பட்ட சேதிகளைத்தான் நாம நியூஸ் பேப்பர்களில் பார்க்கிறோமே! மேடம், மேடம்... அவனுங்க நம்மைத் தேடி வந்து இப்பவே தொண்டையை அறுக்கிறதுக்கு முன்னாடி, உடனே, இப்பவே போலீஸுக்குப் போன் போட்டுடுங்க.''

''இவ வேற... பட்டப் பகல்ல வந்து உன் தொண்டையை எவன்டி அறுக்கப் போறான்?''

''மேடம்.. நான் வேணும்னா ஓடிப் போய் போலீஸைக் கையோட கூட்டிட்டு வந்துடட்டுமா?''

''எதுக்குடீ? ஆத்திரத்தைக் கிளறாதே. நீ இன்னும் பண்ணி முடிக்கலேனா, நேரா மாடிக்குப் போ. ம், நான் சிம்னீஸுக்குப் போகத்

தேவையானதையெல்லாம் கட்டி முடி. புதுசா வாங்கின பார்ட்டி டிரஸ்... அந்த கறுப்பு வெல்வெட் மேலங்கி.. விளங்குதா?''

அத்தனையும் பார்ட்டிக்கு உகந்த சரியான தெரிவு என தலையசைத்தாள் அவள்.

''நமக்கு டைமில்லே. டேட் செட்ல இருக்கிற சில்வர்ஸுக்கு ஒரு தந்தியும் தட்டி விட்டுடறேன். அந்த காட்டேஜ் மேல ஒரு கண்ணை வெச்சிருக்கும்படியும் அதுல சொல்லிடறேன். இதுக்கு நடுவில போற வழியில போலீஸ்ல நடந்ததை சொல்லிடலாம். உன் கண்ணை இப்படி மறுபடியும் நீ உருட்ட ஆரம்பிச்சுடாதே எலிஸி! இப்படி எதுவும் நடக்காதபேது நீ மருண்டுப் போனேனா- மறைவிலிருந்து உன்னைக் கத்தியால குத்த ஒருத்தன் தொபுக்கடீர்னு குதிச்சான்னா நீ என்னத்தைப் பண்ணுவே?''

இதற்கு எலிஸி வீரென்று ஒரு கூரான அலறலை வெளியிட்டு விட்டு மளமளவென மாடிக்கு வழி பண்ணிக் கொண்டு ஓடினாள் - ஏறும் வழியெங்கும் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி!

விர்ஜீனியா, போய்க் கொண்டிருந்த அவளுடைய முகத்துக்குப் பின்னால் பழித்துக் காட்டி விட்டு அறையைக் கடந்து அருகிலிருந்த சின்ன படிக்குமறைக்குப் போனார். அங்குதான் தொலைபேசி வைக்கப்பட்டிருந்தது. போலீஸுக்குப் போன் பண்ணி சொல்லிவிட வேண்டும் என்ற எலிஸியின் அறிவுரை மிஸஸ் ரேவலுக்கு இப்போது சரியான யோசனையாய் பட்டது. அதன் மீது மேற்கொண்டு எவ்வித தாமதமும் இன்றி இயங்கிவிட நினைத்தார் அவர்.

படிக்குமறையின் கதவினைத் திறந்து கொண்டு டெலிபோனுக்கு விரைந்தார். அங்கு, அவருடைய கை ரிஸீவரை எடுக்க அதன் மீது பதிந்திருந்த நிலையில், அவர் நிதானித்தார். ஒரு மனிதன் அங்கிருந்த வைத்த நாற்காலியில் உட்கார்ந்திருந்தான் - ஒருவிதமாய் சுருட்டி திணிக்கப்பட்ட தினுசில். இத்தனை நேரம் நடந்த கூத்தில் எப்போது வேண்டுமானாலும் விர்ஜீனியாவைக் காண அவன் வரலாம் என்ற நினைப்பையே அவர் மறந்துப் போயிருந்தார். மிஸஸ் விர்ஜீனியா ரேவலுக்காகக் காத்திருந்த காலத்தில் அவன் தூங்கப் போயிருக்கிறான் என்பது வெளிப்படையாகவே தெரிந்தது.

முகத்தில் குறும்பான புன்னகையை சுமந்துக் கொண்டு நேராக அந்த நாற்காலியின் முன்னால் வந்து நின்றார் அவர். பிறகு திடீரென்று சிரிப்பு மறைந்து அவிந்தது.

அந்த மனிதன் தூங்கிக் கொண்டிருக்கவில்லை. அவன் இறந்து விட்டான்.

உடனடியாய் அவருக்குத் தெரிந்துவிட்டது. பளபளத்தபடி தரையில் விழுந்துக் கிடந்த சின்ன பிஸ்டலைப் பார்த்து நிலைமையின் தீவிரத்தை உணர்வதற்கு முன்னரே... அவனுடைய நெஞ்சுப் பகுதிக்கு சற்று மேலே சின்ன துளையும் அதனைச் சுற்றிக் கருஞ்சிவப்பு வட்டமும் இருப்பதைக் காண்பதற்கு முன்னரே... கொடூரமாய் தொய்ந்துப் போயிருந்த முகவாயைக் காணுவதற்கு முன்னரே... அவருடைய உள்ளுணர்வு உணர்த்திவிட்டது.

சலனமற்று நின்றுப் போனார் விர்ஜீனியா. அந்த அமைதியில், படிக்கட்டுகளில் இறங்கி ஓடிவரும் எலிஸின் குரலைக் கேட்டார் அவர். ''மேடம், மேடம்!''

''வெல்.. என்னடி?' - கேட்டபடி வேகமாய் கதவு நோக்கி ஓடினார் அவர். என்ன நடந்துள்ளதோ அதை, தற்சமயத்துக்கு, அப்படியே மூடி மறைத்துவிட வேண்டும் என்பதே அவருடைய ஒரே குறியாக இருந்தது. முக்கியமாக எலிஸியிடமிருந்து. எலிஸி அதீத கதறலுக்குள் போய் விடுவாள்.. விர்ஜீனியாவுக்கு இது நன்றாகவே தெரியும். மேலும், எப்படி இதை மேற்கொண்டு நகர்த்துவது என்பதை முடிவெடுக்க ஏகப்பட்ட சாந்தமும் அமைதியான தனிமையும் வேண்டுமென்பதும் அவருக்குத் தெரியும்.

''மேடம்.. வாசக் கதவின் செயினை இழுத்து முடுக்கிடறது நல்லது இல்லையா? இந்தத் திருட்டுப் பயலுக எப்ப வேணும்னாலும் வருவானுங்க, இல்லே?''

''யெஸ், நீ விரும்பினா! நீ வேற எதையாவதும் விரும்பறியா?''

அதற்குள், வாசற்கதவு மூடப்பட்டது. அதன் செயின் முடுக்கப் படுவதும் மீண்டும் எலிஸி மாடி நோக்கி ஓடுவதும் விர்ஜீனியாவுக்குக் கேட்டன. நீண்ட நிம்மதிப் பெருமூச்சினை விட்டுக் கொண்டார்.

நாற்காலியில் சிறு மூட்டையாய் கிடந்தவனையும் தொலைபேசி யையும் மாற்றிமாற்றிப் பார்த்தார் விர்ஜீனியா. அவர் செய்ய வேண்டியது

துல்லியமாய் முன்னால் உள்ளது... உடனே போலீஸுக்கு போன் செய்து விடுவதுதான் அது.

ஆனாலும் இன்னமும் அவர் அப்படி பண்ணவில்லை. நடந்துள்ள கொடூரத்தின் தாக்கத்தாலும் எதிரும் புதிருமாக அவருடைய மூளைக்குள் வந்து போய்க் கொண்டிருந்த பல முடிவுகளாலும் அவர் ஸ்தம்பித்துப் போயிருந்தார். ஒரு பொய்த்தந்தி! அதற்கும் இதற்கும் ஏதாவது தொடர்பு இருக்குமா? ஒருவேளை எலிஸி வீட்டிலே தங்கிவிடாமல் கிளம்பியிருந்தால்? கதவைத் திறந்துக் கொண்டு, உள்ளே நுழைந்ததும் (கூடவே மாற்றுச் சாவியைக் கொண்டு சென்றிருக்கும் பட்சத்தில்) மரணமடைந்துள்ள ஓர் ஆளோடு... வெர்ஜீனியாவை ப்ளாக் மெயில் செய்ய அவரே முன்பொருமுறை அனுமதித்த அதே மனிதனின் சடலத்தோடு... தனிமையில் இருக்கும்படி ஆகியிருக்கும். கைகளைத் தலைக்கு அனுப்பி அதை அதிகமாய் பிசைந்தார். "நான் யோசிக்கணும்" என்றார் விர்ஜீனியா. "வேற எதுவும் செய்யாம வெறுமனே சிந்திக்கணும்."

யார் இந்த ஆளை வீட்டுக்குள்ளே அனுப்பினது? நிச்சயமா அது எலிஸி கிடையாது. அப்படி அவள் உள்ளே அனுமதித்திருந்தால் என் முகத்தைக் கண்டதுமே முதல் வேலையாய் அதனை சொல்லியிருப்பாள். ஆக இதைப் பற்றி மேலும் சிந்திக்கச் சிந்திக்க முழு சமாச்சாரமும் மாபெரும் மர்மமாய் அவருக்குப் பட்டது. நிதர்சனத்தில் பார்த்தால் ஒன்றே ஒன்று பண்ண வேண்டியுள்ளது - போலீஸுக்கு போன் செய்து விடுவது.

டெலிபோன் வரை தனது கையைக் கொண்டு போன அவருக்கு சட்டென்று ஜார்ஜின் நினைவு வந்தது. ஒரு மனிதன் - தராசுப் போல நிலையாய், உணர்ச்சிவயப்படாது, நிலைமையை உள்ளது உள்ளபடி பார்த்து அவருக்கு சிறந்த ஆலோசனை தரும் ஒரு மனிதன் - ஜார்ஜைப் போல ஒரு மனிதன் - இதைத்தான் அவர் எதிர்பார்த்தார்.

பிறகு மறுத்துத் தலையசைத்துக் கொண்டார் அவர். நாட் ஜார்ஜ். இதை சொன்னால் முதலில் அவர் முன்னிறுத்துவது அவரது அந்தஸ்தாய் தானிருக்கும். இதுபோன்ற விஷயங்களுக்குள் அவரைத் திணித்துக் கொள்வதை அவர் விரும்பக் கூடியவர் அல்ல. ஜார்ஜ் அப்படி ஒரு தப்பை என்றுமே பண்ண மாட்டார்.

பிறகு அவருடைய முகம் அப்படியே இளகி மிருதுவானது. அட, பில்! இம்முடிவில் மேற்கொண்டு சிந்திக்காமல் உடனே பில்லுக்குப்

போன் போட்டார் அவர். அரை மணி நேரத்துக்கு முன்னால் அவன் சிம்னீஸுக்குக் கிளம்பி விட்டதாய் தகவல் வந்தது.

''ஓ, ச்சே'' என்றானார் விர்ஜீனியா, உடைக்குமளவுக்கு ரிஸீவரை ஓங்கி அறைந்தபடி. ஒரு சடலத்துடன் போட்டுப் பூட்டப்பட்டு வாய் வார்த்தைக்கு கூட ஒரு துணையில்லாமல் கிடப்பது ஹாரிபிள்.

இப்படிப்பட்ட நெருக்கடி கட்டத்தில் வாசல் அழைப்பு மணியடித்தது.

விர்ஜீனியா துள்ளியெழுந்தார். ஸ்தம்பித்தார். சில நொடிகளில் அது மீண்டும் அலறியது. மாடியில் விர்ஜீனியாவுக்காக எலிஸி பேக் பண்ணிக் கொண்டிருப்பதால் அவளுக்கு இந்த அழைப்பு மணியோசை கேட்காது என்பது அவருக்குத் தெரியும். எனவே ஹாலைக் கடந்து வாசற் படி வரை விர்ஜீனியாவே போனார். செயினை விலக்கி விட்டு புத்துணர்ச்சியோடு எலிஸி போட்டு விட்டுப் போயிருந்த அத்தனை தாழ்ப்பாள்களையும் திறந்தார். பிறகு ஒரு நீண்ட மூச்சோடு கதவைத் திறந்தார். வெளியே படியிலிருந்தது, அந்த வேலையில்லா இளைஞன்.

தாள முடியாத நரம்பதிர்வால் உண்டாகியிருந்த இறுக்கம் அனைத்தும், அப்படியே கழல, ''உள்ளே வா''என்றார் விர்ஜினியா. ''இப்ப உனக்கு ஒரு வேலை என்கிட்ட இருக்குதுனு நினைக்கிறேன்.''

அவனை டைனிங் அறை அழைத்துப்போய், அவனுக்காக ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார வைத்து, அவரும் அவனும் நேராய் வரும்படி அமர்ந்துக் கொண்டு, அவனை மிகவும் ஈடுபாடாய் பார்த்தார்.

''எக்ஸ்யூஸ் மீ'' என்றவர், ''நீ...?'' என்றார் கேள்வியை முடிக்க முடியாமல்.

''ஒரு வேலையில தொடர்ச்சியா இருக்க முடியாத ஒரே குணத்தால இப்படி அலைஞ்சுக்கிட்டேயிருக்கும் ஆசாமி நான்.''

இதற்கு கண நேரம் அவருடைய இதழ்களில் சிரிப்பு நெளிந்து அடங்கியது. ''நிச்சயமற்ற இது தப்பு.''

சொன்ன விர்ஜீனியா அவனுடைய நீளமான பொன்னிற முகத்தையும் ஒல்லியானாலும் இரும்புக் கம்பியாய் இறுகியிருந்த அவனுடைய உடலையும் மெச்சினார். அங்கீகரித்து தலையசைத்தார்.

''கவனி'' என்றார் அவர். ''நான் இப்ப ஒரு பள்ளத்துல மாட்டிக் கிட்டிருக்கேன். என்னோட அனைத்து நண்பர்களும், வெல், சமுதாயத்துல ரொம்பவும் உயர்ந்த ஸ்தானத்துல இருக்கிறவங்க. என்னை இந்தப் பள்ளத்திலிருந்து தூக்க முடியாத ஒரு சூழ்நிலை அவங்க ஒவ்வொருத்தருக்கும் இருக்கு.''

''எனக்கு அப்படி எந்தவொரு சூழ்நிலையும் கிடையாது. ஸோ, மேற்கொண்டு போங்க. என்ன பிரச்சினை?''

''அடுத்த அறையில் ஒருத்தன் மரணமடைஞ்சுக் கிடக்கான்'' என்றார் விர்ஜீனியா. ''அவன் கொலை செய்யப்பட்டிருக்கான். அவனை வெச்சுக்கிட்டு என்ன பண்றதுனு எனக்குப் புரியலே.''

ஒரு சின்னக் குழந்தை எப்படி இதன் வீரியம் விளங்காமல் சொல்லியிருக்குமோ அப்படி சொன்னார் அவர். விர்ஜீனியா பற்றிய கணிப்பில் மளமளவென மிகமிக உயர்ந்து போனான் அந்த இளைஞன். அவனுக்கு இப்படிப்பட்ட அறிவிப்புகள் தினம் தினம் காதில் விழுந்துக் கொண்டிருக்கும் கோரிக்கைகள் ஆகவே அதிகம் துணுக்குறவில்லை.

''சூப்பர்'' என்றான் புத்துணர்வு பொங்க. ''எனக்கு ரொம்ப நாளாகவே ஒரு துப்பறியும் வேலையைப் பண்ணிப் பார்க்கணும்னு ஆசை. நாம போய் பாடியைப் பார்ப்பமா, அல்லது நீங்க நடந்த உண்மைகளை முதல்ல சொல்லிடறீங்களா?''

''முதல்ல நடந்த உண்மைகளை சொல்லிடறேன்'' என்ற விர்ஜீனியா அத்தனையையும் சுருக்கி எப்படி முன் வைப்பது என்று சிந்திக்க சில கணங்கள் எடுத்துக் கொண்டார். பிறகு, கோவையாகவும் சாந்தமாகவும் பேச ஆரம்பித்தார்.

''இந்த ஆளு இங்கே முதல் முறையா நேத்துதான் வந்தான். என்னைப் பார்க்கணும்னு சொல்லியிருக்கான். அவன்கிட்டே சில கடிதங்கள் இருந்தன - காதல் கடிதங்கள் - என் பேர்ல கையொப்பமிடப் பட்டவை.''

''ஆனா அவை உங்களால எழுதப்படாதவை'' என்று வெளிப்படை யாய் முன்வைத்தான் இளைஞன்.

விர்ஜீனியா அவனை வியப்பான ஒரு பொருளாய் பார்த்தார். ''அது எப்படி உனக்குத் தெரியும்?'

''ஓ, நானா புரிஞ்சுக்கிட்டேன், தொடருங்க.''

''என்னை அவன் ப்ளாக் - மெயில் பண்ண நினைச்சான். உனக்கு சொன்னா புரியுமோ புரியாதோ... ஆனா நான் அதை அனுமதிச்சேன்.''

அவனை ஆதரவு நாடி அவர் பார்க்க, அவன் ஆதரவாய் தலையசைத் தான். ''ஓ யெஸ் எனக்குப் புரியுது. அது எப்படி இருக்கும்னு - அதாவது அந்த ப்ளாக் மெயில் எப்படியிருக்கும்னு - நீங்க ருசிக்க நினைச்சிருக் கீங்க!''

''எத்தனை புத்திசாலியா நீ இருக்கே! அப்படியே நான்.. அதையே தான் நான் நினைச்சேன்.''

''நான் புத்திசாலியே'' என்றான் இளைஞன் மிருதுவாய். ''ஆனா நினைவில வெச்சுக்குங்க... வெகு சில பேர் உங்களோட தான் இந்த காரணத்தை நம்புவாங்க. பலருக்கு, நினைவிருக்கட்டும், இப்படிப்பட்ட கற்பனையோ கலாரசனையோ கிடையாது.''

''கரெக்ட்தான். இந்த ஆளை நான் இன்னிக்கு வரச் சொல்லி யிருந்தேன் - ஆறு மணிக்கு. நான் ரேன்லே பகுதியிலிருந்து திரும்பினதும் ஏதோ ஒரு பொய்த் தந்தி வந்து ஒரேயொரு வேலைக்காரியைத் தவிர ஏனைய அத்தனை பேரையும் வீட்டிலிருந்து தள்ளி வெச்சிருக்குனு புரிஞ்சுக்கிட்டேன். இதுக்கப்புறம்தான் நான் படிக்குமறைக்குப் போனது, அங்கே குண்டடிப்பட்டவனைப் பார்த்தது எல்லாம்.''

''யார் அவனை உள்ளே விட்டது?''

''எனக்குத் தெரியலியே. இருக்கிற அந்த ஒத்தை வேலைக்காரியான எலிஸி பண்ணயிருந்தான்னா அதை அவ என்கிட்டே நான் வந்ததும் சொல்லியிருக்கணும்.''

''அவளுக்கு என்ன நடந்திருக்குனு தெரியுமா?''

''மூச்.''

இளையவன் அங்கீகரித்துத் தலையசைத்து விட்டு எழுந்துக் கொண்டான். ''இப்ப, உடலைப் போய்ப் பார்க்கிறோம்'' என்றான் அவன்

*சுறுசுறுப்பாய். ''ஆனா ஒண்ணு சொல்லிக்க விரும்பறேன். இதுலே யெல்லாம் உண்மையைச் சொல்லி விடுவது தான் சாலச் சிறந்தது. ஒரு பொய் ரொம்ப சீக்கிரமா பல குட்டிகளைப் போட்டு உங்களை சிக்க வெச்சுடும்.''*

*''அப்ப என்ன சொல்றே நீ - போலீஸுக்கு போன் பண்ணிட லாம்னா?''*

*''இருக்கலாம். ஆனா நாம முதல்ல அந்தப் பயலைப் பார்த்துடு வோம்.''*

*விர்ஜீனியா அறையை விட்டுக் கிளம்பி வழி காட்டியபடி போனார். அந்த அறையின் நுழைவில் தயங்கி நின்ற அவர் திரும்பி இளையவனைப் பார்த்தார். கேட்டார்: ''இன்னும், நீ உன்னோட பெயரை நீ என்கிட்டே சொல்லலே.''*

*''என் பெயர்? ஆஹ்... என் பெயர்: ஆண்டனி கேட்.''*

அத்தியாயம் 9

# ஆண்டனி கேட், ஓர் உடலை அப்புறப்படுத்துகிறார்

ஆண்டனி கேட். சிறு சிரிப்பூடே விர்ஜீனியாவைப் பின் தொடர்ந்தார். நடப்பவையெல்லாம் எதிர்பாராத திருப்பம் கொண்டு விட்டன. ஆனால் நாற்காலியில் சுருட்டிக் கிடந்த உடலை நோக்கி குனிந்தபடியே ஆழ்ந்துப் போனார் அவர்.

''இன்னும் இவன் கதகதப்பாய் தானிருக்கான்'' என்றார் அவர் மெல்லமாய். ''இவன் கொல்லப்பட்டு அரை மணி நேரம் கூட ஆகியிருக்காது.''

''நான் உள்ளே வருவதற்கு, ஜஸ்ட் முன்னாடியா?''

''எக்ஸாக்ட்லி.''

முகஞ்சுளித்து புருவங்களைக் கேள்விக்குறியாக்கிக் கொண்டு அங்கே நெட்டைக் குத்தலாய் நின்றார் அவர். பிறகு அவர் ஒரு கேள்வி கேட்டார். அதன் ஆழத்தை இப்போது விர்ஜீனியா அறிந்திருக்கவில்லை.

''உங்க வேலைக்காரி இந்த அறைக்குள்ளே வரலே, சரிதானே?''

''நோ.''

''நீங்க இந்த அறைக்குள்ளே இருக்கீங்கனு அவளுக்குத் தெரியுமா?''

''யெஸ் - ஏன் அப்படிக் கேட்குறே? நான் ரூம் நுழைவு வரை போய் நின்னு அவகிட்டே பேசினேன்.''

''நீங்க உடலைப் பார்த்துட்ட பிறகு?''

''யெஸ்.''

''இதைப் பத்தி அப்ப நீங்க எதுவுமே பேசலே?''

''அப்படி நான் பேசியிருப்பதுதான் நல்லதா? சொல்லியிருந்தா அலறி விறைச்சிருப்பா அவ. அடுத்து என்ன பண்ணுவது என்று சிந்திக்க எனக்கு தொந்தரவு இருக்கக் கூடாது.''

ஆண்டனி ஒப்புதலாய் தலையசைத்தார், ஆனால் பேசவில்லை.

''உனக்கு நடந்திருப்பது பரிதாபகரமா படுதுனு நினைக்கிறேன்.''

''சொல்லப் போனா இது துரதிர்ஷ்டம், மிஸஸ் ரேவல். நீங்க திரும்பியவுடனேயே நீங்களும் உங்க வேலைக்காரியும் ஒண்ணா பாடியைக் கண்டெடுத்திருந்தா - அது விஷயத்தை ரொம்ப சுளுவா ஆக்கித் தந்திருக்கும். அப்போ, இந்த ஆளு, நிச்சயமா நீங்க வீட்டுக்கு வருவதற்கு முன்னாடியே சுடப்பட்டிருப்பான்னு ஆகியிருக்கும்.''

''ஆனா இப்போ நான் வந்துட்ட பிறகு சுடப்பட்டிருக்கலாம்னு சொல்லுவாங்க - ஐ.ஸீ..''

சொல்லப்பட்டதன் உள்ளர்த்தத்தை விர்ஜீனியா உள்வாங்கிக் கொள்வதை ஆண்டனி கவனித்தார். வெளியே இருக்கும்போது விர்ஜீனியா பற்றி ஆண்டனி பண்ணியிருந்த கணிப்பில் ஐயமற நிச்சயமானார். அழகையும் மீறி, அவர், மூளை வைத்திருக்கிறார்... தைரியம் வைத்திருக்கிறார்.

தனக்கு முன் வைக்கப்பட்ட இப்புதிரில் முழுதுமாய் ஆக்கிரமிக்கப் பட்டிருந்த விர்ஜீனியாவால், முன்பின் தெரியாத ஓர் அந்நியன் தனது பெயரை துல்லியமாய் பிரயோகிப்பது எப்படி என்பது தட்டுப்பட வில்லை.

''எலிஸி ஏன் சுடப்பட்ட ஓசையைக் கேட்கலேனு தெரியலே'' என முணுமுணுத்தார் விர்ஜீனியா.

கடந்துப் போய்க் கொண்டிருந்த ஒரு காரின் என்ஜின் ஏற்படுத்திய பேரோசையை ஜன்னல் வழியாய் சுட்டிக் காட்டினார் ஆண்டனி. ''இதான் காரணம்'' என்றார். ''பிஸ்டலின் ஓசையைக் கேட்கக்கூடிய ஸ்தலம் கிடையாது, லண்டன்.''

தற்சமயம் விர்ஜீனியா ஒரு சிறு நடுக்கத்துடன் கிடந்த உடல் நோக்கித் திரும்பினார். ''இத்தாலியன் போல தெரியுது'' என்றார் ஆச்சரியமாய்.

''இத்தாலியனே'' என்றார் ஆண்டனி. ''இவனுடைய தினசரி வேலை, ஓட்டல்ல வெயிட்டர். கிடைக்கும் நேரத்துல இவன் பொழுதுபோக்கா பண்ணிக்கிட்டிருந்த வேலைதான், ப்ளாக் - மெயில் பண்ணுவது. இவன் பெயரை விசாரிச்சுப் பாருங்க - கியூசப்னு இருக்கும்.''

''அடப்பாவி!'' ஆண்டனியை வியந்தார் விர்ஜீனியா. ''இதென்ன, ஷெர்லக் ஹோம்ஸா?''

''என்னைப் பொறுத்தவரைக்கும் இந்த ப்ளாக் -மெயில் வெறும் ஏமாற்று வேலை. இப்பவே விளக்கறேன் கவனியுங்க. உங்ககிட்டே இவன் ஏதோ கடுதாசிகளைக் காட்டி அதுக்குப் பணம் கேட்டதா சொன்னீங்க, நீங்க பணம் தந்தீங்களா?''

''யெஸ், தந்தேன்.''

''எவ்ளோ?'

''நாற்பது பவுண்டுகள்.''

''இது தப்பு'' என்றார் ஆண்டனி. தேவையற்ற ஆச்சரியமெல்லாம் காட்டாமல். ''ம், இப்ப நாம, அந்த டெலிகிராமைப் பார்ப்போம்.''

டேபிளிலிருந்து அதை எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் தந்தார் விர்ஜீனியா. அதைப் பார்க்கப் பார்க்க ஆண்டனியின் முகம் ஆழ்ந்துப் போய் சுருங்குவதைக் கவனித்தார் அவர்.

''என்ன சமாச்சாரம்?''

அதைத் தூக்கிப் பிடித்த ஆண்டனி, அது எங்கிருந்து அனுப்பப்பட்டது என்று அதில் குறிக்கப்பட்டிருந்த அனுப்புனர் பகுதியைக் குத்திக் காட்டினார். ''பார்ன்ஸ்'' என்றார். ''இன்னிக்கு மத்தியானம் நீங்க ரேன்லேல இருந்திருக்கீங்க. நீங்களே இதை அனுப்புவதிலிருந்து உங்களை எது தடுத்தது?''

ஆண்டனியின் வார்த்தைகளில் பிரமித்தவராய் ஆனார் விர்ஜீனியா. அவரைச் சுற்றி ஒரு வலை இறுக்கிக் கொண்டே நெருக்குவது போலிருந்தது அவருக்கு. அவரது ஞாபகத்துக்குப் பின்னால் ஒளியற்றுக் கிடந்த பல விஷயங்களைத் தோண்டிப் பார்க்கும்படி வேகமாய் தள்ளிக் கொண்டிருந்தார் ஆண்டனி.

தனது பாக்கெட்டிலிருந்து கைக்குட்டையை வெளியிலெடுத்த ஆண்டனி அதனைத் தன்னுடைய கையைச் சுற்றிக் கட்டிக் கொண்டு

கீழே கிடந்த பிஸ்டலை எடுத்தார். ''என்னைப் போன்ற கிரிமினல்கள் எப்பவுமே படு ஜாக்கிரதையா இருக்கணும்'' என்றார். ''கைரேகைகள், ஆங்!''

அப்போது திடீரென்று அவருடைய முழு உடலும் இறுகிப் போவதைக் கவனித்தார் விர்ஜீனியா. பேசிய அவருடைய குரல் மாற்றங் கண்டிருந்தது. அது வெட்டு ஒன்று துண்டு ரெண்டு எனும் தினுசில் வந்து விழுந்தது.

''மிஸஸ் ரேவல்'' என அழைத்தார் அவர். ''இந்த பிஸ்டலை இதுக்கு முன்னாடி நீங்க எப்பவாவது பார்த்ததுண்டா?''

''நோ'' என்றார் விர்ஜீனியா சிறு ஆச்சரியம் தொனிக்க.

''நிச்சயமா தான் இதை சொல்றீங்களா?''

''படு நிச்சயமா.''

''உங்களுக்குனு சொந்தமா ஒரு பிஸ்டலிருக்கா?''

''நோ.''

''நீங்க எப்பவாவது ஒரு பிஸ்டலை சொந்தமா வெச்சிருந்ததுண்டா?''

''நோ, நெவர்.''

''நிச்சயமாதான் இந்த பதிலை சொல்றீங்களா?''

''படு நிச்சயமா.''

ஒரு நிமிடம் போல அவரை கவனம் சிதையாது ஆண்டனி முறைத்துப் பார்க்க, பதிலுக்கு, அவரிடம் உண்டாகியிருந்த மாற்றத்துக்காக முழுவதும் ஆச்சரியமாய் முறைத்தார் விர்ஜீனியா.

பிறகு ஒரு பெருமூச்சோடு இளகிய ஆண்டனி ''விசித்திரமாயிருக்கு'' என்றார். ''அப்ப இதுக்கு நீங்க என்ன கணக்கு தரப் போறீங்க?''

தற்போது பிஸ்டலை நன்கு தெரியும்படி பிடித்தார் ஆண்டனி. இது சின்ன, கையடக்கமான, ஏறத்தாழ துப்பாக்கி பொம்மை போன்ற ஒரு வஸ்து - ஆயினும் கொலை வரை போகவல்ல விஷம். அதில் பொறிக்கப் பட்டிருந்தது விர்ஜீனியா எனும் பெயர்.

''ஓ, இது அசாத்தியம்'' என அலறி விட்டார் விர்ஜீனியா.

அந்த அலறல் அத்துணை உண்மையானதாய் இருந்தபடியால் அதை நம்புவதைத் தவிர ஆண்டனிக்கு வேறு வழி தெரியவில்லை.

''உட்காருங்க'' என்றார் சாந்தமாய். ''முதல் பார்வையில் நமக்குப்பட்டதை விட இதுல நிறைய சிக்கல்கள் இருக்கு. சொல்லுங்க - இது ஏன் நடந்திருக்குனு நீங்க நினைக்கிறீங்க? இதுக்கு விடையா ரெண்டு சாத்தியக் கூறுகள் தானிருக்கு. முதல் சாத்தியக்கூறு, அந்த நிஜ விர்ஜீனியா. அவ, இந்தாளை எப்படியோ இங்கே கண்டுபிடிச்சிருப்பா, சுட்டிருப்பா. பிஸ்டலையும் இங்கேயே விட்டிருப்பா. கடிதங்களை எடுத்துக் கிட்டிருப்பா. பறந்திருப்பா. இது சாத்தியம்தான், இல்லையா?

''அடுத்த சாத்தியக் கூறு செம இண்ட்ரஸ்டிங்கானது. யார் இந்த கியூசப் பயலைக் கொன்ன நினைச்சதோ, அவன், அதுல உங்களையும் முழுக்கத் திணிச்சுட நினைச்சிருக்கான் - சொல்லப் போனா இது தான் அவனோட குறிக்கோளே - உங்களைத் திணிப்பது! இவனை அவனோ அல்லது அந்தக் கூட்டமோ எங்கே வேணும்னாலும் போட்டுத் தள்ளியிருக்கலாம். ஆனா, இவனை இங்கே கொண்டு வந்து கொன்றுப் போடுவதுல அவங்க அத்தனை சிரமத்தை எடுத்துக்கிட்டிருக்காங்க. மேலும் அது யாராயிருந்தாலும் அவனுக்கு உங்களைப் பற்றி முழுக்க தெரிஞ்சிருக்கு... டேட் செட் பகுதியிலிருக்கும் உங்களோட மாளிகை...உங்களுடைய திடீர் முடிவெடுக்கும் பார்ட்டி குணம்... இன்னிக்கு மத்தியானம் நீங்க ரேன்லேல இருந்திருக்கும் உண்மை. கேட்க முட்டாள்தனமா கூட தோணலாம். ஆனா சொல்லுங்க மிஸஸ் ரேவல் - உங்களுக்கு விரோதிங்க உண்டா?''

''ம்ம். இப்படி மாட்டி விடுமளவுக்கு - நோ.''

''இப்ப நம்ம முன்னாடியிருக்கிற ஒரே முக்கியமான கேள்வி என்னன்னா'' என்ற ஆண்டனி சொன்னார்: ''இப்ப நாம என்ன பண்ணப் போறோம்? ரெண்டு வழிகள் நம்ம முன்னாடி திறந்திருக்கு. ஒண்ணு சமுதாயத்துல உங்களுக்குள்ள கீர்த்தி மற்றும் இதுவரை நீங்க வாழ்ந்து வந்துள்ள எவ்வித குற்றங்களுமற்ற வாழ்க்கை இந்த ரெண்டையும் சாட்சியா முன்னிறுத்தி - போலீஸுக்கு போன் பண்ணுதல்... உண்மை அத்தனையையும் கக்குதல். ரெண்டு: இந்த பாடியை வெற்றிகரமா நான் அப்புறப்படுத்துதல். தேவையான வஞ்சகத் தன்மையைக் கொடுத்து ஒரு கொலையை என்னால அமுக்கி மறைச்சுட முடியுமான்னு பார்த்துட

ணும்னு எனக்கு வெகு நாளாகவே ஆசையுண்டு. ஆனா இந்த ரத்தத்தைக் கண்டா எனக்குள் உண்டாகும் பயத்தால ஒதுக்கியே வெச்சாச்சு. ஒட்டுமொத்தத்துல வழி ஒண்ணுதான் சரினு எனக்குப் படுது. இதுல ஒரு தர்மசங்கடமிருக்கு. போலீஸுக்கு போன் பண்றோம்னு வெச்சுக்குங்க... அந்த பிஸ்டல்? கடிதங்கள்? இதுங்களை என்ன பண்ணப் போறோம்? மறைக்கணுமில்லே? கடிதங்கள் - ப்ளாக் - மெயில் பண்ணிய கடிதங்கள் - ஆங்... அவை இன்னமும் இவன்கிட்டே இருக்கா என்ன?''

ஆண்டனி துரிதமாய் மரணமடைந்துக் கிடந்தவனின் பாக்கெட்டு களில் கைகளை ஓட்டித் தேடினார்.

''சுத்தமா துடைச்செடுக்கப்பட்டிருக்கான்'' என அறிவித்தார். ''எதுவுமே அவன் உடம்புல விட்டு வைக்கப்படலே. இதனால அந்தக் கடிதங்கள் மேல இன்னும் கூட ஏதாவது கீழ்த்தரமான திட்டங்கள் தீட்டப்படலாம்'' என்று சடலத்தைப் பார்த்தபடி பேசிக் கொண்டிருந்த ஆண்டனி, திடுமென ''ஹலலோ, ஹலலோ... என்னது அது?'' என்றார்,கண்களை அகற்றாமல். ''பாக்கெட்டுல துருத்திக்கிட்டு, பாதி கிழிஞ்சு சின்ன துண்டு பேப்பர் போல.''

சொல்லிக் கொண்டே அந்தத்துண்டுக் காகிதத்தை உருவி வெளியிலெடுத்தார் அவர். வெளிச்சம் நோக்கிக் கொண்டு போனார். விர்ஜீனியாவும் அவருடன் இணைந்துக் கொண்டார்.

''*சிம்னீஸ் 11.45 வியாழக்கிழமை.* ஏதோ சந்திப்புக்கான முன்பதிவு போல தோணுது.''

''சிம்னீஸ்!'' என கதறி விட்டார் விர்ஜீனியா, ''என்ன ஓர் அசாதாரணம்!''

''இதுல என்ன அசாதாரணம்? இவனைப் போன்ற ப்ளாட்பார கிராக்கிகளுக்கு சம்பந்தமில்லாத மாபெரும் உயர்ந்த இடம்னு சொல்ல வரீங்களா?''

''இன்னிக்கு சாயங்காலம் நான் சிம்னீஸ் போறேன்.''

ஆண்டனி, அவரை நோக்கி ஒரு சுற்று சுற்றி வந்தார். ''என்ன, என்ன? திரும்பச் சொல்லுங்க.''

''இன்னிக்கு சாயந்திரம் நான் சிம்னீஸ் கிளம்புவதா இருந்தேன்னேன்.''

ஆண்டனி அவரை நோக்கி முறைத்தார். ''இப்ப எனக்கு எல்லாம் தெரிய ஆரம்பிக்குது. இது ஓர் ஐடியாதான் - நான் தப்பாகூட இருக்கலாம். யாரோ ஒருத்தர் நீங்க சிம்னீஸ் போவதை நிறுத்தியே ஆகணும்னு இயங்கறாங்கன்னு வெச்சுப்போம்.''

''ஜார்ஜ் லொமேக்ஸ் நினைச்சார்'' என்றார் விர்ஜீனியா உடனேயே. ''ஆனா அவரைப்போய் ஒரு கொலையோட முடிச்சிட்டு என்னால பார்க்க முடியாது'' என்றார் புன்முறுவியபடி.

ஆண்டனி புன்முறுவவில்லை. சிந்தனையில் முழுகிப் போனார். ''கவனியுங்க, போலீஸுக்குப் போன் போட்டீங்கன்னா இன்னிக்கு நீங்க சிம்னீஸ் போவது நடக்காமலே ஆகிடும் - ஏன், நாளைக்கு போகலாம் என்பது கூட சந்தேகத்துக்கிடம்தான். ஓகே மிஸஸ் ரேவல்... நீங்க உங்களை என் கையில இப்ப ஒப்படைச்சுட முடியுமா?''

''அப்ப வழி ரெண்டா, ஆங்?''

''வழி ரெண்டே, ஆங்! இதுல முதல்ல பண்ண வேண்டியது உள்ளேயிருக்கிற அந்த ஒரேயொரு வேலைக்காரியை வீட்டுல இல்லாம வெளியே விரட்டி விடுவது, இதை உங்களால சமாளிக்கமுடியுமா?''

''சுலபமா.''

விர்ஜீனியா அறையை விட்டு வெளியே வந்து நின்றுக் கொண்டு மாடி நோக்கிக் கூப்பிட்டார்: ''எலிஸி, எலிஸி.''

''மேடம்?''

துரிதமாய் பேசப்பட்ட உரையாடலைக் கேட்டார் ஆண்டனி. பிறகு வாயிற்கதவு திறந்து பின் மூடப்படும் ஓசை. விர்ஜீனியா திரும்பி அறைக்கு வந்த வேகம்.

''அவ போயிட்டா. ஒரு ஸ்பெஷல் செண்ட்டோட பேரைச் சொல்லி வாங்கிட்டு வரும்படி அனுப்பியிருக்கேன். தூரத்துல இருக்கிற ஒருகடைக்கு. இங்கே திரும்பாம அடுத்த ரயிலைப் பிடிச்சு என்னைத் தொடர்ந்து வந்து சேரணும் என்பது கட்டளை.''

''குட்'' என்றார் ஆண்டனி ஒப்புதலாய். ''பாடியை அப்புறப்படுத்த நாம ஆரம்பிக்கலாம். நேரத்தைப் பிடுங்கப் போகிற நீண்ட வேலையா இது இருக்கப் போகுது... ஆங், ஒரு கேள்வி: உங்ககிட்டே டிரங்க் பெட்டி போல ஏதாவது ஒண்ணு இருக்கா?''

''ம், அப்படி பெட்டியிருக்கு... பேஸ்மண்ட்டுக்கு வா... வந்து உனக்கு எது பிடிக்குதோ அதை நீ எடுத்துக்கோ..''

விதவிதமான டிரங்க் பெட்டிகள் பேஸ்மெண்ட் பகுதியில் இருந்தன. போதுமான அளவுக்கு! ஒரு பெட்டியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார் ஆண்டனி.

''இதை வெச்சுக்கிட்டு பண்ண வேண்டியதை நான் கவனிச்சுக் கிறேன்'' என்றார் அவர் நயமாய். ''நீங்க மேல போய் கிளம்புவதற்கு ரெடி பண்ணிக்குங்க.''

விர்ஜீனியா கட்டுப்பட்டார். தனது டென்னிஸ் உடை களைந்து பிங்க் நிற பிரயாண உடைக்குள் மாறிவிட்டு அவருக்கு மிகப் பிடித்த அதே நிற தொப்பியையும் அணிந்து கொண்டு மீண்டும் ஹாலுக்கு வந்தார். அங்கு ஆண்டனி டிரங்க் பெட்டியை அழகாய் பேக் பண்ணி அருகில் வைத்துக் கொண்டு தயாராயிருந்தார்.

''என்னுடைய முழு கதையையும் நான் உங்ககிட்டே சொல்லணும்'' என்ற ஆண்டனி, ''ஆனா அதுக்குக் கூட நேரமில்லாத அளவுக்கு இந்த சாயந்திரப் பொழுது நமக்கு பிஸியா அமைஞ்சிருக்கு'' என்றார். ''ஓகே, கவனியுங்க. நீங்க பண்ண வேண்டியது இதுதான். ஒரு டாக்ஸியைக் கூப்பிட்டுக்குங்க. உங்களோட லக்கேஜை அதுல போட்டுக்குங்க - இந்த டிரங்க் பெட்டியையும் சேர்த்து. பாடிங்டன் ரயில் நிலையம் வரை போங்க. அங்கே லக்கேஜ் ஆபீஸ்ல டிரங்க் பெட்டியை மட்டும் வைக்கிறீங்க. நான் அங்கேயே ப்ளாட்பாரத்துல இருப்பேன். அங்கே என்னைக் கடந்து போகும் போது லக்கேஜ் ஆபீஸ் டோக்கனைக் கீழே தவறவிடுங்க. அதையெடுத்து நான் உங்ககிட்டே தருவேன். ஆனா நிஜத்துல பார்த்தா, அது என்கிட்டேயே தானிருக்கும். அங்கேயிருந்து அப்படியே நீங்க சிம்னீஸ் கிளம்புங்க... மீதியனைத்தையும் என் கையில விட்டுட்டு...''

''உனக்கு நான் எப்படி நன்றி சொல்றதுனே தெரியலே'' என வசனம் தந்தார் விர்ஜீனியா. ''முன்பின் அறிமுகமில்லாத ஓர் அந்நியனுக்கு நடுவுல இப்படியொரு சடலத்தோட இருப்பதைப் போன்ற ஒரு சித்ரவதை எனக்கு வேற இருக்க முடியாது.''

''ஆனா எனக்கு இது பிடிக்குது'' என்றார் ஆண்டனி பட்டும் படாமல். ''என் ஃபிரண்டு ஜிம்மி மேக்ரத் இங்கே இருந்தால், இதுதான் எனக்கு அற்புதமா பொருந்தும் வேலைனு மகிழ்ந்துப் போயிடுவான்.''

இதற்கு விர்ஜீனியா அவரை முறைத்தார். ''என்ன பேர் சொன்னே? ஜிம்மி மேக்ரத்?''

''யெஸ், ஏன்? அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கீங்களா?''

''யெஸ் - சமீபத்துல'' முடிவறியாது தயங்கினார் அவர். பிறகு தொடர்ந்தார். ''மிஸ்டர் கேட்... உன்கிட்டே ஒண்ணு கேட்கணும், நீயும் சிம்னீஸ் வரக் கூடாதா?''

''நீங்க என்னையும் அங்கே பார்க்கலாம் மேடம்... யெஸ். இப்ப, ம், ஸ்டார்ட்.''

போட்ட திட்டம், இம்மி சரிவின்றி நடந்து முடிந்தது. மற்றொரு டாக்ஸியில் பின்னாலேயே தொடர்ந்த ஆண்டனி பிளாட்பாரத்தில் இருந்தார்... மிகச் சரியாக டோக்கனை கைப்பற்றினார். ஆண்டனி போட்டிருந்த திட்டங்களுக்கு உறுதுணையாய் இருக்கக்கூடும் என்ற எண்ணத்தில் அன்று மத்தியானமே ஒரு காரை வாடகைக்கு அமர்த்திக் கொண்டிருந்தார் அவர். அதில் நேராய் பாடிங்டன் ரயிலடிக்குப் போனார். அங்கிருந்த போர்ட்டரிடம் டோக்கனை அவர் தர, அவனும் அந்த டிரங்க் பெட்டியை அலுங்காது கொண்டு வந்து ஆண்டனி எடுத்திருந்த காரின் பின்னால் அழ்காய் செருகினான். ஆண்டனி கிளம்பினார்.

இப்போது அவருடைய ஒரே இலக்கு, லண்டனை விட்டு வெளியேறி விட வேண்டும் என்பதாகும். ஒதுக்குப்புறம் பகுதியைத் தொட்டு விட்ட போதிலும், இப்படியும் அப்படியுமாக வாகனங்கள் இழையத்தான் செய்தன. எனவே காலடித் தடங்களோ அல்லது காரின் தடங்களோ சாட்சிகளாக விட்டு வைக்கப்படக் கூடாது. இதில், காரை ஒரு குறிப்பிட்ட பகுதியில் நிறுத்தினார் ஆண்டனி. இறங்கியதும் முதல் வேலையாக களிமண்ணால் நம்பர் தகட்டைப் பூசி விட்டார். பிறகு இருமருங்கிலும் எவ் வகையான வாகனச் சத்தமும் கேட்காத நேரத்தில் டிரங்க் பெட்டியைத் திறந்து, கியூசப் பாடியை இழுத்துப் போட்டார். அதை சாலையின் ஓரத்தில் அதன் வளைவில், பறக்கும் வாகனங்களின் முகப்பு விளக்குப் படாத ஒரு திருப்பத்தில், நீட்டிப் படுக்கப் போட்டார்.

பிறகு மீண்டும் காருக்குள் புகுந்துக்கொண்ட அவர் ஓட்டிக் கொண்டு போய்விட்டார். இந்த முழு பிஸினஸும் சரியாய் ஒன்றரை நிமிடங்களை எடுத்துக் கொண்டது. மீண்டும் லண்டனுக்கே திரும்பினார். திரும்பிக் கொண்டிக்கும்போது காடாய் இருந்த ஒரு பகுதியில் காரை அவர்

நிறுத்தினார். மளமளவென்று ஒரு கனமான மரத்தின் மீது ஏறினார்; இது ஒரு பெரிய பிரச்சனையாக இருந்தது - ஆண்டனிக்கே! அம்மரத்தின் ஒரு உச்சிக் கிளையில் அங்கிருந்த பொந்தில் சுமந்து சென்றிருந்த சின்ன ப்ரவுன் நிற பார்சலைக் கட்டி விட்டார்.

ஒப்புதலான தலையசைப்போடு ''பிஸ்டலை மறைக்க ஒரு புத்திசாலித்தனமான இடம்'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டார். ''எல்லோரும் குழி தோண்டி பூமிக்குள் தேடுவார்கள்... குளம் குட்டைக்குள் தேடுவார்கள்... ஆனால் மரம் ஏறி..?''

லண்டன் வந்ததும் பாடிங்டன் போனார். அங்கு, இப்போது, மற்றொரு லக்கேஜ் அறையில் டிரங்க் பெட்டியை வைத்தார். நிறைய ஜுஸுக்கும் வறுக்கப்பட்ட சூடான உருளைக்கும் ஏங்கினார் ஆண்டனி. ஆனால் அதற்கெல்லாம் இடந்தராத மறுப்பாய் தலையசைத்துக் கொண்ட அவர், கைக் கடியாரத்தைப் பார்த்தார். வாடகைக்காரான மோரீஸுக்கு நிறைய பெட்ரோல் ஊற்றித் தந்துவிட்டு சாலைக்குள் மீண்டுமொரு முறை பாய்ந்தார். இம்முறை வடக்கு நோக்கி.

சிம்னீஸின் வாகன நிறுத்தத்துக்கு அருகில் இருந்த தெருவில் தன்னுடைய காரைக் கொண்டு வந்து ஆண்டனி நிறுத்தியபோது மணி பதினொன்றரை. காரிலிருந்து வெளியே எகிறி குதித்தவாறு வந்தவர் அதன் தடுப்புச் சுவரை வெகு லாவகமாக தாவி குதித்திறங்கி, வீடு நோக்கி முன்னேறலானார். அவர் நினைத்ததை விட நேரம் எடுத்துக் கொண்டது... தற்சமயம் அவர் ஒரு சிறு நடை பாதையின் முன் வந்து நின்றிருந்தார். கருமிருட்டில் ஒரு மாபெரும் சாம்பல் நிற மாளிகை அவர் முன்னால் விரிந்தது - கம்பீரமான *சிம்னீஸ்*. தொலைவில் ஒரு கடியாரம் பதினொன்றே முக்கால் என மணியடித்தது.

11.45 - அந்தத் துண்டுச் சீட்டில் குறிப்பிடப்பட்டிருந்த நேரம். தற்சமயம் வீட்டின் வெளிப்புறம் சுற்றிலும் வளைந்து நீண்டிருந்த நடைப்பாதைப் பகுதியான டெரஸுக்கு வந்திருந்தார் ஆண்டனி. அனைத்தும் இருட்டாயிருந்தன. ஓசையற்றுக் கிடந்தன.

''இந்த அரசியல்வாதிங்க சீக்கிரமே படுக்கப் போயிடறானுங்க'' என்று சொல்லிக் கொண்டார் ஆண்டனி.

அப்போது திடுமென ஓர் ஓசை அவருடைய காதுக்கு மிக அருகில் போனது - சுடப்பட்ட குண்டு ஒன்றின் ஓசை அது. ஆண்டனி

துடிதுடிப்பாய் சுழன்று திரும்பினார். ஓசை வீட்டுக்குள்ளிருந்துதான் வந்தது - இதில் அவர் நிச்சயமாயிருந்தார். சில கணங்கள் அவர் காத்திருந்தார். ஆயினும் அனைத்தும் ஓர் மரணத்தைப் போல அசைவற்றே கிடந்தன. இறுதியில், கம்பிகள் ஏதுமில்லாமல் வெறும் ஜன்னற் கதவுகள் மட்டுமே கொண்ட ஒரு பிரெஞ்சு ஜன்னலருகே போனார் அவர்... அங்கிருந்துதான் அந்தக் குண்டோசை எழுந்ததாய் கருதினார் ஆண்டனி. அதன் பிடியைப் பிடித்து உள் பக்கமாய் தள்ளிப் பார்த்தார். அது தாழிடப்பட்டிருந்தது. மற்ற பிரெஞ்சு ஜன்னல்களையும் தள்ளிப் பார்த்தார். அப்படிப் பண்ணும் பேதெல்லாம் சிந்தை கலையாது காதைத் தீட்டிக் கொண்டு கவனித்தார். ஆனால் அமைதி குலைக்கப்படாமல் அப்படியே இருந்தது.

கடைசியில் அப்படியோர் ஓசை எழவேயில்லை என்றும் தானாகவே கற்பனை பண்ணிக் கொண்டதுதான் இத்தனையும் என்றும் ஒரு முடிவுக்கு வந்தார் ஆண்டனி. திரும்பி, வந்த வழியே அவர் பிரயாணப்பட்டார். கொஞ்சமாய் அதிருப்திக் கொண்டும், இருப்புக் கொள்ளாமலும்.

தூரம் போனதும், திரும்பி வீட்டை பார்த்தார். முழு பங்களாவும் தெரிந்தது. அப்படிப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே முதல் தளத்திலிருந்த ஓர் அறையின் ஜன்னலில் விளக்கொளி பளீரிட்டது. அடுத்த நிமிடம் அது மறுபடியும் அணைந்துவிட, அந்தப் பகுதி முழுவதும் மீண்டுமொரு முறை இருளுக்குள் மூழ்கிப் போனது.

அத்தியாயம் 10

# சிம்னீஸ்

இன்ஸ்பெக்டர் பேட்க் - ஓர்த்தி அலுவலகத்தில் இருந்தார். நேரம், காலை 8.30. இன்ஸ்பெக்டர் பேட்க் - ஓர்த்தி நல்ல நெட்டையான கொழுத்த அதிகாரி. கழுத்தறுக்கும் கேஸ்கள் எதிர்படும்போது மூச்சு விடத் திணறும் ரகம். அவருக்கு உதவியாய் இன்றைய டியூட்டியில் கான்ஸ்டபிள் ஜான்ஸன். தொழிலுக்கு மிகப் புதுசு. கீழே தாழ்ந்தது போன்ற நீள மூக்கு கொண்ட முகம் - மனிதக் கோழி மாதிரி.

டேபிளிலிருந்த டெலிபோன் தற்போது அலற அதனை மிடுக்கான இறுக்கத்தோடு கையிலெடுத்தார் இன்ஸ்பெக்டர்.

''யெஸ், மார்க்கெட் பேஸின் போலீஸ் ஸ்டேஷன்தான். இன்ஸ்பெக்டர் பேட்க் - ஓர்த்தி பேசறேன். என்ன?''

இன்ஸ்பெக்டரின் நடவடிக்கையில் சிறு மாற்றம். ''சொல்லுங்க லார்ட். நானேதான் பேசறேன் லார்ட். நீங்க சொல்வதை என்னால அர்த்தப்படுத்திக்க முடியலியே லார்ட், அப்படியா?'

நீண்ட இடைவேளை விளைந்தது. அதில், இன்ஸ்பெக்டர் கூர்மையாய் கவனித்தார். வழக்கமாய் உணர்ச்சிகளற்றே இருக்கும் அவருடைய முகத்தில் வகைவகையான உணர்வுகள் வந்து போயின. பிறகு உடனே, ''மை லார்ட்'' என்ற அறிவிப்போடு ரிஸீவரை அதனிடத்தில் ஒப்படைத்தார்.

முகமெங்கும், 'முக்கியமான வேலை' என்ற துறுதுறுப்பான உப்புதலோடு ஜான்ஸன் பக்கம் திரும்பினார் இன்ஸ்பெக்டர். ''லார்ட் இல்லத்திலிருந்து - சிம்னீஸ் - கொலை.''

''கொலை!'' என அதையே ஜான்ஸனும் எதிரொலித்தான், அவரைப்போன்ற துள்ளலோடு.

''கொலையே'' என்று முடித்தார் இன்ஸ்பெக்டர் முழு திருப்தியோடு.

''எனக்குத் தெரிஞ்சு இங்கே ஒருகொலையே நடந்தது கிடையாது - அந்த டாம் பய அவனோட ஸ்வீட் ஹார்ட்டைச் சுட்ட வழக்கைத் தவிர.''

''அது ஒரு வகையில பரபரப்பான கொலையே கிடையாதுய்யா. இது- இது - நமக்கு ஒரு நிஜத் தீனி'' என்றார் இன்ஸ்பெக்டர், அவன் சொன்னதை மறுத்து.

''அதுக்கு அவனைத் தொங்க விடலே'' என ஜான்ஸன் ஏற்றுக் கொண்டார். ''ஆனா இது நீங்க சொல்ற மாதிரி நிஜ த்ரில்லா, சார்?''

''ஆமாம் ஜான். லார்டோட ஒரு விருந்தாளி - அயல்நாட்டவன் போல தெரியுது - சுடப்பட்ட நிலையில கண்டெடுக்கப்பட்டிருக்கான். பக்கத்துலயே திறந்த ஜன்னல், வெளியில சில காலடித்தடங்கள்.''

''வேற நாட்டுல வந்து சாகணும்னு அவன் விதி'' என வருத்தமாய் சொன்னான் ஜான்சன்.

''இதை உள்வாங்கிக்க முடியாம இருக்கார் லார்ட்'' என தொடர்ந்த வண்ணமிருந்தார் இன்ஸ்பெக்டர். ''டாக்டர் கார்ட்ரைட்'டையும் கையோட பிடிப்போம். நம்ம கூடவே கூட்டிட்டுப் போவோம். ஓ... அந்தக் காலடித் தடங்களை யாரும் அழிச்சுடாம இருக்கணும்.''

இன்ஸ்பெக்டர் பேட்க் - ஓர்த்தி, சொர்க்கத்தில் இருந்தார். கொலை! அதுவும் சிம்னீஸில்! இன்ஸ்பெக்டர் பேட்க் – ஓர்த்தி இக்கொலை வழக்கின் பொறுப்பில். போலீஸுக்கு பலமான ஒரு சாட்சி உள்ளது. பரபரப்பானது. ஆஹாஹ்ஹா... பதவி உயர்வு... சம்பள அதிகரிப்பு... மேற்சொன்ன இன்ஸ்பெக்டருக்கு!

''இதெல்லாம்..'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார் இன்ஸ்பெக்டர். ''ஸ்காட்லாண்டு யார்ட் அதோட மூக்கை உள்ளே நுழைக்கலைனா தான்...'' இந்த சிந்தனை அவரின் ஊக்கத்தைக் குறைத்து விட்டது போலயிருந்தது. ஆனால், கொலைக்கான சூழ்நிலையை வைத்துப் பார்த்தால் நிச்சயமாய் இப்படித்தான் நடக்கப் போகிறது என்பது வெளிப்படையாகவே தெரிந்தது.

டாக்டர் கார்ட்ரைட் டிஸ்பன்ஸரியில் காரை நிறுத்திக் கொண்டார்கள். இளையவனாக இருந்த டாக்டர் அதில் கூர்ந்த ஆர்வத்தைக் காட்டினார். ஜான்ஸனின் அணுகுமுறை போலவே இருந்தது டாக்டருடையதும்.

''தேங்க் யூ கடவுளே'' என்றார் அவர். ''நாம க்ரைம் அதிகாரிங்கன்னு பேரு. ஆனா இதுவரைக்கும் ஒரு கொலை நம்ம கைக்கு வரலே - அந்த டாம் கேஸைத் தவிர.''

மூவரும் டாக்டருடைய சின்ன காரில் ஏறிக் கொண்டு சுறுசுறுப்பாய் சிம்னீஸ் நோக்கிப் பிரயாணமானார்கள். 'ஜாலி கிரிக்கெட்டர்ஸ்' எனும் லோக்கல் விடுதியை அவர்கள் கடக்கும்போது அதன் நுழைவாயிலில் நின்றுக் கொண்டிருந்த ஒருவனை டாக்டர் கவனித்தார்.

''அந்நியன்'' என்று அவர் குறிப்பிட்டார். ''ஆனாலும் ஜம்முனு இருக்கான். எத்தனை நாளா இங்கே இருக்கான்? இங்கே 'ஜாலி கிரிக்கெட்டர்ஸ்ல' தங்கிக்கிட்டு இவன் என்ன பண்ணிக்கிட்டிருக்கான்? இதெல்லாம் எனக்கு விந்தையா இருக்கு. இந்தப் பகுதியில இந்த அந்நியனை நான் பார்த்ததே கிடையாது. இதுவரைக்கும். ஸோ, நேத்து ராத்திரிதான் இவன் வந்திறங்கியிருக்கணும்.''

''இவன் ட்ரையினிலே வரலே'' என்றான் ஜான்ஸன். ஜான்ஸனின் சகோதரன் இங்குள்ள ரயிலடியில் போர்ட்டர் உத்தியோகம் பார்ப்பதால் வந்து போவோர் பற்றி நல்லபடியாகவே தகவல்கள் ஜான்ஸனுக்குக் கிடைத்து விடும்.

''நேற்று சிம்னீஸுக்கு வந்தது யார்?'' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

''லேடி எய்லீன்... இவங்க 3.40 வண்டியில இருந்தாங்க. அவங்க கூட ரெண்டு ஜென்டில் மேன். ஓர் அமெரிக்கன், இன்னொருத்தன் ஓர் இளைய ஆர்மி பய. ரெண்டு பேருமே வேலையாட்கள் யாரையும் துணைக்குக் கூட்டி வரலே. லார்ட், 5.40 வண்டியில வந்தார்; கூடவே இன்னொரு அயல்நாட்டு மனுஷன்.. அந்தாளு தான் சுடப்பட்டிருக்கணும். இவனுக்கு ஒரு வேலைக்காரன் உடன் வந்திருக்கான். மிஸஸ் ரேவல் 7.25 வண்டியில வராங்க. இதே வண்டியில, வழுக்கை மண்டையும் கொக்கி மூக்குமாயிருக்கும் இன்னொருத்தனும் வந்திருக்கான். மிஸஸ் ரேவலோட வேலைக்காரி 8.56 வண்டியில் வரா.''

ஜான்ஸன் மூச்சுக் காற்றுக்காக கொஞ்சமாய் நிறுத்தினான்.

''ஜாலி கிரிக்கெட்டர்' விடுதிக்கு யாரும் வரலியா?''

ஜான்ஸன் மறுப்பாய் தலையசைத்தான்.

''அப்ப அவன் கார்ல வந்திருக்கணும்''என்றார் இன்ஸ்பெக்டர். ''ஜான்ஸன்... திரும்பும் வழியில நீ 'ஜாலி கிரிக்கெட்டர்ஸ்' விடுதியில் விசாரணைகளை நடத்தணும்னு குறிச்சு வெச்சுக்கோ. அயல்நாட்டிலிருந்து வந்தவனா இருக்கலாம்.''

ஏதோ இது ஒரு சரியான புத்திக் கூர்மையான வாக்கியம் என்பது போல தனக்குத்தானே ஒப்புதலாய் தலையசைத்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர்.

கார், சிம்னீஸின் முன் கேட் அருகேயிருந்த தோட்டப் பகுதியில் நுழைந்துக் கொண்டிருந்தது. கொழித்து நின்ற இந்த வரலாற்று சிறப்புமிக்க வளாகத்தின் விவரிப்புகளை 'முக்கியமாய் பார்க்க வேண்டிய பகுதிகள்' எனும் எந்தப் புத்தகத்திலும் பிடிக்கலாம். 'இங்கிலாந்தின் வரலாற்றுச் சிறப்பு மிக்க இடங்கள்' எனும் புத்தகமொன்றில் இது மூன்றாவது இடமாக இடம்பிடித்துள்ளது. வியாழக்கிழமைகளில் மட்டும் பப்ளிக் வந்து இதன் அழகைப் பார்த்து செல்ல சிம்னீஸின் சில குறிப்பிட்ட பகுதிகள் மட்டும் திறந்திருக்கும். இப்படியெல்லாம் புகழ் பரந்துக் கிடப்பதால் சிம்னீஸ் பற்றி தனியாய் விவரிக்க வரிகள் ஒதுக்குவது அதிகப்பிரசங்கத்தினமாகி விடும்.

பிசகற்ற மரியாதையோடு இயங்கிய ஒரு பட்லரால் வாசலிலேயே மூவரும் வரவேற்கப்பட்டார்கள்.

''இந்தச் சிறப்புமிக்க பகுதியில் ஒரு கொலை என்பது, நாங்கள் பழக்கப்படாதது'' என்றான் அவன் பவ்யமாய். ''ஆனா இது பாவம் நிறைஞ்ச யுகம். ஆங்.. லார்ட் உங்களை எதிர்பார்த்துக்கிட்டிருக்கார். இந்தப் பக்கம் ப்ளீஸ்.''

அனைத்துப் பிரம்மாண்டங்களிலிருந்தும் தப்பித்து லார்ட் கேட்டர்ஹாம் அடைக்கலம் புகுந்திருந்த ஒரு சின்ன அறைக்கு இவர்களை அழைத்துப் போய் அறிவித்தான் பட்லர்.

''ஹா! இன்ஸ்பெக்டர்... கடைசியில வந்துட்டீங்களா! இதுக்கு உங்களுக்கு ரொம்ப நன்றி. எப்படியிருக்கீங்க, கார்ட்ரைட்? இது உயிரை வாங்கப் போகிற பிஸினஸ், இல்லையா? நிச்சயமா, நிச்சயமா. ச்சே..''

தன் தலை மயிருக்குள் கையை விட்டு அதனை கோதி முள்ளம் பன்றிக் கூச்சங்கள் போல நிற்குமாறு ஆக்கிக்கொண்ட லார்ட் கேட்டர்ஹாம், கொதிப்பிலிருந்தார்.

வந்த வேலை முதலில் என்ற தினுசில், "பாடி எங்கேயிருக்கு?" என்று கேட்டார் டாக்டர்.

இப்படி ஒரு நேரடியான கேள்வியைக் கேட்டதால் விடுதலையை உணர்ந்தவரைப் போல அவரை திரும்பிப் பார்த்தார் லார்ட் கேட்டர்ஹாம். "மீட்டிங் போட எல்லோரும் சந்திக்கும் அறையில். ஜஸ்ட் அங்கேதான் அது இருக்கு. நான் யாரையும் அதை தொட விடலே, சரிதானே?"

"ரொம்ப சரி, மை லார்ட்" என்றார் இன்ஸ்பெக்டர் ஒப்புதலாய். ஒரு நோட்டுப் புத்தகத்தையும் பென்சிலையும் அவர் எடுத்துக் கொண்டார். "யார் உடலைக் கண்டுபிடிச்சது? நீங்க?"

"அடக் கடவுளே, நோ" என்று விட்டார் லார்ட் கேட்டர்ஹாம்! "காலங்கார்த்தாலே முழிச்சுக்கும் பழக்கமே எனக்குக் கிடையாதுனு உங்களுக்குத் தெரியாது போல. ஒரு வேலைக்காரி பார்த்திருக்கா. அப்படி ஓர் அலறலை அவ வெளியிட்டிருக்கணும்னு நினைக்கிறேன். அப்புறம் எல்லாரும் என்னைத் தேடிக்கிட்டு ஓடி வர... நான் எழுந்து இறங்கிப் போனேன். அங்கே அது இருக்கு."

"அது உங்க விருந்தினர்கள்ல ஒருத்தர்னு நீங்க உடனே அடையாளம் கண்டுபிடிச்சுட்டீங்களா?"

"தட்ஸ் ரைட், இன்ஸ்பெக்டர்."

"பேர்?"

இந்த மிக சுலபமான கேள்வி லார்ட் கேட்டர்ஹாமை மனக் கிலேசத்துக்குள்ளாக்குவதாய் தோன்றியது. ஓரிரு முறை அவர் வாயைத் திறந்தார். பிறகு மூடிக் கொண்டு விட்டார். கடைசியாய் அவர் சுரத்தற்றுக் கேட்டார்: "அதாவது - அதாவது- அவரோட பேர் என்னனா கேட்டீங்க?"

"யெஸ், மை லார்டு."

"வெல்.." என்ற கேட்டர்ஹாம் விடை தேடுபவரைப்போல, சுற்றி வர ஒரு முறை பார்த்துக் கொண்டார். "அவரோட பேர் - பேர் - ஆமாம், யெஸ் - கவுண்ட் ஸ்டான்லிலாஸ்."

லார்ட் கேட்டர்ஹாமின் நடவடிக்கையில் விளக்க முடியாத போக்கு தென்பட, தனது பென்சிலால் எழுதிக் கொண்டிருப்பதைக் கூட நிறுத்தி விட்டு அவரைப் பார்த்து முறைக்கலானார் இன்ஸ்பெக்டர். ஆனால், அந்த சமயத்தில், ஏற்பட்டிருந்த இறுக்கத்தைப் போக்கும் நல்வரவாக, ஒரு சிறுமாற்றம் நிகழ்ந்தது.

கதவு திறக்கப்பட ஒரு பெண் உள்ளே வந்தாள். அவள் உயரமாயும் ஒல்லியாயும் தூக்கலான மாநிறம் கொண்டு, கிட்டத்தட்ட ஆண் போன்ற முகச் சாயலில் துணிகரப் பெண்ணாய் தோன்றினாள். இது தான் லேடி எய்லீன் ப்ரெண்ட்... பொதுவாய் பண்டில் என்று அறியப்பட்டுள்ள கேட்டர்ஹாமின் மூத்த மகள். மற்றவர்களைப் பார்த்து ஒப்புதலாய் ஒருமுறை தலையசைத்த அவள் நேரடியாய் அவளது அப்பாவிடம் பேசத் துவங்கி விட்டாள். "நான் அவனைப் பிடிச்சிருக்கேன்."

கையும் களவுமாய் கொலையாளியையே அப்பெண் பிடித்துவிட்டாள் என்ற கருத்தில், இன்ஸ்பெக்டர் எழுந்து முன்னுக்குப் போகுமளவுக்கு ஆனார்... ஆனால் உடனேயே அவள் சொல்லிக் கொண்டிருந்த அர்த்தம் முழுக்கவும் மாறுபட்ட ஒன்று என்பதை அவர் உணரும்படி நேர்ந்தது.

லார்ட் கேட்டர்ஹாம் ஒரு நிம்மதிப் பெருமூச்சினை வெளியிட்டார். "நல்ல வேலை பண்ணே, என்ன சொன்னான் அவன்?"

"அவர் உடனடியா வரார். ஆனா இதுல நாம 'கூடுமான மட்டும் ரகசியம் காக்கணும்' சரியா?"

உடனடியாய் எரிச்சலானார் கேட்டர்ஹாம். "இப்படிப்பட்ட முட்டாள்தனமான பேச்சைத்தான் இந்த ஜார்ஜ் லொமெக்ஸ் பேசித் தொலையும். எப்படியோ தொலையட்டும். அவர் வந்து சேர்ந்ததும் இதை நான் கைகழுவி அவர் தலைல கட்டிடுவேன்."

இப்படி சொல்வதிலேயே அவருக்குள் சிறு குதூகலம் பூத்தது போலிருந்தது.

"அப்ப, கொலையாகியுள்ள இந்த நபரின் பேர், கவுண்ட் ஸ்டான்லிலாஸ், ஆங்?" என விசாரணை செய்தார் டாக்டர்.

மின்னலென ஒரு பார்வை பரிமாற்றம், அப்பாவுக்கும் மகளுக்கும் இடையே இடம் பெற்றது... பிறகு அப்பாக்காரர் மிடுக்காய் சொன்னார்: "ஸர்ட்டன்லி, அப்படித்தானே நான் சொன்னேன்."

''முன்னாடி சொன்னபோது சொன்ன விதத்துல நீங்க நிச்சயமா இல்லாததாலே கேட்டேன்'' என விளக்கினார் கார்ட்ரைட்.

சொன்ன டாக்டர் ஒருமுறை கண்ணடிக்க, அவரை வெறுப்பாய் முறைத்தார் லார்ட். பின் ''ம்... சந்திப்பு நடக்கும் பகுதிக்குப் போலாமே'' என்றார்.

அவரை எல்லோரும் தொடர, இன்ஸ்பெக்டர், அவருக்கே உரிய கண்கொத்திப் பாம்புப் பார்வையை நடக்கும் வழி நெடுகிலும் நாற்புறமும் வீசியபடி நடந்தார் - ஏதோ கதவுக்குப் பின்னாலோ அல்லது தொங்கும் படம் எதிலாவதோ, ஏதாவது ஒரு க்ளூ கிடைக்கலாம் என்பது போல.

தனது சட்டைப் பையிலிருந்து ஒரு சாவியை எடுத்து கேட்டர்ஹாம் கதவைத் திறந்து விட அது மெல்லமாய் உள்வாங்கி வழி விட்டது. விசாலமான, உயரம் அதிகம் கொண்ட ஒரு பெரிய அறைக்குள் அவர்கள் நுழைந்திருந்தனர். அதில், கம்பிகளற்ற வெறும் கதவுகள் மட்டுமே கொண்டிருந்த மூன்று பிரெஞ்சு ஜன்னல்கள் அந்தப் பக்கத்திலிருந்த மாடி டெரஸுக்கு வழி பண்ணித் தந்தன. அங்கு நன்கு பிரதிபலிக்கும் பெரிய டேபிளும், ஓக் மரத்தால் பண்ணப்பட்ட பல வள்மான அலமாரிகளும் டிராயர்களும், சில அழகுமிகு பழமை பொதிந்த நாற்காலிகளும் இருந்தன. மறைந்து போய் விட்ட கேட்டர்ஹாம் பரம்பரையின் முன்னோர்களின் ஓவியங்கள் சுவரில் நிறைய இடம் பெற்றிருந்தன.

இடப்புற சுவரருகே, கதவுக்கும் ஜன்னலுக்கும் இடைப்பட்ட பகுதியில், கைகளிரண்டும் விரிந்து தொங்கிய நிலையில் ஒரு மனிதன் மல்லாக்க வீழ்ந்துக் கிடந்தான்.

டாக்டர் கார்ட்ரைட் நடந்து போய் உடலுக்கு அருகில் முட்டியிட்டு அமர்ந்தார். இதேநேரத்தில் ஜன்னல்கள் வரை போயிருந்த இன்ஸ்பெக்டர் அப்பகுதியினைப் பரிசோதனை இட்டார்.நடு ஜன்னல் மூடப்பட்டிருந்தது. ஆனால் தாழிடப்படவில்லை. வெளியிலிருந்த படிக்கட்டுகளில் ஜன்னல் வரை நீண்டு வந்த காலடித்தடங்கள் இருந்தன... இன்னொரு ஸெட் காலடித் தடங்கள் ஜன்னலிலிருந்து விலகி வெளியே போயின.

''துல்லியமா தெரியுது'' என்று ஆமோதிப்பதாய் தலையசைத்தபடி சொன்னார் இன்ஸ்பெக்டர்.''ஆனா உள்ளேயும் அல்லவா காலடித் தடங்கள் இருந்திருக்கணும்? ஆனா இங்கே தரை படு சுத்தமால்லே இருக்கு?''

''இதை என்னால விளக்க முடியும்னு நினைக்கிறேன்'' என இடைபுகுந்தாள் பண்டில்: ''உடலைப் பார்ப்பதற்கு முன்னாடியே வேலைக்காரி அறையின் பாதி பகுதியை மெழுகி முடிச்சிருக்கா. அவ உள்ளே வந்தப்போ இருட்டாயிருந்திருக்கு. ஆங்! நேரா ஜன்னலுக்குப் போனவ, திரைச் சீலையை விலக்கிட்டு, தரையில வேலையை ஆரம்பிச்சிருக்கா. அதனால, அறையின் அந்தப்பகுதியின் டேபிளால் மறைக்கப்பட்டிருக்கும் உடலை அவ பார்க்கலே. அதோட முகத்துக்கு முகம் நெருங்கிப் போற வரைக்குமே அவ கவனிக்கலே.''

இன்ஸ்பெக்டர் ஏற்றுக் கொண்டு தலையசைத்தார்.

எப்படியாவது தப்பித்து விலகினால் போதும் என்ற துடிதுடிப்பில், ''வெல்..'' என்ற கேட்டர்ஹாம், ''உங்களை இங்கேயே விட்டு வெக்கறேன், இன்ஸ்பெக்டர்'' என்றார். ''உங்களுக்கு வேணும்னா - என்னைக் கூப்பிடலாம். ஆனா இன்னும் கொஞ்ச நேரத்துல மிஸ்டர் ஜார்ஜ் லொமெக்ஸ் *அப்பே* பகுதியிலிருந்து வந்துடுவார். அவர், என்னால சொல்ல முடிந்ததை விட ரொம்ப சிறப்பாவே உங்களுக்குச் சொல்வார். இது அவரோட பிஸினஸ். என்னால விளக்கமெல்லாம் தர முடியாது. ஆனால் அவரால முடியும்.''

இதற்கு மறு பதிலெல்லாம் எதிர்பாராமல் வழுக்கலாய் போய் விட்டார் லார்ட்.

''பாழாப் போற லொமெக்ஸ்'' என்று குற்றஞ் சுமத்தினார். ''இதுல போய் என்னை சிக்க வெச்சு! என்னடா ட்ரெட்வெல்?''

நரைத்திருந்த பட்லர் மரியாதையாய் பேசினான்: ''உங்களுக்கு மட்டும் காலை சிற்றுண்டி நேரத்தை சற்று முன்னாடியே மாற்றியமைக்கும் சுதந்திரத்தை நான் கொஞ்சம் எடுத்துக்கிட்டேன். மை லார்ட், எல்லாம் டைனிங் டேபிள்ல சுடச்சுட இருக்கு, மை லார்ட்.

''இப்போதைக்கு என்னால எதையும் சாப்பிட முடியும்னு தோணலே'' என்று இருளடைந்து சொன்னார் கேட்டர்ஹாம், டைனிங் ஹால் நோக்கி நடந்தபடி.

தற்சமயம் பண்டில் அவளுடைய கையை அப்பாவின் கைகளுக்குள் வளையமிட்டுக் கொள்ள இருவருமாய் ஒன்றாய் உள்ளே நுழைந்தனர்.

அங்கு வெள்ளித் தட்டுக்கள் போட்டு மூடப்பட்ட பாத்திரங்களில் பதார்த்தங்கள் இருந்தன. ஒவ்வொன்றாய் திறந்து பார்த்தபடி ''ஆம்லெட்''

என்றார் கேட்டர்ஹாம். "முட்டைகள், வறுத்த மாமிசம், பொறித்த பறவை, குளிர் வாத்து! ம்ம், இதுல எதுவும் எனக்கு வேணாம். ட்ரெட்வெல்.. குக் கிட்டே சொல்லி எனக்காக ஒரு முட்டையை வதக்கச் சொல்லு."

"ரொம்ப நல்லது, மை லார்ட்."

ட்ரெட்வெல் விலகிப் போய்விட லார்ட் கேட்டர்ஹாம் அவர் சொன்ன வகைகளிலிருந்தே கொஞ்சம் கொஞ்சம் எடுத்து தட்டில் போட்டுக் கொண்டு காபியும் ஒரு கோப்பை எடுத்துக் கொண்டு நீளமான டைனிங் டேபிளருகே உட்கார்ந்தார். பண்டில் அங்கு ஏற்கெனவே முட்டை மற்றும் இறைச்சிகளோடு விளையாடிக் கொண்டிருந்தாள்.

வாய் நிறைய அடக்கிக் கொண்டு, "பசி உசுரு போகுது" என்றாள் அவள். "ஆஹா.. நடப்பதெல்லாம் செம த்ரில்."

"உனக்கு அப்படித்தான் கண்ணு இருக்கும்" என்று குற்றஞ் சுமத்தினார் அப்பா. "இளங்கன்று பயமறியாது. எப்பவும் தேவை த்ரில். ஆனா என்னோட உடல் நிலை அப்படி கிடையாதே. எல்லா கலைகளையும் விட்டுடுங்க. இதைத்தான் டாக்டர் வில்லீஸ் சொன்னார் - கவலைகளை விட்டுடு. அவரோட கன்ஸல்ட்டிங் அறையில ஜம்னு உக்காந்துக்கிட்டு கவலைப்படாதேனு உபதேசம் பண்ணுவது படு சுலபம்தான். இப்படி ஒரு இடியைக் கொண்டு வந்து அந்தக் கழுதை லொமெக்ஸ் என் தலையில எறக்கி விட்டிருக்கும் போது நான் எப்படி பயப்படாம இருப்பது? அப்பவே நான் கறாராயிருந்திருக்கணும். யாரையும் உள்ளே விட முடியாதுனு நான் வெட்டு ஒண்ணு துண்டு ரெண்டா சொல்லி யிருக்கணும்."

மறுப்பாய் தனக்குத்தானே தலைய்சைத்துக் கொண்டு எழுந்த லார்ட் கேட்டர்ஹாம், வறுத்த இறைச்சியைக் கொஞ்சம் வழித்தெடுத்துப் போட்டுக் கொண்டு வந்தார்.

"கோழிக் கண்ணன் (ஜார்ஜ்!) முடிவாயிருக்கார்" என்றாள் பண்டில். "இன்னும் சில நிமிடங்கள்ல இங்கே வந்துடப் போறார். ஆயிரம் பண்ணப் போறார் - விஷயம் வெளியே கசிஞ்சுடாமயிருக்க."

இதற்கு உறுமினார் லார்ட் - "அவர் எழுந்துட்டாரா?"

"காலை ஏழு மணியிலிருந்து லெட்டர்ஸ் டிக்டேட் பண்ணிக்கிட்டிருப்பதா சொன்னார்."

''இதுக்குப் போய் பெரிய சந்தோஷமா, அவருக்கு?'' என்றார் கேட்டர்ஹாம். ''அசாதாரண சுயநலப் பதர்கள், இந்த பொது வாழ்க்கையில் உள்ள கழுதைகள். குப்பைக் குப்பையா என்னத்தையோ டிக்டேட் பண்ண பாவம் அவங்களோட செக்ரட்டரிகளை இந்தக் குளிர் காலையிலேயே எழுப்பி விட்டுட வேண்டியது. காலை பதினோரு மணிக்கு முன்னாடி செக்ரட்டரிகளைத் தொந்தரவு பண்ணக் கூடாதுனு ஒரு சட்டத்தைக் கொண்டு வந்தா அது தேசத்துக்கு எத்தனை பெரிய புண்ணியமா போகும்! லொமெக் என்கிட்டே பேசும் ஒவ்வொரு முறையும் 'சமுதாயத்துல எனக்கிருக்கிற பேர்' பற்றி சொல்வார். ஏதோ அப்படி ஒண்ணு எனக்கு இருக்கிறாப்போல! எனக்கா பிரபலமா இருப்பதுல ஆசை?''

''விடுங்களேன்ப்பா, என்ன புலம்பல்!''

ட்ரெட்வெல், தட்டில் இரண்டு பொறித்த முட்டைகளைச் சுமந்துக் கொண்டு ஓசையெழுப்பாமல் வந்தான். அவற்றை லார்டுக்கு முன்னால் டேபிளில் வைத்தான்.

அவற்றின் மீது ருசியற்றுப் பார்த்தபடி, ''என்னது இதெல்லாம் ட்ரெட்வெல்'' என்றார் கேட்டர்ஹாம்.

''வறுத்த முட்டைகள், மை லார்ட்.''

''வறுத்த முட்டைகளை நான் வெறுக்கிறேன்'' என்றார் அவர் வீரியமாய். ''அதுங்களைப் பார்க்கக் கூட எனக்குப் பிடிக்கலே, எடுத்துட்டுப் போறியா?''

''நல்லது, மை லார்ட்.''

ட்ரெட்வெல்லும் முட்டைகளும் ஓசையின்றி வந்தது போலவே போயின.

''நல்லவேளை, இந்த வீட்டுல யாரும் விடியற்காலையிலே எழுந்திருப்பது கிடையாது'' என்றார் அவர் சற்று நிம்மதியாய். ''அதுங்கள்லாம் எழுந்திருக்கும்போது விஷயத்தை நாம அவங்ககிட்டே உடைச்சாகணும், இல்லையா?''

இதற்கு அவர் நீண்ட பெருமூச்சு விட்டார்.

''யார் அவரைக் கொன்னிருப்பாங்கன்னு எனக்கு வியப்பா இருக்கு'' என்றாள் பண்டில். ''மேலும் - ஏன்?''

''அது நம்ம வேலை கிடையாதுடீ'' என்று கறாராய் அதட்டினார் கேட்டர்ஹாம். ''அதைக் கண்டுபிடிக்க வேண்டியது போலீஸுங்க வேலை. பேட்க் - ஓர்த்தி இதைக் கண்டுபிடிச்சுடுவார்ன்னு எனக்கு நம்பிக்கை இல்லே, நோஸிஸ்ட்டைன் வரணும்.''

''அது யார்?''

''பிரிட்டிஷ் காவல் படை.''

''பட்டாளத்தைக் கூப்பிடாம விட்டீங்களே!''

அப்போது ஒரு மோட்டார் வாகனம், மிக வேகமாய் உள்ளே வந்து நிற்பது ஜன்னல் வழியாய் கேட்டது. ''கோழிக் கண்ணன்'' என்றலறினாள் பண்டில்.

அப்பாவும் மகளுமாய் ஜன்னல்வழி இறங்கி வாசல்வரை போய் கார் வந்து அடங்கும்போதே அதில் வந்திறங்கியவரை எதிர் கொண்டனர்.

வாயில் அடக்கியிருந்த சிற்றுண்டி சில்லினை விழுங்கியபடி, ''இங்கேயே தாம்ப்பா, இங்கேயேதான்'' என அவசர அலறலை விடுத்தார் லார்ட் கேட்டர்ஹாம்.

ஜார்ஜுக்கு ஜன்னல் வழி நுழைய எவ்வித திட்டமும் இல்லை. வாசற் கதவு வழியாய் மறைந்தவர், ட்ரெட்வெல் கொண்டு வந்து விட அறைக்குள் பிரவேசித்தார். பட்லர் பின்னாலேயே நகர்ந்து வெளியேறினான்.

ஜார்ஜுக்குக் கைகுலுக்கல் தந்தபடி ''கொஞ்சம் ப்ரேக் ஃபாஸ்ட் எடுத்துக்குங்க' என்றார் கேட்டர்ஹாம். ''முட்டை?''

பொறுமையற்று இவ்வேண்டுகோளை மறுத்து விட்டார் ஜார்ஜ். ''இது ஒரு கொடூரமான நிகழ்வு. கொடூரம், கொடூரம்.''

'ஆமாம் - அதுக்கு என்ன பண்ணுவது? இறைச்சி?''

''வேணாம், வேணாம். இதை மூடிட வேணும். எப்படிப்பட்டாவது இதை மூடி மறைச்சுடணும்.''

பண்டில் ஏற்கெனவே நினைத்து வைத்திருந்ததைப் போலவே ஜார்ஜ் புலம்ப ஆரம்பித்து விட்டார்.

''உங்க உணர்வுகள் எனக்கு விளங்குது'' என்றார் லார்ட் கேட்டர்ஹாம் கருணையாய். ''முட்டை இல்லேனா ஆம்லெட் சாப்பிடுங்க முதல்ல. இல்லே, வறுத்த இறைச்சி?''

''நீங்க வேற - வேணாங்கறேன் இல்லே. எதிர்பாரா இக்கட்டு - தேசிய களங்கம் - நாட்டுக்குள் பூகம்பம் வெடிக்கும் - ஓஹ்.''

''ஆசுவாசமாகுங்க'' என்றார் கேட்டர்ஹாம். ''கொஞ்சம் ஏதாவது எடுத்துக்குங்க ப்ளீஸ். உங்களை நீங்க சமப்படுத்திக்க இப்ப உங்களுக்குத் தேவை கொஞ்சம் உணவு. சூடா பொறிச்ச முட்டை இருக்கு. ரெண்டு நிமிஷத்துக்கு முன்னாடி நான் பண்ணினது.''

''எனக்கு எந்த மண்ணும் வேணாம்'' என்று விட்டார் ஜார்ஜ். ''நான் ப்ரேக் ஃபாஸ்ட் முடிச்சுட்டேன். அப்படி முடிக்கலைனாலும் ஒண்ணும் வேண்டாம். சாப்பிட முடியாது. அடுத்து என்ன பண்ணுவதுனு நாம சிந்திக்கணும் - இதுதான் முக்கியம். யார்கிட்டேயும் இதுவரைக்கும் நீங்க சொல்லலே, இல்லே?''

''வெல், நான் மற்றும் பண்டில். லோக்கல் போலீஸ் வந்திருக்கு. கார்ட்டிரைட்டும் கூட. மேலும் எல்லா வேலைக்காரனுங்க.''

ஜார்ஜ் உறுமினார்.

''முதல்ல உங்களை நீங்களே ஒரு கட்டுக்குள் கொண்டு வாங்க ஜார்ஜ்'' என்றார் கேட்டர்ஹாம். (கூடவே, 'பொறித்த முட்டை வேணுமா?') ''ஒரு சடலத்தை மூடி மறைப்பதென்பது முடியவே முடியாத விஷயம் அப்படினு இன்னும் நீங்க முழுசா உணரலே. அதை புதைச்சாகணும். இத்யாதி இத்யாதி. துரதிர்ஷ்டவசமான சங்கதிதான், ஆனா நடந்திருக்கு.''

திடுமென ஜார்ஜ் சாந்தமானார். ''நீங்க சொல்றது சரிதான் கேட்டர்ஹாம். லோக்கல் போலீஸைக் கூப்பிட்டிருப்பதா சொன்னீங்க, இல்லே? இது பத்தாது, இதுக்கு பேட்டில் வேணும்.''

''பேட்டில்? பட்டாளமா? இந்த திடீர் மரணத்துக்குப் போயா?''- ஆச்சரியப்பட்டுக் கேட்டார் லார்ட் கேட்டர்ஹாம்.

''நோ, நோ, நீங்க தப்பா அர்த்தப்படுத்திக்கிட்டீங்க. நான் சொன்னது, ஸ்காட்லாண்டு யார்ட் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில். எதை எப்படி ரகசியமா வைப்பது அப்படினு நல்லா தெரிஞ்ச ஆள். கட்சி சம்பந்தப்பட்ட நிதி நிலைகள்ல அவர் எங்க கூட வேலை பண்ணியிருக்கார்.''

''அதென்ன நிதி நிலைமை?'' என கேட்டார் கேட்டர்ஹாம், சிறு ஈடுபாட்டோடு.

ஆனால் பாதி ஜன்னலுக்கு வெளியேயும் பாதி ஜன்னலுக்கு உள்ளேயுமாய் உட்கார்ந்திருந்த பண்டிலின் மீது இப்போது ஜார்ஜின் பார்வை பதிந்திருந்தது. இந்த காட்சி, ரெண்டு மனசு கூடாது என்றும், ஒரே முடிவாய் பொத்தி ரகசியம் பாதுகாக்கத்தான் வேண்டும் என்றும் அவருக்கு உணர்த்தியது. எழுந்துக் கொண்டார்.

''நாம காலந்தாழ்த்திடக் கூடாது. நான் உடனடியா சில சேதிகளை அனுப்பியாகணும்.''

''நீங்க அனுப்ப வேண்டிய சேதி என்னதுனு எழுதிக் கொடுத்துட்டா, பண்டில் அதை ஒழுங்கா டெலிபோன் மூலமா அனுப்பிடுவா.''

இங்க் பேனாவைத் திறந்துக் கொண்டு வர்ணிக்க முடியாத வேகத்தோடு மளமளவென்று எழுதினார் ஜார்ஜ். முதல் தாளை அவர் பண்டிலிடம் தர அதை அவள் மிகுந்த ஈடுபாடு பொதித்துப் படித்தாள்.

''குட்! என்ன மாதிரியான ஒரு பேர்'' என்றாள் அவள். ''பேரான் - அப்புறம் என்னது அது?''

''பேரான் லாலோப்ரெட்ஜெல்.''

''அதுசரி, எனக்கு விளங்குது. இதை டெலிபோன்ல சொல்லி அந்தப் பக்கத்து தந்தி ஆபீஸருக்குப் புரிய வெக்கணுமே!''

ஜார்ஜ் இரண்டாவது நாளில் எழுதத் தொடங்கியிருந்தார். பிறகு தந்திகள் சம்பந்தமாய் பண்ண வேண்டிய வேலைகளை அவர் பண்டிலிடம் ஒதுக்கிவிட்டு வீட்டு எஜமானன் பக்கமாய் திரும்பினார். ''நீங்க இப்போதைக்குப் பண்ணக் கூடிய சிறப்பான வேலை என்னனா, மிஸ்டர் கேட்டர்ஹாம்..''

''சொல்லுங்க'' என்றார் லார்ட, அதற்கு தயார் என்பது போல்.

''...எல்லா விஷயத்தையும் அப்படியே என் கையில மாற்றி விடுவது.''

''பின்னே!'' என்றார், இதை தவிர வேறு வழி கிடையாது என்பதுபோல்! ''மீட்டிங் நடக்கும் அறையில இன்ஸ்பெக்டரையும் கார்ட்ரைட்டையும் நீங்க பார்க்கலாம். அந்த பாடி கூட, ஓகே? மை டியர்

ஜார்ஜ்... நான் இந்த சிம்னீஸ் மாளிகையை எவ்வித கட்டுப்பாடுமற்று உங்க கையில வெக்கிறேன். என்ன விருப்பமோ அதை பண்ணிக்குங்க.''

''தேங்க் யூ'' என்றார் ஜார்ஜ் லொமெக்ஸ் ''உங்களை ஏதாவது கலந்தலோசிக்கணும்னு நான் விரும்பினா...''

ஆனால் இதைக் கேட்பதற்கு அருகிலில்லாமல் தள்ளியிருந்த கதவின் வழியே பூனை போல வெளியேறிப் போய்க் கொண்டிருந்தார் லார்ட் கேட்டர்ஹாம். கமுக்கமான ஒரு புன்னகையோடு இந்த வெளியேறலைப் பார்த்துக் கொண்டிருந்தாள் பண்டில்.

''அந்த தந்தி சேதிகளை நான் உடனடியா அனுப்பிடறேன்'' என்றாள் அவள். ''மீட்டிங் நடக்கும் அறைக்கான வழி உங்களுக்குத் தெரியும் தானே?''

''இதெல்லாம் தெரியும் எய்லீன்.''

ஜார்ஜ், இந்த அறையிலிருந்து விரைந்துக் கொண்டிருந்தார்.

அத்தியாயம் 11

# சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் வந்து சேர்ந்தார்

ஜார்ஜ் வந்து செய்த ஆலோசகனைகளினால் மதில் மேல் பூனையாய் கலங்கிப் போயிருந்த லார்ட் கேட்டர்ஹாம் அவரது எஸ்டேட் முழுவதையும் ஒரு முறை வலம் வருவதிலேயே முழு காலைப் பொழுதையும் கழித்தார். வயிற்றில் பசி ஏற்படுத்திய மணியோசைதான் அவரை வீட்டுப் பக்கம் இழுத்து வந்தது. நடந்துள்ள சம்பவத்தின் அபாய பக்கங்கள் ஒரு சுற்றுப் போய் வந்ததற்குள் முடிந்துப் போயிருக்கும் என்றும் அவர் நினைத்தார்.

பக்கவாட்டிலிருந்த ஒரு சிறு கதவின் வழியாக ஓசைப்படாது வீட்டுக்குள் நழுவி நுழைந்தார் அவர். அங்கிருந்து அப்படியே தனது தனியறைக்குள் வழிந்தோடினார். தான் இவ்விதமாய் நுழைந்து முடித்திருப்பதை ஒருவரும் பார்க்கவில்லை என்று தனக்குத்தானே மார்தட்டிக் கொண்டார் கேட்டர்ஹாம்... ஆனால் அது தவறு. கண்காணிப்புத் திலகமான ட்ரெட்வெல் அவனது பார்வையிலிருந்து எதையும் தப்ப விடுவதில்லை. அவனாக கதவு வரை வந்து நின்றான். ''எக்ஸ்யூஸ் மீ, மை லார்ட்'' என்றான்.

''என்ன ட்ரெட்வெல்?''

''நீங்க திரும்பி வந்தவுடனேயே உங்களைப் பார்க்கணும்னு பரபரப்பா லைப்ரரியிலே காத்திருக்கார் மிஸ்டர் லொமொக்ஸ், மை லார்ட்.''

இப்படி நுண்மையாய் விஷயத்தை முன் வைத்ததன் மூலம், கேட்டர்ஹாம் விரும்பினால், அவர் இன்னமும் வீட்டுக்குள் வரவில்லை

என்றொரு நிலைப்பாட்டை ஸ்தாபிக்கலாம் என்று உணர்த்தினான் அவன்.

கேட்டர்ஹாம் பெருமூச்சு விட்டுவிட்டு எழுந்தார். ''இப்பவோ அப்புறமோ சந்திச்சுதானே தீரணும்... லைப்ரரினா சொன்னே?''

''யெஸ், மை லார்ட்.''

மீண்டும் பெருமூச்சு விட்டுவிட்டு, அவருடைய மூதாதையர்களின் பெரிய பெரிய அறைகளையெல்லாம் கடந்துக் கொண்டு படிக்கு மறையின் கதவினை அடைந்தார். அக்கதவு தாளிடப்பட்டிருந்தது. தாழ்ப்பாளை அவர் பிடித்து ஆட்டியதும் உள்பக்கத்திலிருந்து அது திறக்கப்பட்டது. சின்னதாய் ஒருக்களிக்கப்பட்ட அந்த இடுக்கில் சந்தேகமாய் நீண்ட ஜார்ஜ் லொமெக்ஸின் தலை தென்பட்டது. யார் வந்திருப்பது என்பது தெரிந்ததும் அவருடைய முகம் மாறியது.

''ஆ, கேட்டர்ஹாம். உள்ளே வாங்க... உங்களுக்கு என்ன ஆகிடுச்சோனு நாங்க இங்கே திக்குமுக்காடிக்கிட்டிருக்கோம்.''

எஸ்டேட்டில் ஏதோ ஜோலி பண்ண வேண்டியது இருந்ததென்றும், வாடகைக்காரர்கள் சொன்ன ரிப்பேர் வேலைகளுக்கு ஏற்பாடு பண்ண வேண்டியிருந்ததென்றும், என்னத்தையோ முணுமுணுத்துக் கொண்டு நழுவலாய் உள்ளே புகுந்தார் லார்ட். அங்கு அறையினுள்ளே இன்னும் இரண்டு ஆடவர்கள் இருந்தார்கள். ஒருவர் கலோனல் மெல்ரோஸ் - முதன்மை கான்ஸ்டபிள். அடுத்தவர் சதுர வடிவில் வளர்ந்திருந்த நடுத்தர ஆண்.. துளியும் முகத்தில் உணர்ச்சிகள் பிரதிபலிக்காத தனித்துவம் இருந்தது அவரிடம்.

''சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் அரைமணி நேரத்துக்கு முன்னாடி வந்தார்'' என விளக்கினார் ஜார்ஜ். ''இன்ஸ்பெக்டர் பேட்க் - ஓர்த்தி கூட, உள்ளே போய் பார்த்துட்டு வந்தார். டாக்டர் கார்ட்ரைட்டை யும் பார்த்துட்டார். அவருக்கு இப்ப உங்ககிட்டேயிருந்து சில உண்மைகள் தெரியணும்.''

மெல்ரோஸுக்கு வரவேற்பையும் சூப்பரின்டெண்டெண்டுக்கு அறிமுகத்தையும் லார்ட் தந்து முடித்ததும் மூவரும் உட்கார்ந்துக் கொண்டனர்.

''நான் உங்களுக்குத் தனியா சொல்லணுங்கிற தேவையில்லே, பேட்டில்'' என்ற ஜார்ஜ், ''இந்த வழக்குல முடிஞ்ச வரைக்கும் நாம ரகசியம் காக்கணும்'' என்றார்.

''அதைப் பற்றிய கவலை வேண்டாம், லொமெக்ஸ். ஆனா நமக்குள்ளே எந்த ஒளிவு மறைவும் கூடாது. இறந்துள்ள மனிதனின் பெயர் கவுண்ட் ஸ்டான்லிலாஸ்னு அறிய நேர்ந்தது. இப்படித்தான் எல்லாரும் சொல்றாங்க, இங்கே. வெல், இதுதான் அவரோட நிஜப் பேரா?''

''அது கிடையாது''

''ஓ! அவரோட நிஜப் பேர் என்ன?''

''ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின் இளவரசர் மைக்கேல்.''

பேட்டிலின் கண்கள் ஒரு கனவாய் திறந்தது போல அகண்டன... மற்றபடி அவர் வேறெந்த அறிகுறியும் காட்டவில்லை.

''அவரோட இந்த விஸிட்டுக்கான காரணம் என்ன? ஜஸ்ட், ஜாலி ட்ரிப்தானா?''

''அதைவிட முக்கிய காரணமிருக்கு, பேட்டில். அதெல்லாம் ரொம்ப முக்கியமான ரகசியங்கள், ஓகே?''

''யெஸ், யெஸ், மிஸ்டர் லொமெக்ஸ்.''

''நீங்க காலோனல் மெல்ரோஸ்?''

''நிச்சயமா.''

''அப்படினா சரி. மைக்கேல் இங்கே வந்ததற்கான எக்ஸ்பிரஸ் காரணம்: மிஸ்டர் ஹெர்மன் ஐஸக்ஸ்டீனைச் சந்திப்பதற்காக. சில விதிமுறைகளுக்குட்பட்டு ஒரு கடன் தொகைக்கு ஏற்பாடு பண்ணுவதற்காக.''

''என்ன விதிமுறைகள்?''

''என்னென்னு எனக்கு ஸ்திரமான விவரணைகள் தெரியாது. சொல்லப் போனா அவை இன்னமும் முழுசா ஏற்பாடாகலை. ஆனா ஒருவேளை அரியாசனம் ஏறும் நிலைமை உருவானா, மிஸ்டர் ஹெர்மன் ஐஸக்ஸ்டீன் எந்தக் கம்பெனியில் ஈடுபாடு காட்டினாரோ அந்த ஆயில் கம்பெனியின் எண்ணெய் வளத்தில் போதுமான அளவு சலுகைகள் தரத் தயார்னு மைக்கேலே முன்வந்தார். இதுக்கு பிரிட்டிஷ் கவர்ன்மெண்ட் மைக்கேலுக்கு முழு ஆதரவு தருவதா அறிவிச்சது.''

''எனக்கு இதுக்குள்ளே மேலும் தகவல்களை தேடி அலைய வேண்டிய தேவை கிடையாது'' என்ற சூப்பரின்டெண்டெண்ட், ''பிரின்ஸ் மைக்கேலுக்கு பணம் தேவைப்பட்டது. மிஸ்டர் ஹெர்மன் ஐஸக்ஸ்டீனுக்கு எண்ணெய் வளம் தேவைப்பட்டது. ரெண்டு பேரும் வரும் தீர்மானத்துக்கு தோள் தர ஆங்கிலேய அரசு தயாராயிருந்தது...'' என்று விட்டு ''ஆனா ஜஸ்ட் ஒரேயொரு கேள்வி'' என்றார். ''இந்த சலுகைகளுக்காக வேற யாராவது போட்டி போட்டுக்கிட்டிருக்காங்களா?''

''ஓர் அமெரிக்க ஃபைனான்ஸ் குழு இளவரசருக்குப் பின்னாடி யிருந்ததா நம்பறேன்.''

''அப்புறம் மாறிட்டாங்க, ஆங்?''

ஆனால் ஜார்ஜ் இதை உள்வாங்கிக் கொள்ள மறுப்பவராய் தெரிந்தார். ''ப்ரின்ஸ் மைக்கேலின் அணுகுமுறை பிரிட்டிஷுக்கு சாகதகமாத்தான் இருந்திருக்கு'' என்று குறிப்பிட்டார்.

இந்தப் பிரச்சினையை மேற்கொண்டு அழுத்தவில்லை பேட்டில். ''லார்ட் கேட்டர்ஹாம்... நேற்று நடந்ததா நான் சேகரிச்சிருக்கும் விஷயங்களைச் சொல்றேன், கேளுங்க'' என்றார். 'நீங்க பிரின்ஸ் மைக்கேலை டவுன்ல சந்திச்சுட்டு அவரோட சேர்ந்து நேரா இங்கே பிரயாணமாகியிருக்கீங்க. ப்ரின்ஸ் அவர் கூட அவரோட உதவியாளனை யும் கூடிட்டு வந்திருக்கார் - பேர், போரீஸ் ஆங்கோ - கௌஃப். ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியன். ஆனா இவனோட தரத்திலிருக்கும் மற்றொருவனான கேப்டன் ஆன்ட்ரஸ்லி டவுன்லியே தங்கிடறார். ப்ரின்ஸ் இங்கே வந்து இறங்கியதுமே மிக மிக அயர்ச்சியா வருவதா சொல்லிவிட்டு அவருக்குன்னு ஒதுக்கப்பட்ட தங்கும் பகுதிக்கு விலகிப் போயிடறார். அவருக்கு டின்னர் அவரோட அறையிலேதான் பரிமாறப் பட்டிருக்கு... வீட்டுல வந்திருக்கும் மற்ற எவரையுமே அவர் பார்க்கலே. இதெல்லாம் சரியா?''

''வெகு சரி.''

''இன்னிக்குக் காலையில ஒரு வேலைக்காரர் காலை 7.45 வாக்குல உடலைக் கண்டெடுத்திருக்கார். டாக்டர் கார்ட்ரைட் மரணிச்சுக் கிடந்தவனைப் பரீட்சித்துப் பார்த்துட்டு ஒரு துப்பாக்கியிலிருந்து சுடப்பட்ட புல்லட்தான் மரணத்துக்குக் காரணம்னு அறிவிக்கிறார்.

எந்தவொரு துப்பாக்கியும் கண்டெடுக்கப்படலே... மேலும் வீட்டிலிருக்கும் எவரும் எந்தக் குண்டோசையையும் கேட்கலே. இன்னொரு பக்கத்துல பார்த்தா, கீழே விழுந்த அதிர்ச்சியில அந்த மனுஷனுடைய கைக்கடிகாரம் தரையில பலமா மோதியிருக்கு. நின்னுப் போயிருக்கு. இந்த கொலை, சரியா பதினொன்றே முக்காலுக்கு நடந்திருப்பதா சுட்டிக்காட்டுது. இப்ப- நீங்க நேத்து எத்தனை மணிக்குப் படுக்கப் போனீங்க?''

''நாங்கல்லாம் சீக்கிரமாகவே படுக்கப் போயிட்டோம். எதனாலேயோ அந்தப் பார்ட்டி சரியா போகலே, சூப்பரின்டெண்டெண்ட். நாங்க பத்தரைக்குப் படுக்கப் போயிட்டோம்னு சொல்லாம்.''

''நல்லது. இப்ப இங்கே தங்கியிருக்கும் மக்களைப் பற்றிய ஒரு விளக்கத்தைத் தருமாறு கேட்டுக்கிறேன், லார்ட் கேட்டர்ஹாம்.''

''மன்னிக்கணும்... ஆனா இதை செஞ்சவன் வெளியிலிருந்து வந்த ஒருத்தனா இருக்கணும்னுதான் நான் நினைக்கிறேன்.''

சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் சிரித்தார். ''அப்படித்தான் நடந்திருக்கணும்னு நானும் அடிச்சு சொல்றேன். அப்படியேயிருந்தாலும் இங்கே இருப்பவர்கள் பற்றிய தகவலைத் தெரிந்துக் கொள்வது என்னோட கடமை. விசாரணையில் பண்ண வேண்டிய ஒரு சடங்கு, ஆங்!''

''வெல்... ப்ரின்ஸ் மைக்கேல் இருந்தார். மற்றும் அவருடைய பிரத்யே உதவியாளன், மிஸ்டர் ஹெர்மன் ஐஸக்ஸ்டீன். இவங்களைப் பற்றியெல்லாம் உங்களுக்கே தெரியும். அப்புறம், மிஸ்டர் எவர்ஸ்லே...''

''என் துறையில வேலை பண்றவன்'' என சட்டென போட்டார் ஜார்ஜ்.

''மேலும், ப்ரின்ஸ் மைக்கேல் இங்கு வந்திருப்பதற்கான நிஜக் காரணத்தையும் அறிந்தவர்'' என்று கேட்டார் பேட்டில்.

''நோ, அப்படி நான் சொல்ல முடியாது'' என்று கனமாய் குறிப்பிட்டார் ஜார்ஜ். ''இந்த சந்திப்புக்குப் பின்னாடி என்னவோ இருக்குனு அவன் மோப்பம் பிடிச்சுட்டான். இதுல சந்தேகமில்லை. ஆனா அதுக்காக அவனை நான் இதனோட ரகசியங்களைச் சொல்ல உகந்த அந்தரங்க செகரட்டரியா எடுத்துக்க விரும்பலே.''

''ஓ, அப்படியா. நீங்க தொடரலாமே, கேட்டர்ஹாம்.''

''அப்புறம் யார்? ஆங்... மிஸ்டர் ஹிராம் ஃபிஷ்.''

''யாரது மிஸ்டர் ஹிராம் ஃபிஷ்?''

''மிஸ்டர் ஃபிஷ் ஓர் அமெரிக்கர். மிஸ்டர் லூயியஸ் காட் கிட்டேயிருந்து அறிமுக மற்றும் சிபாரிசு கடிதம் கொண்டு வந்தார். நீங்க மிஸ்டர் லூயியஸ் காட் பற்றி கேள்விப்பட்டிருக்கீங்களா?''

சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் ஒரு சிறு சிரிப்பின் மூலம் அங்கீகரித்தார். ''அந்தக் கோடானு கோடீஸ்வரனைப் பற்றி யாருக்குத்தான் தெரியாது?''

''என்னோட முதல் பதிப்புகளைப் பார்ப்பதுல தனி ஆர்வத்தோட இருந்தார் அவர். மிஸ்டர் ஃபிஷ் ஒரு குதூகலமானவர். இந்த சந்திப்பில் எவ்வித செயற்கைத் தனமும் தெரியாமலிருக்க கூடுதலா ஓரிருவரை அழைக்கவிருப்பதாக மிஸ்டர் லொமெக்ஸ் என்கிட்டே சொல்லியிருந்தார். இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக்கிட்டு மிஸ்டர் ஃபிஷ்ஷைக் கூப்பிட்டேன். இத்தனை தான் ஆண்கள். பெண்களைப் பொறுத்தமட்டில் மிஸஸ் ரேவல்னு ஒருத்தி மட்டுந்தான். அவ கூடவே துணைக்கு ஒரு வேலைக்காரி போல யாரையாவது கூட்டிட்டு வந்தானு நினைக்கிறேன். அப்புறம் என் பொண்ணு, மேலும் வேலைக்காரர்கள், காரிகள்..''

இங்கு சற்று நிறுத்திக் கொண்டு மூச்சு வாங்கிக் கொண்டார் லார்ட் கேட்டர்ஹாம்.

''தேங்க்யூ'' என்ற டிடெக்டிவ் - ''இது எல்லா கேஸ்லேயும் செய்ய வேண்டிய தவிர்க்க இயலாத சடங்கு.''

''ஆனா..''என்று திடுமென பேசிய லொமெக்ஸ், ''கொலைகாரன் ஜன்னல் வழியாதான் நுழைஞ்சிருக்கான் என்பதுல சந்தேகம் கிடையாதே'' என்றார்.

மெல்லமாய் பதில் சொல்ல ஆரம்பிப்பதற்கு முன் சற்று தாமதித்தார் பேட்டில்.

''ஜன்னல் வரை வந்திருக்கும்... மேலும் ஜன்னலிலிருந்து விலகி வெளியே போயிருக்கும் காலடித் தடங்கள் இருக்கு. நேற்றிரவு 11.40க்கு ஒரு கார் பார்க்குக்கு வெளியே நிறுத்தப்பட்டிருக்கு. கார்ல வந்த ஓர் இளைஞன் பனிரெண்டு மணிக்கு விடுதியில ரூம் புக் பண்ணி

தங்கியிருக்கான். அவனோட பூட்ஸை முழுக்க க்ளீன் பண்ண வெளியில போட்டிருக்கான் - அவை முழுக்கவும் களிமண்ணாவும் ஈரமாவும் இருந்திருக்கு - ஏதோ அவன் பார்க்கின் ஈரப்பசை மிகுந்த புல் பிரதேசத்துல நடந்துக்கிட்டேயிருந்த மாதிரி.''

ஜார்ஜ் ஆர்வமாய் முன்னால் வளைந்து வந்தார்.

''அந்த பூட்ஸைக் காலடித் தடங்களோட ஒப்பிட்டுப் பார்க்க முடியாதா?''

''பண்ணியாச்சு.''

''முடிவு?''

''அப்பழுக்கில்லாம அந்த பூட்ஸ் பொருந்துது.''

''அப்ப எல்லாம் முடிஞ்சுடுது'' - கத்திவிட்டார் ஜார்ஜ். ''நம்ம கையில கொலைகாரன். இந்த இளைஞன்தான் - ஆங், அவன் பேரென்ன?''

''விடுதியில தன் பேரை ஆண்டனி கேட்னு தந்திருக்கான்.''

''இந்த ஆண்டனி கேட்டை உடனடியா பின் தொடர்ந்து கைது பண்ணிடனும்.''

''அவரை நீங்க பின் தொடரவெல்லாம் வேணாம்.''

''ஏன்?''

''ஏன்னா அவர் இன்னமும் அங்கேயேதானிருக்கார்.''

''என்ன?''

''விசித்திரமாயிருக்கு, இல்லே?''

கலோனல் மெல்ரோஸ் அவரைத் தீவிரமாய் கவனித்தார். ''உங்க மனசுல என்னயிருக்கு, பேட்டில்? கொட்டுங்க அதை.''

''நான் ஜஸ்ட் விசித்திரம்னேன்- அவ்ளோதான். இங்கே ஓர் இளைஞன் இப்ப இருக்கான் - நடந்திருக்கும் அத்தனையையும் வெச்சுப் பார்க்கும்போது ஒரே ஓட்டமா கண் காணாத இடத்துக்கு அவன் ஓடியிருக்கனும். ஆனா அவன் அப்படி கண்காணாத எந்த இடத்துக்கும் ஓடிடலே. அவன் இங்கேயே இருக்கான்... காலடித் தடங்களை நாம ஒப்பிட்டுப் பார்த்துக்க வசதியும் பண்ணித் தரான்.''

''அப்ப நீங்க என்ன நினைக்கிறீங்க?''

''என்னத்தை நினைக்கிறதுனு எனக்குத் தெரியலே. இதுதான் என் சிந்தனையை மிகவும் குழப்புது.''

''அப்படினா உங்களுக்கு..'' என்று கலோனல் ரேஸ் எதையோ பேச ஆரம்பிக்க அப்போது பார்த்து கதவில் தட்டப்படும் ஓசை கேட்டு இடைமறித்தது. இதற்கு விடை தர ஜார்ஜ் எழுந்து கதவு வரை போனார். நுழைவாயிலில் தனக்கே உரிய மட்டுமரியாதையோடு நின்றுக் கொண்டிருந்தான் ட்ரெட்வெல். அங்கிருந்தபடியே அவனுடைய முதலாளிக்கு பேசினான்: ''எக்ஸ்யூஸ் மீ, மை லார்ட்... அவசர மற்றும் முக்கியமான ஏதோ சமாச்சாரம் பற்றி உங்ககிட்டே பேச ஒரு ஜென்டில்மேன் வந்திருக்கார்... இன்னிக்குக் காலையில நடந்த துயரம் சம்பந்தப்பட்டதுனு நினைக்கிறேன்.''

திடீரென்று பேட்டில் கேட்டார்: ''அவன் பேர் என்ன?''

''அவர் பேர், ஸார், ஆண்டனி கேட். ஆனா வெறும் இந்தப் பேர் யாருக்கும் எதையும் விளக்காதுனும் சொன்னார்.''

ஆனால், அது, அறையிலிருந்த நான்கு பேருக்கும் எதையோ விளக்கியது போலிருந்தது. ஒவ்வொருத்தரும் ஒவ்வொருவிதமான ஆச்சரியத்தில் உட்கார்ந்தனர்.

லார்ட் கேட்டர்ஹாம் சப்புக் கொட்டினார்: ''இப்பத்தான் எனக்கு இதுல கிளுகிளு ஈடுபாடே ஏற்படுது. அவனை உள்ளேயனுப்பு ட்ரெட்வெல். அவனை உடனே உள்ளே அனுப்பு.''

அத்தியாயம் 12

# ஆண்டனி தன் கதையை சொல்லுதல்

---

"மிஸ்டர் ஆண்டனி கேட்" என அறிவித்தான் ட்ரெட்வெல். "கிராமத்து விடுதியில் தங்கியிருக்கும் சந்தேகத்துக்குரிய அந்நியன் உள்ளே நுழைகிறான்" என்று சொல்லிக் கொண்டார் ஆண்டனி கேட்.

அந்நியர்கள் சந்தித்துக் கொள்ளும்போது உடனடியாய் அவர்களிடம் காணப்படாத மனமார்ந்த கனிவினைக் காட்டிக் கொண்டு, லார்ட் கேட்டர்ஹாமை நெருங்கினார் ஆண்டனி கேட். அதே சமயத்தில் மீதமிருந்த மூவரைப் பற்றியும் தன் மனதுக்குள் ஒரு வரைவினை ஏற்படுத்தியும் கொண்டார். "1. ஸ்காட்லாண்ட், 2. லோக்கல் போலீஸ்... கான்ஸ்டபிளாய் இருக்கலாம். 3. வலிப்பு வந்து விடும் கட்டத்துக்குப் போய் தவித்துக் கொண்டிருக்கும் ஜென்டில்மேன்... அரசாங்க உத்தியோகஸ்தனாக இருக்க வேண்டும்."

"இப்படி நான் உள்ளே நுழைந்திருப்பதற்கு.." என்ற ஆண்டனி, கேட்டர்ஹாமைப் பார்த்து தொடர்ந்தார்: "நான் உங்ககிட்டே மன்னிப்புக் கேட்டுக்கணும். ஆனா உங்க கிராமத்து லோக்கல் விடுதியில ஒரு புரளி சுத்திக்கிட்டிருக்கு. இங்கே ஏதோ ஒரு கொலை நடந்திருப்பதா! இதுல என்னால சிறு வெளிச்சம் போட்டுக் காட்ட முடியும்னு தோணினதாலே நான் கிளம்பி வந்தேன்."

ஓரிரு நிமிடங்கள் எவருமே பேசவில்லை. பேச வேண்டும் என்று யாராவது முன்வந்தால் அவர்களைத் தடுக்காமல் பேச விட்டு விடுவதுதான் மிகச் சிறந்தது என்று அபரிமித அனுபவம் வாய்ந்த சூப்பரின்டெண்டெண்ட் முடிவானார். அமைதியாய் இருந்தே பழக்கப்பட்டதால் கலோனல் மெல்ரோஸ் இதழ்களைப் பிரிக்கவில்லை. மேதகு ஜார்ஜுக்கு

அந்நியர்களிடம் என்ன பேச வேண்டும் என்று செகரட்டரி தரும் குறிப்பு வேண்டும்... அதில்லாததால் அவர் மூச்சு விடவில்லை. என்னத்தைப் பேசுவது என்ற ஐடியா துளியும் இல்லாததால் லார்டும் வாய் திறக்கவில்லை. இக்கட்டத்தில், மற்ற மூவரின் மவுனமும், மேலும் ஆண்டனி நேராய் குறிப்பிட்டுப் பேசியதன், காரணமாகவும் கேட்டர்ஹாமே அமைதியை உடைக்கும்படியானது.

''ஆங், அ-ப்ப சரி, அ-ப்ப சரி'' என்றார் அவர் படபடப்பாய். ''நீங்க ஏன் உட்காரக் கூடாது?'' என்றார்.

''தேங்க் யூ'' என்றார் ஆண்டனி.

ஜார்ஜ் தனது தொண்டையை இறுமிக் கொண்டார். ''இந்த விஷயத்துல உங்களால வெளிச்சம் காட்ட முடியும்னு நீங்க சொல்றீங்க - அப்படினா - அப்படினா - எப்படி?''

''அதாவது, நேத்து ராத்திரி 11.45க்கு நான் லார்ட் கேட்டர்ஹாமுக்கு சொந்தமான பகுதியில் அத்துமீறி நுழைஞ்சிருந்தேன். இதுக்கு அவர் என்னை மன்னிக்கணும்! அப்ப நான் என் காதுபட குண்டு ஒண்ணு சுடப்பட்ட ஓசையைக் கேட்டேன். எது முடியுதோ முடியலியோ - கொலை நடந்த காலகட்டத்தை என்னால உங்களுக்கு நிச்சயப்படுத்தி சொல்ல முடியும்.''

மூவரையும் ஒருத்தர் மாற்றி ஒருத்தராய் பார்த்தார் ஆண்டனி . எவ்வித உணர்ச்சியையும் துளியும் பிரதிபலிக்காத இரும்பு முகபாவத்தைப் பாராட்டியபடி பேட்டில் மீது மட்டும் நீண்ட நேரம் பார்வையைப் பதித்தார்.

''ஆனா இது உங்களுக்கு ஒண்ணும் புது சேதியா இல்லே போல தெரியுது..'' என்றார் கூடுதலாய்.

''எதைச் சொல்றீங்க மிஸ்டர் ஆண்டனி?'' என்றார் பேட்டில்.

''ஜஸ்ட் திஸ். காலைல நான் எழுந்ததும் என்னோட ஷூக்களைப் போட்டுக்கறேன். அதுக்கப்புறமா நான் என்னோட பூட்ஸ்களைக் கேட்டபோது, கிடைக்கலே. அதுங்களுக்காக யாரோ ஒரு நல்ல இளைய கான்ஸ்டபிள் வந்துட்டுப் போயிருக்கார். உடனே ரெண்டுத்தையும் சேர்த்துப் போட்டு என்னால முடிச்சுப் போட முடிஞ்சது. ஓடி வந்துட்டேன், முடிஞ்சா நான் யார்னு உங்களுக்கு விளக்கிட!''

பட்டும் படாமல், ''நல்ல புத்திசாலித்தனமான நகர்த்தல்'' என்றார் பேட்டில்.

ஆண்டனியின் விழிகள் சற்றுத் துடித்தன. ''நான் உங்களோட மவுனத்தைப் பாராட்டறேன், இன்ஸ்பெக்டர்! இன்ஸ்பெக்டர்தானே?''

லார்ட் கேட்டர்ஹாம் இடைபுகுந்தார். அவருக்கு ஆண்டனியின் மீது சிறு ஈடுபாடு எழ ஆரம்பித்தது. ''ஸ்காட்லாண்ட் யார்டின் சூப்பரின் டெண்டெண்ட். இது கலோனல் மெல்ரோஸ், நம்ம முதன்மை கான்ஸ்டபிள். மேலும் மிஸ்டர் லொமெக்ஸ்.''

ஆண்டனி கூர்மையாய் ஜார்ஜைப் பார்த்தார். ''மிஸ்டர் ஜார்ஜ் லொமெக்ஸ்?''

''யெஸ்.''

''ஓ, மிஸ்டர் லொமெக்ஸ்'' என்று பிரமித்த ஆண்டனி, ''நேற்று உங்ககிட்டேயிருந்து ஒரு கடுதாசியைப் பெறும் பேறினைப் பெற்றேன்'' என்றார்.

ஜார்ஜ் அவரைப் பார்த்து முறைத்தார். ''அப்படியெல்லாம் எதுவும் கிடையாது'' என்றார் இரும்பாய்.

ஆனால் இப்போது மிஸ் ஆஸ்கார் இங்கிருக்கக் கூடாதா என்று கூடவே நினைத்தும் கொண்டார். இவருக்கான அனைத்துக் கடிதங்களுக்குமான பதில்களையும் மிஸ் ஆஸ்கார்தான் எழுதுகிறார். அவளுக்குத்தான் யாருக்கு எதற்கு எழுதப்பட்டது போன்ற அனைத்தும் தெரியும். ஜார்ஜ் போன்ற பெரும்புள்ளி இதுபோன்ற எரிச்சலூட்டும் விவரங்களையெல்லாம் நினைவில் கொண்டிருக்க முடியாது.

''நீங்க இங்கே வந்திருப்பது, மிஸ்டர் கேட்...'' என்று தொடர்ந்த அவர், ''நேற்றிரவு 11.45க்கு. இங்கே வந்து நீங்க என்ன பண்ணிக்கிட்டிருந்தீங்க என்கிற தகவலைத் தரணும்னு நினைக்கிறேன்'' என்றார்.

ஆண்டனியின் குரல் உறைப்பின்றி சொன்னது: ''அது என்ன காரணமாயிருந்தாலும் இங்கே, அதை நாம நம்பற மாதிரி இல்லே.''

''மிஸ்டர் கேட்...'' என்று முழு ஈடுபாட்டை வெளிக்காட்டிக் கொண்டு லார்ட் கேட்டர்ஹாம் கேட்டார்: ''நீங்க என்ன பண்ணிக்கிட்டிருந் தீங்க?'

''வெல்..'' என்று ஆரம்பிப்பது போல் காட்டிக் கொண்ட ஆண்டனி சொன்னார்: ''அது கொஞ்சம் பெரிய கதையாச்சே!''

சொன்னவர் தனது சிகரெட் பெட்டியைத் திறந்துக் கொண்டார். ''நான் சொல்லலாமா?''

லார்ட் கேட்டர்ஹாம் இதற்கு சம்மதமாய் தலையசைக்க, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு கதை சொல்ல தன்னைத்தானே தயார்படுத்திக் கொண்டார்.

என்ன மாதிரியான கடும் புயலுக்கு நடுவில் நான் நின்றுக் கொண்டிருக்கிறோம் என்பதனை வேறு எவரையும் விட ஆண்டனிக்கு நன்றாகவே தெரியும். வெறும் இருபத்துநான்கு மணி நேரம் எனும் மிகக் குறுகிய காலகட்டத்திற்குள் இரு பெரும் கொலைக் குற்றங்களால் சூழப்பட்டு விட்டார் இவர். முதலில் பாடியை அப்பறப்படுத்தி விட்டு சட்டத்தின் கண்களில் படாமல் வெளியேறி வந்த கையோடு இரண்டாவது கொலைக்குள் அது செய்யப்பட்ட அதேநேரத்தில் ஸ்தலத்தில் இருந்தபடியால் அகப்பட்டுக் கொண்டு விட்டார் ஆண்டனி. இது, இந்த இளைஞனைச் சுற்றியுள்ள கடும் பிரச்சினை.

''தென் ஆப்பிரிக்கா'' - ஏனோ சட்டனெ நினைத்துக் கொண்டார் ஆண்டனி.

இவர் ஏற்கெனவே அடுத்தடுத்து என்னென்ன நடவடிக்கைகள் பண்ண வேண்டும் என்பதைக் கணக்கிட்டு வைத்துவிட்டார். இவர் உண்மையைச் சொல்லிவிடப் போகிறார் - அதிக முக்கியமற்ற சில மாற்றத்துடனும், மற்றும் ஓர் ஆழ்ந்த மூடி மறைத்தலுடனும்!

''கதை ஆரம்பிச்சது மூனு வாரங்களுக்கு முன்னாடி - புலவாயோ வில். மிஸ்டர் லொமெக்ஸுக்கு அது எங்கேயிருக்குனு தெரியும். நான் என்னோட நண்பனான மிஸ்டர் ஜேம்ஸ் மேக்ரத்தோட பேசிக்கிட்டிருந் தேன்.''

இப்பெயரை மிக மெதுவாக கொண்டு வந்து இறக்கினார் ஆண்டனி - ஜார்ஜின் மீது கூர்மையாய் கண்களைப் பதித்தபடி. ஜார்ஜ் அவரது இருக்கைக்குள்ளேயே கட்டப்பட்டவராய் ஆகி சிறு சிரமத்துடன் ஆச்சரியத்தை அமுக்கிக் கொண்டார்.

''அந்த சம்பாஷணையின் முக்கிய விளைவாய் மிஸ்டர் மேக்ரத்துக்கு ஒரு உபகாரம் செய்வதற்காக நான் இங்கிலாந்து வந்து சேர்ந்தேன். இதை பண்ண அவரால் நேரடியா போக முடியாத நிலைமை. இந்தப் பிரயாணம் அவரோட பெயரிலேயே புக் பண்ணப்பட்டிருந்ததாலே நான் மிஸ்டர் மேக்ரத்தா பயணம் செஞ்சேன். இதுல என்ன அப்படியொரு குற்றமிருக்குனு எனக்குத் தெரியலே - தேவைப்பட்டா சூப்பரின் டெண்டெண்ட் என்னை பல மாதங்கள் கடுஞ்சிறையில் தள்ளக் கூட செய்யலாம்.''

''நாம உங்க கதையை மட்டும் தொடரும் வேலையை செய்வோம், ஸார்'' என்று பட்டென்று சொன்னார் பேட்டில்... ஆனால் அவருடைய கண்களில் ஒரு சிறு மினு மினுப்பு வந்தடங்கியது.

''இங்கே லண்டன் வந்தடைந்ததும் நான் ஓட்டல் ப்ளிட்ஸுக்குப் போனேன் - இன்னும் அதே மேக்ரத்தா. ஒரு குறிப்பிட்ட பதிப்பகத்தாரிடம் கையெழுத்துப் பிரதி பாக்கெட் ஒன்றை நான் கொண்டு போய் கொடுக்க வேண்டியது தான் இங்கே லண்டன்ல எனக்கு ஜோலி. ஆனால் வந்ததும் வராததுமா ரெண்டு அயல்நாட்டு ராஜாங்கத்தின் பிரதிநிதிகளை நான் எதிர் கொள்ள நேர்ந்தது. ஒருத்தருடைய அணுகுமுறை முழுக்கவும் அரசாங்க ரீதியானது... இன்னொருத்தருடை யது அப்படி கிடையாது. அதற்கு ஏற்றாற் போல் நான் ரெண்டையும் சமாளிச்சேன். ஆனா என்னோட பிரச்சனைகள் தீரலே. அன்னிக்கு ராத்திரி என் ரூம் உடைக்கப்பட்டு அந்த ஓட்டல் வெயிட்டர் ஒருத்தனாலேயே திருட்டு முயற்சி நடந்தது.''

''அது போலீஸுக்கு தெரிவிக்கப்படலேனு நினைக்கிறேன்'' என்றார் பேட்டில்.

''ரொம்ப சரி. பண்ணலே. எதுவும் களவாகலே, அதனால! ஆனா நடந்ததை நான் ஓட்டல் மேனேஜரிடம் அப்படியே சொல்லிட்டேன். அவரை நீங்க விசாரிச்சீங்கன்னா நான் சொல்வதின் நம்பகத்தன்மையும், அப்படியே எல்லாத்தையும் விட்டுட்டு ராவோடு ராவா அந்த வெயிட்டர் காலி பண்ணிட்டான் என்பதும் உங்களுக்குத் தெரிய வரும். மறுநாள் பப்ளிஷரே என்னை போன்ல அழைச்சு அவங்களோட ரெப்ரஸண் டேட்டிவ் ஒருத்தன் வந்து என்னைச் சந்திச்சு கைப்பிரதியை வாங்கிக்குவான்னு சொன்னாங்க. இதுக்கு நான் ஒப்புக் கொள்ள, மறுநாள்

காலைல இந்த திட்டம் துளி பிசகாம நடந்து முடிஞ்சது. பிறகு எந்தத் தகவலும் எனக்கு வராததால கைப்பிரதி பத்திரமா போய் சேர்ந்ததாகவே நான் எடுத்துக்கிட்டேன். நேற்று, இன்னும் நான் மிஸ்டர் மேக்ரத்தாகவே இருந்துக்கிட்டிருக்கும் நிலைல, மிஸ்டர் லொமெக்ஸ்கிட்டேயிருந்து எனக்கொரு கடுதாசி வந்தது..''

ஆண்டனி தாமதித்தார். இப்போது அவர் தனக்குத்தானே கொண்டாட ஆரம்பித்திருந்தார். ஜார்ஜ் இருப்புக் கொள்ளாமல் நெளிந்தார்.

''இப்ப எனக்கு நினைவுக்கு வருது'' என முணுமுணுத்தார். ''அத்தனை பெரிய கடிதம். பெயர் - ம்ம்... நான் அதை தெரிஞ்சு வெச்சிருக்கணும்னு எதிர்பார்க்கக் கூடாது. மேலும்..'' என்று விட்டு தனது குரலை சற்று உயர்த்தி ஏதோ நழுவி என்னவோ நடந்துவிட்டது என குறிப்பிடும் தொனியில் சொன்னார்: ''இன்னொரு மனிதனாக முகமூடி அணிந்து நடந்திருக்கும் இந்த ஆள் மாறாட்ட வேலையை நான் படுமோசமான மோசடினு கருதறேன். இதுக்குத் தேவையான தண்டனை உங்களுக்குத் தந்து தான் தீரணும். இதுல சந்தேகம் வேண்டாம். சந்தேகம் கிடையாது.''

இதனாலெல்லாம் அசையாத ஆண்டனி,''அந்தக் கடிதத்துல'' என தொடர்ந்தார். ''என் கட்டுப்பாட்டுல இருந்த அந்த கைப்பிரதியை பற்றி மிஸ்டர் லொமெக்ஸ் நிறைய ஆலோசனைகள் தந்திருந்தார். இங்கே நடக்கவிருக்கும் பார்ட்டியில கலந்துக்குமாறு லார்ட் கேட்டர்ஹாம் வழியா எனக்கு ஓர் அழைப்பினை வெளியிட்டார்.''

''இங்கே உங்களைப் பார்க்கிறதுல எனக்கு அவ்ளோ மகிழ்ச்சி, மேன்'' என்றார் லார்ட்.

இதற்கு அவரைப் பார்த்து முகஞ்சுளித்துக் கொண்டார் ஜார்ஜ்.

அசையாத கருவிழிகளால் ஆண்டனியிடம் பார்வை பதித்திருந்தார் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில். ''இதுதான் நீங்க இங்கே நேற்றிரவு இருந்ததுக்கான விளக்கமா?'' என்று கேட்டார்.

''நிச்சயமா கிடையாது'' என்றார் ஆண்டனி, வெதுவெதுப்பாய். ''ஒரு கிராமத்து வீட்டுக்கு பார்ட்டிக்கு அழைக்கப்பட்டிருக்கும்போது, அங்கு வரும் நான், காம்பவுண்ட் சுவரை இரவுல அளந்து, பேய் போல நட்டநடு பார்க்குல சுத்திக்கிட்டு, ஜன்னலெல்லாம் மூடியிருக்கானு தள்ளிப் பார்த்துக்கிட்டிருக்க மாட்டேன்! நேரா முன் கதவு வரை வந்து, அழைப்பு

மணியை அடிச்சு, மிதியடியில செருப்பை உதறிட்டு, உள்ளே நுழைஞ்சிருப்பேன். ஓகே... தொடருவோம். கைப்பிரதி என் கட்டுப்பாட்டிலிருந்து போயாச்சுனு நான் மிஸ்டர் லொமெக்ஸுக்கு பதில் போட்டிருந்தேன். அதால லார்ட் கேட்டர்ஹாமின் அழைப்பையும் நான் மறுக்கும்படி ஆச்சு. இதெல்லாம் நான் செஞ்சு முடிச்ச பிறகு தான், என் நினைவிலிருந்து அதுவரை நழுவிப் போயிருந்த ஒரு விஷயம் பற்றி எனக்கு நினைவு வந்தது.''

இங்கு கொஞ்சமாய் நிறுத்தினார் ஆண்டனி. அசைத்துப் பார்க்க வேண்டிய தருணம் வந்து விட்டது. ''வெயிட்டர் கியூசப்-வுடனான சண்டையில், சின்னதா கிறுக்கப்பட்டிருந்த ஒரு தாளை நான் இப்ப அவன்கிட்டேயிருந்து பிடுங்கும்படி ஆனது என்பதை இப்ப நான் உங்ககிட்டே சொல்லிக்கணும். அந்த சமயத்துல அது எனக்கு எந்தத் தகவலையும் உணர்த்தலே. ஆனா அது என்கிட்டேயேதானிருந்தது. *சிம்னீஸ்* என்ற பெயர் சொன்னப்பட்டதும் தான் அந்தத் துண்டுச் சீட்டின் ஞாபகமே எனக்கு மீண்டும் வந்தது. கிழிந்த அந்தத் துண்டினை வெளியிலெடுத்து நான் மறுபடியும் பார்த்தேன். இதுதான் அந்தத் துண்டு, ஜென்டில்மேன். இதை நீங்களே கூட பார்க்கலாம். இதிலிருக்கும் வார்த்தைகள்: *சிம்னீஸ் 11.45, வியாழக்கிழமை*. பாருங்க...''

பேட்டில் அத்தாளைக் கவனமாய் பரீட்சித்தார்.

''அஃப்கொர்ஸ்'' என தொடர்ந்த ஆண்டனி, ''*சிம்னீஸ்* அப்படினு இதுல இருக்கும் வார்த்தை இந்த வீட்டோட வேறெந்த தொடர்பையும் ஏற்படுத்தாமகூட குறிப்பிடப்பட்டிருக்கலாம்'' என்றார். ''ஆனால், மாறாக ஏதாவது தொடர்புமிருக்கலாம். மேலும், சந்தேகத்துக்கிடமின்றி இந்த கியூசப் ஒரு திருட்டு ராஸ்கல்தான். நேற்றிரவு இங்கே வந்து இறங்குவதுனு நான் முடிவு பண்ணிக்கிட்டேன்... எல்லாம் எப்படி போகணுமோ அப்படித்தான் போகுதுனு பார்த்து திருப்தி பண்ணிக்க நினைச்சேன்... ஒரு விடுதியில தங்கிட்டு காலை விடிஞ்சதும் லார்ட் கேட்டர்ஹாமைப் பார்த்து வார இறுதியில் ஏற்பாடாகியிருக்கும் பார்ட்டியில எந்த வில்லங்கமும் நடந்துடாம ஜாக்கிரதையா இருக்கும்படி சொல்லிடணும்னு இருந்தேன்.''

''ஓ'' என்றார் லார்ட் ஊக்கப்படுத்தும் விதமாய். ''ஓ.''

''ஒழுங்கா நேரத்தைக் கடைப்பிடிக்காததாலே நான் ரொம்ப காலந்தாழ்த்திதான் இங்கு வந்து சேர்ந்தேன். இதன் விளைவாக காரை

நிறுத்திட்டு சுவரேறி குதிச்சு வந்து முன்பக்கத்துப் பார்க்கைக் கடந்தேன். மாடியைச் சுற்றியிருக்கும் டெரஸுக்கு நான் வந்து சேர்ந்தபோது வீடே இருள்ல கிடந்தது. திரும்பிடலாம்னு நான் நினைச்சபோதுதான் குண்டுச் சத்தம் கேட்டது. வீட்டுக்குள்ளேயிருந்துதான் அந்த ஓசை வந்ததுனு எடுத்துக்கிட்ட நான் மறுபடியும் வீட்டை நோக்கி ஓடினேன். டெரஸ்ல ஓடி ஜன்னல்களைத் தள்ளிப் பார்த்தேன். ஆனா அவை தாழிடப் பட்டிருந்தன. மேலும் வீட்டுக்குள்ளிருந்து எந்த விதமான ஓசையையும் என்னால கேட்க முடியலே. கொஞ்ச நேரங்கூட நான் காத்திருந்து பார்த்தேன்... ம்ம்.. அனைத்து இடமும் கல்லறை போல அமைதியா யிருந்தன. அதனால திருட்டுத்தனமா ராத்திரி இடம் பெறும் ஏதோ வேட்டை போலனு நான் அதை எடுத்துக்கிட்டேன். அப்படிப்பட்ட சந்தர்ப்பத்துல இதுதான் யாரும் எடுக்கக் கூடிய ஒரே இயற்கையான முடிவு நான் நினைக்கிறேன்.''

உணர்ச்சியேயற்று, ''ஒரே இயற்கையான முடிவு, இதுதான்'' என்றார் பேட்டில்.

''விடுதிக்கே திரும்பிய நான், இப்ப சொன்ன மாதிரி ரூமெடுத்தேன். விடிஞ்சதும் சேதியைக் கேட்டேன். நடந்திருக்கும் சந்தர்ப்ப சூழ்நிலையில் என்மேல சந்தேகம் கவிழக் கூடிய வாய்ப்பு அதிகம்னு உணர்ந்த நான், இதோ, நேரடியா இங்கே வந்துட்டேன். கதையைச் சொல்ல.''

இங்கு தாமதம் நிலவியது. கலோனல் திரும்பி சூப்பரின்டெண் டெண்ட்டைப் பார்த்தார். ''இந்தக் கதை படு சுத்தமானதாக படுது'' என்றார்.

''யெஸ்'' என்றார் பேட்டில்.

''ஏதாவது கேள்வியிருக்கா, மிஸ்டர் பேட்டில்?''

இதற்கு ஜார்ஜைக் கூர்மையாய் பார்த்தார் பேட்டில். ''கவுண்ட் ஸ்டைல்பிச்சின் வாழ்க்கை சரிதம், யூ ஸீ...''

''நீங்க மேற்கொண்டு எதுவும் சொல்ல வேண்டாம்'' என்றார். ''எனக்கு எல்லாம் விளங்குது.'' சொன்னவர், ஆண்டனி பக்கமாய் திரும்பிக் கொண்டார். ''சுடப்பட்டது யார்னு உங்களுக்குத் தெரியுமா, மிஸ்டர் கேட்?''

''விடுதியிலே அது கவுண்ட் ஸ்டான்லிலாஸ் அப்படினு ஏதோ ஒரு பெயரை சொன்னாங்க.''

''அவர்கிட்டே உருப்படியா சொல்லிடுங்க'' என ஜார்ஜுக்குப் பொடி வைத்து சொன்னார் பேட்டில்.

பதில் சொல்ல முழுக்கவும் எதிர்ப்பாய் ஜார்ஜ் இருப்பது தெரிந்தது... ஆனால் பேசும்படித் தள்ளப்பட்டார் அவர். ''இங்கே சவுண்ட் ஸ்டான்லிலாஸ் அப்படினு சொல்லப்படும் மாண்டவர், ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின் மாண்புமிகு ஹிஸ் ஹைனஸ் ஒப்லோவிட்ச், இளவரசர் மைக்கேல்.''

ஆண்டனி விசிலடித்தார்.

ஆண்டனியைக் கண்கொத்திப் பாம்பாய் கவனித்துக் கொண்டேயிருந்த பேட்டில், எது குறித்தோ திருப்தி கொண்டு விட்டவரைப் போல் சிறு உறுமல் வெளியிட்டு விட்டு எழுந்துக் கொண்டார். ''எனக்கு ஒரு சில கேள்விகள் மிஸ்டர் ஆண்டனிகிட்டே கேட்க வேண்டியிருக்கு'' என்றார். ''அனுமதி கிடைச்சா, பார்ட்டி ஹாலுக்கு இவரை நான் அழைத்துப்போக விரும்பறேன்.''

''நிச்சயமா, நிச்சயமா'' என்றார் லார்ட். ''எங்கே வேணும்னு நினைக்கிறீங்களோ அங்கெல்லாம் நீங்க இவரைத் தூக்கிட்டுப் போகலாம்.''

ஆண்டனியும் துப்பறியும் அதிகாரியும் ஒன்றாக வெளியேறினார்கள்.

துயரம் நடைபெற்ற இடத்திலிருந்து பாடி அப்புறப்படுத்தப் பட்டிருந்தது. அது கிடந்த இடத்தில் மட்டும் நடுமையமாக கறையிருந்தது. மற்றபடி அப்படியொரு விபரீதம் நடந்துள்ளதற்கான எவ்வித அறிகுறியும் அறையிலில்லை. ஜன்னல்களின் வழியே நுழைந்த கதிரவன் அவ்வறை முழுக்க ஒளியை வெள்ளமாய் கொட்டிக் கொண்டிருக்க, ஆண்டனி, அறை முழுவதையும், ஏற்றுக் கொள்ளும் தினுசில் பார்த்தார்.

''வெரி நைஸ்'' என்றார் அறையின் அமைப்பை. ''இங்கிலாந்தை அடிச்சுக்க முடியாது.''

''நுழைஞ்சதும், இந்த அறையிலிருந்துதான் குண்டு சுடப்பட்டதுனு உங்களுக்குத் தோணிச்சா?'' ஆண்டனியின் கலாரசனைக்கு பதிலேதும் தராமல் கேட்டார் சூப்பரின்டெண்டெண்ட்.

''பார்க்கறேன்.''

ஆண்டனி ஜன்னலைத் திறந்துக் கொண்டு டெரஸ் இறங்கினார். வீட்டை நிமிர்ந்து பார்த்தார். ''ஆமாம், இது தான் அந்த அறை. ஆல் ரைட்'' என்றார். ''நல்ல பெருசா தெரிஞ்சது. நாலாபக்கமும் விஸ்தாரமா. குண்டு வேறெங்கேயாவது சுடப்பட்டிருந்தால், அது, எனக்கு இடப்பக்கத்திலிருந்துதான் கேட்டிருக்கும் - யெஸ். ஆனா இது எனக்கு பின்புறத்திலிருந்தோ அல்லது வலப்பக்கத்திலிருந்தோதான் கேட்டது. அதனாலதான் இதை நான் வேட்டையாடும் வேட்டு சத்தமா எடுத்துக்கிட்டேன். இந்தப் பகுதியின் எல்லையில இருக்கு, பாருங்க.''

இப்போது மீண்டும் உள்ளே நுழைய ஜன்னலின் விளிம்பு வரை வந்த ஆண்டனி கேட்டார்: ''ஆனா இந்தக் கேள்வியை எதுக்காக நீங்க என்கிட்டே கேட்கிறீங்க? அவர் இங்கே உள்ளேயே தான் சுடப்பட்டார்னு உங்களுக்குத் தெரியுமில்லே?''

''ஆஹ்'' என்றார் சூப்பரின்டெண்டெண்ட். ''என்னவெல்லாம் நமக்குத் தெரியுமுனு பிரியப்படறோமோ அவையத்தனையும் நமக்கு இன்னமும் தெரியலே. ஆனா, யெஸ், அவர் இங்கேதான் சுடப்பட்டார். நீங்க இந்த ஜன்னல்களையெல்லாம் என்னவோ தள்ளிப்பார்த்ததா சொன்னீங்க, இல்லே?''

''யெஸ். அவையத்தனையும் உள் பக்கமா தாளிடப்பட்டிருந்தன.''

''எத்தனை ஜன்னல்கள்ல நீங்க முயற்சி செஞ்சீங்க?''

''எல்லாத்திலேயும்.''

''இதுல நிச்சயமா இருக்கீங்களா, ஸார்?''

''எதையும் நிச்சயப்படுத்திப்பது என் குணம். ஏன் கேட்கிறீங்க, ஸார்?''

''கோமாளித்தனமான சமாச்சாரம்'' என்றார் சூப்பரின்டெண்டெண்ட்.

''எது கோமாளித்தனமானது?''

''காலைல கொலை டிடெக்ட் பண்ணப்பட்டபோது நடு ஜன்னல் திறந்திருந்தது - இது! தாளிடப்படலே!''

''ஹவ்'' என்றார் ஆண்டனி. ஜன்னல் திட்டில் அப்படியே உட்கார்ந்தபடி, சிகரெட் ஒன்றை எடுத்துக் கொண்டார். ''இது ஒரு செமத்தியான அடி. இது இந்தக் கேஸுக்கு ஒரு வித்தியாசமான வாசலைத் திறந்து விடுது. இது நமக்கு இப்ப ரெண்டு வழிகளைக் காட்டுது. வீட்டிலிருக்கும் யாரோ ஒருத்தராலேயே அவர் கொல்லப்பட்டிருக்கணும்.

அந்த 'யாரோ', நடந்திருக்கும் கொலை வெளியாள் எவனோ செஞ்சதுனு ஸ்தாபிக்க, நான் போனதும் ஜன்னலைத் திறந்துகிட்டு வெளியேறியிருக்கணும். இது இல்லேனா, இன்னும் ரொம்ப குழப்பமா ஒரு சுலபமான முடிவு இருக்கு. அது: நான் பொய் சொல்றேன். நிச்சயமா நீங்க இந்த ரெண்டாவது வழியைத்தான் தேர்ந்தெடுக்கறீங்கனு எனக்குத் தெரியது. ம்ம்... அப்படி செஞ்சீங்கன்னா - *நீங்க தப்பு.*''

பேட்டில் இப்போது கடுமையாய் சொன்னார்: ''நான் என் மனசுக்கு திருப்தியளிக்கும் அளவுக்கு அலசி முடிக்கிற வரைக்கும், இங்கேயிருக்கும் எவரும் நகரக் கூட முடியாது.''

ஆண்டனி அவரைக் கூர்மையாய் பார்த்தார். கேட்டார்: ''இது உள்ளே இருப்பவர்களேப் பண்ணியிருக்கக் கூடிய ஒரு குற்றம்னு எவ்ளோ நேரமா உங்களுக்கு ஊகமிருக்கு?''

பேட்டில் சிரித்தார். ''இந்த எண்ணம் முதலிலிருந்தே இருக்கு. உங்களுடைய பூட்ஸ் காலடிகள் பொருந்தியதிலிருந்தே இந்த என் சந்தேகம் எனக்குள்ளே வலுக்க ஆரம்பிச்சுட்டது.''

''நான் ஸ்காட்லாண்ட் யார்டை வாழ்த்தறேன்'' என்றார் ஆண்டனி லகுவாய்.

ஆனால் அக்கணத்தில் - இக் கொலைக் குற்றத்துடன் ஆண்டனிக்குக் கூட்டிருக்காது என்று தடையின்றி பேட்டில் தனக்குள் அனுமதித்துக் கொண்ட அக்கணத்தில் - முன்னெப்போதையும் விட இப்போது வெகு தீவிரமாய் அவருடைய அருகாமையிலேயே இருந்துவிடுவதுதான் மிகச் சிறந்தது என நினைத்தார் ஆண்டனி. சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் ஒரு பிரமாதமான அதிகாரி. சூப்பரின்டெண்டெண்ட் பேட்டிலிடமிருந்து எதுவும் நழுவி தப்பித்து விட இயலாது.

தரையிலிருந்த கருஞ்சிகப்புத் திட்டுக்களைப் பார்த்து அங்கீகரித்தபடி, ''அங்கேதான் அது நடந்திருக்கும் போல'' என்றார் ஆண்டனி.

''யெஸ்.''

''எதால அவர் சுடப்பட்டார்? ரிவால்வர்?''

''யெஸ். ஆனா பிரேதப் பரிசோதனை முடிஞ்சு குண்டை வெளில கொண்டு வரும் வரைக்கும் அது என்ன தயாரிப்புனு நம்மால சொல்ல முடியாது.''

''அப்படினா அது இன்னும் கண்டுபிடிக்கப்படலே, ஆங்?''

''நோ, அது கண்ணுக்கு அகப்படலே.''

''எந்த வகையான க்ளூவும் கிடைக்கலியா?''

''வெல், எங்களுக்கு இது கிடைச்சிருக்கு.''

ஏதோ மாயம் செய்து உடனே கையில் அதைக் கொண்டு வந்தவரைப் போல் அரை பக்க நோட்டுப் புத்தகத் தாள் ஒன்றை கையில் காட்டினார் சூப்பரின்டெண்டெண்ட். அப்படி அவர் பண்ணும்போதே, ஆண்டனி கவனித்து விடாவண்ணம், அவரை மிக மிக நெருக்கமாய் கண்களால் நோட்டமிட்டார்.

எவ்வித திகில் தத்தளிப்புமின்றி அதன் மீதிருந்த டிசைனை அடையாளம் கண்டு கொண்டார் ஆண்டனி. ''ஆஹா! மறுபடியும், *சிகப்புக் கை கூட்டாளி!* இப்படிப்பட்ட துண்டு காகிதத்தை ஊரெல்லாம் அவனுங்க உலவ விடப் போறானுங்கன்னா இந்தப் பிரசுரத்தை எக்கச்சக்கமா அச்சிட்டிருக்கணும். ஒவ்வொண்ணா இப்படி எழுதிக் கிட்டிருப்பது தாள முடியாத அலுப்பைத் தரும். அது சரி... இது எங்கேயிருந்தது?''

''பாடிக்குக் கீழே. இதை நீங்க இதுக்கு முன்னாடி பார்த்திருக்கீங்களா?''

அந்த பொதுநலம் சார்ந்த அமைப்போடு நேர்ந்த சிறு சந்திப்பினை அவருக்கு விளக்கினார் ஆண்டனி. ''அப்போ... அந்தக் கூட்டணிக் காரனுங்க உள்ளே வந்து இவரைப் போட்டுத் தள்ளியிருக்கணும்..''

''அப்படி நடந்திருக்கலாம்னா நீங்க நினைக்கிறீங்க?''

''வெல்.. அவங்க பேசிக்கிட்டு அலையறதை வெச்சுப் பார்த்தா.. யெஸ், நடந்திருக்கலாம். ஆனா என் அனுபவத்தை வெச்சு சொல்லணும்னா இப்படி ரத்தம் ரத்தம்னு அலையற எவனும் நிஜத்துல அப்படி ரத்தம் ஓடுவதைச் சகிச்சுக்கிட்டு நின்னதே கிடையாது. என்னைக் கேட்டா எனக்கிருக்கிற தைரியம் கூட அந்த *சிகப்புக் கை* கூட்டாளிங்களுக்கு இருக்காதுனுதான் சொல்வேன். பயந்தாங் கொள்ளிங்க. இந்த மாதிரி கிராமத்து வீட்டுக்குள்ள மாறுவேஷத்துல நுழைஞ்சு காதும் காதும் வெச்சா மாதிரி காரியத்தை முடிச்சுப் போடுபவனுங்களா அவனுங்களை என்னால நினைச்சுப் பார்க்கவே முடியலே. இருந்தாலும், இப்படி முழுக்கவும் எடை போட்டுட முடியாது, இல்லையா?''

''ரொம்ப சரி, மிஸ்டர் கேட். இப்படி முழுக்கவும் எடை போட்டுட முடியாது.''

திடுமென ஆச்சரியப்பட்டுப் போனவராய் ஆனார் ஆண்டனி. ''அவனுங்களோட விளாவாரியான திட்டம் இப்ப எனக்கு விளங்குது. திறந்த ஜன்னல், காலடித் தடங்கள், விடுதியில சந்தேகப்படும்படியான ஒரு புது அந்நியன். ஆனா உங்களுக்கு சத்தியம் பண்ணித் தரேன் சூப்பரின்டெண்டெண்ட்: நான் வேற எப்படி வேணும்னாலும் இருக்கலாம்... ஆனா இந்த லோக்கல் பகுதிக்கான சிகப்புக் கை கூட்டாளி கிடையாது.''

சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் சின்னதாய் சிரித்தார். கடைசியில் அவர் அவரது கடைசி துருப்புச் சீட்டினை இறக்கினார். ''அந்த பாடியை வந்து பார்ப்பதுல உங்களுக்கு எந்த ஆட்சேபணையும் கிடையாதே?'' என எதிர்பாராத ஒரு நொடியில் சுட்டார்.

''அப்படி எந்த ஆட்சேபணையும் கிடையாது'',என பச்சைக் கொடி காட்டினார் ஆண்டனி.

தனது சட்டைப் பையிலிருந்து ஒரு சாவியினை எடுத்துக் கொண்ட பேட்டில், ஆண்டனி பின்தொடர கீழிறங்கிப் போய் அங்கு ஓர் அறையின் நுழைவில் சற்று தாமதித்து நின்று விட்டுப் பின்னர் அதன் கதவினைத் திறந்து விட்டார். அங்கிருந்த சின்ன வரவேற்பறைகளில் ஒன்று அது. ஒரு ஷீட்டால் மூடப்பட்டு, அங்கிருந்த டேபிள் ஒன்றில் கிடந்தது உடல்.

தன்னருகில் வந்து ஆண்டனியும் சேரும்வரைக் காத்திருந்த பேட்டில் பிறகு சர்ரென்று அவ்வுறையினை விலக்கி விட்டார்.

பக்கத்திலிருந்தவர் கொடுத்த ஆச்சரிய விக்கலும் அதிசய முகபாவமும் ஓர் எதிர்பார்ப்பு விளக்கினைத் துப்பறியும் அதிகாரியுள் எரிய விட்டன.

''ஆக, நீங்க இவரை அடையாளம் கண்டுபிடிச்சிட்டீங்க, மிஸ்டர் கேட்?'' என்று வெற்றி முழக்கமிடும் வகையில் குரலை வைத்துக் கொண்டு, வார்த்தைகளை உதிர்த்தார் அவர்.

''இவரை நான் முன்னாடியே பார்த்திருக்கேன், யெஸ்!'' என்று தன்னைத்தானே மீட்டுக் கொண்ட ஆண்டனி சொன்னார்: ''ஆனா ப்ரின்ஸ் மைக்கேல் ஓப்லோவிட்ச்சாக அல்ல. பால்டர்ஸன் மற்றும் ஹாட்க்கின்ஸ் நிறுவனத்திடமிருந்து வருபவனாய் தன்னை அறிவித்துக் கொண்டான் இவன். தன் பெயராய் மிஸ்டர் ஹோம்ஸ் அப்படினான் இவன்.''

## அத்தியாயம் - 13

# அமெரிக்க விசிட்டர்

சிறந்த துப்பு என்று நினைத்திருக்க ஆனால் அது ஒப்பேறாத ஒன்றாகி விட்டால் சுக்கு நூறாக வெறுத்து விடும் ஒருத்தனைப் போல உடைந்து அமர்ந்தார் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில். சிந்தனையில் தன்னை இழந்து, பேண்ட் பாக்கெட்டில் தத்தம் கைகளைச் செருகியபடி நின்றுக் கொண்டிருந்தார் ஆண்டனி.

''இதைத்தான் 'எங்களுக்கு வேற வழிகள் இருக்கு' எனும் ரீதியில் லாலிபாப் சொன்னதன் அர்த்தமா?'' என முணுமுணுத்துக் கொண்டார் ஆண்டனி.

''என்ன... என்ன, மிஸ்டர் கேட்?''

''நத்திங் சூப்பரின்டெண்டெண்ட். உங்க சிந்தனையைக் குழப்பினதுக்கு மன்னிக்கணும். என்னை - என்னை விட என் நண்பன் ஜிம்மி மேக்ரத்தை - ஆயிரம் பவுண்ட் விஷயத்துல கவுத்துட்டானுங்க.''

''ஆயிரம் பவுண்டுங்கிறது ஒரு செமத்தியான தொகை'' என்றார் பேட்டில்.

''இருக்கலாம். ஒத்துக்கிறேன். ஆனா இப்ப பிரச்சினை அந்த ஆயிரம் பவுண்டுங்க இல்லே'' என்றார் ஆண்டனி. ''கடத்திட்டானுங்களே... இதுதான் என்னைப் பைத்தியமாக்குது. நானே என்னிடம் நம்பிக்கையா ஒப்படைக்கப்பட்டிருந்த கைப்பிரதி தொலைய காரணமாகி நிக்கிறேனே. இது என்னைக் குத்துது சூப்பிரண்டெண்ட், குத்துது.''

இதற்கு துப்பறியும் அதிகாரி எதுவும் சொல்லவில்லை.

''வெல், வெல்'' என்று அவராய் முன்னேறிய ஆண்டனி, ''வருத்தப்படுவது வீண். இப்பவும் எல்லாமும் முடிஞ்சிருக்காது'' என்றார். ''இன்னிலேந்து அடுத்த புதன் கிழமைக்குள் டியர் ஓல்ட் ஸ்டைல்பிச்சின் வாழ்க்கை குறிப்பினை நான் கைப்பற்றியாகணும். அப்ப எல்லாம் சுலபமா முடியும்.''

''மீட்டிங் அறைக்கு இன்னொரு முறை என்னோட வருவதுல உங்களுக்கு ஒண்ணும் சங்கடமில்லையே, கேட்? ஒரு சின்ன விஷயத்தை நான் உங்களுக்கு சுட்டிக்காட்ட விரும்பறேன்.''

மீண்டும் மீட்டிங் அறையில். அங்கு துப்பறியும் நிபுணர் உடனடியாய் ஜன்னல் வரை ஓடிப் போய் நின்றார், பேசினார்.

''நான் இதை யோசிச்சுக்கிட்டே இருக்கேன், மிஸ்டர் கேட். இதோ.. இங்கே கவனியுங்க, இதை சொல்றேன். இந்தக் குறிப்பிட்ட ஒரு ஜன்னல் ரொம்ப இறுக்கமா இருக்கு... ரொம்ப ஸ்டிப்பா. இதனால ஒருவேளை இது தாழ்ப்பாள் போடப்பட்டிருப்பதா நீங்கள் எடுத்துக்கட்டிருக்கலாம். ஜஸ்ட், எனக்கு இப்படியோர் யூகம் பட்டுச்சு. யெஸ் - நான் நிச்சயமா யிருக்கேன்... நீங்க இப்படி தப்பா எடுத்துக்கிட்டிருக்கலாம் என்பதுல நான் நிச்சயமா இருக்கேன்.''

ஆண்டனி அவரைத் தீவிரமாய் பார்த்தார். ''இப்படியெதையும் தப்பா எடுத்துக்கலே என்பதுல ஸ்திரமா இருக்கேன்னு நான் சொன்னால்?''

''நான் சுட்டிக் காட்டியதைப் போல நீங்க தப்பா எடுத்துக் கிட்டிருக்கலாம்னு உங்களுக்குப் படலே?'' - கண்மணிகள் அசையாது ஆண்டனியைப் பார்த்தபடி கேட்டார் பேட்டில்.

''வெல், உங்க மனசு புண்படாமயிருக்க, சூப்பரின்டெண்ட், யெஸ்!''

பேட்டில் திருப்தியடைந்து விட்ட தினுசில் சிரித்தார்.

''வருவதை எதிர் கொள்ளும் வகை ஸார், நீங்க! துளி கூட பொருட்படுத்தாம அப்படியே ஏற்றுக் கொண்டு விடுவதில் உங்களுக்கு சிரமமே இருக்காது போல.''

''எதுவா இருந்தாலும்!'' என ஆமோதித்த ஆண்டனி, ''நான்..'' என்னவோ சொல்ல வாயெடுக்க, அதற்குள் சூப்பரின்டெண்டெண்டின் கை அவரைப் பிடித்து இறுக்கி வாயடைக்க வைத்துவிட்டது.

ஆண்டனியிடம் தன் இறுக்கம் ஏற்படுத்திய அமைதியை வரவேற்றபடி, கதவு வரை குண்டூசி முனை ஓசையெழுப்பாது நகர்ந்து

போன பேட்டில் அப்போது சட்டென்று அதனை அகல விரித்துத் திறந்தார்.

அங்கு நுழைவாயில், உயரமான ஒரு நபர், அழகாய் நடு வகிடெடுத்து வாரப்பட்ட கருங்கேசத்துடன் நின்றுக் கொண்டிருந்தார். பீங்கான் போல பளபளத்த நீல விழிகள்... குற்றங் குறையற்ற சின்ன வதனம், அதில் அகன்ற அதிகார பாவம்.

இழுத்தபடி நிதானமாய் சொன்னார்: "ரெண்டு பேரும் என்னை மன்னிக்கணும். கொலை நடந்த இடத்தைப் பார்வையிட எனக்கு அனுமதி கிடைக்குமா? நீங்க ரெண்டு பேருமே ஸ்காட்லாண்டு யார்டைச் சேர்ந்தவங்கனு நினைக்கிறேன்..."

"எனக்கு அந்தப் பேறு கிடைக்கலே" என்றார் ஆண்டனி. "ஆனா இந்த ஜென்டில்மேன், ஸ்காட்லாண்டு யார்டின் சூப்பரிண்டெண்ட் பேட்டில்.."

"அப்படியா?" என்று இதில் அதிக ஈடுபாடு கொண்டவன் ஆனான் அந்த அமெரிக்கன். "உங்களைச் சந்திப்பது மகிழ்கிறேன் ஸார். என் பேர் ஹிராம் பீ. ஃபிஷ்... நியூயார்க்."

"நீங்க இங்கே பார்க்க நினைச்சது எதை, மிஸ்டர் ஃபிஷ்?" - கேட்டது துப்பறியும் அதிகாரி.

அந்த அமெரிக்கன் அமரிக்கையாய் அறைக்குள் நடந்து போய் கீழேயிருந்த கறையினை ஈடுபாட்டோடு பார்த்தான். "எனக்குக் கொலைகள்ல ஈடுபாடு உண்டு, மிஸ்டர் பேட்டில். இப்பழக்கம், என்னோட பொழுதுபோக்குள்ல ஒன்று. இது சம்பந்தமா ஒரு படைப்பை வார சஞ்சிகை ஒண்ணுக்குத் தந்திருக்கேன். 'கொலையும் கொலை காரனும்.' இது தலைப்பு."

பேசிக் கொண்டிருக்கும்போதே அறைக்குள்ளிருக்கும் அனைத்தையும் குறித்துக் கொள்ளும் தினுசில் அவனுடைய பார்வை அறை முழுவதையும் ஒரு வட்டமடித்து ஓய்ந்தது. அப்போது அப்பார்வை சற்று கூடுதல் நேரம் ஜன்னலில் பதிந்திருந்தது.

"அந்த பாடி..." என்று தான் சொல்வதெல்லாம் உண்மை என்ற தொனியில் பேட்டில் சொன்னார். "அப்புறப்படுத்தப்பட்டு விட்டது."

''நிச்சயமா?'' என்றார் ஃபிஷ். படங்களால சூழப்பட்டி சுவர்களுக்கு அவனுடைய கண்கள் தாவின. ''இந்த ரூம்ல குறிப்பிடப்பட வேண்டிய படங்களிருக்கு, ஜென்டில்மேன். எனக்கு படங்கள்ல ஈர்ப்பு உண்டு. அதே போலவே முதல் பதிப்பிலும்! முதல் பதிப்பைப் பார்க்க, நான் ஆவலாயிருக்கேன்... அதுக்காகத்தான் என்னை இங்க லார்ட் கேட்டர்ஹாம் கூப்பிட்டிருப்பதே.''

மிருதுவாய் பெருமூச்செறிந்தார்.

''சரி, இப்போதைக்கு அவ்ளோதான். வேற எதுவும் கிடையாது'' என்ற ஃபிஷ், ''டவுனுக்கு ஒரு நடை போயிட்டு வந்தா அத்தனை விருந்தாளி களுக்கும் மனசு கொஞ்சம் லகுவா ஆகும்'' என்றார்.

''அதை செயல்படுத்த முடியாது ஸார்'' என்றார் பேட்டில். ''மரண விசாரணை முடியற வரைக்கும் ஒருத்தரும் இந்த இடத்தை விட்டு நகரக் கூடாது.''

''அப்படியா சமாச்சாரம்? எப்போ மரண விசாரணை?''

''நாளைக்கே கூட இருக்கலாம். பிரேதப் பரிசோதனைக்கு ஏற்பாடு பண்ணிட்டுத்தான் நாம மரண விசாரணை நீதிபதியைச் சந்திக்கணும்.''

''நீங்க சொல்வதும் எனக்கு விளங்குது'' என்றார் ஃபிஷ். ''இப்படிப்பட்ட சூழல்ல, இது ஒரு சம்பிரதாயமான வெறும் சின்ன பார்ட்டியாத்தான் இருக்கப் போகுது.''

பேட்டில் இப்போது அறை கதவு வரை நகர்ந்துப் போய் வெளியேறியிருந்தார். ''நாம இங்கேயிருந்துக் கிளம்பி விடுவது நல்லது'' என்றார். ''பூட்டியே வெப்போம்.''

இரண்டு பேரும் வெளியே வரும்வரை காத்திருந்து விட்டு பூட்டிய சாவியை எடுத்துக் கொண்டார் பேட்டில்.

''நீங்க கைரேகைகளுக்காக காத்திருப்பது போல படுது'' என்றார் ஃபிஷ்.

''இருக்கலாம்'' என்றார் சூப்பரின்டெண்டெண்ட், பட்டும் படாது.

''இன்னொரு தகவலும் எனக்குத் தரத் தோணுது. நேற்றைய இரவு போன்ற ஓர் இரவு நேரத்துல உள்ளே எவனாவது வந்துட்டுப் போயிருந்தால், இந்த கனமான மரத் தரையிலும் நிச்சயமா காலடித் தடங்களையும் அவன் விட்டு வெச்சிருக்கணும் - யெஸ்.''

''உள்ளே எதுவும் கிடையாது, வெளியில நிறைய இருக்கு.''

''எல்லாம் என்னுடையவை'' என உற்சாகமாய் சொன்னார் ஆண்டனி!

குற்றமற்ற ஃபிஷ்ஷின் பார்வை ஆண்டனியைக் கடந்தது. ''யங் மேன்..'' என்று அவனை விளித்தார். ''என்னை நீங்க ஆச்சரியப்பட வெக்கறீங்க'' என்றார்.

ஒரு திருப்பத்தில் அவர்கள் திரும்பி, ஓர் அகலமான அறைக்குள் பிரவேசித்தனர். அது, பலர் கூடும் பகுதி போலிருந்தது. தரமான மரங்கள் கொண்டு தரையும் சுவர்களும் வடிவமைக்கப்பட்டிருந்தன. பலர் அமர்ந்து பார்க்குமளவுக்கான அகண்ட பால்கனியொன்றும் மேலேயிருந்தது.

''ஆஹா!'' என்றார் ஃபிஷ். ''நம்மளை விருந்துக்கு அழைச்சிருக்கும் பெரிய மனுஷர்.''

இது, லார்ட் கேட்டர்ஹாம் பற்றிய சிறப்பான கேலி வர்ணிப்பாய் அமைந்துப் போக, வந்த சிரிப்பை அடக்கிக் கொள்ள முகத்தை வேறு பக்கமாய் திருப்பி மறைக்க வேண்டியதாயிற்று ஆண்டனிக்கு.

''அவர் கூடவே'' என தொடர்ந்த அமெரிக்கன், ''ஒரு பொண்ணு'' என்றான். ''அவங்க பேரை என்னால நேத்து ராத்திரி தெரிஞ்சுக்க முடியலே. ஆனா அவங்க பிரகாசமா இருந்தாங்க - வெகு பிரகாசமான வங்களா.''

லார்ட் கேட்டர்ஹாமுடன் இருந்தது, விர்ஜீனியா ரேவல்.

இந்தச் சந்திப்பினைத்தான் ஆரம்பத்திலிருந்து எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தார் ஆண்டனி. இதற்கு, எப்படி தான் நடந்துக் கொள்வது என்று அவருக்குத் தெரியவில்லை. விர்ஜீனியா முடிவெடுத்துக் கொள்ளட்டும் என அவர் விட்டுவிட வேண்டியதுதான். மிஸஸ் ரேவலுடைய சமயோஜித நடவடிக்கைகளின் மீது ஆண்டனிக்கு நம்பிக்கை இருந்தாலும் கூட, அப்படிப்பட்ட ஒரு சாதுர்யமான பாதையை விர்ஜீனியா தேர்ந்தெடுப்பார் என்பதில் ஆண்டனிக்கு நம்பிக்கை யில்லை. இந்த சந்தேகம் அவருக்கு நீண்ட நேரம் நிலைத்திருக்கவில்லை.

''இது. இது, இது, மிஸ்டர் கேட்'' என்று விட்டார் விர்ஜீனியா. தன் இரு கைகளையும் அவர் நோக்கி நீட்டியே விட்டார் மிஸஸ். ''ஆக உன்னால இங்கே வர முடிஞ்சிடுச்சா?''

''மை டியர் மிஸஸ் ரேவல்'' என்ற லார் கேட்டர்ஹாம், ''மிஸ்டர் கேட் உங்களுக்கு நண்பரா இருப்பார்னு எனக்குத் துளி ஐடியா கிடையாது'' என்றார்.

குறும்புத்தனம் கண்களில் டாலடிக்க, ''அவர் என்னோட மிகப் பழைய நண்பர்'' என்று சிரித்தபடி ஆண்டனியைப் பார்த்துக் கொண்டே சொன்னார் விர்ஜீனியா. ''நேற்று லண்டன்ல எதிர்பாராத விதமா நான் இவரை சந்திச்சேன். இங்கே வர்றதா சொல்லியிருந்தேன்.''

இந்த அறிமுகத்தின் மேல் விர்ஜீனியாவிற்கு தரவேண்டிய ஒரு சிறு ஹிண்டினைத் தர ஆண்டனி தயங்கவில்லை. ''உங்களோட கனிவான அழைப்பினை நான் மறுக்க வேண்டி விளைந்திருந்த சூழ்நிலையை நான் விர்ஜீனியாவுக்கு விளக்கினேன்.''

''வெல், வெல்'' என்ற கேட்டர்ஹாம், ''அதெல்லாம் பழங்கதை. நான் விடுதிக்கு ஆளனுப்பி உங்க லக்கேஜைக் கொண்டு வரச் சொல்லிடறேன்'' என்றார்.

''உங்க கனிவுக்கு ரொம்ப நன்றிகள், லார்ட், ஆனா..''

''நான்சென்ஸ். நீங்க சிம்னீஸ் வந்தாகணும். மோசமான இடம் அந்த விடுதி – தங்கறதுக்கு சொல்றேன்.''

''அஃப்கொர்ஸ்... நீங்க வரணும், மிஸ்டர் ஆண்டனி கேட்'' என்றார் விர்ஜீனியா, மிருதுவாய்.

அவரைச் சுற்றியிருந்தோரிடம் விளைந்திருந்த மாற்றத்தினை உணர்ந்தார் ஆண்டனி. ஏற்கெனவே விர்ஜீனியா, ஆண்டனி பற்றி நிறையவே சொல்லி விட்டார். இனி அவர் விளங்காத ஓர் அந்நியன் கிடையாது. விர்ஜீனியாவின் தகுதியும் இருப்பும் அத்தனை மதிப்பும் மரியாதையும் கொண்டதாய் இருந்தபடியால் அவர் யாரை அறிமுகப் படுத்தி ஆமோதித்தாலும் அதை இங்கு மறுப்பாரில்லை. மரத்தில் தொங்கவிட்டு வந்துள்ள துப்பாக்கியை இப்போது நினைத்துக் கொண்டே ஆண்டனி உள்ளுக்குள் சிரித்துக் கொண்டார்.

தொடர்ந்து விர்ஜீனியாவே பேசினார். ''அப்ப எல்லாம் சுபமா முடிஞ்சது, மிஸ்டர் கேட்...'' இனிமே நீ எனக்கு உபயோகமா இருக்க வேண்டிய உன் கடமையை உடனே துவங்கிடலாம். கம் ஆன், ஏரிக்குப் போவோம். கொலை கிலைனு இந்த எல்லா குழப்பத்திலிருந்தும்

ரொம்பவும் விலகியிருக்கிற அமைதியான பிரதேசமது. பாவம் இந்த லார்ட் கேட்டர்ஹாம். அவர் வீட்டுல கொலை! ஆனா இது முழுக்க முழுக்க ஜார்ஜோட தப்பு. இது ஜார்ஜ் ஏற்பாடு பண்ண பார்ட்டி தெரியுமா?''

''ஆஹ்'' என்று ஏதோ விளங்கப் பெற்றவராய் ஆன லார்ட், ''ஆனா நான் அவர் சொன்னதுக்கெல்லாம் மண்டையை ஆட்டிக்கிட்டு ஒப்புக் கொண்டிருக்கக் கூடாது'' என்றார்.

ஒரு ஸ்திரமான மனிதன் சற்றே தாட்சண்யம் பார்த்ததால் வீழ்த்தப்பட்டதை உணர்த்தினார் அவர்.

''ஜார்ஜ் சொல்வதைக் கேட்காம அத்தனை சுபமா ஒருத்தரால விலக்கிட முடியாது'' என்றார் விர்ஜீனியா. ''நாம தப்பிச்சு ஓடவே முடியாத அளவுக்கில்லே அவர் உடும்பாப் பிடிப்பார்.''

இப்போது ''நீங்க எங்களைத் தேடி வந்திருப்பதுல எனக்கு சந்தோஷம், கேட். எனக்கு சப்போர்ட் வேணும்.''

''உங்க கனிவை நான் ரொம்ப பாராட்டறேன் லார்ட்'' என்றார் ஆண்டனி. ''அதிலும், குறிப்பா, நான் அத்தனை பெரிய சந்தேகத்துக்குரிய நபரா இங்கே உலவிக்கிட்டிருக்கும்போது நீங்க காட்டும் கனிவு மகத்தானது. ஆனா, நான் இங்கே தங்கறது பேட்டிலுடைய பணியை சுலபமாக்கிடுது!''

''எந்த மாதிரி, ஸார்'' என்றார் சூப்பரின்டெண்டெண்ட்.

''என் மேல ஒரு கண்ணைப் பதிச்சே வைப்பதுல இப்ப எந்த சிரமும் இருக்காதே'' என்று சாந்தமாய் சொன்னார் ஆண்டனி. இதற்கு சூப்பரின்டெண்டெண்ட் கண்களில் ஒளிர்ந்த சிறு துளியில் அவர் சொன்னது சரியாய் அதிகாரியாய் போய் அடைந்துவிட்டது என்பதையும் அறிந்து கொண்டார்.

அத்தியாயம் 14

# முழுக்கவும் அரசியல் மற்றும் நிதிநிலைமை சார்ந்தது

அந்த திடீர்க் கண்ணொளியின் பிரகாசத்தைத் தவிர 'பாவமற்ற' நிலையிலேயே தன் முகத்தை வைத்துக் கொள்வதில் மாறாதவராயிருந்தார் பேட்டில். விர்ஜீனியா அங்கிருந்த ஆண்டனியை அடையாளம் கண்டு கொண்டு விட்டதில் பேட்டிலுக்கு ஒருவேளை பேராச்சரியம் விளைந்திருந்தால், அதனை அவர் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. தோட்டத்துக்கான கதவு வழியாக இருவரும் வெளியேறுவதைப் பார்த்தபடியே சூப்பரின்டெண்டும் லார்டும் நின்றுக் கொண்டிருந்தார்கள், மிஸ்டர் ஃபிஷ்ஷும்.

''இனிமையான இளையவன், அவன்'' என்றார் லார்ட் கேட்டர்ஹாம்.

''பழைய நண்பனை சந்திச்சதுல ரேவலுக்கு சந்தோஷம்தான்'' என்றார் அமெரிக்கன். ''ரெண்டு பேருக்கும் கொஞ்ச நாளாவே தொடர்பிருந் திருக்கணும், ஆங்?''

''அப்படித்தான் படுது'' என்றார் லார்ட். ''ஆனா அவ இந்த ஆண்டனியைப் பற்றி ஒருமுறை கூட சொல்லி நான் கேட்டதில்லே. ஓ, பை த வே பேட்டில், மிஸ்டர் லொமெக்ஸ் உங்களைக் கேட்டுக் கிட்டிருந்தார். அவர் அங்கே இன்னோர் அறையில இருக்கார்.''

''வெரிகுட், லார்ட் கேட்டர்ஹாம். நான் உடனடியா போறேன்.''

அதிக சிரமப்படாமல் அந்த அறைக்குப் போய் சேர்ந்தார் பேட்டில். வீட்டின் ஒட்டுமொத்த வரைபடத்தில் நன்றாகவே பழக்கப்பட்டு விட்டார் சூப்பரின்டெண்டெண்ட்.

''ஆஹ், வாங்க பேட்டில்'' என்றார் லொமெக்ஸ்.

அறையின் கார்பெட்டில் மேலும் கீழுமாய் பொறுமையற்றவராய் நடந்துக் கொண்டிருந்தார் அவர். அங்கு கணப்புக்கு அருகில் போடப்பட்டிருந்த கை வைத்த பெரிய நாற்காலியில் அகலமாக இன்னுமோர் ஆசாமியும் அமர்ந்திருந்தார். ஆங்கில மண்ணுக்கேவுரிய பொழுதுபோக்கின் போது அணியப்படும் உடைகளை அணிந்திருந்தார் அவர்... நாகப் பாம்பினைப் போல நல்ல தடித்த பளபளக்கும் மஞ்சள் முகமும், துளைத்தெடுக்கும் கருமையான விழிகளையும் கொண்டிருந்தார். பருத்த மூக்குக்கு தாராளமாய் ஒரு வளைவு இருக்க... தொங்கி அகண்டுக் கிடந்த முகவாயில் 'பவர்' இருந்தது.

எரிச்சலாய், ''உள்ளே வந்துடுங்க பேட்டில்'' என்றார் லொமெக்ஸ். ''வந்து உடனே கதவை மூடுங்க. இது, மிஸ்டர் ஹெர்மன் ஐசக்... ஹெர்மன் ஐஸக்டீன்.''

பேட்டில் அவருடைய தலையை மரியாதை பொதித்து சாய்த்துக் காட்டினார்.

மாபெரும் நிதி நிர்வாகியான ஹெர்மன் ஐஸக்டீன் பற்றிய முழு விவரங்களும் அறிந்தவர்தான் சூப்பரின்டெண்டெண்ட். அவர், மூச்சிறைக்க லொமெக்ஸ் நடந்துக் கொண்டிருக்கும் இந்த அறையில் வெறுமனே அமர்ந்துக் கொண்டிருந்தாலும், அவர்தான் இங்கிருக்கும் இருவரில் நிஜ சக்தி என்பது பேட்டிலுக்குத் தெரியும்.

''இப்ப நாம மனம் விட்டுப் பேசலாம்'' என்றார் லொமெக்ஸ். ''லார்ட் கேட்டர்ஹாம் மற்றும் கலோனல் மெல்ரோஸுக்கு முன்னாடி அதிகமா நான் எதையும் பேசிடக்கூடாது எனும் படபடப்பு எனக்குள்ளே இருந்துக்கிட்டேயிருக்கும். புரியுதா பேட்டில். இந்த விஷயங்கள்லாம் வெளியில கசிஞ்சுடவே கூடாது.''

''ஆஹ்..'' என்று குறிப்பிட்ட பேட்டில், ''ஆனா எப்படியோ கசிஞ்சுடுது என்பதுதான் இதுல பரிதாபம்'' என்றார்.

இப்போது ஒரு நொடி அந்த பளபளக்கும் மஞ்சள் முகத்தில் புன்சிரிப்பு ஒன்று விளைந்ததைக் கவனித்தார் பேட்டில். ஆனால் எப்படி வந்ததோ அதே சடுதியில் அது மறைந்தும் போனது.

''இப்ப சொல்லுங்க.'' என தொடர்ந்த ஜார்ஜ், ''இந்த இளைய பயலைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க - மிஸ்டர் கேட்'டைச் சொல்றேன்'' என

கேட்டார். "இன்னமும் அவன் பேர்ல குற்றமில்லைனு நினைக்கிறீங்களா?"

பேட்டில் அவருடைய தோள்களை மிக சின்னதாக குலுக்கிக் காட்டினார். "நேரடியான ஒரு கதையை அவர் சொல்றார். அதன் பகுதியை நம்மால நிரூபிச்சுப் பார்த்துக்கவும் முடியும். அதன் சாரம், அவர் நேற்று ராத்திரி அங்கே வந்திருப்பதை விளக்குது. அவரோட வாழ்க்கையைப் பற்றியெல்லாம் அறிஞ்சுக்க நான் தென் ஆப்பிரக்காவுக்கு வேணும்னா தந்தி கொடுத்துப் பார்க்கிறேன்."

"அப்படினா அவர் எல்லா சிக்கல்களிலிருந்தும் வெளியில நிக்கிறார்னா சொல்றீங்க?"

அவருடைய திரண்ட கைளை மறுப்பாய் அசைத்துத் தூக்கினார் பேட்டில். "இவ்ளோ சீக்கிரத்துல முடிவாக்கிட முடியாது, ஸார். நான் அப்படி சொல்லவே இல்ல."

"இந்த கொலை பற்றிய உங்களோட ஐடியா என்ன சூப்பரின் டெண்டெண்ட் பேட்டில்?" என்றார் ஐஸக்டீன். வந்ததிலிருந்து முதல் முறையாய் பேசினார்.

ஆழமாகவும் வளமுடனும் இருந்த அவருடைய குரலில் வற்புறுத்தும் தரம் சற்று தூக்கலாய் தெரிந்தது. இப்படிப்பட்ட ஒரு குரல்தான், பணியின் ஆரம்பக் காலங்களில் இளமையாயிருந்த பேட்டிலுக்கும் இருந்தது.

"ஐடியாக்களை அடுக்குவதற்கு இது ரொம்பவும் ஆரம்பக் கட்டம், மிஸ்டர் ஐஸக். முதல் கேள்வியை எனக்கு நானே கேட்டுக் கொண்டதை தாண்டி என்னால இன்னும் போக முடியலே."

"அது என்ன?"

"ஓ, இது எல்லா வழக்குகளிலும், அதேதான். இலக்கு, மோட்டிவ்! ப்ரின்ஸ் மைக்கேலின் மரணத்தால் லாபப்படுவது யார்? வேற ஏதாவது கட்டத்துக்குள் நாம நுழையறதுக்கு முன்னாடி நமக்கு இதற்கான பதில் கிடைச்சாகணும்."

"*ஹெர்ஸோ – ஸ்லோவாக்கியாவின் புரட்சிகர பார்ட்டி..*" என ஆரம்பித்தார் ஜார்ஜ்.

அவருக்கு வழக்கமாய் கொடுக்கும் மரியாதையைக் குறைத்துக் கொண்டு அவரை அப்படியே ஒதுக்கித் தள்ளுவதைப் போல கையசைத்துக்

காட்டினார் பேட்டில். ''இதுல *சிகப்புக் கை* கூட்டாளிகளின் கைவரிசை கிடையவே கிடையாது ஸார். நீங்க இதுதான் காரணம்னு நினைச்சா - ப்ளீஸ் வேண்டாம்.''

''ஆனா அந்த பேப்பர் - அதுல ரத்தக் கறை?''

''இப்படி இவனுங்களை நினைச்சுக்கிட்டு நாம கதறணும் என்பதற்காக.''

ஜார்ஜின் மரியாதை சற்றே உலுக்கப்பட்டது. ''ரியலி பேட்டில்? அப்படியா? உங்களால எப்படி இத்தனை நிச்சயமா சொல்ல முடியுதுனு எனக்குத் தெரியலே.''

''ப்ச், லொமெக்ஸ்.. நமக்குச் *சிகப்புக் கை* பற்றி நுணுக்கமா நிறையவே தெரியும். இங்கிலாந்தில் வந்து ப்ரின்ஸ் மைக்கேல் கால் பதிச்சதிலிருந்து நாம *சிகப்புக் கை* கூட்டாளிங்க மேல மாறாத ஒரு கண்ணைப் பதிச்சே தான் வெச்சிருக்கோம். இப்படிப்பட்ட பந்தோபஸ்துக்களெல்லாம் எங்களோட டிபார்ட்மெண்டின் அடிப்படை வேலைகள். அவரை நெருங்கி ஓர் அங்குலம் கூட அவனுங்களால நெருங்கியிருக்க முடியாது, நினைவிருக்கட்டும்.''

''நான் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் சொல்வதை ஏத்துக்கிறேன்'' என்றார் ஐஸக்டீன். ''தேட வேண்டிய இடம் - *வேற*.''

இந்த ஆதரவால் ஊக்கமான பேட்டில், ''கவனியுங்க ஸார்'' என முக்கியப்படுத்தி விட்டு சொன்னார்: ''நமக்கு இந்த கேஸ் பற்றிய கொஞ்சம் அறிதல் இருக்கு. மரணத்தால யாருக்கு லாபம் கிடைக்குது என்பது நமக்குத் தெரியாம இருந்தாலும், யார் இழக்கிறாங்க என்பது நமக்குத் தெரியும்.''

''இதுக்கு அர்த்தம்?'' என்றார் ஐஸக்டீன்.

அவரது கருவிழிகள் துப்பறியும் அதிகாரியின் மீது கவிழ்ந்திருந்தன. எப்போதுமில்லாத அளவுக்கு இப்போது கருநாகக் குறி வைத்தார் அவர், பேட்டில் மீது.

''நீங்களும் மிஸ்டர் லொமெக்ஸூம் *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா*வின் சுதந்திரக் கட்சி பற்றி பேசவேயில்லே.''

அடிவரை உலுக்கப்பட்டவராய், ''ரியலீ, பேட்டில்?'' என்றார் லொமெக்ஸ்.

''உங்களுக்கு இப்ப அவசரமா ஒரு ராஜா வேணும். ஆனா..'' என்றவர், கையைச் சொடுக்குப் போட்டு ஓசையெழுப்பிக் காட்டினார். ''இப்படிங்கிறதுக்குள்ளே உங்க ராஜாவை நீங்க இழந்துட்டு நிக்கிறீங்க. இப்ப அவசர அவசரமா ஒரு மாற்று ராஜாவை அடையாளங் கண்டாகணும். இது ஒண்ணும் அத்தனை சுலபமான காரியம் கிடையாது. நோ, நோ ஸார். எனக்கு உங்களோட முழு திட்டம் என்னனுல்லாம் தெரிஞ்சுக்க வேண்டிய தேவையில்லை. வெறும் அவுட்லைன் காட்டினீங்கன்னா அதுவே போதும். ஆனா இது, ஒரு பெரிய உடன்படிக்கைனு நான் எடுத்துக்கறேன்.''

ஐஸக்டீன் இதற்கு அவருடைய தலையை மெல்லமாய் அசைத்து ஆமோதித்தார். ''இது ஒரு பெரிய சமரச திட்டம்.''

''அப்ப, இது என்னை என்னுடைய இரண்டாவது கேள்விக்குக் கொணடு வந்து நிறுத்துது. ஹெர்ஸோ- ஸ்லோவாக்கியா சிம்மாசனத் துக்கு உரிமையுள்ள அடுத்த வாரிசுதாரர் யார்?''

ஐஸக்டீன் குறுக்காய் பார்வையைத் திருப்பி லொமெக்ஸ் பக்கமாய் போட்டார். கொஞ்சம் மறுப்போடும் அதிகமான தயக்கத்தோடும் பார்க்கப்பட்டவர் பேசினார்: ''அது யார்னா - அது யார்னு நான் சொல்லணும்னா - யெஸ்.. அடுத்த வாரிசுதாரர் ப்ரின்ஸ் நிக்கோலஸாத் தானிருக்கணும்.''

''ஆஹ்!'' என்றார் பேட்டில். ''அந்த நிக்கோலஸ் என்பது யார்?''

''ப்ரின்ஸ் மைக்கேலுக்கு அடுத்து வரும் முதல் உறவு - வாரிசு.''

''ஆஹ்!'' என்றார் பேட்டில் மீண்டும். ''எனக்கு ப்ரின்ஸ் நிக்கோலஸ் பற்றிய முழு விவரங்களும் தெரிஞ்சாகணும். அதிலும் குறிப்பா அவர் இப்ப எங்கே எப்படி இருக்கார் என்பது பற்றி, விரிவா.''

''அவரைப் பற்றி பெருசா விஷயங்கள் எதுவும் தெரியலே'' என்றார் லொமெக்ஸ். ''இளையவரா இருந்தப்போ ரொம்ப விசித்திரமான புதுமையான ஐடியாக்களோட வளைய வந்தவர் அவர். ஸோஷலிஸம்... சுதந்திரம். அவருடைய அந்தஸ்துக்கு ஒத்தே வராத மாதிரி ரொம்பவும் நடந்துக்கிட்டார். ஏதோ ஒரு மிருகத்தனமான சாகசத்துக்காக அவர் ஆக்ஸ்ஃபோர்டிலிருந்து அனுப்பப்பட்டதா நம்பறேன். காங்கோவில் ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி அவர் இறந்துட்டதா ஒரு புரளியிருக்கு.

கவனிக்க. அது வெறும் புரளியாவேதான் ஆகிடுச்சு. யெஸ். ரெண்டு மாதங்களுக்கு முன்னாடி ராஜ விசுவாசிகளின் மறுப்புகள் கிளம்பினவுடனே அவர் வந்திருக்கார்.''

''அப்படியா?'' என்றார் பேட்டில். ''எங்கே வந்தார் அவர்?''

''அமெரிக்காவில்.''

''அமெரிக்கா!''

பேட்டில் ஒரு குறிப்பு வார்த்தையை எடுத்து ஐஸக்டீனுக்கு வீசினார்: ''ஆயில்?''

நிதி நிர்வாகி ஒப்புதலாய் தலையசைத்தார்.

''அங்கேயிருந்து பேசினார். *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* மக்கள் ராஜா ஒருத்தர் வேணும்னு முடிவு பண்ணினா ப்ரின்ஸ் மைக்கேலை விட அவரைத்தான் அதிகம் தேர்ந்தெடுப்பாங்க என்று பேசினார். தான் கருணை மிகுந்தவன்... புதுமைக் கொள்கைகளில் பிடிப்புள்ளவன் என்பதாலேனு பேசினதுக்கு விளக்கம் வேறு. விடுதலை குறித்த அவருடைய இளமைக்கால பார்வைகள் பற்றியும் சுதந்திரம் எனும் ஐடியாவில் தனக்கிருக்கும் கனிவுகள் பற்றியும் மற்றவர்களின் கவனத்தைத் திருப்பினார். நிதி சார்ந்து உதவுவோருக்கு பிரதி உபகாரமா சில எண்ணெய் கிணறுகளில் சலுகைகள் தரப்படும்னார்.''

எவ்வித உணர்ச்சிகளையும் முகத்தில் காட்டாத தனது குணாதிசயத்தை ஒத்தி வைத்துவிட்டு ஒரு நீண்ட விஸில் ஒன்றினை அடித்தார் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில். ''அப்படியா விஷயம்'' என்றார். ''இதுக்கு இடையில் இந்த ராஜவிசுவாசிகள் ப்ரின்ஸ் மைக்கேலுக்கு ஆதரவு தரானுங்க. இதனால நிச்சயம் அவர் மேலோங்கி வந்துடுவார்னு ஒரு நிலைமை உருவாகுது. இந்த சமயத்துல இது நடக்குது!''

''அப்படினா நீங்க இதுக்குக் காரணும்னு...'' என ஜார்ஜ் ஆரம்பித்தார்.

உடனடியாய் இடைமறித்து, ''நடந்திருப்பது பெரிய உடன்படிக்கை'' என்றார் பேட்டில். ''மிஸ்டர் ஐஸக்டீன் அப்படித்தான் சொல்றார். அவர் பெரிய பேச்சுவார்த்தைனு குறிப்பிடுவது, நிச்சயமா ஒரு பெரிய பேச்சுவார்த்தைதான்னு நானும் சொல்வேன்.''

''தாமதிக்காம பிடிக்க வேண்டிய பழிக்கஞ்சாத மாபாதகக் கும்பல்கள் எல்லா காலகட்டங்களிலும் இருக்கு'' என்றார் ஐஸக்டீன். ''உங்க

நாட்டுக்கு ஏதாவது ஒரு மகத்தான சேவை பண்ணினதா இருக்கணும்னா, சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில்... முதல்ல யார் ப்ரின்ஸ் மைக்கேலைக் கொன்னதுனு கண்டுபிடியுங்க, ப்ளீஸ்.''

''ஒரு விஷயம் எனக்கு பெரும் சந்தேகமான ஒரு சமாச்சாரமா படுது'' என்றார் ஜார்ஜ். ''ஏன் மைக்கேலோட அந்த அந்தரங்கக் காரியதரிசி - கேப்டன் ஆன்ரஸி - நேற்று இவர் கூட வரலே?''

''இதைப் பற்றி நான் விசாரிச்சேன்'' என்றார் பேட்டில். ''ரொம்ப சிம்பிளான சமாச்சாரம்தான். ப்ரின்ஸ் மைக்கேலின் சார்பாக அடுத்த வார இறுதி சந்திப்புக்கு ஏதோ ஒரு பெண்ணோட ஏற்பாட்டுக்காக அவர் சிடியிலேயே தங்கும்படி ஆகியிருக்கு. இப்ப இருக்கிற சூழ்நிலையில இதெல்லாம் எதுக்குனு அவன் முகஞ்சுளிச்சிருக்கான். அவன் - என்னோட கணிப்புல - ஒதுங்கி ஒதுங்கியே போகும் ஒரு மனுஷன்.''

இதற்கு ''இருக்கலாம்'' என்றார் ஜார்ஜ். ''யெஸ், அவன் அப்படி இருக்கலாம்' என்றார் கனமாய்.

''ஆனா நாம கணக்குல எடுத்துக்க வேண்டிய வேறொரு சமாச்சாரம் இருக்குனு நினைக்கிறேன்'' என்றார் பேட்டில், சற்று தயக்கமாய். ''கிங் விக்டர் இங்கிலாந்துல இருக்கணும்.''

''கிங் விக்டர்'' – யாருடையது இந்த பெயர் என்பதை நினைவில் கொண்டு வர முகஞ்சுளித்து யோசித்தார் லொமெக்ஸ்.

''ஃப்ரெஞ்ச் குற்றவாளி, ஸார். பாரீஸ்லேந்து இவனைப் பற்றி எங்களுக்கு எச்சரிக்கை வந்திருக்கு.''

''ஆங், ஆங்'' என்றார் ஜார்ஜ். ''இப்ப நினைவுக்கு வருது. அவன் நகை திருடன், இல்லையா? இத்தனை ஏன், அவன் தான்..''

இங்கு அப்படியே நிறுத்தி விட்டார் அவர், முகத்தைக் கடுகடுப்பாய் வைத்துக் கொண்டு. கனப்பையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த லொமெக்ஸ், எதிரிலிருந்த ஜார்ஜுக்கு பேட்டில் தந்தி வேகத்தில் அனுப்பிய எச்சரிக்கை சமிக்ஞையை சரியான நேரத்தில் பிடிக்குமாறு நிமிரவில்லை... சில நொடிகள் காலந்தாழ்த்தி விட்டார். ஆனால், இருக்கும் இடத்தின் நுணுக்கமான அசைவுகளையும் மாற்றங்களையும் மோப்பம் பிடித்து விடவல்ல மனிதனான அவரால், சூழலில் முளைத்திருந்த இறுக்கத்தைப் புரிந்துக் கொண்டுவிட முடிந்தது.

''இனிமே நான் உங்களுக்கு இங்கே வேண்டாமே, லொமெக்ஸ்?'' என்று விசாரித்தார்.

''நோ. தேங்க் யூ, மை டியர்.''

''நான் திரும்பி லண்டனுக்கே, கிளம்பினா அது உங்க திட்டங்களைப் பாதிக்குமா, சூப்பரின்டெண்டெண்ட்?''

அதிகார நுணுக்கத்தாடு, ''அப்படித்தான் தோணுது'' என்றார் பேட்டில். ''நீங்க இப்ப கிளம்பினா, இதை அடையாளங் கண்டு இன்னும் சிலர் கிளம்பிட முயற்சிக்கலாம். அதை அனுமதிக்கவே முடியாது.''

''அதுவும் சரிதான்.''

அந்த மாபெரும் நிதி நிர்வாகி அறையை விட்டு வெளியேறினார், கதவை அவருக்குப் பின்னால் அறைந்து சாத்தியபடி.

''விசேஷமான பய, இந்த ஐஸக்டீன்'' என்று கடனுக்குச் சொல்வது போல சொன்னார் லொமெக்ஸ்.

''ரொம்பவும் சக்திமிகு பர்ஸனாலிட்டி'' என ஆமோதித்தார் பேட்டில்.

மீண்டும் மேலும் கீழுமாய் நடக்க ஆரம்பித்து விட்டார் ஜார்ஜ். ''நீங்க சொன்னது என்னை ரொம்பவும் கலங்கிடிச்சு'' என்று ஆரம்பித்தார். ''கிங் விக்டர்! அவன் ஜெயில்ல இருக்கானுமில்லே நான் நினைச்சுக் கிட்டிருக்கேன்.''

''சில மாசங்களுக்கு முன்னாடி வெளியே வந்துட்டான். ப்ரெஞ்சு போலீஸ் அவன் காலடியை ஒற்றி பின் தொடர்ந்துக்கிட்டே இருக் கணும்னு முடிவு செஞ்சது.. ஆனா அவனோ துளி சிரமமில்லாம அவங்க கிட்டேயிருந்து நழுவிட்டான். அவன் அப்படிப்பட்டன் தான் - கழுவும் மீன்களில் நழுவும் ரகம். எங்க துறை இதுவரை கண்டிராத அளவுக்கு, துளி கவலையில்லாம வாழும் ஒரு பயங்கரக் குற்றவாளி. ஏதோ ஒரு காரணத்தின் அடிப்படையில அவன் இங்கிலாந்துல இருப்பதா அந்தப் போலீஸ் படை நம்புது. இந்த அளவுக்கு அந்தத் தகவலை எங்களுக்கும் அது தெரியப்படுத்தியிருக்கு.''

''ஆனா அவன் இங்கே இங்கிலாந்துல உக்காந்துக்கிட்டு என்ன பண்ணிக்கிட்டு இருப்பான்?''

''அதைப் பற்றிச் சொல்ல வேண்டியது நீங்கதான், மிஸ்டர் லொமெக்ஸ்'' என்றார் பேட்டில் அழுத்தமாய்.

''என்ன சொல்றீங்க?... என்ன நினைக்கிறீங்க? ... அஃப்கொர்ஸ் அந்த கதையும் உங்களுக்குத் தெரியும். ஆஹ், யெஸ், உங்களுக்குத் தெரியும்னு எனக்குத் தெரியும். அந்த சமயத்துல நான் ஆபீஸ்ல இல்லே. ஆனா நடந்த அத்தனை கதையையும் நான் அப்போ லார்டாயிருந்த மறைந்த லார்ட் கிட்டேயிருந்து தெரிஞ்சுக்கிட்டேன். தாங்க முடியாத விக்னம், அது ஆங்.''

இதனை பிரதிபலிக்கும் விதமாய், ஒரே வார்த்தையில் ''கோஹினூர்'' என்றார் பேட்டில்.

''உஷ், பேட்டில்'' என்றார் ஜார்ஜ். சந்தேகமாய் அவரைச் சுற்றி ஒரு பார்வை பார்த்துவிட்டு. ''கெஞ்சிக் கேட்டுக்கறேன்... எந்தப் பேரையும் சொல்லாதீங்க, புண்ணியமா போகும். அதைப் பத்திப் பேசித்தான் ஆகணும்னா, ஜஸ்ட், *கோ* அப்படினு சொல்லுங்க, போதும்.''

சூப்பரின்டெண்டெண்ட் மரம் போல முகபாவம் கொண்டார்.

''இப்படியும் ஒரு சாத்தியக் கூறு இருக்கு - அவ்ளோதான். உங்க நினைவைக் கொஞ்சம் திருகி யோசிச்சீங்கன்னா, ஸார், அந்த நகையை ராஜாங்க விருந்தினர் ஒருத்தர் நாலு இடங்கள்ல பதுக்கி வெச்சிருக்கலாம் என்பது உங்க நினைவுக்கு வரும். அதுல *சிம்னீஸு*ம் ஒண்ணு. நீங்க சொன்னபடி சொல்லணும்னா - அந்த *கோ* காணாமப் போன மூன்றாவது நாள் கிங் விக்டர் கைது பண்ணப்பட்டிருக்கான். என்றாவது ஒரு நாள் அவனே அந்த நகை நோக்கி நம்மை இழுத்துப் போவான் என்பதுதான் எங்களோட நம்பிக்கை.''

''ஆனா *சிம்னீஸை* ஒரு டஸன் தடவை தலைகீழா உலுக்கப்பட்டு அலசியாச்சு.''

''யெஸ்'' என்றார் பேட்டில், விவேகமான ஊகத்தோடு. ''எங்கே தேடணும்னு ஒரு ஐடியாவே இல்லாம சும்மா தேடிக்கிட்டே இருப்பதுல எந்தப் பயனும் விளைவது கிடையாது. இப்போதைக்கு ஒண்ணுதான் ஊகிக்கலாம். அந்த நகையைத் தேடிக்கிட்டு கிங் விக்டர் இங்கே வந்திருக்கான். வந்த இடத்துல ப்ரின்ஸ் மைக்கேலைப் பார்த்து ஆச்சரியத்துப் போய் - போட்டுத் தள்ளிட்டான்.''

''இது சாத்தியமே'' என்றார் ஜார்ஜ். ''இந்தக் கொலைக்கான வெகு உசிதமான ஒரு தீர்வு.''

''அப்படி ஒரு உசிதமான உச்சத்துக்கு இப்போதைக்கு நான் போக விரும்பலே. இது சாத்தியமே அவ்ளோதான். இதை மீறி ஒண்ணும் கிடையாது.''

''ஏன் அப்படி?''

''ஏன்னா கிங் விக்டர் இதுக்கு முன்னாடி ஓர் உயிரை வாங்கினதா ரெக்கார்டே கிடையாது'' என்றார் பேட்டில் முக்கியப்படுத்தி.

''ஓ! ஆனா, அவனைப் போன்ற, ஒரு பக்கா கிரிமினல்..''

ஆனால் இதற்கு மறுப்பாய் ஏற்க முடியாது என்பது போல தலையசைத்து விட்டார் பேட்டில், ''குற்றவாளிங்களோட அடிப்படை குணாதிசயம் மாறாதது, மிஸ்டர் லொமெக்ஸ். இருந்தாலும் கூட..''

''ம்? என்ன?''

''இப்ப நான் ப்ரின்ஸோட பணியாளைக் கேள்விக் கேட்க விரும்பறேன். ஒரு காரணமாத்தான் அவனை நான் கடைசி ஆளா விட்டு வெச்சிருக்கேன். உங்களுக்கு ஆட்சேபணையில்லைனா அவனை இப்பவே நாம இங்கே வர வைப்போம், ஸார்.''

பேட்டிலின் முடிவினை முக்கியப்படுத்தி ஏற்றுக் கொண்டார். சூப்பரின்டெண்டெண்ட் மணியடித்தார். அதற்குப் பதிலாக வந்த ட்ரெட்வெல் முதலாளி சொன்ன கட்டளைகளை தாங்கிக் கொண்டு சென்றான்.

உடனடியாகவே நல்ல உயரமாகவும் துருத்தலான கன்ன எலும்புகளும் கொண்டிருந்த ஒரு நபரோடு திரும்பியிருந்தான் ட்ரெட்வெல். வந்தவனுடைய நீல விழிகள் ஒடுங்கி உள்வாங்கியது போலிருந்தன. பேட்டிலுக்கு சவால் விடும் தகுதியிலிருந்த அவன் முகம் - உணர்வு களற்று.

''போரீஸ் ஆங்கோ - கௌஃப்?''

''யெஸ்.''

''நீதான் ப்ரின்ஸோட அந்தரங்க உதவியாளனா?''

''நான்தான் மாண்புமிகு ராஜாவின் அந்தரங்க உதவியாளனா வந்தவன் - யெஸ்.''

''உன்னோட ஐயா நேற்று ராத்திரி கொலை பண்ணப்பட்டிருப்பது உனக்குத் தெரியுமா?''

ஒரு நீண்ட பெருமூச்சு... காதருகில் வட்டமடிக்கும் ஒரு பெரிய ஈயின் உஸ்ஸ்ஸ் போன்ற ஒரு பெருமூச்சுதான் அவனிடமிருந்து அதற்குப் பதிலாய் வந்தது. இது ஜார்ஜுக்கு ஒரு வித எச்சரிக்கையை உண்டுபண்ண அவர் மெல்லமாய் ஜன்னல் பக்கமாய் நழுவி விட்டார்.

''கடைசியா நீ ஐயாவைப் பார்த்தது எப்போது?''

''பத்தரை மணிக்கு மாண்புமிகு மகாராஜா படுக்கக் கிளம்பிப் போனார். அவருக்கு அடுத்த அறையில் நான் தூங்கினேன். இன்னொரு கதவு வழியா கிளம்பி கீழேயிருக்கும் ஓர் அறைக்கு அவர் போயிருக்கணும். அவர் அப்படிப் போனதை நான் கேட்கலை. மருந்து சாப்பிட்டதால இருக்கலாம். ஆக, நான் ஓர் விசுவாசமற்ற காரியதரிசியா இருந்திருக்கேன். என் மகாராஜா எழுந்தபோது நான் தூங்கிக்கிட்டு இருந்திருக்கேன். ச்சே, நான் நாசமாப் போக.''

அதிசயித்துப் போனவராய் அவனை முறைத்துக் கொண்டிருந்தார் ஜார்ஜ்.

''நீ உன் முதலாளி மேல அத்தனை பாசம் வெச்சிருந்தியா?'' என்றார் பேட்டில், அவனை நெருக்கமாய் கண்காணித்தபடி.

போரீஸின் நடவடிக்கைகள் வலி மிகுந்ததாய் மாறின. இருமுறை விழுங்கிக் கொண்டான் அவன். பிறகு அவனது குரல் வெடித்தது, கோபமாயும் உணர்ச்சி வெடிப்போடும்.

''இங்கிலீஷ் போலீஸான உங்களுக்கு இதை நான் சொல்லிக்கிறேன் ஸார். அவருக்காக நான் இறந்திருப்பேன்! ஆனா இப்ப அவர் காலமாகிட்டு நான் வாழ்ந்துக்கிட்டிருப்பதால... இனி என் கண்கள் துஞ்சாது, இதயம் துடிக்காது - பழி வாங்கித் தீரும் வரை. மோப்ப நாயைப் போல நான் தேடி அலையப் போறேன். அப்புறம் அவனை நான் பிடிப்பேன், ஆஹ், அப்ப...'' - அவனுடைய கண்கள் ஒளி கொண்டன. திடீரென்று அவன் முதுகில் மறைத்து வைத்திருந்த நீளமான கத்தியை உருவியெடுத்து அவன் அதை அறை முழுக்கத் தெரியும்படி காற்றில் ஆட்டியாட்டிக் காட்டினான். ''ஒரேயடியா அவனை நான் கொன்னுட மாட்டேன். - நோ, நெவர். மொதல்ல அவன் மூக்கை நறுக்குவேன். அப்புறம் காதுகள். பிறகு கண்களை அவிப்பேன். அப்புறமாத்தான் அந்தப் பாழும் நெஞ்சுக்குள்ளே கத்தியைப் பாய்ச்சுவேன்.''

துரிதாய் கத்தியை எடுத்தயிடத்திலேயே வைத்த அவன், திரும்பி, வெளியேறி விட்டான். சாதாரணமாகவே துருத்திக் கொண்டிருக்கும் ஜார்ஜ் லொமெக்ஸின் கோலிக்குண்டுக் கண்கள் இப்போது முகத்தி லிருந்து பிய்த்தெறிந்து வெளியே விழுந்து விடுவது போல துருத்திக் கொண்டன.

''சுத்தமான *ஹெறர்ஸோ -ஸ்லோவாக்கியன்*'' என்றார் அவர். ''நாகரீகம் தெரியாத ஆளுங்க, கற்காலத்து ஆசாமிங்க.''

சூப்பரின்டெண்டெண்ட் ஜாக்கிரதையாய் எழுந்துக் கொண்டார். ''ஒண்ணு இந்த ஆள் உண்மையானவனா இருக்கணும். இல்லேனா நான் இதுவரை கண்டிராத ஆகாசப் புளுகனா இருக்கணும்'' என்றார். ''ஒருவேளை முதல் வகையா இருந்தா, ப்ரின்ஸ் மைக்கேலைக் கொன்ன கொலைகாரனை இந்த மனித பட்சியிடமிருந்து இறைவன்தான் காக்கணும்.''

அத்தியாயம் - 15

# ஃபிரெஞ்சு அந்நியன்

குளம் நோக்கிக் கீழிறங்கிப் போன பாதையில் விர்ஜீனியாவும் .ஆண்டனியும் நெருக்கமாய் நடந்து போனார்கள். வீட்டை விட்டுக் கிளம்பிய பிறகு சில நிமிடங்களுக்கு இருவரும் ம்வுனமாகவே இருந்தார்கள். சிறு சிரிப்பை வெளியிட்டபடி அந்த மவுனத்தை முதலில் உடைத்தது விர்ஜீனியாதான்.

''டியர்''என்றழைத்த அவர் ''இது படுபயங்கரமானது, இல்லையா?'' என்றார். ''உன்கிட்டே சொல்ல வேண்டிய விஷயங்களை வண்டி வண்டியா தூக்கிக்கிட்டும் - மேலும் - உன்கிட்டேயிருந்து விஷயங்களைக் கேட்பதற்கும் நான் துடிச்சிக்கிட்டு நிக்கறேன். ஆனா, எங்கே எப்படி துவங்குவதுனு தெரியாம! முதல்ல'' - இங்கு குரலை மிகவும் தாழ்த்திக் கொண்டார் - ''அந்த பாடியை நீ என்ன பண்ணே? இப்படி கேட்பதே எவ்ளோ பயங்கரமாயிருக்கு! ஒரு கொலைக் குற்றத்துல நான் போய் ஆழமா திணிக்கப்படுவேன்னு நான் கனவுலகூட நினைச்சது கிடையாது.''

''உங்களுக்கு இது ஒரு புத்தம்புது பரபரப்பான அனுபவமா இருக்கு'' என ஒப்புக் கொண்டார் ஆண்டனி.

''உனக்கு இல்லையா?''

''வெல், இதுக்கு முன்னாடி ஒரு பொணத்தை நான் அப்புறப்படுத்தி யதில்லே - யெஸ்.''

''அதைப்பத்தி நீ எனக்குச் சொல்லு.''

முன்னிரவில் ஆண்டனி கடைபிடித்த முறையைப் படிப்படியாய் சுருக்கமாகவும் நறுக்கென்றும் சொல்லி முடித்தார். விர்ஜீனியா கவனமாகக் கேட்டார்.

அவர் முடித்தபோது, ''நீ படுபுத்திசாலியப்பா'' என்றார் ஆமோதிப்பாய். ''பாடிங்டன் ஸ்டேஷன் போகும்போது அந்த ட்ரங்க் பெட்டியை நான் எடுத்துக்கிறேன். நேத்து சாயங்காலம் முழுக்க நீங்க என்ன பண்ணினீங்கன்னு ஒரு கேள்வி எழுந்தால்தான் விபரீதமே முளைக்கும்.''

''அது தலைதூக்கும்னு எனக்குப் படலே. நேற்று பின்னிரவு வரைக்கும்... ஏன் சொல்லப்போனா விடிகாலை வரையிலும் கூட அந்த பாடி கண்டெடுக்கப்பட்டிருக்காது. அப்படி நடந்திருந்தா இதுக்குள்ளே காலை செய்தித்தாள்கள்ல அந்த சேதி வந்திருக்கும். எத்தனையோ டிடெக்டிவ் கதைகள்ல வேணும்னா டாக்டருங்க கறாரா செத்த நேரத்தைச் சொல்லலாம்... ஆனா, இந்த நிமிஷத்துலதான் ஒருத்தன் செத்தான்னு மேஜிக்காரன் போல துல்லியமா எந்த டாக்டராலேயும் சொல்லிட முடியாது. ஸோ, அவனோட மரண நேரம் தோராயமாகவேதான் இருக்கும். ஸோ, நான் நேத்து ராத்திரி முழுக்க எங்கேயிருந்தேன் எனும் கேள்விக்கே இடமில்லாம ஆகுது இல்லே?''

''எனக்கும் தெரியும். இப்படியெல்லாம் லார்ட் கேட்டர்ஹாமும் என்கிட்டே பேசிக்கிட்டிருந்தார். சரி... அந்த ஸ்காட்லாண்டு யார்ட் ஆளு உன் மேல குற்றமில்லைனு ஒத்துக்கறான், இல்லே?''

இதற்கு ஆண்டனி உடனே மறுபதில் தரவில்லை.

''அவனைப் பார்த்தா அத்தனை கூர்மையானவனாபடலே!'' என விர்ஜீனியாவே தொடர்ந்தார்.

''இதைப் பற்றி எனக்குத் தெரியாது'' என்று மெதுவாய் பேசலானார் ஆண்டனி. ''சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில்கிட்டே எவ்விதமான சந்தேகமும் இல்லாதது போலத்தான் வெளியே பார்க்கத் தெரியுது. என் மேல குற்றமில்லை என்பதுல அவர் திருப்தியடைஞ்சிருப்பது போலத்தான் தோணுது - ஆனா எனக்கு நிச்சயமா தெரியலே. என்கிட்டே கொலைக்கான இலக்கு எதுவும் இல்லைனு வெளிப்படையா தெரியும் உண்மையில் இப்போதைக்கு அவர் கட்டப்பட்டிருக்கார்.''

''வெளிப்படையா தெரிஞ்சாதானா? உனக்கு அறிமுகமில்லாத ஒரு வெளிநாட்டு இளவரசைக் கொல்ல, சாத்தியமான என்ன காரணத்தை உன்கிட்டே அவரால பார்க்க முடியும்?''

கேட்டவரின் மீது கூரான பார்வையைப் பாய்ச்சினார் ஆண்டனி. "நீங்க ஏதோவொரு சமயத்துல ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவில இருந்திருக்கீங்க, இல்லையா?" கேட்டார்.

"யெஸ். தூதரகத்துல என் கணவரோட ரெண்டு வருஷமிருந்தேன்."

"அது, ராஜாவும் ராணியும் கொல்லப்படுவதற்கு, ஜஸ்ட் முன்னாடி, ரைட். நீங்க எப்பவாவது இளவரசர் மைக்கேல் ஒப்லோவிட்ச்சை எதிர் கொண்டதுண்டா?"

"மைக்கேல்? யெஸ். நடந்ததுண்டு. தாள முடியாத பிசாசு அவன்! ராஜவுபச்சாரத்தோட நடக்கணும்னான் - எதை தெரியுமா? நான் அவனைக் கல்யாணம் கட்டிப்பதை!"

"அப்படியா? உண்மையாவா கேட்டார்? உங்களோட இருக்கிற நிகழ்கால கணவனை என்ன பண்ணலாம்னு நீங்க சொன்னீங்க?"

"ஓ, அதுக்கு கையோட ஒரு நீளமான திட்டத்தையுமில்லே அவன் வெச்சிருந்தான்."

"அந்த அற்புதமான முன்மொழிதலுக்கு உங்களோட ரியாக்ஷன்?"

"விளையாடறியா?" என்றார் விர்ஜீனியா. "இதுல நாசூக்கா தானே பேசியாகணும். ஓங்கி ஓர் அறை விட்டு அனுப்பலியே தவிர, நறுக்குனுதான் சொல்லியனுப்பினேன். மனசால காயப்பட்டார். ஆமாம், மைக்கேல் பற்றி திடீர்னு என்ன இத்தனை ஈடுபாடு?"

"எனக்கே உரிய வழியில சில விஷயங்களை அடைய முயற்சித்துக் கிட்டிருக்கேன். ஆங்.. நீங்க இன்னும் கொலையான மனுஷனை சந்திக்கலேனு நினைக்கிறேன்."

"இல்லே."

"பாடியையும் நீங்க இன்னும் பார்க்கலே?"

விர்ஜீனியா, இப்போது அவரை மிக ஆர்வமாய் பார்த்தபடி, மறுப்பாய் தலையசைத்தார்.

"அதை நீங்க பார்க்க அனுமதி கிடைக்கும்னு நினைக்கிறீங்களா?"

"லார்ட் கேட்டர்ஹாம் போன்ற பெரும் புள்ளியுடைய சிபாரிசின் பேரில், யெஸ், என்னால அதைப் பார்க்க முடியும். ஏன் கேட்கிறீங்க? பார்த்தே ஆகணுமா என்ன?"

பயந்து போய், ''ஓ காட் நோ'' என்றார் ஆண்டனி. ''கவனியுங்க. இதுதான் விஷயம். கவுண்ட் ஸ்டான்லிலாஸ் என்பது *ஹெர்ஸோ-ஸ்லோவாக்கியா* ப்ரின்ஸ் மைக்கேலின் மறைமுகப் பெயர்.''

விர்ஜீனியாவின் கண்கள் மிக அகலமாய் அகண்டன. ''ஐ ஸீ'' என்றார். திடுமென அவருடைய முகத்தில் கோமாளித்தனமான ஒரு பக்கச் சிரிப்பு விளைந்தது. ''என்னைப் பார்ப்பதைத் தவிர்ப்பதற்காகவே மைக்கேல் அவரோட அறைக்குப் போயிட்டார்னா சொல்ல வரே?''

''அதுபோல ஏதோ ஒண்ணுதான்'' என ஒப்புக் கொண்டார் ஆண்டனி. ''நீங்க *சிம்னீஸ்* வருவதை ஒருத்தன் தடுக்க முயற்சித்திருக்கான்னா அதுக்கான காரணம் உங்களுக்கு *ஹெர்ஸோ -ஸ்லாவாக்கியா* பற்றி தெரிஞ்சிருப்பதுல இருப்பதாதான் படுது. இங்கே ப்ரின்ஸ் மைக்கேலை நேருக்கு நேரா பார்த்திருக்கும் ஒரே நபர் நீங்கதான்னா நினைக்கிறீங்க?''

இதற்கு திடுமென விர்ஜீனியா கேட்டார்: ''இங்கே கொலையாகி யிருக்கும் நபர், நடப்பட்ட ஒரு புதிர்னா நினைக்கிறே?''

''அப்படியொரு சாத்தியக்கூறு என் மூளையைக் கடந்திருக்கு. பாடியைக் காட்டும்படி உங்களால லார்ட் கேட்டர்ஹாமை ஒட்ட முடியும்னா இதுக்கான பதிலை நாம உடனடியா அடையலாம்.''

''அவர் சுடப்பட்டிருப்பது 11.45க்கு'' என சிந்தனையாய் சொன்னார் விர்ஜீனியா. ''அந்தத் துண்டுச் சீட்டுல போடப்பட்டிருந்த நேரம், ஓ... இந்த எல்லா சமாச்சாரமும் பயங்கர மர்மங்களாயிருக்கு.''

''ஆங், இது எனக்கு ஒண்ணை நினைவுபடுத்துது. அதோ, அந்த ஜன்னல்... உங்க அறை ஜன்னலா? மீட்டிங் பகுதியிலிருந்து ரெண்டாவதா இருக்கும், அதோ அந்த ஜன்னல்?''

''நோ, என்னோட அறை அடுத்த பக்கத்துல இருக்கு. ஏன்?''

''ஒரு குண்டு வெடிசத்தம் கேட்டதா நினைச்சுக்கிட்டு நான் திரும்பி நேற்று ராத்திரி நடந்துக்கிட்டிருந்தபோது, அந்த அறையில விளக்கு டக்குனு எரிஞ்சுது.''

''என்ன விசித்திரம்! அந்த அறையில யார் இருக்காங்கன்னு எனக்குத் தெரியாது. ஆனா, அந்த விபரத்தை என்னால பண்டில் மூலமா அடைய முடியும். அப்ப மற்றவங்களும் குண்டோசையைக் கேட்டிருக்கணுமே?''

''அப்படியிருந்தாலும் - அதை சொல்லி ஒத்துக்க யாரும் முன்வரலே. வீட்டிலிருந்த ஒருவர் கூட குண்டு ஒண்ணு வெடிச்ச சப்தத்தைக் கேட்கலேனு பேட்டில் மூலமா நான் தெரிஞ்சுக்கிட்டேன். என்கிட்டே யிருக்கும் ஒரே ஒரு க்ளூ இது மட்டுந்தான். இதை வெச்சுக்கிட்டு என்னத்தைப் பண்ணுவது? இப்போதைக்குத் தெரியலைனாலும் நான்விடப் போறதில்லே, இதை தொடரப் போறேன்.''

''இது விசித்திரமாயிருக்கு, யெஸ்'' என்றார் விர்ஜீனியா சிந்தனை யுடன்.

குளக்கரையிலிருந்த ஒரு சின்ன படகுத் துறைக்கு இருவரும் தற்சமயம் வந்திருந்தார்கள். அதை நோக்கி பேசியபடி இருவரும் இறங்கினார்கள். ''இப்போ முழு கதைக்கும் போவோம்'' என்றார் ஆண்டனி. ''ஸ்காட்லாண்டு யார்டு ஆளுங்க, அமெரிக்கன் விருந்தாளிங்க, காதைத் தீட்டிக்கிட்டு அலையும் வேலைக்காரனுங்க... இவனுங்க எல்லார் காதுகளிலிருந்தும் தப்பிக்க, ஒரு படகைப் பெடல் பண்ணிக்கிட்டே குளத்தை ஒரு சுற்று சுற்றி வருவோம்.''

''லார்ட் கேட்டர்ஹாம்கிட்டேயிருந்து நான் ஒரு சமாச்சாரம் கேள்விப்பட்டேன்'' என்றார் விர்ஜீனியா. ''ஆனா போதுமான அளவுக்கு தெரிஞ்சுக்க முடியலே. இதை ஆரம்பிக்க முதல் கேள்வி, சொல்லு, நீ யார்? ஆண்டனி கேடா அல்லது ஜிம்மி மேக்ரத்தா?''

அன்றைய காலைப் பொழுதில், இரண்டாவது முறையாக, விர்ஜீனியாவுக்கு கொடுக்கப்படுவதால் எவ்வித எடிட்டிங்குமின்றி, ஆறு வாரங்களாய் கடந்திருக்கும் அவருடைய வாழ்க்கை நிகழ்வுகளை விரித்துப் போட்டார் ஆண்டனி. மிஸ்டர் ஹோம்ஸ் என்பவரை அடையாளம் கண்ட ஆச்சரியமான நொடிப் பொழுது வரை சொன்னார்.

''ஆங், ஆங், மிஸஸ் ரேவல்'' என்று கடைசியில் சொன்ன ஆண்டனி ''நான் உங்களோட பழைய நண்பர்னு உங்க மனச்சாட்சிக்கு விரோதமா நீங்க என்னை அறிமுகப்படுத்திக்கிட்டதுக்கு நான் இன்னும் உங்களுக்கு நன்றியே தெரிவிக்கலே பார்த்தீங்களா?'' என்றார்.

''என்ன சொல்றே நீ! நீ என்னோட பழைய ஃப்பிரண்டேதான். ஒரு பொணத்தை அப்புறப்படுத்தும்படி உன்னை ஏவி விட்டுட்டு மறு தடவைப் பார்க்க நேரும்போது மூஞ்சியைத் திருப்பிக்கும் ரகம்னா என்னை நினைச்சே? நெவர்!''

இங்கு சற்று தயக்கமாய் நிறுத்தினார் அவர். பின், ''இந்தக் கூத்தைப் பற்றியெல்லாம் எனக்கு ஒரே ஒரு விஷயம் மட்டும் பளிச்சினு தெரியுது. இது தெரியுமா உனக்கு?'' என்றார். ''இன்னும் நாம கண்டுபிடிக்காத அந்த வாழ்க்கை சரிதம் பற்றி மேலும் சில எக்ஸ்ட்ரா மர்மங்களிருக்கு..''

''நீங்க சரினே எனக்குப்படுது'' என்று ஆமோதித்தார் ஆண்டனி. ''என்கிட்டே நீங்க ஒரு சமாச்சாரத்தை சொல்லிவிடுவது நல்லதுனும் எனக்குப் படுது'' என தொடர்ந்தார்.

''என்னது அது?''

''நேற்று உங்ககிட்டே நான் ஜிம்மி மேக்ரத் எனும் பெயரை சொன்ன மாத்திரத்தில் அப்படி ஆச்சரியப்பட்டுப் போன மாதிரி ஏன் நீங்க ஆனீங்க? அந்தப் பெயரை நீங்க ஏற்கெனவே கேள்விப்பட்டிருக்கீங்களா?''

''கேள்விப்பட்டிருக்கேன், ஷெர்லாக் ஹோம்ஸ்! ஜார்ஜ்... என் உறவு ஜார்ஜ் லொமேக்ஸ் - என்னைப் பார்க்க அன்னிக்கு வந்தார். வந்து பற்பல பைசா பெறாத சமாச்சாரங்களை ரொம்ப பயங்கரமானவை என்பதுபோல சொன்னார். ப்பூ அவரோட திட்டம் இதுதான்: நான் இங்கே வந்து அந்த மேக்ரத் எனும் ஆளை மயக்கி அவன்கிட்டேயிருந்து அந்த வாழ்க்கை சரிதத்தைச் சுட்டுக்கிட்டு வந்துடணும். இப்படி நேரடியா விஷயத்தைத் தொறந்து போடலே அவர். இங்கிலீஷ்காரிங்க பற்றி நிறைய அவதூறுகள் பேசி எனக்கு அவரோட திட்டத்தை மறைமுகமா புரியும்படி செஞ்சார். இப்படித்தான் ஜார்ஜ் - இதுபோல ஏதாவது அழுகிப் போன ஐடியா தான் அவர் மண்டையில வரும். நானும் விடாம மேலும் பல தகவல்களைத் தெரிஞ்சுக்கிட்டாதான் ஆச்சுனு முன்னேறினேன். அது அவருக்குப் பிடிக்கலே. அறுத்துட்டுக் கிளம்பிட்டார்.''

ஆண்டனி முழுவதையும் கவனித்துக் கொண்டேயிருந்தார்.

பிறகு விர்ஜீனியா, ''இப்ப நான் உன்னை ஒரு கேள்விக் கேட்கணும்'' என்றார். ''அந்தக் கடுதாசிகளை எழுதினது நான் இல்லேனு சொன்னபோது, அதுக்கு நீ நான் எழுதலை என்பது உனக்குத் தெரியும்னே. அப்படியெல்லாம் எதுவும் உனக்குத் தெரிஞ்சிருக்க வாய்ப்பில்லே.''

''ஓ, யெஸ், என்னால முடியும்'' என்றார் ஆண்டனி புன்னகைத்தபடி. ''மனித உளவியலைக் கணக்கிடும் அற்புத ஞானம் எனக்கிருக்கு.''

''ஓ, அப்படினா என்னோட கோடி பெறும் நல்ல புள்ளைத் தளத்தின் மேல உனக்கு நம்பிக்கை இருக்குனு...''

ஆனால் இப்படி போன வாக்கியத்தை மறுத்து வேக வேகமாய் தலையசைத்தார் ஆண்டனி. ''அப்படியெல்லாம் நீங்களா நினைச்சுக் காதீங்க, மிஸஸ். உங்களோட நல்ல புள்ளைத் தனமெல்லாம் நிஜந்தானா என்பது பற்றி எனக்கு எள்ளளவும் தெரியாது. உங்களுக்கும் ஒரு காதலன் இருக்கலாம். அவனுக்கும்நீங்க கடுதாசி போடலாம். ஆனா நீங்க உங்களை ஒருத்தன் ப்ளாக் மெயில் பண்ணுமளவுக்கு தணிஞ்சு போகும் ரகம் கிடையாது. அந்தக் கடித்த்துல இருக்கும் விர்ஜீனியா ரேவல் ஒரு பயந்தாங் கொள்ளி. நீங்க முட்டியே கொன்னுடும் ரகம். ஆஹ்!''

''யாரந்த ஒரிஜினல் விர்ஜீனியா ரேவலா இருக்கும்னு எனக்கு ஆச்சரியமாயிருக்கு. எங்கே இருப்பா அவ! இதை நினைக்கும் போது ஏதோ என்னோட ரெட்டை வேற இடத்துல வசிக்கிறா மாதிரியான ஓர் உணர்வு எனக்குள்ளே எழுது.''

ஆண்டனி ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார். ''இதுல ஒரு கடிதம் சிம்னீஸ்லேர்ந்து எழுதப்பட்டதுனு உங்களுக்குத் தெரியுமா?'' - கடைசியாய் கேட்டார்.

''வாட்?'' என்ற விர்ஜீனியா முழுக்கவும் துணுக்குற்றுப் போயிருந்தார். ''அது எப்ப எழுதப்பட்டிருந்தது?''

''அதுலதேதி போடப்படலே. ஆனா இது விசித்திரமாயிருக்கு, இல்லே?''

''வேற எந்த விர்ஜீனியா ரேவலும் *சிம்னீஸ்ல* தங்கினதுல்லேனு நான் நிச்சயமா சொல்வேன். இப்படியொரு பெயர் ஒற்றுமையைப் பற்றி பண்டில் இல்லேனா லார்ட் கேட்டர்ஹாம் விளக்கலாம்..''

''யெஸ், இதுல ஏதோ ரகசியமிருக்கு. ஒண்ணு தெரியுமா மிஸஸ் ரேவல்... இந்த இன்னொரு மிஸஸ் விர்ஜீனியா ரேவல் எனும் பாத்திரத்தின் மேலேயே நான் கொஞ்சம் கொஞ்சமா நம்பிக்கை இழந்துக்கிட்டு வரேன் - யெஸ்.''

''கழுவுற மீன்ல நழுவுற மீனாயிருக்கா, அவ'' என ஏற்றுக் கொண்டார் விர்ஜீனியா.

''அதுவும் அசாதாரண முறையில. அக்கடிதங்களை எழுதின அந்த நபர் வேணும்னே உங்க பெயரை உபயோகப்படுத்தியிருக்கான்னு நான் நம்ப ஆரம்பிச்சிருக்கேன்.''

''ஆனா ஏன்?'' - அலறினார் விர்ஜீனியா. ''எதுக்காக, இப்படியொரு வேலையை அவன் பண்ணனும்?''

''ஆஹ், இப்ப கேள்வியே இதுதான். இதெல்லாம் பற்றியும் நாம கண்டுபிடிக்க வண்டி வண்டியா ரகசியங்கள் காத்திருக்கு, மிஸஸ் ரேவல்.''

இப்போது திடுமென்று கேட்டார் விர்ஜீனியா: ''மைக்கேலைக் கொன்னது யார்னு நீங்க நெஜமா நினைக்கிறீங்க? சிகப்புக் கைகூட்டாளிங்க?''

நம்பிக்கையற்ற தினுசில், ''அவனுங்க, பண்ணியிருக்கலாம்னு எனக்கு ஒரு நெனப்பு இருக்கு'' என்றார் ஆண்டனி. ''காரணமற்ற கொலைகள் அவனுங்களுடைய வழக்கம்.''

''ஊஃப். இப்போதைக்கு நாம வேலையில எறங்குவோம். கம் ஆன். லார்ட் கேட்டர்ஹாமும் பண்டிலும் ஒண்ணா பொடி நடை நடப்பதைப் பார்த்தேன். செத்துத் தொலைஞ்சிருப்பது மைக்கேலா இல்லையா என்பதை இப்ப முதல்ல நாம தெரிஞ்சுப்போம்.''

ஆண்டனி படகினைக் கரை நோக்கி மிதிக்க அதுவும் உடனடியாய் கரை சேர்ந்தது. சில நொடிகளில் இருவரும் லார்ட் மற்றும் அவருடைய புதல்வி ஆகியோருடன் சேர்ந்திருந்தனர்.

''லஞ்ச் இன்னிக்கு லேட்டாகுது'' என்றார் லார்ட், சோகமான குரலில்.

''பேட்டில் குக்கூட ஏதாவது வாதாடி அவன் மூடை அவுட் பண்ணியிருக்கணும்னு நினைக்கிறேன்.''

சொன்ன ஆண்டனியை, ''இது என்னோட ஃபிரண்ட், பண்டில்'' என அறிமுகப்படுத்தினார் விர்ஜீனியா. ''இவரை நல்லா கவனிச்சுக்கணும்.''

ஆண்டனியையே கொஞ்ச நேரம் கவனித்து முடித்த பண்டில், பிறகு அவர் அங்கேயே இல்லை எனும் தொனியில் விர்ஜீனியாவிடம் ஒரு காமெண்ட் அடித்தாள். ''எங்கேயிருந்து இப்படி வாட்டசாட்டமான அழகனுங்களை நீங்க பிடிச்சுக்கிட்டு வரீங்க, விர்ஜீனியா? பொறாமையாயிருக்கு.''

''நீ வேணும்னா அவனை வெச்சுக்கலாம்'' என்றார் விர்ஜீனியா தாராளமாய். ''எனக்கு உங்கப்பா போதும்.''

வீழ்த்தப்பட்ட அந்தப் பெரிய மனிதனைப் பார்த்து சிரித்தார் அவர்... அவர் கையிடுக்கில் தன் கையை நுழைத்துக் கொண்டார்... பிறகு இருவரும் ஒன்றாய் நகர்ந்துப் போனார்கள்.

''நீங்க பேசுவீங்களா?'' என்றாள் பண்டில். ''இல்லே இறுக்கமா அமைதியா இருந்து விடும் ரகமா?''

''பேசுவியானா கேட்டே?'' என்றார் ஆண்டனி. ''நான் பெனாத்துவேன், பேசியே கொல்லுவேன். தானா பேசிக்கிட்டு திரியும் பைத்தியக்காரனைப் போல விடாது பேசுவேன். சில சமயங்களில் நான் கேள்விகள் கூட கேட்பேன்.''

''உதாரணத்துக்கு?''

''அந்தக் கடைசியிலிருந்து வரும் ரெண்டாவது ரூம்ல தங்கியிருப்பது யார்?''

பேசிக் கொண்டிருக்கும்போதே அதனைச் சுட்டிக் காட்டினார் அவர்.

''எத்தனை ஓர் அசாதாரண கேள்வி! ப்பூ!'' என்றாள் பண்டில். ''நீங்க எனக்குள்ளே ரொம்ப எதிர்பார்ப்பை உண்டாக்கிறீங்க. ஓ... அது.. அந்த அறை... ஓகே - அது மேடம் ப்ரன்'னுடைய ரூம். ஃப்ரெஞ்சு பணியாள். என்னோட இளைய சகோதரிங்களை சரியா அடக்கி வெக்க அவ இருக்கா. அதுங்க பேர் - துளசி மற்றும் டெய்ஸி. இன்னொண்ணும் பொண்ணாப் பொறந்திருந்தா இந்தப் பேர்கள் மாதிரியே இங்கே மிகப் பிரபலமான இன்னொரு பேரான தோரொத்தி அப்படினு தான் வெச்சிருப்பாங்க. ஆனா பொண்ணுங்களைத் தவிர வேற பெத்துக்காம, அசதியானா அம்மா, இறந்துடறாங்க. வாரிசு ஒண்ணைப் பெத்துத் தரும் பணியை வேற யாராவது செய்யட்டும்னு நினைச்சுட்டாங்க, போல.''

''மேடம் ப்ரன்'' என சிந்தனையாய் சொல்லிக் கொண்டார் ஆண்டனி. ''எத்தனை நாளா அவ உங்ககிட்டே இருக்கா?''

''ரெண்டு மாசமா. நாங்க ஸ்காட்லாண்டில் இருந்தப்ப அவ வந்து எங்ககிட்டே சேர்ந்தா.''

''ஹா!'' என்ற ஆண்டனி, ''இவகிட்டே நான் ஒரு திருட்டு எலியை மோப்பம் பிடிக்கிறேன்'' என்றார்.

''எனக்கு லஞ்ச் மோப்பம் பிடிக்கக் கிடைக்கக் கூடாதானு இருக்கு'' என்றாள் பண்டில்! ''அந்த ஸ்காட்லாண்ட் யார்ட் மனுஷனையும் நம்ம கூட லஞ்சுக்கு கூப்பிடலாமில்லே, மிஸ்டர் கேட்? உலகம் முழுக்க தெரிஞ்சவர் நீங்க. உங்களுக்குத்தான் இந்த மரியாதை செய்வதெல்லாம் அத்துப்படி. இதுக்கு முன்னாடி இந்த வீட்டுல நாங்க ஒரு கொலையை அனுபவிச்சது இல்லே, தெரியுமா! பரபரப்பாக்குது, இல்லே? இந்த நாவல்கள் எப்படியும் கதறுவது போல கொலைகாரனுங்க மெய்யாலுமே அழகாயும் சாதாரணமாயும்தான் இருப்பாங்களானு பழகிப் பார்த்துடணும்னு எனக்கு ரொம்ப நாளா ஒரு த்ரில்லான எதிர்பார்ப்பு இருக்கு. ஓ காட்! என்னது அது?''

அது, ஒரு டாக்ஸி வீடு நோக்கி வருவதைப் போல இருந்தது. அதிலிருந்த இரு ஆட்களில் ஒருவர் நெட்டையாய் வழுக்கை விழுந்து கறுப்பு தாடி வைத்திருந்தார். மற்றவர் குட்டையாய் இளமையோடு கறுப்பு மீசை வைத்திருந்தார். முதலாமவனை ஆண்டனி அடையாளம் கண்டு கொண்டார். வந்த காரை விட, அதில் வந்த இவன் தான், ஆண்டனியுடன் இருந்த யுவதியிடம் ஆச்சரியத்தை விதைத்திருப்பது என்பதை அவர் புரிந்து கொண்டார்.

''அது என்னோட ஓல்ட் ஃபிராண்ட் - பேரான் லாலிபாப்.''

''பேரான் என்னது?''

''ஒரு வசதிக்காக அவரை நான் லாலிபாப்ங்கறேன். அவரோட நிஜப் பெயரை உச்சரிப்பது நரம்புகளையெல்லாம் அறுத்துப் போட்டுடுது!''

''இன்னிக்குக் காலையில அந்தப் பேர் என் டெலிபோனையும் அறுத்துப் போட்டுது'' என்று குறிப்பிட்டாள் பண்டில். ''ஆக, அதுதான் பேரான் இல்லையா? இன்னிக்கு மத்தியானம் அவன் என்னைத் தேடி வருவான்னு நினைக்கிறேன். ஏற்கெனவே இன்னிக்குக் காலை முழுக்க இந்த ஐஸக்டீனைக் கட்டிக்கிட்டிருந்தாச்சு. எக்ஸ்யூஸ் மீ, மிஸ்டர் கேட். நான் அப்பாவுக்கு பலமா போய் நிக்கணும்.''

பண்டில் வேகமாய் வீட்டுக்கு திரும்பினாள்.

போகும் அவளையே பார்த்தபடி ஓரிரு நிமிடங்கள் சிந்தனையாய் நின்றுக் கொண்டிருந்த ஆண்டனி ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார். அப்படி அவர் பண்ணிக் கொண்டிருக்கும் போதே நழுவுவது

போன்ற ஓர் ஓசை மிக அருகிலிருந்து வருவதாய் அவருடைய காது உணர்ந்தது. படகுத் துறையில் அவர் நின்றுக் கொண்டிருக்க, அந்த ஓசை, ஜஸ்ட் அங்கிருந்தே வருவது போல தோன்றியது அவருக்கு. வந்த ஓசை, வேக வேகமாய் வந்த ஒரு தும்மலை அடக்கும் ஒருவனை படம் பிடித்துக் காட்டியது ஆண்டனிக்கு.

''ஆச்சரியமாயிருக்கு, ரொம்ப ஆச்சரியமாயிருக்கு. இந்தத் தனிமை படகுத் துறையில் யார் வந்து மறைஞ்சிருக்கணும்?'' - ஆண்டனி தனக்குத்தானே சொல்லிக் கொண்டார். ''யார்னு பார்த்துடலாம், அதான் நல்லது.''

தனது எண்ணத்தைச் செயலாக்க துணிந்த அவர், கையில் தீர்ந்து முடிந்திருந்த சிகரெட் துண்டினைச் சுண்டி விட்டு விட்டு, ஓசை வந்த படகுத் துறையின் வளைவுப் பகுதிக்கு அரவமெழுப்பாமல் நழுவினார்.

அங்கு, முட்டி போட்டுக் கொண்டு தரையில் தவழ்ந்தபடியிருந்து அப்போதுதான் எழுந்துக் கொண்டிருந்த ஒருத்தனை எதிர் கொண்டார் ஆண்டனி. அவன் உயரமானவன். மெல்லிய நிறத்தாலான கோட்டும் கண்ணாடியும் அணிந்திருந்தான். கறுப்பு தாடி. தாக்கப்பட்டு அதனால் நிராதரவானவன் போன்ற நடவடிக்கை. முப்பது முதல் நாற்பது வயதுக்குள் இருப்பவனாய் தோன்றிய அவன் மட்டு மரியாதை தெரிந்த ஆசாமியாய்தான் தோன்றினான்.

''இங்கே நீ என்ன பண்ணிக்கிட்டிருக்கே?'' என கேட்டார் ஆண்டனி. இது லார்ட் கேட்டர்ஹாம் வீட்டுக்கு வந்திருக்கும் விருந்தாளிகளில் ஒருத்தன் கிடையாது என்பதில் அவர் நிச்சயமாயிருந்தார்.

அந்நியத் தன்மை தெறித்த ஆங்கிலத்தில் ''பார்டன் மீ'' என்ற அவன், வரவழைக்கப்பட்ட சிரிப்பை உதிர்த்தான். ''மன்னிக்கணும், விடுதிக்குப் போகணும்... ஆனா வழியைத் தவற விட்டுட்டேன். எது வழினு தயவு கூர்ந்து எனக்கு நீங்க காட்ட முடியுமா?''

''நிச்சயமா'' என்ற ஆண்டனி கிண்டலாய், ''ஆனா அந்த கிராமத்து விடுதிக்கு யாரும் நீர் மார்க்கமா போவது கிடையாது'' என்றார்.

''எ-ன்-ன?'' என்று தட்டுத் தடுமாறினான் அந்த அந்நியன், முழுக்கவும் அகப்பட்டுக் கொண்ட ஒருவனைப் போல்.

''அதாவது'' என்று திருத்தமாய் பேச ஆரம்பித்த ஆண்டனி, ''கிராமத்தின் நட்ட நடுவுல இருக்கும் அந்த விடுதிக்கு யாரும் படகுல

போய் இறங்குவது கிடையாதுன்னேன்'' என்றார். ''பார்க்கை ஒட்டி ஒரு ஒத்தையடிப் பாதை அது வரை போகுது. ஆனா இதெல்லாம் ப்ரைவேட் பகுதி. இதன் வழியா யாரும் விடுதிக்குப் போவது கிடையாது. நீங்க அத்துமீறி நுழைஞ்சிருக்கீங்க.''

''ரொம்ப மன்னிப்புக் கேட்டுக்கிறேன்'' என்றான் அந்த அந்நியன். ''நான் போக வேண்டிய வழியை முழுசுமா நான் தவற விட்டுட்டேன். இங்கே வந்து விசாரிச்சுட்டுப் போகலாம்னு நினைச்சேன்...''

இப்படி முட்டி போட்டுக் கொண்டு தரையோடு தரையாய் ஊர்ந்தபடி யாரும் விசாரிப்பது கிடையாது என்று அவன் செய்த செயலை விடாது சுட்டிக் காட்டி சந்தேகங் கிளப்பினார் ஆண்டனி. பிறகு, ''இந்தப் பக்கமா நீ போ'' என்றார். ''குளத்தை சுத்திக்கிட்டு வலப்புறமா. கடைசியில - நேரா. நிச்சயமா நீ வழியைத் தவற விடமாட்டே. நேரா போய் வழி முடியும்போது வலப்புறம் திரும்பி நட. கிராமம் வரும். நீங்க விடுதியில தங்கியிருக்கீங்கன்னு நினைக்கிறேன்.''

''ஆமாம், ஸார். இன்னிக்குக் காலைலேர்ந்து. எனக்கு வழிகாட்டிக் கொடுத்த உங்க கருணைக்கு மிக்க நன்றி.''

''அதெல்லாம் ஒரு மண்ணும் வேணாம்'' என்றார் ஆண்டனி. ''குளிருதா?'' என்றார்.

''ஆங்? எ-ன்-ன?'' என்றான் அந்த அந்நியன்.

''பனித் தரையில படுத்து ஊர்ந்திருக்கியே'' என சுட்டிக் காட்டினார் ஆண்டனி. ''நீ தும்மினா மாதிரி கேட்டுது.''

''தும்மியிருக்கலாம்'' என ஏற்றுக் கொண்டான் அவன்.

''இருக்கணும்'' என்றார் ஆண்டனி. ''ஆனா நீ வரும் தும்மலைக் கட்டுப்படுத்தக் கூடாது, தெரியுமா? ஒரு பிரபல டாக்டர் இப்படித்தான் அன்னிக்கு எனக்கு சொன்னார். மிகவும் ஆபத்தானதாம் அது. என்ன ஆபத்துனு எனக்குத் தெரியலே- இதயத்துக்கான. ரத்தப் போக்கை, நிறுத்துதா... மூச்சடைக்க வெக்குமா... தெரியலே, ஆனா அப்படி நாம பண்ணவே கூடாது. ஓகே, குட் மார்னிங்.''

''குட் மார்னிங், என்னை சரியான பாதையில திருப்பி விட்டதுக்கு நன்றிகள்.''

அவன் திரும்பிப் போய் மறைவதைப் பார்த்துக் கொண்டேயிருந்த ஆண்டனி, தனக்குள் 'விடுதியிலிருந்து இரண்டாவது சந்தேகத்துக்குரிய நபர்' என சொல்லிக் கொண்டார். ''பார்த்தால் ஃபிரெஞ்சு வியாபாரி போல தெரியறான். இவனுக்குள்ளே சிகப்புக் கை கூட்டாளியை என்னால பார்க்க முடியல. உலுக்கப்பட்டிருக்கும் ஹெர்ஸோ ஸ்லோவாக்கியாவின் ஏதாவது மூன்றாவது அணியின் சார்பா வந்திருப்பானோ? அந்த ஃபிரெஞ்சு பணியாளுடைய ஜன்னல்தான், அந்த மூலையிலிருந்து இருக்கும் இரண்டாவது அறையின் ஜன்னல். 'படகுத் துறையில் மர்மமான ஒரு ஃபிரெஞ்சு அந்நியன் அவனுக்குத் தேவையற்ற ஓர் உரையாடலைக் கேட்க ஊர்ந்துக் கொண்டிருந்தான்.' இப்படி தனக்குள் அவர் முடிவாக்கிக் கொண்டதும் இதற்குள் ஏதோவொரு வில்லங்கமும் இருக்கின்றது என்றும் கூடவே முடிவெடுத்துக் கொண்டார்.

இவ்வாறாய் முணுமுணுத்தபடி வீடு நோக்கி நடையைக் கட்டினார் ஆண்டனி. டெரஸில், அவருக்கே பொருத்தமான மன உளைச்சலோடிருந்த லார்ட் கேட்டர்ஹாமைப் பார்த்தார். கூடவே புதிதாய் வந்திறங்கியிருக்கும் இரண்டு புது வரவுகள். ஆண்டனியைக் கண்டதில் சற்றே பிரகாசமானார் லார்ட்.

''ஆஹ், வாங்க வாங்க'' என்ற அவர், ''உங்களுக்கு ரெண்டு பேரை நான் அறிமுகப்படுத்தப் போறேன்'' என்றார். ''பேரான் டேஷ் டேஷ் டேஷ், மற்றும் கேப்டன் ஆன்ட்ரஸ்ஸி. இது மிஸ்டர் ஆண்டனி கேட்.''

உள்ளுக்குள் மூண்ட சந்தேகத்துடனே ஆண்டனியை முறைத்துப் பார்த்துக் கொண்டேயிருந்தார் பேரான். ''மிஸ்டர் கேட்?'' என்றார் அவர் இறுக்கமாய். ''ஓஹ்... நான் எதிர்பார்க்கலே.''

''உங்ககூட கொஞ்சம் தனியா பேசணும். ப்ளீஸ் பேரான்'' என்றார் ஆண்டனி, ''அத்தனையையும் விளக்கிடறேன்.''

இதற்கு பேரான் இணங்க இருவரும் சேர்ந்துக் கொண்டு டெரஸில் தனியாய் விலகிப் போனார்கள்.

''பேரான்'' என அழைத்தார் ஆண்டனி. ''உங்ககிட்டே என்னை நான் முழுக்க ஒப்படைச்சுட்டு கெஞ்சிக் கேட்டுக்கறேன். இந்த நாட்டின் இப்பகுதிக்கு வந்திருக்கும் ஓர் ஆங்கிலேயே ஜென்டில்மேன் அப்படினு என்னை நான் முழுக்கவும் இங்கே நிர்மாணிச்சுக்கிட்டிருக்கேன்.

உங்ககிட்டே நான் மேக்ரத் அப்படினு என்னை அறிமுகப்படுத்திக் கிட்டதுல எவ்விதமான சேதாரமும் உங்களுக்குக் கிடையாது. அதனால, ப்ளீஸ் அதை அப்படியே விட்டுடுங்க. யார்கிட்டே அந்த வாழ்க்கை சரிதத்தின் கைப்பிரதிகள் இருக்கோ அந்த நபரைப் பார்க்கணும் என்பதுதான் உங்களோட எதிர்பார்ப்பு. நான் தான் அந்த மனிதன். யெஸ். ஆனா உங்களுக்கே நல்லா தெரிஞ்சிருக்கிற மாதிரி, அந்தக் கைப்பிரதிகள் இப்ப என்வசம் இல்லை. நோ! செமத்தியான திட்டம், பேரான்,அது ஒரு செமத்தியான திட்டம். யாரோட மூளை அது - உங்களுடையதா அல்லது உங்களோட முதலாளியுடையதா?''

''இளவரசரோட சொந்த ஐடியா. அவரைத் தவிர வேற யாரும் அதைக் கையகப்படுத்துவதை அவர் அனுமதிக்கவே மாட்டார்.''

''அந்தக் கட்டத்தை அவர் முழுமையா செஞ்சு முடிச்சார்'' என்று ஒப்புதலாய் சொன்னார் ஆண்டனி. ''வேற யாராகவும் அவரை நான் அப்ப எடுத்துக்கலே. ஆங்கிலேயன்னே எடுத்துக்கிட்டேன்.''

''அவருக்குப் பாடம்சொல்லிக் கொடுத்தது ஒரு பக்கா ஆங்கிலேயன், ஆங்'' என விளக்கினார் பேரான்.

''வேற எவனாலேயும் என்கிட்டேயிருந்து அந்தத் தாள்களைப் பறிச்சுக்கிட்டுப் போயிருக்க முடியாது'' என்றார் ஆண்டனி. ''பொத்தி வெக்காம சொல்லுங்க.. என்னாச்சு அந்தத் தாள்களுக்கு?''

''இது ஒரு ஜென்டில்மேன் ஒப்பந்தமா இருக்கணும்'' என ஆரம்பித்தார் பேரான்.

''ரொம்ப தேங்க்ஸ்'' என்றார் ஆண்டனி முணுமுணுப்பாய். ''கடந்த 48 மணி நேரத்துல பல புதுமுகங்களை நான் சந்திச்சிருந்தாலும் என்னை இதுவரைக்கும் யாரும் ஜென்டில்மேன்னு கூப்பிட்டது கிடையாது - அதுக்கு!'

''அவை - எரிக்கப்பட்டிருக்கணும் என்றுதான் நான் சொல்வேன்.''

''நீங்க நினைக்கிறீங்க - ஆனா நிச்சயமா உங்களுக்குத் தெரியாது; அப்படித்தானே?''

''மாண்புமிகு மகாராஜா அவரோட இருப்புலேயேதான் அதை வெச்சுக்கிட்டார். அதை முதல்ல படிச்சுட்டு பிறகு தீக்கிரையாக்கிடணும் என்பதுதான் அவரோட குறிக்கோளா இருந்தது.''

''ஓஹோ'' என்றார் ஆண்டனி. ''இருந்தாலும் கூட, அரை மணி நேரம் போல குறைந்த அவகாசத்துல முழுக்கப் படிச்சு சப்ஜாடா புரிந்து கொண்டு விடும் வகை கிடையாதே அந்த வரலாறு - என்ன சொல்றீங்க?''

''என்ன தேடியும் அவை கிடைக்கலே. அதனால...'' என்ற பேரான், ''அவை எரிக்கப்பட்டாச்சு'' என முடித்தார்.

''ஹ்ம்!'' என்றார் ஆண்டனி. ''எனக்கு ஆச்சரியமாயிருக்கு!''

இப்படிச் சொல்லிவிட்டு ஓரிரு நிமிடங்கள் அமைதியாயிருந்த அவர் பிறகு தொடர்ந்தார். ''இந்தக் கொலை குற்றத்துல நானும் ஒரு சந்தேக நபரா இருப்பதை நீங்களே கேள்விப்பட்டிருக்கணும், பேரான்... அதனாலதான் இந்தக் கேள்விகளையெல்லாம் நான் உங்ககிட்டே கேட்க வேண்டியதா ஆகிடுச்சு. என் மேல எவ்விதமான சந்தேகமும் ஒட்டிக் கொண்டிருக்கா வண்ணம், என்னை நானே முழுக்கவும் விடுவிச்சுக் கிட்டாகணும்.''

''அதுல சந்தேகம் கிடையாது'' என்றார் பேரான். ''உங்களை முதல்ல நீங்க பாதுகாத்துக்கணும்.''

''எக்ஸாக்ட்லி'' என்றார் ஆண்டனி. ''நல்லா பேசறீங்க. எனக்கு அப்படி பேச வர மாட்டேங்குது. என்னை இதிலிருந்து நான் விடுவிச்சுக்கணும்னா நிஜக் கொலைகாரனை நான் கண்டுபிடிச்சே ஆகணும் - வேற வழியேல கிடையாது. இதை பண்ண எனக்கு நிஜங்கள் தெரியணும். இதுக்கு, வாழ்க்கை வரலாறு குறித்த இக்கேள்விகள் மிக முக்கியமானவை. அந்த வாழ்க்கை வரலாற்றினைக் கையகப்படுத்துவது மட்டும்தான் இக் கொலையின் இலக்கு மாதிரி தெரியுது. உங்களுக்கு எப்படிப் படுது பேரான், சொல்லுங்க... இதுவும் சாத்தியம்தானே?''

சில கணங்கள் பேரான் தயங்கினார். ''நீங்களே கூட அந்த வாழ்க்கை சரிதத்தைப் படிச்சிருக்கீங்க, இல்லையா?'' என எச்சரிக்கையாய் கேட்டார்.

''என் கேள்விக்குப் பதில் கிடைச்சுடுச்சுனு நினைக்கிறேன்'' என்றார் ஆண்டனி சிரித்தபடி. ''இப்ப, பேரான்... ஜஸ்ட் ஒரு விஷயம் பாக்கியிருக்கு. வரும் அக்டோபர் 13, புதனன்று அந்த வாழ்க்கை சரிதத்தை எப்படியாவது பப்ளிஷ் பண்ண பதிப்பகத்தாரிடம் கொண்டு போய் கொடுப்பதுதான், பேரான், இன்னமும் என் லட்சியம்.''

பேரான் இதற்கு ஆண்டனியைக் கண்ணகல பார்த்தார். ''ஆனா அது உங்ககிட்டே கிடையாதே?!''

''வரும் புதன்கிழமைனு நான் சொன்னேன். இன்னிக்கு கிழமை வெள்ளி. ஆக அந்த மறுபடியும் நான் என் கைவசம் அடைய எனக்கு முழுசா ஐந்து நாட்கள் அவகாசம் இருக்கு.''

''ஆனா அது எரிக்கப்பட்டிருந்தால்?''

''அது எரிக்கப்பட்டிருக்கும்னு எனக்குத் தோணலே. அப்படி நம்பாம இருக்க எனக்கு நல்ல சில காரணங்கள் இருக்கு.''

இப்படிப் பேசிக் கொண்டே நடந்ததில் டெரஸின் வளைவுக்கு இருவரும் வந்திருந்தார்கள். ஓர் அகலமான உருவம் அவர்களுக்கு முன்னால் அங்கு நெருங்கி வந்துக் கொண்டிருந்தது. இதுவரையிலும் மிஸ்டர் ஹெர்மன் ஐஸக்டீனைப் பார்த்திராத ஆண்டனி அவரை ஈடுபாடாய் பார்த்தார்.

கையிலிருந்த பெரிய கறுப்பு சுருட்டினைத் தூக்கியெறித்தபடி ''ஆஹா, பேரான்'' என்றார் அவர். ''இது ஒரு கஷ்டகாலம்ப்பா - ரொம்ப பெரிய கஷ்டகாலம்.''

''ஓ, இது என் நெருங்கிய நண்பன் ஐஸக்டீன்'' என கத்தி விட்டார் பேரான். ''நம்ம நல்ல பேருக்கெல்லாம் சேர்த்தாற்போல களங்கம்.''

நாசூக்காய் நண்பர்களை ஒன்றாய் விட்டு விட்டுக் கழற்றிக் கொண்டார் ஆண்டனி. டெரஸில் மேற்கொண்டு மெல்லமாய் நடந்துப் போகலானார்.

திடீரென்று நின்றுப் போனார் அவர். அங்கு வளைவாயிருந்த ஒரு சிறு மரத்தாலான பாலம் போன்ற அமைப்பிலிருந்து சுருள் சுருளாய் சிகரெட் புகை கிளம்பி வந்துக் கொண்டிருந்தது.

''அதுக்கு அடியில நிழலான பள்ளமிருக்கணும்'' என தனக்குத் தானே சொல்லிக் கொண்டார் ஆண்டனி. ''அழகுக்காக செய்யப்படும் இப்படிப்பட்ட அலங்கார குட்டி வளைவுப் பாலங்கள் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கேன்.''

துரிதமாய் தனது இடது மற்றும் வலது பக்கங்களில் பார்த்தார் அவர். லார்ட் கேட்டர்ஹாம் டெரஸின் மறுகோடியில் கேப்டன் ஆன்ரஸியுடனிருந்தார். அவர்களது முதுகு ஆண்டனி பக்கமாய் பார்த்திருந்தது. ஆண்டனி குனிந்து நடந்து அந்த குட்டி வளைவுப் பாலத்துக்கடியில் தன்னைக் கொண்டு போகலானார்.

அவர் சந்தேகத்தில் தவறில்லை என்று ஆனது. அதற்கடியில் இடமிருந்தது... யாரும் பார்க்க முடியாத பதுங்குமிடம் போல. வீ பக்கவாட்டைப் பார்த்தபடியிருந்தது அது. ஆகவே அது இருப்ப பெரிய ரகசியமெல்லாம் கிடையாது. ஆனால் வாசல் பக்கம் மட்டுமே வந்து போகும் பழக்கமுள்ள எவருக்கும் இப்படியொரு தினுசான இடம் பக்கவாட்டில் இருப்பது தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

ஆண்டனி குனிந்து அந்தக் குறுகிய அடிப்பாகத்தைப் பார்த்தார். அதன் நடுப்பகுதியில் ஓர் ஆள் சின்ன கூடை நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். பாதி புகைத்திருந்த சிகரெட் நாற்காலியில் கைப்பிடியில் அப்படியே கிடக்க, அந்த ஜென்டில்மேனே கூட தூங்கிப் போய் விட்ட நிலையில் இருந்தார்.

''ஹ்ம்!'' என சொல்லிக் கொண்டார் ஆண்டனி. ''இப்படியொரு மறைமுகமான இடத்துல உட்காரணும்னே தேர்ந்தெடுத்து வந்து உட்கார்ந்திருக்கார் - மிஸ்டர் ஹிராம் ஃபிஷ்.''

## அத்தியாயம் 16

# பழக்குமறையில் பருகிய தேநீர்

பிரத்யேகமான தனிப்பட்ட சம்பாஷணைகளுக்கு இந்த வீட்டில் நட்ட நடு குளத்தைத் தவிர பாதுகாப்பான வேறு ஓர் இடம் கிடையாது என்ற மேலோங்கிய சிந்தனையோடு டெரஸுக்குத் திரும்பினார் ஆண்டனி.

எதிரொலித்த ஸைரன் ஓசை வீட்டிலிருந்து எழுந்தது. இதற்கு காரணமாக வீட்டின் நுழைவாயிலில் ட்ரெட்வெல் பவ்யமாய் தோன்றினான்.

''லஞ்ச் பரிமாறும் நேரம், மை லார்ட்'' என்றான்.

''ஆஹ்!'' என்றார் லார்ட் கேட்டர்ஹாம் சற்று சுறுசுறுப்பாகி, ''லஞ்ச்!''

அந்தக் கணத்தில் வீட்டிலிருந்த இரண்டு சிறுமிகள்... பனிரெண்டு மற்றும் பத்து வயதுகளில். அவர்களது பெயர்கள் பண்டில் சொன்னதுபடி துளசி மற்றும் மெய்ஸி என்று இருக்கலாம். ஆனால் அவர்களிருவரும் கக்கிள் மற்றும் லிங்கிள் என்றே மற்றவர்களால் அறியப்படுவதாய் தெரிந்தது. இருவரும், இடையிடையே சில்லுவண்டாய் எழுந்த கிறீச்சிடும் சப்தங்களோடு ஏதோ ஒரு போர் நடனத்தை, ஆடிப்பாடி மகிழ்ந்தார்கள். பண்டில் வந்து அவர்களது சுறுசுறுப்பை அணைக்கும் வரை.

''உங்க மேடம் எங்கே?'' என்றாள் பண்டில்.

''அவளுக்கு ஒற்றை தலைவலி, ஒற்றை தலைவலி, ஒற்றை தலைவலி'' என ஓதினாள் விங்கிள்.

''அதே அதே'' என நாடகப் பாணியில் ஒத்தூதினாள் கக்கிள்.

தனது விருந்தாளிகள் ஏறத்தாழ அனைவரையும் லஞ்சுக்கு வீட்டுக்குள் விரட்டி விடுவதில் ஜெயித்திருந்தார் லார்ட். இப்போது இறுக்கமான ஒரு கரப்பிடியை ஆண்டனியின் மீது பதித்தார் அவர்.

''என்னோட படிக்குமறைக்கு வாங்க'' என்றார் மூச்சு வாங்க. ''அங்கே ஒரு ஸ்பெஷல் வெச்சிருக்கேன்.''

வீட்டின் முதலாளி போலல்லாமல் ஏதோ ஒரு திருடனைப் போல் நழுவி மறைந்து வெளியேறி தனது பிரத்யேக அறைக்குள் தஞ்சமானார் லார்ட் கேட்டர்ஹாம். அங்கே ஒரு கப்போர்டைத் திறந்து பலவித பாட்டில்களைக் காட்டினார்.

''வெளிநாட்டு ஆசாமிங்க கூட பேசுவதுல எனக்கு எப்பவுமே தொண்டைத் தண்ணி வற்றிப் போயிடுது'' என்றார். ''இது ஏன் இப்படினு எனக்குத் தெரியலே.''

அங்கு அறைக் கதவில் ஒரு தட்டு விழா அதன் விளிம்பில் தெரிந்தது எட்டிப் பார்த்த விர்ஜீனியாவின் முகம். ''எனக்கும் ஸ்பெஷல் மதுபானம் இருக்கா?'' - தடாலடியாய் கேட்டார் அவர்.

''இல்லாமலா'' என்றார் கேட்டர்ஹாம். அவரை உள்ளே அழைக்கும் விதமாய், ''உள்ளே வாங்க.''

அடுத்த சில நிமிடங்கள் மதுபானக் கோப்பைகளின் பரிவர்த்தனை யானது. எடுத்துக் கொண்ட க்ளாஸைக் காலியாக்கித் திருப்பி வைக்கும்போது, ''எனக்கு இது அத்தியாவசியமாகப்பட்டது'' என்றார் கேட்டர்ஹாம். ''நான் இப்ப சொன்ன மாதிரி வெளிநாட்டு ஆசாமிங்க கூட பேசுவது என்னை அசதியாக்கிடுது. அவனுங்க ரொம்பவும் சாதுவா இருப்பதுதான் இதுக்குக் காரணம்னு நினைக்கிறேன். ம்... நாம கொஞ்சம் லஞ்சும் எடுத்துப்பமே..''

டைனிங் அறை நோக்கி வழிகாட்டிக் கொண்டு போனார் அவர். விர்ஜீனியா ஆண்டனியின் கைகளுக்குள் தன் கையை செருகி இழுத்து அவரை சற்று பின்தங்க வைத்தார்.

''இன்னிக்கு நான் ஒரு நல்ல காரியம் பண்ணியிருக்கேன்'' என்று கிசுகிசுத்தார் அவர். ''லார்ட் கேட்டர்ஹாமை என்னை அழைத்துப் போய் அந்த பாடியைக் காட்ட வெச்சேன்.''

''வெல்?'' என்று பரபரப்பாய் ஆணையிட்டார் ஆண்டனி, பதிலுக்காக.

அவருடைய ஓர் ஊகம் சரிதானா (அல்லது தவறா) என தெரிந்தாக வேண்டும்.

விர்ஜீனியா அவருடைய தலையை மறுப்பாய் அசைத்துக் கொண்டிருந்தார். ''உங்க ஊகம் தப்பு'' என்றார் அவர். ''அது ப்ரின்ஸ் மைக்கேல்தான்.''

ஆழம் வரை உலுக்கப்பட்டவராய், ''ஓ!'' என்றார் ஆண்டனி. கூடவே, உயர்ந்த குரலில், ''மேலும் மேடமுக்கு ஒற்றைத் தலைவலி'' என்றும் சேர்த்துக் கொண்டார்.

''அதுக்கும் இதுக்கும் என்னய்யா சம்பந்தம்?''

''ஒண்ணுமே இல்லாம கூடயிருக்கலாம். ஆனா நான் அவளைப் பார்த்தாகணும். ஒண்ணு தெரியுமா... மேடமுடைய அறை தான் கடைசி யிலிருந்து வரும் ரெண்டாவது அறைனு நான் கண்டுபிடிச்சிருக்கேன் - நேற்றிரவு ஜாமத்துப் பொழுதுல விளக்கெரிஞ்சுதா நான் சொன்ன அறை.''

''இது இண்ட்ரஸ்டிங்.''

''இது ஒண்ணுமே இல்லாம பிசுபிசுத்துக் கூட போயிடலாம். இருந்தாலும் இன்னிக்கு முடிவதற்குள்ளே மேடமை நான் பார்த்தாகணும்.''

லஞ்ச் ஏதோ நடந்தாக வேண்டிய ஒன்று என்பது போல போயிற்று. பண்டிலுடைய கலகல தன்மை கூட பல வகையினராய் கூடியிருந் தோரைக் களிப்பாக்க முடியாமல் தோற்றுப் போனது. பேரானும் ஆன்ட்ரஸ்ஸியும், மிகச் சரியாய், விருந்துக்கு அழைத்தவரை மரியாதை படுத்தும் தொனியில் மிகச் சிறந்த ஆடைகளணிந்து, லஞ்ச்சினைச் சிறப்பிக்கவென்றே வந்தவர்களைப் போல அமர்ந்திருந்தனர். சுறுசுறுப்பற்று மன அழுத்தத்தோடு காணப்பட்டார் லார்ட் கேட்டர்ஹாம். பில் எவர்ஸ்லே ஏக்கத்தூடே விர்ஜீனியாவை முறைத்துக் கொண்டி ருந்தார். இப்பொழுது தானிருக்கும் நிலை குறித்து மிகவும் கனமான சிந்தனையோடிருந்த ஜார்ஜ், மிஸ்டர் ஐஸக்டீனுடனும் பேரானுடனும் உரையாடலில் இருந்தார். தங்களது வீட்டில் ஒரு கொலை என்ற விறுவிறுப்பும் துறுதுறுப்பும் நிறைந்து அவர்களது உலகத்தில் குதித்தாடிக் கொண்டிருந்த கக்கிள் மற்றும் லிங்கிள் ஆகியோரைக் கவனித்தபடி

கட்டுப்பாட்டுக்குள் வைக்க வேண்டியிருந்தது. தன் தொழிலுக்கே உரிய உதாரணங்களை மேற்கோள் காட்டி நடந்துள்ள விபரீதத்தை அவ்வப்போது விளக்கிக் கொண்டிருந்த மிஸ்டர் ஹிராம் ஃபிஷ் சாவகாசமாய் கொறித்துக் கொண்டுமிருந்தார். சூப்பரின்டெண்ட்டெண்ட் பேட்டில் சுத்தமாய் மறைந்து போயிருக்க, அவருக்கென்னாயிற்று என்பது ஒருவருக்கும் தெரியவில்லை.

''தேங்க் காட்... முடிஞ்சுது'' என்றாள் பாண்டில், டேபிளை விட்டு நகர்ந்ததும் ஆண்டனியிடம். ''ஜார்ஜ், நாட்டு நடப்பு பற்றி பேச அப்பே வரைக்கும் இன்னிக்கு மத்தியாயனம் போகப் போறார்!''

''அது ஒரு வகையில நிலைமையின் தீவிரத்தை இன்னிக்கு மத்தியானம் இளக்கும்'' என்றார் ஆண்டனி.

அப்போது அருகில் வந்துக் கொண்டிருந்த மிஸ்டர் ஃபிஷ்ஷைக் கவனித்த பண்டில், ''இன்னிக்கு மத்தியாம் உங்களுக்கு அமைதியா கழிய நான் சில திட்டங்கள் வெச்சிருக்கேன்'' என்றாள்.

''அது என் பாக்கியம், லேடி எய்லீன்'' என முதுகு வளைத்து மரியாதையாய் சொன்னார் அவர்.

இதற்கு ''மிஸ்டர் ஃபிஷ்'' என்று விளித்த ஆண்டனி, ''ஓர் இனிமையான காலைப் பொழுதை அனுபவிச்சார்'' என்றார்.

மிஸ்டர் ஃபிஷ் ஒரு விரைவான நோட்டத்தை ஆண்டனியின் மீது செலுத்தினார். ''ஆஹ்.. அப்ப என் தனிமை ஓய்விடத்தை நீங்க கவனிச்சுட்டீங்களா? தனிமையிலேயே இருந்துப் பழகிவிட்ட ஒரு மனிதனுக்கு கூட்டத்திலிருந்து எப்பப் பிச்சுக்கலாம் எனும் ஓர் ஏக்கம் இருந்துக்கிட்டே இருக்கும், ஸார்.''

பண்டில் கசிந்தோடிவிட, அமெரிக்கனும் ஆண்டனியும் தனித்து விடப்பட்டார்கள்.

''இந்த சமாச்சாரத்துல'' என்று தொடங்கிய அமெரிக்கன், ''தேவையான அளவுக்கு மர்ம முடிச்சுகள் இருக்கும் போல'' என்றார்.

''நிறைய நிறைய'' என்றார் ஆண்டனி.

''அந்த ஆள்... வழுக்கைத் தலையோட.. அவன் என்ன, குடும்பத்து உறவா?''

''அதுபோலதான் எதுவோ.''

''இறந்துப் போன ஆள் ஒரு பெரிய மகாராஜா பரம்பரை அப்படினு ஒரு புரளி சுத்துதே, அப்படியா? உங்களுக்கு தெரியுமா?''

''அவர் இங்கே கவுண்ட் ஸ்டான்லியாஸ் எனும் பெயர்ல தங்கியிருக்கார்.''

இதற்கு விளங்காத ''ஓ, பாய்!'' என்று ஒரே ஒரு ஆங்கில வார்த்தையை மட்டுமே பேசினார். இதற்குப் பிறகு சில கணங்களுக்கு அவர் அமைதியாகிப் போனார். பிறகு ''உங்களோட இந்த போலீஸ் கேப்டன்'' என சிந்திப்படி சொன்னார்: ''பேட்டிலோ என்னவோ, மண்டையில சரக்குள்ள ஆள் தானா?''

''ஸ்காட்லாண்ட் யார்ட் அப்படித்தான் நினைச்சுக்கிட்டிருக்கு'' என்றார் ஆண்டனி வறட்சியாய்.

''எல்லாத்தையும் மறைச்சே வெக்கும் ஓர் ஆசாமியா அவர் எனக்குப் படறார்'' என குறிப்பிட்டார் ஃபிஷ். ''யாரையும் விட்டு விடக் கூடாது எனும் அவரோட பெரிய திட்டத்துல என்ன பெரிய பலன் விளைஞ்சுடப் போகுது?'' இப்படி பேசும்போது ஆண்டனி மீது கவனம் சிதையாத பார்வையைப் பதித்திருந்தார் அவர்.

''எல்லாரும் நாளை காலைல மரண விசாரணையை சந்திச்சாகணும் பாருங்க.''

''இதுதான் காரணம். அப்படித்தானே? இதைத் தவிர வேறு காரணம் எதுவும் கிடையாது, ஆங்? லார்ட் கேட்டர்ஹாம் விருந்தாளிகளைச் சந்தேகிச்சு இப்படி பண்ணலே, இல்லையா?''

''மை டியர், மிஸ்டர் ஃபிஷ்.''

''யெஸ். இந்த கிராமத்துப் பகுதிக்கு ஓர் அந்நியனா நான் இருப்பதாலேயே கொஞ்சங் கொஞ்சமா இருப்புக் கொள்ளாம ஆகிட்டிருக்கேன். ஓ, இப்ப ஞாபகத்துக்கு வருது. இது ஒரு வெளியாளோட வேலை இல்லே? ஜன்னல் தான் திறந்திருந்ததே?''

மிஸ்டர் ஃபிஷ் பெருமூச்செறிந்தார். சில நிமிடங்களுக்குப் பிறகு தட்டையான தொனியில் சொன்னார்: ''யங் மேன்... சுரங்கத்திலிருந்து தண்ணியை எப்படி வெளிக் கொண்டு வருவாங்க, தெரியுமா?''

''எப்படி?''

''பம்ப் பண்ணி, பம்ப் பண்ணி... ஆனா அது ஓர் உயிர் பிடுங்கும் வேலை! ஆஹ்.. அதோ, என்னை விருந்துக்கு அழைத்திருக்கும் மேதகு மனிதன் அவரோட வட்டத்திலிருந்து நழுவி தனியாகிறார். நான் அவரோட சேரணும்.''

மிஸ்டர் ஃபிஷ் நாசூக்காய் நழுவி விட்ட அதே நேரத்தில் பண்டில் மீண்டும் வந்து சேர்ந்தாள். ''கோமாளி ஃபிஷ், இல்லே?''

''யெஸ்.''

''விர்ஜீனியாவை எதிர்பார்த்துக் காத்திருப்பதுல பிரயோஜனமில்லே'' என்றாள் அவள் கறாராய்.

''நான் காத்திருக்கலையே.''

''நீங்க காத்திருந்தீங்க. எப்படித்தான் அவங்களால கவர்ந்துட முடியுதோ.. பட், அவங்க தன்னைப் பற்றி சொல்லிக்கிறே மாதிரியே அவங்க கிடையாது. யெஸ்.. அவங்க எப்படி தோணறாங்களோ அப்படிப் பட்டவங்க தான் அவங்கனு அவங்க தோற்றத்தைப் பார்த்துகூட எனக்கு நம்பிக்கை கிடையாது. எப்படியோ போகட்டும்... இப்ப வேற எங்கேயோ அவங்களோட கைவரிசையைக் காட்டிட்டு இருப்பாங்க. உங்ககிட்டே நல்ல மாதிரியா நடந்துக்க சொல்லியிருக்காங்க. ஸோ, நான் உங்ககிட்டே நல்ல மாதிரியா நடந்துக்கப் போறேன் - தேவைப்பட்டா, வலுக் கட்டாயமா..''

''வலுக்கட்டாயமா யாரும் என்கிட்டே நல்லா பழகும் தேவையே எழாது'' என கியாரண்டி கொடுத்தார் ஆண்டனி.

இருவரும் குளத்தை நோக்கி நடக்கலானார்கள். படகினை அமுக்கி அமுக்கி செலுத்திக் குளக்கரையிலிருந்து விலகிக் கொண்டிருந்தபோது, ''நாம இண்ட்ரஸ்ட்டிங்கான சமாச்சாரங்களையெல்லாம் பேச ஆரம்பிப்பதற்கு முன்னாடி உங்ககிட்டே ஜஸ்ட் ஒரேயொரு கேள்வி மட்டும் கேட்கணும்'' என்றார் ஆண்டனி. ''கொண்டாட்டத்துக்கு முன்னால் பிஸினஸ்.''

களைப்பாக பொறுமையிழந்து ''யாரோட பெட்ரூமைப் பற்றி நீங்க இப்ப தெரிஞ்சுக்கணும்?'' என்றாள் பண்டில்.

''தற்போதைக்கு யாருடைய பெட்ரூமைப் பற்றியும் இல்லே. ஆனா, எனக்கு நீங்க் அந்த பிரெஞ்சு வேலைக்காரியை எங்கிருந்து கொண்டு வந்தீங்கனு தெரியணும்.''

''பிசாசுப்பா நீங்க'' என்ற பண்டில், ''ஓர் ஏஜென்ஸி மூலமா'' என்றாள். ''ஒரு வருஷத்துக்குஅவளுக்கு நூறு பவுண்டு சம்பளம் தரேன். அவளோட பிறப்பு கிருத்துவ பெயர், ஜெனீவா. இன்னும் ஏதாவது நீங்க தெரிஞ்சுக்கணுமா?''

''ஏஜென்ஸியை இப்போதைக்கு விட்டு வைப்போம்'' என்று ஆண்டனி கேட்டார். ''இதுக்கு முன்னால அவ வேலை பார்த்த இடங்கள் பற்றி?''

''ஓ, பிரமாதமானது அது! அவ ஒரு ராஜாங்க பெண்மணியிடம் பத்து வருஷம் வேலையில இருந்திருக்கா.''

''ராஜாங்கப் பெண்மணினா..?''

''பேர் சொன்னா நாக்கு இழுக்குமே! வேணும்னா குறிச்சுக்குங்க, ப்ரூட்டயில் ராணி, டினார்ட்.''

''ங்கப்பா!''

''இப்படியொரு பேர்.''

''அந்த ராஜாங்கப் பெண்மணியை நீங்க நேரா போய் பார்க்கலே, இல்லே? எல்லாம் கடிதப் பரிவர்த்தனையிலேயே நம்பப்பட்டு முடிஞ்சிருக்கு, ஆங்?''

''எக்ஸாக்ட்லி.''

''ஹ்ம்!'' என்றார் ஆண்டனி.

''எதுக்குப் பெருமூச்சு இப்ப?'' என்ற பண்டில், ''நீங்க தந்திரம் பண்றீங்க'' என்றாள். ''நீங்க ஏகமா சூழ்ச்சியா பேசிக்கிட்டிருக்கீங்க, ஏன்?''

''படுமுட்டாள்தனமான சந்தேகமாகூட இருக்கலாம், விட்டுடு வோம்.''

''ம்... 'விட்டுடுவோம்!' விட்டேற்றியா இப்படியொரு பதில்! கறக்க வேண்டியதையெல்லாம் கறந்துட்ட பிறகு, மிஸ்டர் கேட்; யாரை நீங்க சந்தேகிக்கிறீங்க? நம்பவே முடியாத ஒரு மனுஷியா திரிவதால் நான் விர்ஜீனியாவைத் தான் ரொம்பவும் சந்தேகிக்கிறேன். இல்லேனா, பில்.''

''ஏன், அது நீங்களா இருக்கக் கூடாது?''

''ஆஹ்... மாபெரும் மில்லியனர் பரம்பர பெண்ணுக்கு *சிகப்புக் கை* கூட்டாளிகளோடு ரகசியத் தொடர்பு! நிச்சயம் இது பரபரப்பை உண்டு பண்ணும்.''

ஆண்டனி நன்றாய் சிரித்தார். பண்டிலின் புத்திசாலித்தனமான துளைத்தெடுக்கும் பார்வையில் அவருக்கு பயமிருந்த போதிலும் அவளை ஆண்டனி விரும்பினார்.

மாபெரும் வீடாய் தூரத்தில் நின்றுக் கொண்டிருந்த வீட்டைப் பார்த்து கையைக் காற்றிலசைத்துக் காட்டி, ''இதையெல்லாம் நீங்க பெரிய பெருமைகளா கருதணும்'' என்றார் ஆண்டனி.

தனது கண்களை வேகமாக்கி தலையை ஒரு புறமாய் சாய்த்துக் கொண்டாள் பண்டில். ''யெஸ்... அந்த ஆடம்பரத்துலேயும் அர்த்தங் களிருக்கு. ஆனா, அதை அதிகம் பயன்படுத்தியாச்சு. நாங்க இங்கே அதிகம் இருந்தது கிடையாது. டியோவில்லியில கோடை காலத்துல இருக்கோம். அதுக்கும் முன்னாடி ஸ்காட்லாண்ட். *சிம்னீஸ்,* கிட்டத்தட்ட ஐந்து மாதங்களா அழுக்குப் போர்வையால, சூழப்பட்டிருந்தது. வாரத்துக்கு ஒரு முறை அந்தப் போர்வை நீக்கப்படும்... வாரக் கடைசியில டூரிஸ்ட்டுங்க வந்து தங்கி கதையடிச்சு, கொள்ளையடிச்சு, ட்ரெட்வெல் சொல்வதையெல்லாம் கேட்டு வாய் பிளந்துட்டுப் போனாங்க. சுவரில் தொங்கும் படங்களையெல்லாம் வைத்து ராஜாங்க வரலாறுகளை வெளுத்துக் கட்டுவான் ட்ரெட்வெல்.''

''யெஸ்... இங்கே ஓரிரு முறை வரலாறுகள் படைக்கப்பட்டிருக்கு.''

''நீங்க ஜார்ஜ் பேசுவதைக் கேட்டிருக்கணும்னு நினைக்கிறேன். அவர் தான் இதே வார்த்தைகளை சொல்வார்.''

ஆனால் இப்போது எழுந்துக் கொண்டிருந்த ஆண்டனி, கரை நோக்கி முறைத்துப் பார்த்த வண்ணமிருந்தார். ''அதோ, படகுத் துறையில, இலக்கின்றி நின்றுக் கொண்டிருக்கும் அந்த மனிதன்... நான் சந்திக்கும் மூன்றாவது அந்நியனா? இல்லே, வீட்டுக்கு கூட்டத்துல ஒருத்தன் தானா?''

பண்டில் தலையை நன்றாய் நீட்டிப் பார்த்தாள். ''அது பில்'' என்றாள் அவள்.

''அவர் எதையோ எதிர்பார்த்து காத்திருப்பதாய் படுது.''

சுவராசியமின்றி ''அவர் என்னை எதிர்பார்த்துக்கிட்டிருக்கலாம்'' என்றாள் பண்டில்.

''எதிர்த் திசையில் வேகமா போய் மறைஞ்சுடலாமா?''

''நாட் அட் ஆல்'' என்றாள் பண்டில். ''உனக்கு இது பெருமை. அந்த இனக்கழுதை நின்னுக்கிட்டிருக்கும் பகுதிக்கே போங்க. யாராவது ஒருத்தர் அவரைக் கவனிச்சுக்கிட்டே இருக்கணும்னு நினைக்கிறேன். விர்ஜீனியா அவர் கிட்டேயிருந்து கழட்டிக்கிட்டு ஓடியிருக்கணும். வருகிற நாட்களில் உங்களுக்கு இப்ப நான் சொல்வதைக் கேட்பது ஜீரணிக்க முடியாததா இருக்கலாம் - நான் ஜார்ஜைத் திருமணம் கட்டிக்க விரும்பலாம். ஆக நான் அவங்களும் அரசியல் தெரிஞ்ச குடும்பம்தான் அப்படினு இப்போதிலிருந்தே இமேஜை உருவாக்கிக்கிறேனே!''

ஆண்டனி மரியாதையாய் கரை நோக்கிப் படகை செலுத்தினார்.

''அப்ப அங்கே கரை சேர்ந்ததும் நான் என்ன பண்றதுனு தெரியணும்?'' என்றார் ஆண்டனி. ''தேவையற்ற மூன்றாவது மனுஷனா நான் கூட இருக்க எனக்குப் பிடிக்கலே. அதோட, தூரத்துல அங்கே தெரிவது பிள்ளைங்களா?''

''யெஸ், ஜாக்கிரதை.''

''எனக்குக் குழந்தைகள்னா உயிர். அவங்களுக்கு சில நல்ல புத்திசாலி விளையாட்டுக்களை நான் சொல்லிக் கொடுப்பேன்.''

''வெல்.. அப்புறமா நான் ஏன் உங்களை முன்னாடியே எச்சரிக்கலேனு நீங்க வந்து நிக்கக் கூடாது.''

இலக்கின்றி இருந்த பில்லிடம் பண்டிலை ஒப்படைத்த பிறகு, விதம் விதமான கத்தலும் கூசலும் மத்தியானப் பொழுதின் அமைதியைக் கீறிக் கொண்டிருந்த பகுதிக்குப் போனார் ஆண்டனி.அங்கு கைதட்டல்களோடு அவர் வரவேற்கப்பட்டார்.

''உங்களுக்கு ரெட் இண்டியன்ஸ் விளையாட வருமா?'' என கட்டளையாய் கேட்டது, கக்கிள்.

''ம்'' என்றார் ஆண்டனி. ''என் தலையை நீங்க தொடும்போது நான் கத்தணும்... இப்படி'' என விளக்கியும் காட்டினார் அவர்.

''ம், பரவாயில்லே'' என்றாள் விங்கிள் கறுவியபடி. ''இப்ப தலையைக் கிறிட்டா மாதிரி அலறுங்க.''

ஆமோதிக்க ஆரம்பித்த ஆண்டனி உயிரே போவதுபோல் அப்படி கத்தினார். அடுத்த நிமிடத்தில் இவ்வாறாய் வளரும் ரெட் இண்டியன்ஸ் விளையாட்டு உச்சத்தைத் தொட்டது. ஒரே கத்தல்... கதறல்!

கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் கழிந்த பிறகு, முன்நெற்றியிலிருந்து வியர்வையை நன்கு துடைத்தெறிந்த ஆண்டனி, மேடம் ப்ரன்னுடைய மூற்றை தலைவலி எப்படியிருக்கிறது என்று விசாரிப்பதில் இறங்கினார். அப்பெண்மணி முழுவதுமாக குணமாகி விட்டார் என்பதை கேட்டதில் மகிழ்ந்தார் அவர். வீட்டின் அனைவரிடமும் நன்றாய் பிரபலமாகி விட்டபடியால் உடனடியாய் உள்ளே அனுமதிக்கப்பட்ட ஆண்டனி பிள்ளைகளுக்குப் படிப்பு சொல்லித் தரும் அறைக்குள் ஒரு கப் டீ சாப்பிடுமளவுக்கு அழைக்கப்பட்டார்.

''ப்ச்..'' என்ற கக்கிள் ''நாமெல்லாம் போய் கை கால் கழுவிக்கணும் போலிருக்கு'' என்றாள் சோகமாய், விளையாட்டுகள் முடிந்து விட்டனவே என்ற கவலையில். ''நீங்க டீ டைம்க்கு வருவீங்கதானே? மறந்துட மாட்டீங்களே?''

இந்த முன்பதிவிலிருந்து தன்னை யாராலும் தடுக்க முடியாது என்று தொண்டையைப் பிடித்துக் கொண்டு பிள்ளைகளுக்கு சத்தியம் பண்ணித் தந்தார் ஆண்டனி. திருப்தியடைந்து இளஞ்ஜோடிக் குழந்தைகள் வீடு நோக்கி நடையைக் கட்டின. செல்லும் சிறுசுகளைப் பார்த்தபடியே சில நிமிடங்கள் நின்றுக் கொண்டிருந்த ஆண்டனிக்கு, எதிர்ப்புறத்திலிருந்த மரங்களடர்ந்த சிறு காட்டுப் பகுதியை விட்டு ஒருவன் வேகவேகமாய் பார்க்குக்குக் குறுக்காய் கடந்துக் கொண்டிருப்பது தெரிந்தது. அவனுக்குப் பின்னாலேயே போய் பின்தொடர்வுதா அல்லது வேண்டாமா என்று சிறு தயக்கத்தோடு ஆண்டனி நின்றுக் கொண்டிருக்கும்போதே அவருக்கு முன்னாலிருந்த மரங்கள் விலக்கப்பட்டு மிஸ்டர் ஃபிஷ் அதனுள்ளிருந்து வெளிப்பட்டார். திறந்தவெளிக்கு வந்தார். அங்கு ஆண்டனியைப் பார்த்ததும் சின்னதாய் துணுக்குற்றார்.

''மத்தியானப் பொழுது நல்லா அமைதியா கடந்ததா, மிஸ்டர் ஃபிஷ்?'' என்றார் ஆண்டனி.

''நன்றி, யெஸ்.'' இருந்தாலும், எப்போதும் போன்ற அமைதியான போக்கில் அவர் காணப்படவில்லை. அவருடைய முகம் சிவந்திருந்தது. எங்கிருந்தோ ஓடி வந்தவரைப் போல் மூச்சிறைத்துக் கொண்டிருந்தது. சட்டைப் பையிலிருந்த கைக்கடியாரத்தை எடுத்து அதில் நேரத்தை ஆலோசித்தார்.

அதை ஒரு சிறு ஓசையுடன் டப்பென்று மூடி பழையபடி வைத்துக் கொண்டுவிட்டு அமரிக்கையாய் வீடு நோக்கி நடக்க ஆரம்பித்து விட்டார் அவர்.

அப்படியே நின்றுப் போயிருந்த ஆண்டனி, துணுக்குற்று நினைவுலகுக்கு வந்தார். சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் அருகில் நின்றுக் கொண்டிருந்தார். நெருங்கி வந்ததற்கான சின்னஞ்சிறு அரவம் கூட கேட்டிருக்கவில்லை. இதனால் ஏதோ அண்ட சராசரத்திலிருந்து வந்திறங்கிய ஒரு வஸ்துவாய் தான் அவரைக் கணித்தார் ஆண்டனி.

''எங்கேயிருந்து இப்படிக் குதிச்சீங்க?'' என்றார் ஆண்டனி சிறு எரிச்சலாய்.

சிறு தலையசைவின் சைகையில் முன்னால் விரிந்துக் கிடந்த சிறு மரக்காட்டினைச் சுட்டிக் காட்டினார் பேட்டில்.

''இன்னிக்கு மத்தியானத்துக்கு, எல்லாருக்கும் அது ஒரு பிரபலமான இடமா திகழுது'' என்று குறிப்பிட்டார் ஆண்டனி.

''நீங்க உங்க சிந்தனையில் தன்னிலை இழந்து நின்னுக்கிட்டிருந்தீங்க, மிஸ்டர் கேட்.''

''யெஸ். அப்படித்தான். நான் என்ன பண்ணிக்கிட்டிருந்தேன்னு தெரியுமா, பேட்டில்? இரண்டோட ஒண்ணையும், மூணோட அஞ்சையும் சேர்த்துப் போட்டு நாலாக்க முயன்றுக்கிட்டிருந்தேன். ஆனா அப்படி பண்ண முடியாது பேட்டில், அப்படி பண்ணவே முடியாது.''

''அப்படி பண்ண சிக்கல்கள் இருக்கு'' என ஒப்புக் கொண்டார் டிடெக்டிவ்.

''ஆனா, கவனிங்க... உங்களைத் தான் ஜஸ்ட் உடனடியா பார்க்க நான் நினைச்சுக்கிட்டிருந்தேன். பேட்டில் நான் கிளம்ப விரும்பறேன், அது முடியுமா?''

பாராட்டுமளவுக்கு, பேட்டில், உணர்ச்சிகளையும் கொட்டவில்லை. ஆச்சரியத்தையும் காட்டவில்லை. அவரது மறுபதில் இதுதான் இப்போதைக்கு நிதர்சனம் எனும் பாணியில், சுளுவாக வந்து விழுந்தது. ''அது, நீங்க எங்கே போக விரும்பறீங்க என்பதைப் பொறுத்தது.''

''எக்ஸாக்டா சொல்றேன், பேட்டில். என் நிலைமையை உங்களுக்கு முன்னாடி விரிச்சுப் போட்டுடறேன். நான் டினார்ட் பகுதிக்குப் போகணும். ப்ரூட்டயில் ராணி கிட்டே. அனுமதிக்க முடியுமா?''

''எப்ப போகணும், மிஸ்டர் கேட்?''

''நாளைக்கு மரண விசாரணை பூர்வாங்கமா முடிஞ்ச பிறகுனு வெச்சுங்களேன். ஞாயிறு சாயந்திரம் என்னால இங்கே இருக்க முடியும்.''

''அப்படியா?'' என்றார் சூப்பரின்டெண்டெண்ட் ஒரு விநோதமான இறுக்கத்துடன்.

''அப்படினா?''

''நீங்க எங்கே போகணும்னு சொல்றீங்களோ அங்கே போயிட்டு நேரடியா இங்கேயே வந்து விடுகிற பட்சத்துல.. எனக்கு ஆட்சேபணை கிடையாது.''

''நீங்க ஆயிரத்தில் ஒருத்தர், பேட்டில். ஒண்ணு நீங்க என் மேல அசைக்க முடியாத நம்பிக்கையை உருவாக்கிக்கிட்டிருக்கணும்... இல்லே, நீங்க அசாதாரண ஆழமான மனிதரா இருக்கணும். எது நீங்க?''

சூப்பரின்டெண்ட்டெண்ட் பேட்டில் சின்னதாய் சிரித்தார். ஆனால் மறுபதில் எதும் தரவில்லை.

''வெல், வெல்..'' என்ற ஆண்டனி, ''நீங்க உங்க பக்கத்துல தற்காப்பு நடவடிக்கைகளை முடுக்கி விடுவீங்கனு நினைக்கிறேன். எனக்குத் தெரியாம நான் பின் தொடரப்படலாம். நடக்கட்டும். பாதகம் கிடையாது. எனக்கு, இங்கே நடப்பதெல்லாம் என்னனு தெரிஞ்சுக்க ஆர்வமா யிருக்கு'' என்றார்.

''நீங்க சொல்றது விளங்கலே, மிஸ்டர் கேட்.''

''அந்த வாழ்க்கை வரலாறு - என்ன இந்தக் கூத்து? அது வெறும் வாழ்க்கைக் குறிப்புகள் மட்டுந்தானா? ஆனா அதையும் மீறி என்னவோ இருக்குனு உங்களுக்குத் தெரிஞ்சிருக்கா?''

பேட்டில் மீண்டும் சிரித்தார். ''இப்படி எடுத்துக்குங்க. உங்க மேல் ஒரு நல்ல மதிப்பை நீங்க எனக்குள்ளே ஏற்படுத்தியிருப்பதால், மிஸ்டர் கேட், நான் உங்களுக்கு சிறு உபகாரம் பண்றேன். இந்த கேஸ்ல நீங்க என்கூட உழைக்கணும்னு நான் பிரியப்படறேன். துப்பறியும் கலையை நுணுக்கமா படிச்ச ஒருத்தர்... அப்படி படிக்காத ஒரு கத்துக்குட்டி... வழக்கமா இவங்க ரெண்டு பேரும் அழகா ஒத்துப் போயிடுவாங்க. ஒருத்தருக்கு நல்ல பழுத்த அனுபவமிருக்கும்... இன்னொருத்தருக்கு புது அனுபவம் ஆகையால் துறுதுறுப்பு இருக்கும்.''

''வெல்..'' என்று மெல்லமாய் ஆரம்பித்த ஆண்டனி, ''தீர்க்க முடியாத ஒரு கொலை மர்மத்துல என்னை நானே புகுத்திக்கிட்டு உண்மையைக் கண்டுபிடிக்கணும்னு ஓர் ஆசை, ரொம்ப நாளாவே எனக்குள்ளே உண்டு என்பதை நான் ஏத்துக்கிறேன்'' என்றார்.

''ஓ..கே...இந்த வழக்கு பற்றி ஏதாவது ஐடியாக்கள் உண்டா, மிஸ்டர் கேட்?''

''நிறைய நிறைய'' என்றார் ஆண்டனி. ''ஆனா இவற்றில் ஏறக்குறைய எல்லாமே கேள்விகள்..''

''உதாரணத்துக்கு?''

''மைக்கேலின் மரணத்தால் அடுத்து தலை தூக்கப் போவது யார்? இது என்னவோ அதி முக்கியம்னு எனக்குப் படுது.''

ஒரு வறட்சியான புன்னகை சூப்பரின்டெண்டெண்ட்டின் முகத்தில் பூத்தது. ''இதை நீங்க ஊகிப்பீங்களானு எனக்கு சந்தேகமாகவே இருந்தது. ப்ரின்ஸ் நிக்கோலஸ் ஓப்லோவிட்ச் தான் அடுத்த வாரிசு.''

''இந்த நிமிஷத்துல அவர் எங்கேயிருக்கார்?'' என்று கேட்டார் ஆண்டனி, ஒரு சிகரெட்டைக் கொளுத்த எத்தனித்தபடி. ''எனக்குத் தெரியாதுனு ஒரு பதிலைத் தராதீங்க பேட்டில். ஏன்னா அதை நான் நம்ப மாட்டேன்.''

''அவர் அமெரிக்காவுல இருக்கார்னு நம்ப எங்களுக்குக் காரணங்கள் கிடைச்சிருக்கு. அவரோட எதிர்பார்ப்புகளுக்கு பணம் புரட்ட..''

ஆண்டனி ஆச்சரியம் கலந்த விஸில் ஒன்றுக்கு வழி விட்டார். ''நீங்க சொல்வது புரியுது'' என்றார். ''மைக்கேலுக்கு இங்கிலாந்து பக்க பலமாக இருந்தது. நிக்கோலஸுக்கு அமெரிக்கா. இந்த ரெண்டு கம்பெனிகளிலும்

பணம் தருவதன் மூலமா எண்ணெய் சலுகைகளைப் பெற பரபரனு சில நிதி நிறுவனங்கள் காத்துக்கிட்டிருக்கு. ராஜ விசுவாசிகள் கொண்ட அரசியல் கழகம் மைக்கேலைத் தங்களது வேட்பாளரா ஏத்துக்கிச்சு. ஆனா இப்ப அவங்க வேற ஒருத்தரைத் தேடியாகணும்... சர் ஐஸக்டீன் மற்றும் ஜார்ஜ் லொமெக்ஸ் குழுவினரின் பற்கள் நறநறக்கும்.''

புன்னகைத்துக் கொண்ட பேட்டில் மறுபதில் ஏதும் தரவில்லை.

''ஹம்!'' என்ற ஆண்டனி சொன்னார்: ''நீங்க அங்கே மரக்காட்டுக் குள்ளே என்ன பண்ணிக்கிட்டிருந்தீங்கன்னு எனக்குத் தெரியும்.''

இதற்கும், புன்னகைத்துக் கொண்ட பேட்டில் மறுபதில் ஏதும் தரவில்லை.

''சர்வதேச அரசியல் பிரமிப்பூட்டுது'' என்றார் ஆண்டனி. ''ஆனா, ஓஹ், இதெல்லாம் இப்ப பேச எனக்கு அவகாசம் இல்லே. நான் கிளம்பியாகணும். பிள்ளைங்க படிக்குமறை[illegible]லே நான் ஒருத்தரைச் சந்திக்க வேண்டியிருக்கு.''

வீடு நோக்கி உற்சாகமாய் நடக்க ஆரம்பித்தார் அவர். மரியாதையாய் நடந்துக் கொள்ளும் ட்ரெட் வெல்லிடம் விசாரித்ததில் படிக்குமறைக்கான பகுதி தெரிந்தது. கதவைத் தட்டி விட்டு பிறகு உள்ளே நுழைந்தவரை சந்தோஷ எக்காள குரல்கள் ஓடோடி வந்து வரவேற்றன. கக்கிளும் விங்கிளும் ஆண்டனி நோக்கி உடனடியாய் ஓடி வந்து அவரை மேடம் ப்ரன்னிடம் அறிமுகப்படுத்துவதில் பெருமை கொண்டனர்.

முதல் முறையாக ஆண்டனி நடுக்கத்தை உணர்ந்தார். மேடம் ப்ரன், குள்ள, நடுத்தர வயது பெண்மணி. கருப்பும் வெள்ளையுமான தாடி, மேலும் தளிர் மீசை!

வெளிநாட்டு வீராங்கனையாக அவர் துளியும் பொருந்தவில்லை.

''நான் ஒரு பெரிய முட்டாள்'' என தனக்குள் சொல்லிக் கொண்டார் ஆண்டனி. பரவாயில்லை... இதை நான் மேற்கொண்டு சந்தித்தே தீர வேண்டும்.

ஆண்டனி மேடமிடம் மிகவும் சிறப்பாக நடந்துக் கொண்டார். ப்ரன்னும் அவளுடைய பங்குக்கு படிக்குமறைக்குள் திடீரென வந்திருக்கும் இளையவன் வருகையில் சந்தோஷம் கொள்பவராகவே நடந்துக் கொண்டாள். பரிமா[illegible]வும் திருப்திகரமாய் இருந்தது.

நளினம் மிகுந்து மந்தகாசமாய் வடிவமைக்கப்பட்டிருந்த படுக்கை யறை ஆண்டனிக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. அந்த அறையில், அன்று மாலையில், மறுப்பாய் பல முறை தலையசைத்துக் கொண்டேயிருந்தார் ஆண்டனி.

''நான் தப்பு'' என தனக்குத்தானே பலமுறைசொல்லிக் கொண்டார். ''ரெண்டாவது முறையா நான் தப்பாகியிருக்கேன். இதுல என்னயிருக் கும்னு என்னால வாலைக் கூட பிடிக்க முடியலே, ச்சே!''

அறைக்குள் அங்குமிங்குமாய் நடந்துக் கொண்டிருந்த நடையை சட்டென நிறுத்தினார் அவர்.

''என்ன நடக்குது இங்கே? யாரது?'' என ஆரம்பித்தார் ஆண்டனி.

கதவு மிருதுவாய் திறக்கப்பட்டிருந்தது. அடுத்த நிமிடம் ஒரு மனிதன் அறைக்குள் நழுவி நுழைந்திருந்தான். அங்கு கதவருகிலேயே மிக்க மரியாதையாய் நின்றுக் கொண்டான் அவன்.

அவன் ஒரு நல்ல குண்டான பெரிய மனிதன். சதுரமாய் வளர்ந்திருந் தான். துருத்தலான முகவாய் எலும்புகள், பெரிய வெறி கொண்ட அகண்ட கண்கள்.

''யார் நீ?'' அவனைப் பார்த்து முறைத்தபடி கேட்டார் ஆண்டனி.

''நான், போரீஸ்.''

''ப்ரின்ஸ் மைக்கேலுடைய வேலையாள், ஆங்?''

''அப்படியே. என் முதலாளிக்கு நான் பணிவிடை பண்ணிக்கிட்டி ருந்தேன். இப்ப அவர் இறந்துட்டார். உங்களுக்குப் பணிவிடை பண்ணப் போறேன்.''

''உன் கனிவுக்கு நன்றி. ஆனா எனக்கு ஒரு பணியாள் தேவைனு தோணலே.''

''நீங்க இப்ப என் முதலாளி. நான் மரியாதையா ஊழியம் பண்ணப் போறேன். சாகும் வரை!''

போரீஸ், ஆண்டனியை வைத்த கண் வாங்காமல் பார்த்தான். ''நான் பணம் கேட்கலே. என் முதலாளிக்கு நான் பணிவிடை பண்ணிக் கிட்டிருந்தேன். ஸோ, இப்ப உங்களுக்குப் பணிவிடை பண்ணப் போறேன்.''

முன்னால் வேகமாய் வந்து அவன் ஒரு கால் மடக்கி முட்டிப் போட்டமர்ந்து ஆண்டனியின் கையைப் பிடித்திழுத்து தனது முன் நெற்றியில் வைத்துக் கொண்டான். பிறகு துரிதமாய் எடுத்துக் கொண். அவன் எப்படி திடுதிப்புனு உள்ளே வந்தானோ அதே சடுதியில் வெளியேறி விட்டான்.

ஆச்சரியத்துக்கு உதாரணமாய் ஆனது ஆண்டனியின் முகம், போனவனின் திசையையே வெறித்துக் கொண்டிருந்தது. ''கொஞ்சமும் விளங்கலே'' என தனக்குள் சொல்லிக் கொண்டார். ''நன்றியுள்ள நாய்! விசித்திரமான பயலுங்க.''

எழுந்துக் கொண்ட அவர் மறுபடியும் இடமும் வலமுமாய் நடக்க ஆரம்பித்தார்.

''என்னயிருந்தாலும் இது ஒரு சரியான முட்டாள்தனம்'' என்றார். ''யெஸ், இப்போதைக்கு விளங்காத இது ஒரு முட்டாள்தனம்தான்.''

அத்தியாயம் - 17

# ஒரு நள்ளிரவு வீரசாகசம்

மறுநாள் காலை மரண விசாரணை நடந்தது. துப்பறியும் கதைகளில் பரபரப்பாய் எழுதப்படுவதைப் போன்று துளியும் அமையாத மரண விசாரணையாய் அது முடிந்தது. இவ்வழக்கிலுள்ள அனைத்து முக்கிய தகவல்களும் மறைக்கப்பட்டு விட வேண்டும் என்ற ஜார்ஜ் லொமெக்ஸின் விடாத பிடிவாதத்தைக் கூட இவ்விசாரணை திருப்திப்படுத்தியே தந்தது. சூப்பரின்டெண்ட்டெண்ட் பேட்டிலும் நீதிபதியும் தலைமை கான்ஸ்டபிளின் உதவியோடு, திட்டமிட்டு, அடிமட்டத்து நிலையிலேயே எல்லாவற்றையும் மூடி விட்டனர்.

மரண விசாரணை முடிந்த கையோடு ஒருத்தரும் கவனிக்காத வண்ணம் ஆண்டனி நழுவினார்.

பில்லுக்கு மட்டும் ஆண்டனியின் இல்லாமை ஒரு நெருடும் விஷயமாய் பிரகாசமாக தென்பட்டது. அவர் சார்ந்த அரசாங்க துறைக்கு பாதகமாய் வழக்கு குறித்து ஏதாவது கசிந்து விடுமோ என்ற நடுக்கத்திலேயே சுழன்றுக் கொண்டிருந்தார் ஜார்ஜ். மிஸ் ஆஸ்கரும் பில்லும் மாற்றி மாற்றி அவரை கவனித்துக் கொள்வதில் தவறாமலிருந்தனர். படபடப்புக் குறைய அவருக்கு ஈடுபாடு உண்டாகுமாறும் உபயோகமாய் நேரம் கழிவதற்கும் என்னவெல்லாம் பண்ண முடியுமோ அத்தனையையும் பண்ணிப் பார்த்தாள் மிஸ் ஆஸ்கர். பில்லைப் பொறுத்தமட்டில், சேதிகளைத் தாங்கிக் கொண்டு இப்படியும் அப்படியும் ஓடியாடி இருப்பதும், வரும் தந்திகளை அள்ளிக் கொண்டு உடனே தனது முதலாளியிடம் ஒப்படைப்பதும், அவற்றுக்கு அவர் தரும் பதில்களை மளமளவென எழுதி தட்டச்சுப் பண்ணி தருவதுமாய் பொழுதுபோனது.

சனிக்கிழமை இரவு படுக்கப் போனபோது முழுக்க முழுக்க இற்றுப் போன ஓர் இளைஞனாய் ஆகியிருந்தான் பில். ஜார்ஜின் தொடர்ச்சியான டிக்டேஷன்களால் விர்ஜீனியாவோடு பேச அன்று முழுவதும் ஒரு நிமிடம் கூட அவனுக்கு வாயக்கவில்லை. இதனால் அன்றைய தினமே உபயோகமற்ற ஒன்றாய் ஆகிவிட்டதாக வருந்தினான் அவன். இதே நினைப்பில் தூங்கிப் போன அவனுக்கு கனவில் ஆறுதல் கிடைத்தது. விர்ஜீனியாவைப் பற்றி அல்லவா கனவு கண்டான்.

அது ஒரு வீர தீர சாகசக் கனவு. மரங்களடர்ந்த பகுதி முழுவதும் எரிந்துக் கொண்டிருந்த கனவு அது... அதில் ஆபத்பாந்தவனாக இயங்க வேண்டியது, பில்லின் பங்கு. கட்டிடத்தின் உச்சியிலிருந்து விர்ஜீனியா வைத் தனது கையிலேயே தூக்கிச் சுமந்துக் கொண்டு வெளியேறினான் பில். அவர் மூர்ச்சையாகிப் போயிருந்தார். அப்படியே அவரைப் புல் தரையில் கிடத்தி விட்டான் அவன். பிறகு ஒரு பாக்கெட் மருந்தினைத் தேடிப் போனான் அவன். அந்த மருந்து பாக்கெட்டைக் கண்டுபிடித்தே தீர வேண்டும் என்பதுதான் இதில் முக முக்கியமானது! அது ஜார்ஜின் வசமிருந்தது. ஆனால் ஆபத்து கருதி உடனடியாய் அதனை இவன் கையில் கொடுப்பதற்கு பதிலாக, அவர் கடிதங்களுக்கு எழுத வேண்டிய மறு பதில்களை டிக்டேட் பண்ணத் துவங்கி விட்டார். ஓ... இருவரும் தற்போதைக்கு சர்ச்சின் திருமண மண்டபத்தில் இருந்தனர்... இவனை அணைக்க எந்த நிமிடத்திலும் தேவதையாய் விர்ஜீனியா வந்து விடலாம். ஆனால், ஹோ! பில் இப்போது பார்த்து பைஜாமா மட்டும் அணிந்துக் கொண்டிருக்கிறான். வெற்று மார்பு! உடனடியாய் இப்போது வீட்டுக்கு ஓடிப் போய் மிகச் சரியான உடையை உடுத்தி திரும்ப வேண்டும். இதற்காக வேக வேகமாய் காரை நாடி வெளியே ஓடினான். ஆனால் கார் கிளம்பாது. அதன் வயிற்றில் பெட்ரோல் இல்லை. உதவ ஒரு நாதி கிடையாதா என நடுநடுங்கிப் போனான் பில்.அப்போது பார்த்து மாநகரப் பேருந்து அருகிலிருந்த பேருந்து நிறுத்தத்தில் வந்து நிற்க அதிலிருந்து விர்ஜீனியா இறங்கினார். வழுக்கைத் தலையன் பேரானின் கருவளையத்தில் அதியற்புத சாந்தத்துடனும், அழகு ததும்பும் சாம்பல் நிற அலங்கார உடையுடனும் தவழ்வது போல் நடந்தார் விர்ஜீனியா. இவனருகில் நெருங்கி வந்த அவர், விளையாட்டாய் இவனுடைய தோள்களைப் பிடித்து உலுக்கினார். ''பில்'' என்றார். ''ஓ, பில்'' என்றார்.

பில்லை முரட்டுத்தனமாய் உலுக்கவும் செய்தார். ''பில்'' என்றார் அவர். ''எழுந்திரு பில். ஓ, எழுந்திரு!''

மலங்க மலங்க விழித்துக் கொண்டே விழித்தெழுந்தான் பில். அவனுக்கு ஒதுக்கப்பட்டிருந்த பெட் ரூமில் சிம்னீஸில் இருக்கிறான் பில்! ஆயினும் கனவின் எஞ்சிய பகுதி இன்னும் அவனிடம் அப்பிக் கிடந்தது. விர்ஜீனியா அவன் மீது விழுந்து விடுவது போல் கவிழ்ந்து, சொன்ன வார்த்தைகளையே பல்வேறாய் 'பாவம்' மாற்றி சொல்லிக் கொண்டிருந்தார் அவர்: ''எழுந்திரு பில்! ஓ, எழுந்திரேன், பில்!''

கடைசியாய் மெத்தையில் விழுந்து உட்கார்ந்துக் கொண்டு ''ஹல்லோ'' என்றான். ''என்ன சமாச்சாரம்?''

ஒரு விடுதலைப் பெருமூச்சினை வெளியிட்டார் விர்ஜீனியா. ''கடவுளே! நீ எழுந்திருக்கவே மாட்டியோனு நான் நினைச்சேன். உன்னை நான் உலுக்கிக்கிட்டேயிருந்தேன்... இப்ப முழுசா முழிச்சாச்சா, நீ?''

''அப்படித்தான்னு நினைக்கிறேன்'' - சந்தேகமாய் சொன்னான் அவன்.

''தூங்குமூஞ்சி'' என்ற விர்ஜீனியா, ''என் கைகள் வலிக்குதுப்பா'' என்றார்.

''இதெல்லாம் என்கிட்டே சொல்ல வேண்டியவையே கிடையாது'' என்றான் பில் சுயமரியாதையாய். ''கவனியுங்க, விர்ஜீனியா... உங்க நடவடிக்கைகள் நாகரீகம் குறைஞ்சதா ஆகிக்கிட்டு வருது. ஓர் இளைய விதவைக்கு வேண்டிய அடக்கங்களே இல்லாம..''

''முட்டாள் மாதிரி பேசாதே பில்'' என்றார் விர்ஜீனியா. ''சில சமாச்சாரங்க இங்கே நடக்குது.''

''பச். இதென்ன பேச்சு? சில சமாச்சாரங்கன்னா? என்ன மாதிரி யானவை?''

''விளங்காத சமாச்சாரங்கள். விளங்கிக்க முடியாம ரகசியமா தோன்றும் சமாச்சாரங்க. எனக்கு ஏதோ ஒரு கதவு டமார்னு அடிச்சுக்கிட்ட மாதிரி ஒரு பேரோசை கேட்டுது. அது என்னனு பார்க்க நான் கீழேயிறங்கி வந்தேன். அப்பதான் மீட்டிங் அறைனு சொல்றாங்களே... அங்கே விளக்கு எரிவதை நான் பார்த்தேன். என்னால நிறைய பார்க்க முடியலே, ஆனா நான் பார்த்த வரைக்கும் அது ரொம்பவும் அசாதாரணமானதா தோண ஆகவே இன்னும் நிறைய பார்த்துடணும்னு முடிவு பண்ணினேன்.

அப்போ, திடுதிப்புனு, நம்ம கூடவே ஒரு ஸ்ட்ராங்கான நல்ல மனுஷன் ஒருத்தன் இருந்தா நல்லதுனு பட்டுது. நீ தான் எனக்கு சட்டுனு தோணினே. ஸ்ட்ராங்கான நல்ல திடகாத்திர மனுஷன். அதனால தான் நான் இங்கே வந்து உன்னை மூச்சு காட்டாம எழுப்ப நினைச்சேன். இங்கே வந்த நான் அதையேதான் செஞ்சேன் - ஆனா மணிக் கணக்கா!"

"அப்படியா?" என்றான் பில். "இதுல இப்ப நீங்க என்னை என்ன பண்ணனும்னு எதிர்பார்க்கிறீங்க? எழுந்து போய் அந்தத் திருடனுங்களைப் பிடிப்பதா?"

விர்ஜீனியா அவருடைய புருவங்களைக் குறுக்கினார். "அவங்க திருடனுங்கதானானு என்னால நிச்சயப்படுத்திச் சொல்ல முடியலே. ஆனா அது கொஞ்சமும் விளங்கலே. பேசிக்கிட்டு நாம நேரத்தை வீணடிக்க வேணாம், கெட் அப்."

மரியாதையாய் படுக்கையினின்றும் இறங்கினான் பில்.

"நான் பூட்ஸ் போட்டுக்கிற வரைக்கும் கொஞ்சம் வெயிட் பண்ணுங்க. ஒரு பெரிய கனமான அடியில ஆணிங்க இருக்கிற பூட்ஸ் ஒண்ணு யிருக்கு. பூதாகரமா இருந்தாலும், இது எனக்கு சிறந்த கவசமா உதவும்."

திடுமென விர்ஜீனியா சொன்னார்: "உன்னோட பைஜாமா எனக்கு பிடிச்சிருக்கு, பில். பளீர்னு இருக்கு, ஆபாசமில்லாம.."

இரண்டாவது பூட்ஸினை மாட்டியபடி "முக்கியமான சமாச்சாரத்துக்குள்ளே நாம இறங்கிட்டிருக்கும்போது" என்ற பில், "உங்களோட இந்தப் புகழுரை எனக்கு உற்சாகத்தைத் தருது. வெளிர் பச்சை நிறம், இதை நீங்க என்னனு வழக்கமா குறிப்பிடுவீங்க? நைட் டிரஸ்?" என்றான்.

"ம்.." பிறகு தொடர்ந்தார். "நீ ஒரு சுத்தமான வாழ்க்கையை வாழுவது எனக்கு சந்தோஷமாயிருக்கு."

"அப்படியெல்லாம் எதுவும் கிடையாது."

"பாராட்டுரையை ஒதுக்கிற நீ ரொம்ப நைஸ், பில். நாளைக்கு காலைல, கிளர்ச்சியான உணர்ச்சிகளைத் தூண்டி விடாத சுமார் பத்து மணிக்கு, நான் உனக்கு ஒரு முத்தம் தந்தாலும் தரலாம்.."

"ம்.." என்று இக்கருத்தை மறுத்த பில், "இந்த ரொமான்ஸெல்லாம் எதிர்பாராத ஒரு நொடியிலே நிக்ழ்ந்தாதான் த்ரில் என்பது என் கட்சி" என்றான்.

''தற்சமயம் விர்ஜீனியா, ''கிளம்புவோமா?'' என்றான்.

''ஐ ஆம் ரெடி.''

கிளம்பும்போது குடைத்தடி போன்ற கொம்பு ஒன்றினை எடுத்துக் கொண்டான். ''ஒரு சிறந்த தற்காப்பு ஆயுதம்.''

''கம் ஆன்'' என்ற விர்ஜீனியா, ''தயவு செய்து ஓசை ஏற்படுத்திடாதே'' என்றார்.

அறையை விட்டு காற்றாய் நழுவிய இருவரும் வராந்தாவில் முன்னேறி அகல அகலமாய் இருந்த பெரிய படிக்கட்டுகளில் இறங்கலானார்கள். கடைசி படிக்கட்டினை அடைந்தபோது விர்ஜீனியாவின் முகம் சுளித்துக் கொண்டது. ''உன்னோட அந்த பூட்ஸ்..'' என்றவர், ''அமைதியை நாராசமா கிழிக்குது'' என்றார்.

''ஆணிகள் தரையில் பட்டா அவற்றோட குணத்தைக் காட்டத்தான் செய்யும்'' என்றான் பில். ''நான் அரவம் கேட்காம இருக்க பிரயத்தனப் பட்டுத்தான் நடக்கிறேன்.''

''நீ பூட்ஸைக் கழற்றித்தான் தீரணும்'' என்றார் விர்ஜீனியா முடிவாய்.

பில் மறுப்பாய் உறுமினான்.

''வேணும்னா கையில எடுத்துக்கிட்டு வா. அந்த அகண்ட மீட்டிங் அறையில அப்படி என்னதான் போய்க்கிட்டிருக்குனு நீ பார்த்து சொல்லணும்னு நான் விரும்பறேன், பில். தாள முடியாத மர்மமா யிருக்குப்பா. எதுக்காக திருடனுங்க அங்கே இருக்கிற ஒரு போர் உருவத்தை உடைக்கப் பார்க்கணும்?''

''வெல்.. அப்படியே முழுசா அவனுங்களால கொண்டு போக முடியலியோ என்னவோ! அவனுங்க அதைப் பிரிச்சு அழகா அடுக்கிக் கொண்டு போகப் போறானுங்க போலிருக்கு!''

திருப்தியற்று மறுப்பாய் தலையசைத்தார் விர்ஜீனியா. ''சிம்னீஸ் முழுக்கவும் புதையல்கள் இருக்கு. சுலபமா தூக்கிக்கிட்டு போகும்படி கைக்கெட்டும் தூரத்துல! அப்புறம் எதுக்கு இப்படி?''

இதற்குப் பில் மறுப்பாய் தலையசைத்தான். பிறகு கேட்டான்: ''எத்தனை பேர் இருக்கானுங்க?'' கையிலிருந்த கைத்தடியில் இறுக்கத்தைக் கூட்டிக் கொண்டான்.

''ஒழுங்கா என்னால பார்க்க முடியலே. ஒரு சாவி துவாரம் எத்தனை பெருசுனு உனக்குத் தெரியாதா? அங்கே உள்ள வெறும் டார்ச் மாதிரி மட்டுந்தான் ஒளி இருந்தது.''

''அவனுங்க இந்நேரத்துல ஓடியிருப்பானுங்க'' என்று நம்பிக்கை யோடு சொன்னான் பில்.

கடைசிப் படிக்கட்டில் அப்படியே உட்கார்ந்துக் கொண்ட அவன், பூட்சை உருவியெடுத்தான். பிறகு அவற்றை கைகளில் சுமந்தபடி மீட்டிங் அறை வரை போன பாதையில் விர்ஜீனியா நெருக்கமாய் அருகிலேயே வர நடந்துப் போனான் அவன். அகண்டு உயர்ந்திருந்த கனமான கதவருகில் இருவரும் தயங்கி நின்றார்கள். உள்ளே எல்லோரும் அமைதியில் இருக்க, திடீரென்று விர்ஜீனியா அவனது கையை அமுக்கினார்... அவன் ஒப்புதலாய் தலையசைத்தான். சாவித் துவாரத்தின் வழியாக சட்டென்று ஓர் ஒளிக்கீறல் வந்து போனது.

பில் தனது கால் முட்டியை மடித்தமர்ந்து கண்களை அந்த ஓட்டைக்குள் பொருத்திப் பார்த்தான். அவன் பார்த்த காட்சி உச்சபட்ச குழப்பத்தை அவனுக்குள் ஏற்படுத்தியது. அங்கே உள்ளே அரங்கேறிக் கொண்டிருந்த காட்சி முழுவதும், ஜஸ்ட் இடது பக்கத்தில், இவனுடைய பார்வை நேர்க் கோட்டுக்குள் அகப்படாமல் இருந்தது. அவ்வப்போது கிடைத்த காட்சிகள் உள்ளேயிருப்பவர்கள் அந்த ஆயுதம் ஏந்திய சிலையோடே இன்னமும் இயங்கிக் கொண்டிருப்பதைக் காட்டின. இப்படிப்பட்ட சிற்பங்கள் அங்கே இரண்டு இருந்தன... பில்லுக்கு நினைவு வந்தது. அங்கு சுவற்றிலிருந்த ஓர் ஓவியத்துக்குக் கீழே இருவர் நின்றுக் கொண்டிருந்தார்கள். டார்ச்சின் ஒளிக்கீறல்கள் அங்கு நடைபெற்றுக் கொண்டிருக்கும் செயலின் மீதே அடிக்கப்பட்டுக் கொண்டிருப்பது வெளிப்படையாகவே தெரிந்தது. இது, அறையின் இன்னபிற பகுதிகள் அனைத்தையும் இருட்டில் போட்டிருந்தது. ஒருமுறை ஓர் உருவம் பில்லின் பார்வைக் கோட்டில் அகப்பட்டது.. ஆனால் போதிய வெளிச்சம் இல்லாததால் அது யாருடைய உருவம் என பிரித்தறிய முடியவில்லை. அது ஓர் ஆண் அல்லது பெண் உருவமா யிருக்கலாம். தற்போது உள்ளேயிருந்து புது ஓசையொன்று வந்தது... மரத்தில் அடிக்கப்படும் மெல்லிய டப் டப் ஓசை.

பில் சட்டென நிமிர்ந்து விட்டான்.

''என்ன?'' - முணுமுணுத்தார் விர்ஜீனியா.

''ஒண்ணுமில்லே... இப்படி நாம செஞ்சுக்கிட்டிருப்பதுல எந்தப் பலனும் விளையப் போவதில்லே. நமக்கு எதுவும் தென்படவும் செய்யாது. அவனுங்க எதை அடைய இப்படி பண்ணிக்கிட்டிருக்காங்க என்பதும் நமக்கு தெரிய வராது. நான் உள்ளே போய் அவனுங்களைப் பந்தாடணும்.''

அவனுடைய பூட்ஸ்களைப் போட்டுக் கொண்டு நிமிர்ந்து நின்றான்.

''இப்ப நான் சொல்றதைக் கவனியுங்க விர்ஜீனியா. நாம கதவை எவ்ளோ நைஸா திறக்க முடியுமோ அப்படி திறப்போம். விளக்கு ஸ்விட்சு எங்கேயிருக்குனு உங்களுக்குத் தெரியுமில்லே?''

''யெஸ், கதவுக்குப் பக்கத்திலேயே..''

''உள்ளே ரெண்டு பேரைத் தவிர வேற யாரும் இல்லேனு நினைக்கிறேன். இல்லே, ஒருத்தன் மட்டும் கூடயிருக்கலாம். நான் நல்லா அறைக்குள்ளே போயிட விரும்பறேன். அப்படிப் போனதும், 'கோ' அப்படினு நான் சொன்னவுடனே நீங்க ஸ்விட்சுகளைத் தட்டி விட்டுடணும், விளங்குதா?''

''படு துல்லியமா..''

''கத்திக் கதறி மயக்கம் கியக்கம் போட்டுறாதீங்க... யாரும் உங்களைத் தாக்க நான் அனுமதிச்சுட மாட்டேன்.''

''மை ஹீரோ!'' என்று முணுமுணுத்தார் விர்ஜீனியா.

அவரைச் சந்தேகமாய் இருட்டிலும் துளைத்துப் பார்த்தான் பில். வெறும் நமுட்டுச் சிரிப்பு ஒன்று தான் அவனுக்கு அப்போது பதிலாய் கேட்டது. பிறகு கையிலிருந்த தடியை இறுக்கமாய் பிடித்துக் கொண்டு முன்னேறினான். சூழ்நிலையை எதிர்கொள்ள தான் முழுவதும் தயாராகி விட்டதாய் நினைத்தான் அவன்.

மிக மிருதுவாக கதவின் கைப்பிடியைக் கீழ் நோக்கி அமுக்கினான் அவன். அது ஒத்துழைத்தது. அழகாய் உள்நோக்கித் திறந்தது. தனக்கு வெகு அருகில் விர்ஜீனியாவை உணர்ந்தான் பில். ஒன்றாக இருவரும் சப்தமின்றி அறைக்குள் நுழைந்தார்கள்.

அறையின் எதிர்க்கோடியில் டார்ச் ஒளி சுவற்றுப் படத்தின் மீது விளையாடிக் கொண்டிருந்தது. அதற்கு நேரெதிராய் ஒரு சேரில் நின்றுக்

கொண்டிருந்த ஆடவன் ஒருவனின் உருவம் தெரிந்தது... அப்படத்தின் சட்டத்தைத் தட்டியபடி அவனுடைய முதுகுப் பக்கம் இவர்கள் பக்கமாய் இருக்க, மாபெரும் ராட்சத நிழல் போல் அவன் இங்கிருந்து தெரிந்தான்.

இதற்கு மேலும் அவர்கள் என்னவெல்லாம் பார்த்திருக்கக்கூடும் என்று சொல்ல முடியாது... ஏனென்றால் அந்தக் கணத்தில் பில்லின் பூட்ஸ் ஆணிகள் தரையில் கீறி ஓசையெழுப்பி விட்டன. ஒரே திருப்பமாய் திரும்பிய அவன் டார்ச் ஒளி அனைத்தையும் இவர்கள் மீது அப்பினான். அதன் ஒளிக் கற்றையால் இருவரின் கண்களையும் கூச வைத்தான்.

பில் தயங்கவில்லை.

''கோ'' - விர்ஜீனியாவுக்கு உறுமினான் அவன். தனது ஆடவனின் கட்டளைக்குக் கட்டப்பட்ட அவள் மின் விளக்குகளின் ஸ்விட்சுகளைத் தட்டி விட்டாள்.

அங்கு தொங்கிக் கொண்டிருந்த பெரும் தொங்கு விளக்கு இந்நேரத்தில் ஒளி வெள்ளத்தில் மூழ்கியிருக்க வேண்டும். ஆனால், மாறாக, வெறும் ஸ்விட்சு ஓசையோடு மட்டும் விஷயம் முடிந்து போனது. அறை, இருட்டிலேயே கிடந்தது.

விர்ஜீனியா அந்தப் பக்கத்தில் பில் சபித்துக் கொண்டிருப்பதைக் கேட்டார். அடுத்த நிமிடம், அறைக் காற்று முழுவதும், எகிறும், விழும், கத்தும், மூச்சு முட்டும், குத்தும் ஓசைகளால் நிரம்பியது. டார்ச் தரையில் விழுந்திருந்தது... இதில், அது தானாக அணைந்து விட்டிருந்தது. காப்பாற்ற உதவி நாடி நடக்கும் போராட்டம் புரிந்தது... ஆனால் யார் கை ஓங்கியிருக்கின்றது, மற்றும் யார் யார் அடித்துக் கொண்டிருக் கிறார்கள் போன்ற எதுவும் விர்ஜீனியாவுக்குத் தெரியவில்லை. படத்தைத் தட்டியெடுத்துக் கொண்டிருந்தவனைத் தவிரவும் அறைக்குள் வேறு யாராவது இருந்திருக்கக் கூடுமா? இருந்திருக்கலாம். இருந்தவர்கள் மின்னல் போலத்தானே கண்களில் அகப்பட்டிருந்தனர்!

விர்ஜீனியா ஸ்தம்பித்துப் போனார். என்ன பண்ணுவதென்றே அவருக்குத் தெரியவில்லை. நடந்துக் கொண்டிருக்கும் போராட்டத்தில் போய் இவரும் சேர்ந்துக் கொள்ளத் துணிவு வரவில்லை. அப்படிச் செய்வது பில்லுக்கு உபகாரமாய் அமையாமல் உபத்திரவமாய் முடியும் என்றே கருதினார் அவர். இவருக்குள் ஓர் ஐடியா தான் அப்போது உருவானது... நேராய் நுழைவாயிலில் போய் நின்றுக் கொண்டு,

விடுவதுதான் அது. அதன் வழியே ஓட நினைப்பவனுக்கு அப்போது அப்படி வழி கிடைக்காமல் போய் விடும் என்று நம்பினார். இதை செயல்படுத்தும்போது பில் தந்திருந்த முக்கிய கட்டளையை ஒதுக்கி வைத்துவிட்டார். யெஸ் அலறினார்... உதவி கேட்டு கத்தினார்.

மேலே கதவுகள் திறக்கப்படும் ஓசையைக் கேட்டார். கூடவே ஹாலில் விளக்கொளிகளும் படிக்கட்டுகளில் தடதட ஓசைகளும் இடம்பெற்றன.

அந்த க்ஷணத்தில் இறுதியாய் ஒரு படு பயங்கர சப்தம் எழுந்தது. அங்கிருந்த மெய்க்காப்பாளன் உருவம் ஒன்றோடு, போராடிக் கொண்டிருந்தவர்கள் மோதிக் கொண்டிருக்க வேண்டும். காதைச் செவிடாக்கும் இடியோசையோடு அது தரையில் விழுந்து மோதியது. ஓர் உருவம் அப்போது ஜன்னல் நோக்கித் தள்ளியோடியதைப் பார்த்த விர்ஜீனியா, கூடவே நொறுங்கிய சிலையுருவத்தை பில் சபித்துக் கொண்டிருப்பதையும் கேட்டார்.

இக்களேபரத்தில் முதல் முறையாய் நுழைவாயிலேயே நிற்கும் தனது முடிவினைக் கை விட்டு விட்டு ஜன்னலுக்கு ஓடியிருந்த உருவத்தை நோக்கிப் பாய்ந்தார். ஆனால் ஜன்னல் ஏற்கெனவே திறந்து வைக்கப் பட்டிருந்தது. உள்ளே நுழைந்தவன் அதைத் திறக்கவோ அல்லது தள்ளி வழி பண்ணிக் கொள்ளவோ நேரம் செலவழிக்கத் தேவையிருக்கவில்லை. அவன் அதன் வழியே தாவிக் குதித்து, மேல் மாடியிலிருந்து வளைந்து சரிவாய் தரைத் தளம்போன டெரஸில் ஓடி கீழே சென்று, அப்படியே வீட்டின் வளைவு வரை வெளியேறியிருந்தான். விடாமல் அவனைத் துரத்திக் கொண்டு விர்ஜீனியா ஓடினார். இவரும் இளமையும் ஓடும் திறனும் கொண்டிருந்ததால் திருட்டுப் பயல்ஓடிய பாதையில் உடனடியாகவே பின் தொடர்ந்துக் கொண்டிருந்தார்.

ஆனால் அங்கு பக்கவாட்டிலிருந்த ஒரு சிறு கதவின் வழியே வெளி வந்துக் கொண்டிருந்த ஓர் ஆளால் சட்டென பிடித்து நிறுத்தப்பட்டார். அது மிஸ்டர் ஹிராம் ஃபிஷ்.

''ஓ, பொண்ணு!'' என ஆச்சரியமாய் சொன்னார் அவர். ''ஓ மிஸஸ் ரேவல்'' என்றார் பிறகு. ''எதையோ பண்ணிட்டு சட்டத்துக்கு எதிரா தப்பிச்சு ஓடும் ஆளா உங்களை நினைச்சுட்டேன்.''

"ப்ச்" என்று வெறுத்த விர்ஜீனியா, "அவன் ஜஸ்ட் இப்பத்தான் இப்படி ஓடினான்"என்று மூச்சிரைத்தார். "நாம அவனைப் பிடிச்சிட முடியாது?"

இப்படி ஆலோசித்தாலும் கூட காலங்கடந்து விட்டது என்பது விர்ஜீனியாவுக்கே கூட தெரியும். அந்த ஆள் வீட்டைக் கடந்திருக்க வேண்டும்... நிலவற்ற காரணத்தால் எங்கும் இருட்டு வேறு. இப்படிப்பட்ட திருடர்களோடு ஏதோ அதிக முன்னனுபவம் உள்ளவரைப் போல அத்தகையவர்களைப் பற்றி ஓரங்க நாடகமாய் பேசியபடி உடன் வந்த ஃபிஷ்ஷோடு மீட்டிங் அறைக்குத் திரும்பிக் கொண்டிருந்தார் விர்ஜீனியா.

லார்ட் கேட்டர்ஹாம், பண்டில் மேலும் பல பயந்துப் போயிருந்த வேலைக்காரர்கள் என எல்லோரும் மீட்டிங் அறையின் வாசலிலேயே காத்திருந்தனர்.

"என்ன கண்றாவி இதெல்லாம்?" என்று கேட்டது, பண்டில். "திருடங்கதானா? மிஸஸ் விர்ஜீனியா... நீங்களும் மிஸ்டர் ஃபிஷ்ஷும் என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்க? நடு ராத்திரி வாக்கிங்கா?"

நடந்த அனைத்தையும் விவரித்தார் விர்ஜீனியா.

இதை, "என்ன பரபரப்பான த்ரில்லரா இருக்கு" என விவரித்தார் விர்ஜீனியா. "வார இறுதியில் நடக்கிற ஒரு சின்ன அளவளாவலுக்கு இப்படியா கொலைகாரனுங்களும் திருடனுங்களும் போட்டி போட்டுக்கிட்டு வருவானுங்க? இங்கேயிருக்கிற விளக்குங்களுக்கு என்ன ஆச்சு? மீதி எல்லா இடத்துலேயும் நல்லாத்தானே இருக்கு."

அந்த மர்மம் உடனடியாகவே விளக்கப்பட்டது. தொங்கு விளக்கு களின் பல்புகள் கழற்றப்பட்டு வரிசையாய் அங்கு அடுக்கி வைக்கப் பட்டிருந்தன. ஓரிரு முயற்சிகளில் அவற்றை மீண்டும் அதனதன் இடங்களில் பொருத்திய மரியாதைமிகு ட்ரெட்வெல் அறைக்கு வெளிச்ச உயிர் கொடுத்தவனானான்.

தன்னைச் சுற்றியிருந்தவர்களைப் பார்த்தபடி சோகமான குரலில் கேட்டர்ஹாம் சொன்னார். "கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி இதே அறையில் வன்முறையான செயல்கள் நடந்திருக்கு."

அவர் குறிப்பிட்டுக் காட்டியதில் கொஞ்சம் நியாயமும் இருக்கத்தான் செய்தது. எதையெல்லாம் உடைக்க முடியுமோ அவையனைத்தும் அங்கு உடைக்கப்பட்டிருந்தன. தரை முழுவதும் உடைக்கப்பட்ட நாற்காலிகள், பீங்கான் சாமான்கள், தெறித்த ஆயுதங்களின் உடைந்த பாகங்கள் ஆகியவற்றால் நிரம்பிக் கிடந்தது.

''அவனுங்கள்ல மொத்தம் எத்தனை பேருங்க இருந்தானுங்க?'' என்றாள் பண்டில். ''இதையெல்லாம் பார்த்தா, எப்படியாவது தப்பிச்சாகனும்னு குடுமிபிடி சண்டை நடந்தது மாதிரியில்ல இருக்கு?''

''ஒருத்தன்தான் நினைக்கிறேன்'' என்றார் விர்ஜீனியா. ஆனால் இப்படி சொல்லியதே கூட தயங்கித் தயங்கித்தான் சொன்னார் அவர். நிச்சயமாய் ஒரே ஓர் ஆள் - ஒரு மனிதன் - ஜன்னலைக் கடந்து ஓடினான். அவனைத் துரத்திக் கொண்டு உடனடியாய் விர்ஜீனியா ஓடத் துவங்கியபோது கையருகிலேயே கசமுசவென ஏதோ ஓசையைக் கேட்கவும் செய்தார். அது நிஜம்தானென்றால் இன்னோர் ஆசாமி கதவு வழியாக வெளியே தப்பித்திருக்க வேண்டும். இருந்தாலும், அந்த ஓசை விர்ஜீனியாவின் பய நேரத்துக் கற்பனையாய் கூடயிருக்கலாம்.

திடீரென்று ஜன்னலில் பில் தோன்றினான். மூச்சிழந்திருந்த அவன், சுவாசக் காற்றுக்காக அல்லாடினான். ''கழுதைப் பய'' என்று கோபமாய் குறிப்பிட்டான் அவன். ''தப்பிச்சுட்டான். இந்த சுற்று வட்டாரம் முழுக்க வேட்டையாடிட்டு வந்திருக்கேன். அவனைப் பற்றிய சின்ன அறிகுறி கூட கிடைக்கலே.''

''படபடக்காதே பில்'' என்றார் விர்ஜீனியா. ''இன்னொரு முறை இப்படி நடந்தா... பிடிச்சுடலாம்.''

''வெல்..'' என்று சற்று நேரங்கழித்து அமைதியைக் கிழித்த கேட்டர்ஹாம், ''இப்ப என்ன பண்ணலாம்னு நினைக்கிறீங்க?'' என கேட்டார். ''படுக்கைக்கே போயிடறதா? இன்ஸ்பெக்டர் பேக்ட் ஒர்த்தியைப் போய் என்னால இந்த நடு நிசியில கூட்டிட்டுவர முடியாது. ட்ரெட்வெல்.. உனக்கு இப்ப என்னவெல்லாம் அத்தியாவசியமா பண்ணனும்னு தெரியும். ஜஸ்ட் அவற்றை பண்ணிடு, செய்வியா?''

''வெரிகுட், மை லார்ட்.''

ஒரு நிம்மதிப் பெருமூச்சு வெளியிட்டவாறு ஆயத்தமானார் கேட்டர்ஹாம். "அந்த கழுதை, ஐஸக்டீன், பாறை மாதிரி தூங்கறான்" என்றார் பொறாமையாய். "இத்தனை களேபரமும் அவரை வெளியே இழுத்துக்கிட்டு வந்திருக்கும்னு நீங்க நினைக்கலாம்.." என்றார். பிறகு ஃபிஷ்ஷைப் பார்த்து, "உடையை நல்லா சரி பண்ணிக்கிட்டு அப்புறமா வெளியே வர உங்களுக்கு அவகாசம் இருந்திருக்கு போல, ஆங்?" என்று கூடுதலாய் சேர்ந்துக் கொண்டார்.

"யெஸ்" என ஒப்புக் கொண்டார் அந்த அமெரிக்கன்.

"புத்திசாலி நீங்க" என்றார் லார்ட் கேட்டர்ஹாம். சொன்னவர் கொட்டாவி விட்டார். மனக்கிலேசம் சூழ்ந்த மனோநிலையில் வீட்டிலிருந்த அனைவரும் படுக்கைக்குத் திரும்பிக் கொண்டிருந் தார்கள்.

அத்தியாயம் 18

# இரண்டாவது நள்ளிரவு வீரசாகசம்

மறுநாள் மத்தியானம் ரயிலிலிருந்து இறங்கியதும் இறங்காததுமாய் ஆண்டனி பார்த்த முதல் ஆள், சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில். அதிகாரியின் முகம் ஒரு சிரிப்புக்கு சின்னதாய் இடங் கொடுத்தது.

"சொன்னபடி நான் திரும்பிட்டேன்" என்று குறிப்பிட்டார் ஆண்டனி. "அப்படிநான் பண்றேனானு பார்த்து ஊர்ஜிதப்படுத்திக்கத்தான் நீங்க இங்கே வந்திருக்கீங்களோ?"

பேட்டில் மறுத்துத் தலையசைத்தார். "அதைப் பற்றி நான் கவலைப்படவேயில்லை, மிஸ்டர் கேட். நான் இப்ப லண்டன் போகிற பிரயாணம் நீங்க வந்திறங்கும் நேரத்தோட ஒத்துப் போயிருக்கு. அவ்ளோதான்."

"உங்களுக்கு நம்பும் மனோதிடமிருக்கு, மிஸ்டர் பேட்டில்."

"அப்படியா நினைக்கிறீங்க நீங்க?"

"நோ, அதாவது எப்படி சொல்லுவது - ஆங்.. ஆழம்...படு ஆழம்! ஸோ, நீங்க லண்டன் போறீங்க, அப்படித்தானே?"

"நான் போறேன், மிஸ்டர் கேட்."

"எதுக்காகனு எனக்கு ஆச்சரியமாயிருக்கு?"

துப்பறியும் அதிகாரி மறுபதில் தரவில்லை. "நீங்க சரசமா பேசிடறீங்க" என்று குறிப்பிட்டார் ஆண்டனி. "உங்ககிட்டே எனக்குப் பிடிச்சதே அதுதான்."

ஆழ்ந்த தூரத்தில் மினுமினுப்பு தெரிந்தது பேட்டிலின் கண்களில். ''நீங்க சொல்லிட்டுப் போன உங்களோட குட்டி ஜாப் என்ன ஆச்சு, மிஸ்டர் கேட்?'' என விசாரித்தார். ''எப்படி போச்சு அது?''

''பூஜ்யம். துளி லாபம் இல்லாம திரும்பியிருக்கேன், பேட்டில். ரெண்டாவது தடவையா நான் முழுசா தப்பாக இருந்திருப்பது நிரூபணமாயிருக்கு.''

''நான் கேட்கலாம்னா... என்ன வேலையா போனீங்க, ஸார்?''

''அந்த பிரெஞ்சு வேலைக்காரியை நான் சந்தேகிச்சேன், பேட்டில். 1. துப்பறியும் கதைகள்ல கோடிக் காட்டப்படும் பாத்திரத்தைப் போல அவ ஒருத்திதான் இந்த வீட்டுல இருக்கிற கூட்டத்துலேயே நம்ப முடியாத வித்தியாசமானவளா எனக்குத் தோணினா. 2. துயரம் சம்பவித்த இரவில் அவ அறையில தான் அந்த நேரத்துல விளக்கெரிந்தது.''

''அது ஒண்ணும் புடிச்சிக்கிட்டே தொங்க வேண்டிய பெரிய துப்பு கிடையாது.''

''நீங்க சொல்வது ரொம்ப சரி. பெருசா முன்னேற்றம் தரவல்ல துப்பில்லைதான். ஆனா அவ இங்கே கொஞ்ச நாளாத்தான் இருக்கா என்பதையும் மேலும், சந்தேகத்துக்குரிய வகையில ஒரு பிரெஞ்சுக்காரன் இப்பகுதியை நோட்டமிட்டு அலையறான் என்பதையும் நான் கண்டுபிடிச்சிருக்கேன்.''

''யாரைச் சொல்றீங்க... தன் பெயரை செல்லஸ் அப்படினு சொல்லிக்கிட்டு அலையறானே... அவனையா? இங்கேயிருக்கிற விடுதியில தங்கியிருப்பவனையா? சில்க் உடையில் தென்படும் ஒரு பிரயாணி அவன்னு சொல்றானே, அவனையா?''

''அப்பப்பா... என்ன சுறுசுறுப்பு? அவனே தான்! அவனைப் பற்றி என்ன சொல்றீங்க? ஸ்காட்லாண்ட் யார்ட் என்ன நினைக்குது?''

அவன் நடவடிக்கைகள் சந்தேகத்துக்கு இடமளிப்பவையாதானிருக்கு'' என்று 'பாவமற்று' சொன்னார் பேட்டில்.

''ரொம்பவும் சந்தேகத்துக்கு இடமளிப்பவையா இருக்குனு நான் சொல்வேன். வெல்.. நான் ரெண்டையும் ரெண்டையும் சேர்க்கப் பார்க்கிறேன். உள்ளேயிருக்கும் பிரெஞ்சு பணியாள்... வெளியே சுற்றிக்கிட்டிருக்கும் பிரெஞ்சு அந்நியன். ரெண்டு பேரும் ஏதோ ஒரு

கூட்டணியா இருக்காங்கனு முடிவு கட்டிக்கிறேன் நான். உடனே மேடம் ப்ரன் பத்து வருஷமா வேலைப் பண்ணிக்கிட்டிருந்த பெண்மணியைப் பார்த்து விசாரிக்க நான் பறக்கறேன். ஆரம்பத்துலேயே, 'ப்ரன் அப்படினு ஒருத்தியை நான் கேள்விப்பட்டதேயில்லை' அப்படினு தான் அவங்க சொல்வாங்கனு முடிவா நான் போனேன், பேட்டில். ஆனா, என் கணிப்பு தப்பு. மேடம் ப்ரன் ஒரு தங்கமான பொண்ணு.''

பேட்டில் ஒப்புக் கொள்வதாய் தலையை மட்டும் அசைத்தார்.

''அவங்ககூட நான் பேச ஆரம்பிச்சதுமே தப்பான இடத்துல வந்து கதவைத் தட்டிக்கிட்டிருக்கேன்னு எனக்குப் புரிஞ்சுப் போச்சு.. யெஸ்.''

மறுபடியும் ஒப்புக் கொள்வதாய் தலையசைத்தார் பேட்டில். ''இருந்தாலும் மிஸ்டர் கேட். இதே கருத்துலயே நீங்க எப்பவுமே இருந்துடக் கூடாது. பெண்கள் மேக் - அப் என்ற அரிதாரக் கலையால என்னவெல்லாமோ பண்ணலாம். ஓர் அழகான பொண்ணு - தலை மயிரைக் கொஞ்சம் வெள்ளையாக்கிக்கிட்டு, தொய்ந்துப் போன மாதிரி உடையணிந்துக்கிட்டு, கருவட்டத்தைக் கண்ணைச் சுற்றி ஏற்படுத்திக் கிட்டு, நடக்கவே முடியாத மாதிரி நொண்டிக்கிட்டு தன்னை மாற்றிக் கிட்டாளா - அவளை நல்லா தெரிஞ்சவங்கள்ல பத்துல ஒன்பது பேரால அவளை அடையாளம் காண முடியாது! இப்படி ஒரு வலுவான மாற்றத்தை ஆண்களால் கொண்டு வந்துக்க முடியாது. புருவத்தையும், முழுக்கவும் மாற்றப்பட்ட பல் செட்டையும் போட்டுக்கிட்டு முழு 'பாவத்தையும்' நீங்க மாற்றிக்கப் பார்க்கலாம். ஆனா, காட்டிக் கொடுக்க எப்பவும் காதுகள் போதும் மிஸ்டர் கேட் - காதுகள்ல பலதரப்பட்ட உணர்ச்சிகளிருக்கு, யெஸ்..''

''அதுக்காக என் காதுகளை அப்படி முறைச்சுப் பார்க்காதீங்க, பேட்டில்'' என்று குறை கூறும் தொனியில் சொன்னார் ஆண்டனி. ''என்னைப் படபடப்பாக்கறீங்க.''

சின்னதாய் சிரித்தார் பேட்டில். தொடர்ந்தார். ''ரொம்ப ரொம்ப கணிசமான ஆண்கள் தான் தங்களுடைய அடையாளத்தை முழுக்க மறைச்சுக்கிட்டு நம்ம கூடவே இருக்கும் திறமை வாய்ந்தவங்க. நானறிஞ்சு ஒரேஒரு ஆள் தான் இப்படி மாறு வேடம் போட்டு சாதிப்பதுல மாஸ்டரா திகழ்ந்துக்கிட்டிருக்கான். கிங் விக்டர்! கிங் விக்டரைப் பற்றி எப்பவாவது கேள்விப்பட்டதுண்டா, மிஸ்டர் கேட்?''

இக் கேள்வியை டிடெக்டிவ் போட்ட விதத்தில் ஏதோவொரு வகையான திடீர்த் தன்மையும் கறார் தன்மையும் இருக்க, இதற்கு விடையாய் ஆண்டனியின் உதடு வரை வந்துவிட்ட விடையை அவ உடனே கொட்டி விடாமல் அதை ஒன்றுக்கு இரண்டு முறை பரிசோதித்துக் கொள்ளும்படி ஆனது.

வந்த கேள்விக்கு மாறாக, 'கிங் விக்டர்' என்று அப்பெயரையே ஒருமுறை சொன்ன ஆண்டனி, ''எங்கேயோ இப்பெயரை நான் கேள்விப்பட்டா மாதிரிதானிருக்கு'' என்றார்.

''உலகின் மிகப் பிரபலமான நகை கொள்ளைக்காரன் இவன். ஐரீஷ் இவன் அப்பா. பிரெஞ்சுக்காரி அம்மா. குறைந்தபட்சம் ஐந்து மொழிகள் பேசுவான். ஒரு சிறைத் தண்டனையை அவன் அனுபவிச்சுக் கிட்டிருந்தான்... ஆனா அது சில மாதங்களுக்கு முன்னாடி முடிஞ்சுடுச்சு.''

''நெஜமா? அப்ப அவன் இப்போ எங்கே இருப்பான்னு உத்தேசம்?''

''வெல், மிஸ்டர் கேட். இக்கேள்விக்குத்தான் இப்ப எங்களுக்கு விடை தேவை.''

''இந்தக் கேஸின் களம் இன்னும் இறுக்கமாகுது'' என்றார் ஆண்டனி. ''இவன் இங்கே வந்து இருக்கும் சாத்தியக் கூறுகள் இருக்கா, ஆங்? ஆனா இவனுக்கு அரசியல் வாழ்க்கை வரலாறுகள்ல அதிகம் ஈடுபாடு இருக்காதுனு நெனைக்கிறேன் - ஒன்லி ஜுவல்ஸ், இல்லையா?''

''அப்படி எதுவும் கட்டுப்பாடுகள் இருக்காது'' என்றார் சூப்பரின் டெண்டெண்ட். ''எங்களுக்கு அவனைப் பற்றி தெரிஞ்சிருப்பதிலிருந்து சொல்றேன்... அவன் ஏற்கெனவே கூட இங்கே வந்து இறங்கியிருக்கலாம்.''

''மாறுவேடத்துல? சூப்பர். நீங்க அவனோட காதைப் பார்த்தே அவனை அடையாளம் கண்டுபிடிச்சு ப்ரேமாஷன் வாங்கிடுவீங்க!''

''உங்களோட குட்டிக் குட்டி ஜோக்குகள்ல உங்களுக்கு நம்பிக்கை ஜாஸ்தி போல, மிஸ்டர் கேட்? ஓகே.. சொல்லுங்க.. ஸ்டெயின்ஸ் பகுதியில நடந்திருக்கிற அந்த விளங்காத சம்பவம் பற்றி என்ன நினைக்கிறீங்க?''

''ஸ்டெயின்ஸ்?'' என்றார் ஆண்டனி. ''ஸ்டெயின்ஸ்ல என்ன நடந்துக்கிட்டிருக்கு?''

''சனிக்கிழமை பேப்பர்களில் இருந்ததே, அதையெல்லாம் நீங்க படிச்சிருப்பீங்கன்னு நான் நினைச்சுக்கிட்டிருக்கேன். தெருவோரத்துல சுடப்பட்டுக் கிடந்த ஒரு மனுஷன். அயல்நாட்டான். மறுபடியும் இன்னிக்கும் அது பேப்பர்களில் வந்துருக்கே!''

''ஆங், இப்படி எதையோ நானும் பார்த்தேன்'' என விட்டேற்றித் தனமாய் சொன்னார் ஆண்டனி. ''தற்கொலையா தெரியலை.''

''நோ, அருகில் எந்த ஆயுதமும் காணப்படலே. இதுவரைக்கும் அவன் யார்னு அடையாளம் காணப்படலே.''

''இதுல நீங்க ரொம்ப இண்ட்ரஸ்டிங்கா இருக்காப்ல படுது'' என்றான் ஆண்டனி சிரித்தபடி. ''ப்ரின்ஸ் மைக்கேலுடைய டெத்துடன் இதுக்கு சம்பந்தம் ஏதும் கிடையாது, இல்லையா?''

சூப்பரின்டெண்டெண்ட் கைகள் ஸ்திரமாய் நின்றன. அப்படியே அவருடைய கண்களும், நடுக்கமற்று. விளக்கவொண்ணா தினுசில் வேண்டுமென்றே சூப்பரின்டெண்டெண்ட் முறைத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறார் என ஆண்டனி நினைப்பது வெறும் கற்பனையா? இல்லை.

தற்சமயம் தொடர் இடியோசையாய் சப்தப்படுத்திக் கொண்டு நடைமேடைக்குள் நுழைந்துக் கொண்டிருந்த லண்டன் ட்ரெயினைப் பார்த்ததும் போர்ட்டரைத் தேடினார் பேட்டில். ஒரு சின்ன விடுதலைப் பெருமூச்சு ஆண்டனியிடமிருந்து வெளிப்பட்டது.

பார்க்கின் வழியாக, எப்போதும் இல்லாத குணாதிசயமாய் தீவிர சிந்தனையோடு நடக்கலானார் ஆண்டனி. விதிவசப்பட்ட வியாழன் இரவில் எந்த வழியில் இவர் வீட்டினை அடைந்தாரோ அதே வழியிலேயே செல்ல வேண்டும் என திட்டமிட்டு வீட்டினை நெருங்கிய கட்டத்தில், விளக்கெரிந்ததாய் தனக்குள் உள்ள குறிப்பினை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளும் விதமாய், தன் மூளையின் ஞாபக சக்தியனைத்தையும் ஒன்று திரட்டிக் கொண்டு நிமிர்ந்து ஜன்னல்களைப் பார்த்தார் அவர். வீட்டின் கடைக்கோடியிலிருந்து வரும் இரண்டாவது ஜன்னல்தான் அது என்பதில் அவர் நிச்சயமாகத்தானிருக்கிறார்.

இதை நிரூபித்துக் கொள்ள முயற்சித்துக் கொண்டிருந்தபோதுதான் அவர் அதைக் கண்டுபிடித்தார். வீட்டின் கடை மூலையில் டானா போன்ற

ஒரு திருப்பமிருந்தது. ஒரு சின்ன வளைவு அது. அங்கும் ஒரு ஜன்னலிருந்தது. ஆனால் சற்று உள்ளடங்க. இங்கு பார்க்கில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் நின்று பார்க்கும்போது இந்த ஜன்னலைத்தான் முதல் ஜன்னலாய் எண்ணிக்கையில் வைக்கும்படி ஆகின்றது. இதனால் மீட்டிங் அறையின் முதல் ஜன்னல் இரண்டாவது ஜன்னலாகி விடுகின்றது. ஆனால் சில கெஜங்கள் வலப்பக்கம் நகர்ந்து நின்று பார்க்கும்போது அந்தத் திருப்பம் காணாமல் போய்விட வீட்டின் கடை மூலையாய் மீட்டிங் அறை தோன்றுகின்றது. டானா வளைவின் உள்ளடங்கிய ஜன்னல் இப்போது காணாமல் போய்விட மீட்டிங் அறையின் ஜன்னல்களே முறையே ஒன்று மற்றும் இரண்டு என்று ஆகின்றன. விளக்கொளி உண்டானபோது ஆண்டனி நின்றுக் கொண்டிருந்தது எந்த இடத்தில்?

இக்கேள்விக்கான விடையை அடைவது மிகவும் சிரமமான விஷயமாய் அமைந்தது ஆண்டனிக்கு. இந்த குறிப்பிடும்படியான வித்தியாசத்தை ஓரிரு கெஜங்கள் உண்டு பண்ணித் தருகின்றன. ஆனாலும் ஒரு விஷயம் மட்டும் போதுமான அளவுக்கு தெளிவாயிருந்தது.வீட்டின் கடை மூலையிலிருந்து வரும் இரண்டாவது ஜன்னலிலிருந்துதான் விளக்கொளியைப் பார்த்ததாய் ஆண்டனி சொன்னது தப்பாய் கூட இருக்கலாம். இது மூன்றாவது ஜன்னலிலிருந்தும் வந்திருக்கும் என்பதற்காக அத்தனை வாய்ப்புகளும் இருக்கின்றன.

எனில், அந்த அறையில் இருப்பது யார்? எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை சீக்கிரத்தில் அதனைக் கண்டுபிடித்து விட வேண்டும் என முடிவெடுத்துக் கொண்டார் ஆண்டனி. அதிர்ஷ்டம் அவருக்குத் துணை நின்றது. அப்போதுதான் ஹாலில் ஒரு பெரிய வெள்ளிக் கிண்ணத்தைக் கொண்டு வைத்துவிட்டு நின்றுக் கொண்டிருந்தான் ட்ரெட்வெல். வேறு ஒருத்தரும் அங்கு இல்லை.

''ஹல்லோ ட்ரெட்வெல்'' என்றது ஆண்டனி. ''உங்ககிட்டே ஒரு விஷயத்தை கேட்கணுமே... வீட்டோட மேற்குப் பகுதியில யார் மூணாவதா வரும் ரூம்ல இருப்பது? மீட்டிங் அறையிருக்கு இல்லே... அந்தப் பகுதியிலே கேட்கிறேன்..''

ட்ரெட்வெல் ஓரிரு நிமிடங்கள் சிந்திக்கலானான். ''அது அமெரிக்க ஜென்டில்மேனுடைய ரூமா இருக்கலாம் ஸார்... மிஸ்டர் ஃபிஷ்.''

''ஓ, அப்படியா? தேங்க் யூ..''

''இதுக்கெதுக்கு ஸார் தேங்க்ஸ்.''

ட்ரெட்வெல் கிளம்ப ஆயத்தமானான்... ஆனால் தயங்கினான். விஷயத்தை உடைத்தது முதலில் தானாய்தானிருக்க வேண்டும் என்ற பரபரப்பு, மிகவும் மரியாதையோடு நடந்துக் கொள்ளும் பட்லர்களைக் கூட சாதாரண மனிதர்களாக்கி விடுகின்றது.

''நேற்று ராத்திரி என்ன நடந்ததுனு நீங்க கேள்விப்பட்டிருக்கணுமே, ஸார்.''

''ம்ம்'' என்றார் ஆண்டனி. ''ஒரு வார்த்தை கேள்விப்படலே. நேத்து ராத்திரி என்ன நடந்தது?''

''ஒரு திருட்டு முயற்சி, ஸார்.''

''ஏய், ஏய்... அப்படியா? ஏதாவது களவு போயிடுச்சா?''

''நோ, ஸார்... ஆயுதங்கள் வெச்சிருந்த பகுதியிலிருந்த ஆயுதங்களைக் கழற்றிக்கிட்டிருந்தானுங்க திருடனுங்க... மீட்டிங் அறையில்தான். எடுத்துக்கிட்டு ஓடியிருப்பானுங்க... ஆனா பாவம் எல்லாத்தையும் விட்டுட்டு ஓட வேண்டியதாயிடுச்சு.''

''இது அசாதாரணமா இருக்குப்பா'' என்றார் ஆண்டனி. ''மறுபடியும் அதே மீட்டிங் அறை. ஒடைச்சுக்கிட்டா உள்ளே வந்திருக்கானுங்க?''

''ஜன்னலைத் தொறந்துக்கிட்டு வந்திருக்கணும்னு பேசிக்கிறாங்க, ஸார்.''

சொல்ல வந்ததை முதலில் சொல்லி விட்டதால் விளைந்த திருப்தியை அனுபவித்தபடி வெளியேறத் திரும்பியவனிடமிருந்து ஒரு சிறு மரியாதை கலந்த மன்னிப்பு வெளியானது. ''மன்னிக்கணும் ஸார், நீங்க உள்ளே வந்ததை நான் கேட்கவேயில்லை. நீங்க என் பின்னாடியே நின்னுக்கிட்டிருக்கீங்கனுகூட எனக்குத் தெரியாம நுழைஞ்சிருக்கீங்க.''

ட்ரெட்வெல்லின் திருப்பத்தால் இடிக்கப்பட்டிருந்த மிஸ்டர் ஐஸக்டீன் நட்பாய் கையமர்த்திக் காட்டினார். ''ஒண்ணும் பெருசா பட்டுடலே நண்பா, அடியெல்லாம் கிடையாது. கேரி ஆன்.''

ஒடுக்கமாய் ட்ரெட்வெல் வெளியேறி விட, முன்னுக்கு வந்த ஐஸக்டீன் ஒரு ஈஸி சேரில் தன்னைப் போட்டுக் கொண்டார். ''ஹல்லோ கேட்'' என்றார். ''ஸோ, நீங்க திரும்பி வந்துட்டீங்க..''

''யெஸ்'' என்ற ஆண்டனி. ''என்ன ஒரு பரபரப்பான வார இறுதி அமைஞ்சிருக்கு போல தெரியுது..'' என்றார்.

''யாரோ லோக்கல் ஆசாமிங்களால தான் நேற்றைய இரவு கலாட்டா நடந்திருக்கணும்னு எனக்குத் தோணுது'' என்றார் ஐஸக்டீன். ''கசாமுசானு பண்ணிட்டுப் போயிருக்காணுங்க, அதை வெச்சு சொல்றேன்.''

''ஆயுதங்களைச் சேகரிச்சு வெக்கும் வழக்கம் உள்ளவங்க யாராவது இங்கே இருக்காங்களா?'' என கேட்டார் ஆண்டனி. ''இப்படியொரு வழக்கம் விசித்திரமான ஒண்ணா படுது.''

''படு விசித்திரம்'' என்றார் ஐஸக்டீன். ஒரு நிமிடம் போல தாமதித்த அவர் பிறகு மெதுவாய் சொன்னார்: ''இங்கே வந்து மாட்டிக்கிட்டிருப்பது ஒரு பெரிய துரதிர்ஷ்டம்.''

அவர் சொன்ன தொனியில் ஆழமான கிலி பற்றிக் கிடந்தது. அல்லது கிலி படுத்துவது போல அமைந்திருந்தது.

''நீங்க சொல்வதை என்னால முழுக்கப் புரிஞ்சுக்க முடியலே'' என்றார் ஆண்டனி.

''இந்த மாதிரி கைக்கட்டப்பட்ட ஒரு நிலையில எதுக்காக நாம எல்லோரும் இங்கே வெக்கப்படணும்? நேற்றே மரண விசாரணை முடிஞ்சாச்சு. மாரடைப்பால் காலமாகி விட்டதாக சொல்லப்பட்டு ப்ரின்ஸுடைய உடல் நாளையே லண்டனுக்கு போயிடும். இத்தனை யிருந்தும் ஒருத்தர்கூட வீட்டை விட்டு அகல அனுமதிக்கப்படலே.''

''சூப்பரின்டெண்டெண்ட் பேட்டிலுக்கு என்னவோ தெரிஞ்சிருக்கு'' என்றார் ஆண்டனி சிந்தனையாய். ''அவரோட திட்டத்தின் முக்கியமான சாறு, யாரும் இந்த வீட்டை விட்டு அகலக் கூடாது என்பதுதான்னு நினைக்கிறேன்.''

''ஆனா, சொல்றேன்னு தப்பா நினைக்காதீங்க கேட். நீங்க வெளியே போயிட்டு வந்திருக்கங்க.''

''கால்ல விலங்கு கட்டப்பட்டு'' என்று விளக்கினார் ஆண்டனி. ''நான் வெளியிலிருந்த முழு நேரமும் கண் கொத்திப் பாம்பா கண்காணிக் கப்பட்டிருக்கேன் என்பதுல எனக்குத் துளி சந்தேகம் கிடையாது. அந்த ரிவால்வரை எங்கேயாவது போட்டு தலைமுழுகிடும் சந்தர்ப்பங்கள் எனக்கு அளிக்கப்படக் கூடாது இல்லே..?''

''ஆஹ், ரிவால்வர்'' என சிந்தனையாய் சொன்னார் ஐஸக்டீன். ''அது இன்னும் கண்டுபிடிக்கப்படலே.''

''யெஸ், இன்னும்.''

''போற வழியில அப்படியே குளத்துக்குள்ளே விட்டெறியப்பட்டிருக்கலாம்.''

''சான்ஸ் இருக்கு.''

''சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் எங்கே? அவரை இன்னிக்கு மத்தியானம் நான் பார்க்கலையே.''

''அவர் லண்டன் வரை போயிருக்கார். அவரை நான் ஸ்டேஷன்ல வெச்சு சந்திச்சேன்.''

''லண்டனுக்கா போயிருக்கார்? நெஜமா? எப்ப வருவேன்னு சொன்னாரா அவர்?''

''நாளை விடிகாலைனு நினைக்கிறேன்.''

அப்போது லார்ட் கேட்டர்ஹாம் மற்றும் மிஸ்டர் ஃபிஷ் ஆகியோருடன் சேர்ந்துக் கொண்டு விர்ஜீனியா உள்ளே வந்தார். ஆண்டனியைப் பார்த்து வரவேற்கும் புன்னகையை வீசினார் அவர். ''ஓ.. அப்ப நீங்க திரும்பி வந்துட்டீங்களா, மிஸ்டர் கேட்? நேற்று ராத்திரி நாங்க பண்ணின வீரதீர சாகசங்களைப் பற்றியெல்லாம் நீங்க கேள்விப்பட்டீங்களா?''

''ஆமாம் கேட்'' என்றார் ஃபிஷ். ''பரபரப்பும் கிளர்ச்சியும் நிறைந்த இரவு அது. மிஸஸ் ரேவலைப் போய் நான் உள்ளே வந்திருந்த திருடங்கள்ல ஒருத்தர்தான்னு நினைச்சுப் பிடிச்சதையும் கேள்விப் பட்டீங்களா?''

''அதிருக்கட்டும்'' என்ற ஆண்டனி சொன்னார்: ''அந்த திருடனுங்க?''

''ஓடிட்டானுங்க'' என்றார் மிஸ்டர் ஃபிஷ் வருத்தமாய்.

''விர்ஜீனியா... நீங்களே விளக்குங்களேன்'' என்ற லார்ட் கேட்டர் ஹாம், ''இந்த பண்டில் பொண்ணு எங்கே போனானு தெரியலியே'' என்றார்.

விர்ஜீனியா சின்னதாய் சொல்லி முடித்தார். பிறகு எழுந்து ஆண்டனியின் அருகே சென்று அமர்ந்துக் கொண்டார். ''டீ முடிஞ்சதும்

படகுத் துறைக்கு வா'' என தணிந்தக் குரலில் சொன்னார். ''நானும் பில்லும் உன்கிட்டே நிறைய விஷயங்கள் சொல்ல வேண்டியிருக்கு''. பிறகு பட்டும் படாமல் அங்கு நடந்துக் கொண்டிருந்த சம்பாஷணையில் அவர் பங்கேற்றார்.

படகுத்துறை சந்திப்பு திட்டமிட்டபடி நடந்தது.

விர்ஜீனியாவும் பில்லும் தத்தம் செய்திகளால் பொங்கி வழிந்துக் கொண்டிருந்தார்கள். ரகசிய உரையாடல்களுக்கு ஏரியின் மையப் பகுதிதான் பாதுகாப்பான நம்பகத்தன்மை பெற்ற இடம் என அனைவரும் ஒப்புக் கொண்டார்கள். நடுக்குளம் வரை சென்று விட்டது ஊர்ஜிதமானதும் முந்தைய நாளிரவு நடந்த சாகச நிகழ்வுகள் அனைத்தும் ஆண்டனிக்கு ஒப்புவிக்கப்பட்டன. இதில் பில் சற்று முகஞ்சுளித்தவனாய் தென்பட்டான். இந்த ஆளை முந்தைய நாளிரவு நடந்து முடிந்துள்ள வீரதீர நிகழ்வுகளோடு கொண்டு வந்து முடிச்சுப் போடாமல் வைப்பதே நல்லது என விரும்பினான் அவன்.

''புரியா புதிரா இருக்கு இது'' என்றார் ஆண்டனி. கதை சொல்லி முடிக்கப்பட்டதும், ''இதிலேருந்து நீங்க என்ன முடிவுக்கு வந்திருக்கீங்க?'' என விர்ஜீனியாவைக் கேட்டார்.

''எதையோ எதிர்பார்த்துத்தான் அவனுங்க வந்திருக்கானுங்கனு நினைக்கிறேன்'' என்று சிரத்தையாய் பதில் தந்தார். ''திருடனுங்க எனும் ஐடியா முட்டாள்தனமானது.''

''அவனுங்க தேடி வந்தது, அது எதுவோ, அது, ஆயுதங்களுக்குள்ளே ஒளிச்சு வைக்கப்பட்டிருக்கலாம்னு நினைச்சிருக்கானுங்க... யெஸ் - அது வெளிப்படையாவே தெரியுது. ஆனா எதுக்காக சுவரிலிருந்த படத்தைத் தட்டியெடுக்கணும்? இது ஏதோ அவனுங்க ஒரு ரகசிய பாதை இருப்பதையோ அல்லது ரகசியப் படிக்கட்டுகள் இருப்பதையோ அல்லது இப்படிப்பட்ட ஏதோ ஒன்றை சந்தேகிச்சுத் தேடியிருப்பது போல தோணுது.''

''சிம்னீஸ்ல சுரங்கப் பாதை மாதிரி ஒண்ணுயிருக்கு. எனக்குத் தெரியும்'' என்றார் விர்ஜீனியா. ''படிகள் கொண்ட ஒரு ரகசியப் பாதையிருப்பதாகவும் கேள்வி. இதைப் பற்றியெல்லாம் லார்ட் கேட்டர்ஹாமால நமக்கு விளக்க முடியும். இதெல்லாம் இருக்கட்டும்... அவனுங்க இங்கே எதை தேடிக்கிட்டு வந்தானுங்க.''

''அது வாழ்க்கை வரலாறா இருக்க முடியாது'' என்றார் ஆண்டனி. ''அது ஒரு நல்லபெரிய கனமான பார்சல். அவனுங்க சின்னதா எதையோ தான் தேடி வந்திருக்கணும்.''

''ஜார்ஜுக்கு என்னன்னு தெரியும்னு நினைக்கிறேன்'' என்றார் விர்ஜீனியா. ''அவர் வாயிலிருந்து அதை என்னால பிடுங்கிட முடியுமானு தெரியலே. இதுக்கெல்லாம் பின்னாடி என்னவோ இருக்குனு எனக்கு இந்த கேஸ் நெடுகிலும் எண்ணம் இருந்துக்கிட்டே இருந்தது.''

''ஒரே ஓர் ஆள் தான் இருந்தான்னு நீங்க சொன்னீங்க'' என முன்னேறிய ஆண்டனி, ''ஆனா, நீங்க ஜன்னல் பக்கமா துள்ளி ஓடிய போது இங்கே கதவு நோக்கி யாரோ போன அரவத்தை நீங்க கேட்டிருப்பதால, இன்னொருத்தனும் இருந்திருக்கலாம்னு தோணுது.''

''அந்த அரவம் ரொம்பவும் ஒலி கம்மியாக இருந்தது'' என்றார் விர்ஜீனியா. ''ஜஸ்ட் என்னோட வெறும் கற்பனையா கூட அது இருந்திருக்கலாம்.''

''இது சாத்தியமே. ஆனா, ஒருவேளை அது உங்க கற்பனையா இல்லாம நிஜமா இருந்திருக்கும் பட்சத்துல அந்த ஆளு இங்கேயே உள்ளே இருக்கும் ஆளாத்தான் இருக்கணும். இப்ப எனக்கு என்ன தோணுதுனா..''

''எதை நினைச்சு திகைச்சுப் போறீங்க?'' என்று கேட்டார் விர்ஜீனியா.

''நீங்க கீழே உதவி கேட்டு கத்தியபோது, குற்றமற்றவர் போல சுத்தமா டிரஸ் பண்ணிக்கிட்டு, தயாரா நின்னுக்கிட்டிருந்த மிஸ்டர் ஃபிஷ்ஷின் படு ஜாக்கிரதையான நடவடிக்கை.''

''ஆமா.. இதுல என்னவோயிருக்கு'' என்று ஏற்றுக் கொண்டார் விர்ஜீனியா. ''அப்புறமா அந்த ஐஸக்டீன்... வீடே அமைதியா இருப்பதைப் போல ஆழ்ந்து தூங்கிய அவர்...! இதுவும் சந்தேகத்துக்கு இடம் தருது. இப்படியொருத்தனால இருக்க முடியுமா?''

''அந்தப் பய போரீஸ்?'' என ஆலோசித்தது, பில். ''உள்ளுக்குள்ளே அமைதியாகாத ஒரு முரட்டுப் போக்கிரி போலிருக்கான் அவன். ஐஸக்கோட சர்வன்ட்டைத்தான் சொல்றேன்.''

இப்போது ''சிம்னீஸ் முழுக்க ஒரே சந்தேகத்துக்குரிய பாத்திரங்களா பொங்கி வழியுது'' என்றார் விர்ஜீனியா. ''இதுல நாம விட்டு வெச்ச மற்றவங்களும் சந்தேகப் பட்டியலிலிருந்து விடுபடாதவங்கனு என்னால

அடிச்சு சொல்ல முடியும். சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் லண்டன் போகலேனு என்னால நிச்சயமா சொல்ல முடியும். அங்கே அவர் போவதற்கு எந்த முட்டாள் காரணமும் தெரியலே. ஆங், மிஸ்டர் கேட், அந்த விளங்கா பிரெஞ்சு அந்நியன் நம்ம பார்க்குலயே சுற்றிக் கிட்டிருப்பதை நான் ஓரிரு முறை பார்த்தேன்.''

''அதெல்லாம் சும்மா'' என்று மறுத்தார் ஆண்டனி. ''இப்படித்தான் ஒரு சந்தேக விஷயமா தூசி தட்டிட்டு நான் வந்திருக்கேன். ம்ம், பிரயோஜனமில்லை. கழுதை மாதிரி திரும்பியிருக்கேன். இதுதான் மிச்சம். இங்கே கவனியுங்க... எனக்கென்னவோ இந்த முழு சமாச்சாரமும் ஒரே ஒரு கேள்வியா சுருங்கி நிக்கறாப்ல தெரியுது. அது இதுதான். நேற்று ராத்திரி அவனுங்க எதை தேடிக்கிட்டு இங்கே வந்திருந்தாங்களோ அதை அவனுங்க பார்த்துட்டாங்களா?''

''அவங்க ஒருவேளை பார்க்கலேனா?'' என்றார் விர்ஜீனியா. ''என்னைப் பொறுத்தவரைக்கும் அவனுங்க எதையுமே இங்கே பார்க்கலே.''

''அப்படினா அவனுங்க மறுபடியும் வருவானுங்க... இதுதான் என் தற்போதைய நம்பிக்கை. பேட்டில் லண்டன்ல இருப்பது அவனுங் களுக்குத் தெரிஞ்சிருக்கும்... அல்லது உடனடியா தெரிஞ்சுப்பானுங்க. ஆகவே இன்னொரு முறை ஆபத்தைக் கைல எடுத்துக்கிட்டு, இன்னிக்கு ராத்திரி அவனுங்க மறுபடியும் வருவானுங்க.''

''நெஜமா நீங்க அப்படியா நினைக்கிறீங்க?''

''வாய்ப்பிருக்கு. தட்ஸ் ஆல். இப்ப நாம மூணு பேரும் ஒரு குழு அமைச்சுப்போம். எவர்ஸ்லேயும் நானும் தேவையான முன்ஜாக்கிரதை நடவடிக்கைகளைக் கடைப்பிடிச்சுட்டு மீட்டிங் அறையிலேயே பதுங்கியிருக்கிறோம்..''

''நான்?'' இடைமறித்தார் விர்ஜீனியா. ''என்னை இதிலிருந்து வெளியே தள்ளி வைக்கத் திட்டமிடாதீங்க.''

''கவனியுங்க விர்ஜீனியா'' என்றான் பில். ''இது ஆம்பிளைங்க வேலை.''

''மண்ணாங்கட்டி. முட்டாள் மாதிரி பேசாதே பில். நான் இதுக்குள்ளே தானிருக்கேன். நினைவிருக்கட்டும். நேத்து ராத்திரி என் கையைப்

பிடிச்சுக்கிட்டு நீ படியிறங்கி வந்தபோது மட்டும் இது பொம்பிளைங்க வேலையோ? இது மூணு பேர் குழு. இக்குழு இரவு ரோந்து அடிக்கும்.''

இப்படியாக ஒரு முடிவாக்கப்பட, திட்டங்கள் வகுக்கப்பட்டன. கூடியிருந்தோரெல்லாம் சாப்பிட்டு முடித்துப் படுக்கைக்குக் கழன்றுக் கொண்ட பிறகு, குழுவின் ஒவ்வோர் அங்கத்தினராக ஓசைப்படாமல் உட்புகுந்தனர். ஒவ்வொருவரும் சக்தி வாய்ந்த டார்ச் விளக்கு ஏந்தியிருந்தார்கள். ஆண்டனியின் கோட் பாக்கெட்டில் கிடந்தது ஒரு கைத்துப்பாக்கி.

ஆண்டனிதான் இன்னொரு முறை திருட்டு முயற்சி அன்றிரவே மேற்கொள்ளப்படும் என்று சொல்லியிருந்தது. இருந்தபோதிலும், அந்த முயற்சி, வெளியிலிருந்து இடம்பெறும் என்ற அர்த்தத்தில் அவர் சொல்லியிருக்கவில்லை. முந்தைய நாளிரவு, கும்மிருட்டில், அவரைக் கடந்து ஒருத்தர் போனதாய் விர்ஜீனியா ஊகிப்பது மிகச் சரி என்றே நம்பினார் அவர். எனவே படுத்திருந்த ஓர் ஓக் மரத்தாலான பீரோவின் பின்னால் அவர் பதுங்கி நின்றுக் கொண்டபோது, அவருடைய கண்கள் வாசற் கதவினை நோக்கியே நிலைத்திருந்தனவே ஒழிய ஜன்னலை நோக்கி அல்ல. எதிர்புற சுவர் பகுதியிலிருந்த ஓர் ஆயுதந் தாங்கிய உருவத்துக்குப் பின்னால் ஒண்டிக் கொண்டிருந்தார் விர்ஜீனியா. பில், ஜன்னலருகில்.

ஒவ்வொரு நிமிடமும் வருடக் கணக்காய் நீள்வது போன்ற பொறுக்கவொண்ணா நீளத்தோடு போயிற்று. ஒன்று என மணியடித்தது. பிறகு ஒன்றரை, அப்புறம் இரண்டு.. தொடர்ந்து இரண்டரை. ஆண்டனி இறுகிப் போனவராய் உணர்ந்தார்.. அவருக்கு முட்டிகள் கடுமையாய் வலிக்க ஆரம்பித்திருந்தன. தனது ஊகமே தவறாய் போயுள்ளது என்கிற முடிவுக்கு அவர் கொஞ்சங் கொஞ்சமாய் போயிருந்தார். ம்ம்... இன்றிரவு எந்த முயற்சியும் இடம்பெறப் போவது கிடையாது.

அப்போதுதான் அவருடைய புலன்கள் எல்லாவற்றையும் ஜாக்கிரதையாய் தீட்டிக் கொண்டு அவர் விறைப்பானார். வெளியிலிருந்த டெரஸ் பகுதியிலிருந்து காலடிகள் வருவது அவருக்குக்கேட்டது. பிறகு மீண்டும் அமைதி. பிறகு ஜன்னலை லேசாய் அசைப்பது போன்றதோர் ஓசை. திடீரென ஜன்னல் வழிவிட்டு இணங்கியது கேட்டது... கூடவே அது திறக்கப்படும் ஓசையும். ஒரு மனிதன் ஜன்னல் மரச் சட்டத்தில் கால் வைத்து குதித்திறங்கி நின்றான். கேட்கும் ஓசைகளையெல்லாம்

துளைத்தெடுத்து கவனிப்பவனைப் போல சில நிமிடங்கள் ஓவியமாய் நின்றான் அவன். பிறகு திருப்தியடைந்தவனைப் போல கையிலிருந்த டார்ச் விளக்கு ஒளியினைத் துரிதமாய் ரூம் முழுக்கவும் ஒரு வட்டமடித்துக் காட்டி முடித்தான். அசாதாரணமாய் எதையும் அவன் பார்க்கவில்லை. கவனித்துக் கொண்டிருந்த மூன்று பேரும் மூச்சு மூசையைக் கூட இழுத்துப் பிடித்து வைத்திருந்தார்கள்.

நேற்றைய இரவு அவன் பரிசோதித்துக் கொண்டிருந்த அதே சுவர்ப் பகுதிக்குப் போனான் அவன். அது, சுவரில் பெரிய படம் போன்ற ஒன்று மாட்டப்பட்டிருந்த சுவர்ப்பகுதி.

அப்போது பார்த்து, ஒரு படு பயங்கரமான எச்சரிக்கை பில்லின் மூளையைக் கடந்தது. அவன் தும்மப் போகிறான்! பனி படர்ந்த பார்க் பகுதியில் முந்தைய இரவு போலிருந்தது, அவனுக்கு செமத்தியான ஜலதோஷத்தை ஏற்படுத்தியிருந்தது. நாள் முழுக்க விட்டுவிட்டு தும்மிக் கொண்டுதானிருந்தான். அதேபோல் இப்போது ஒரு தும்மல் வரவேண்டியிருக்கின்றது... அதை பூமியின் எந்த சக்தியாலும் தடுத்து நிறுத்திவிட முடியாது.

ஆனாலும் அதைத் தடுத்து நிறுத்த அவனறிந்திருந்த அனைத்து நிவாரண வழிகளையும் கடைப்பிடித்துப் பார்த்தான். உதடுகளை உள்ளுக்கு மடக்கி வாயைப் பூட்டினான்... உள்ளே கனமாய் காற்றை இழுத்து நிறுத்திப் பார்த்தான். கழுத்தை அப்படியே பின்னுக்குத் தள்ளிப் போட்டுக் கொண்டு உத்திரத்தைப் பார்த்தான். கடைசியாய் மூக்கு துவாரங்களை இறுக்க மூடிக் கொண்டு, கசக்கி விட்டும் முயற்சித்தான். எதுவும் ஒத்துழைக்க உதவாமல் போயின. தும்மி விட்டான்!

பார்த்து பரிசோதித்து அடக்கப்பட்ட சின்ன 'விசுக்'தான் அது.. ஆயினும் மயான அமைதியாய் இருந்த அந்த அறைக்கு பேரிடியாய் அறையுமளவுக்கு இருந்தது அது.

அந்த அந்நியன் தள்ளித் திரும்ப, அதே சமயம் ஆண்டனி இயங்கினார். அவனுடைய கையிலிருந்த டார்ச்சை அடித்து விழ வைத்த அவர், அவன் மீது முழுக்கவும் வீழ்ந்தார். மறுநிமிடமே இருவரும் தரையில் ஒன்றாய் கிடந்தார்கள்.

"விளக்குகள்" கத்தினார் ஆண்டனி.

தயாராய் சுவிட்சுகளிடம் இருந்தார் விர்ஜீனியா. இன்றிரவு, விளக்குள் முழு ஒளியுடன் பிரகாசமாய் எரிந்தன. ஆண்டனி அந்நியனின் மேல் இருந்தார். அப்போது பில் உதவிக்கரம் நீட்டினார்.

''இப்ப..'' என்ற ஆண்டனி, ''நீ யார்னு நாங்க பார்த்துடறோம், பயலே'' என்றார்.

குப்புறக் கிடந்த தனது இரையைத் திருப்பிப் போட்டார் அவர். அது, சுத்தமாய், கறுப்பு தாடி வைத்து அலைந்துக் கொண்டிருந்த, பக்கத்து விடுதி அந்நியனே.

அப்போது 'சிறப்பான திட்டம்' என்று ஒரு குரல் அங்கீகரித்துப் பின்னாலிருந்து வந்தது.

அங்கிருந்த இவர்கள் அனைவரும் விக்கித்துப் போய் பார்த்தார்கள். திறந்திருந்த கதவின் வாயிலில் பருத்த சூப்பரின்டெண்டெண்ட் பேட்டிலின் உருவம் நின்று கொண்டிருந்தது.

''நீங்க லண்டன்ல இருக்கீங்கன்னுல்ல நான் நினைச்சுக்கிட்டி ருக்கேன்'' என்றார் ஆண்டனி.

பேட்டிலின் கண்கள் மினுமினுத்தன. ''அப்படியா, ஸார்?'' என்று அவர் கேட்டார். ''அப்படி நான் கிளம்பிப் போயிருப்பதா நினைச்சுக்கிட்டே இருப்பது தான் எனக்கு நல்லதுனு நான் நினைச்சேன், ஸார்.''

''நம்பிக்கிட்டு தான் இருந்தோம்'' என்றார் ஆண்டனி, தான் பிடித்திருந்த பகைவனைப் பார்வையால் பார்த்தபடி.

ஆனால் ஆண்டனியின் ஆச்சரியத்துக்குத் தீனி போடும் விதமாய் அந்நியனின் முகத்தில் அடக்க முடியாமல் போனதால் விளைந்த சிறு சிரிப்புக் கீறல் முளைத்திருந்தது.

''நான் எழுந்திருக்கலாமில்ல?'' என பிடிபட்ட பயமற்ற குரலில் கேட்டார் அவர். ''நீங்க மூணு பேர். நான் ஒருத்தன். ஏதோ பார்த்துப் பண்ணுங்க'' என்றார் சிறு சிரிப்புக் கீறல் குறையாமல்.

ஆண்டனி கண்ணியமாய் கை தந்து உதவி அவனைத் தூக்கி விட்டார். அந்த அந்நியன் அவனுடைய கோட்டினைச் சரி செய்து கொண்டான்.. காலர்களை சரியாக்கினான். பிறகு ஆழ்ந்த பார்வையை பேட்டில் மீது பதித்தான்.

''கேட்பதற்கு மன்னிக்கணும்'' என்று அப்போது சொன்ன அவன், ''நீங்க ஸ்காட்லாண்ட் யார்டைச் சேர்ந்த அதிகாரியா?'' என்றான்.

''தட்ஸ் ரைட்'' என்றார் பேட்டில்.

''அப்படினா, நான் யார் என்ன என்பதை உங்களுக்குத் தரேன்'' சொல்லிவிட்டு சிரித்த அவன், ''இதை நான் புத்திசாலித்தனமா முன்னாடியே பண்ணியிருக்கணும்'' என்றும் சொன்னான்.

தனது பாக்கெட்டிலிருந்து ஓரிரு தாள்களை எடுத்த அவன் அவற்றை ஸ்காட்லாண்ட் துப்பறியும் அதிகாரியின் கைகளுக்கு மாற்றினான். அதே சமயம் தனது கோட்டினை விலக்கி அதனுள்ளே 'பின்' பண்ணப்பட்டிருந்த எதையோ அவருக்குக் காட்டினான்.

நம்ப முடியாமல் போனவரைப் போன்ற ஆச்சரிய ஊளையை வெளியிட்டார் பேட்டில். அத்தாள்களை முழுதும் படித்த பிறகு மரியாதையாய் முதுகு வளைத்துக் காட்டி விட்டு அவற்றை திரும்ப ஒப்படைத்தார் பேட்டில். ''உங்களைப் போய் அடிச்சு பிடிச்சு இம்சித்ததற்கு மன்னிப்புக் கேட்டுகிறேன் ஸார்'' என்றார். ''ஆனா இதெல்லாம் நீங்களே இழுத்து விட்டுக்கிட்ட சிக்கல்கள்'' என்றும் அழகாய் விளக்கினார். மற்றவர்களின் முகங்களிலும் விளைந்திருந்த ஆச்சரியத்தைக் கவனித்தபடி புன்னகைத்தபடி பேட்டில் சொன்னார்.

''இந்த ஜென்டில்மேனைத் தான் நாங்க சமீப நாட்களா எதிர்பார்த்துக்கிட்டிருந்தோம் மிஸ்டர் லெமன்; பாரீஸ் போலீஸ்.''

## அத்தியாயம் 19

# ரகசிய வரலாறு

அவர்களனைவரும் ஒட்டுமொத்தமாக பிரெஞ்சு துப்பறியும் அதிகாரியை முறைத்த வண்ணம் நின்றுக் கொண்டிருந்தார்கள். பதிலுக்கு அவர் புன்னகைத்தபடியே இருந்தார். ''ஆனா, இதுதான்...'' என்றவர், அமைதியாய் ''...உண்மை!'' என்றார்.

ஒவ்வொருத்தருக்குள்ளும் இத்தனை நேரம் உருவாகியிருந்த ஊகங்களை மாற்றி சரியமைத்துக் கொள்வதற்காக அங்கு சிறு இடைவேளை உருவாகியது. பிறகு பேட்டில் பக்கமாய் திரும்பினார் விர்ஜீனியா.

''நான் இப்ப என்ன நினைச்சுக்கிட்டிருக்கேன்னு உங்களுக்குத் தெரியுதா, மிஸ்டர் பேட்டில்?''

''நீங்க என்ன நினைச்சுக்கிட்டிருக்கீங்க, மிஸஸ் ரேவல்?''

''ம்'' என்று சிறு கோபமாய் பெருமூச்செறிந்த அவர், ''இங்கே என்ன நடந்துக்கிட்டிருக்குனு எங்களுக்குக் கொஞ்சம் வெளிச்சம் போட்டுக் காட்ட வேண்டிய கட்டம் வந்தாச்சுனு நினைக்கிறேன்'' என்றார்.

''உங்களுக்கு விளக்கணுமா? எதை? எனக்கு ஒண்ணும் விளங்கலே, மிஸஸ் ரேவல்.''

''சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில்... உங்களுக்கு சந்தேகமற பர்ஃபெக்டா விளங்குது. இந்த ஜார்ஜ் மனுஷன், 'ரகசியம் ரகசியம்' னு உங்களை மூளைச் சலவை செஞ்சு வெச்சிருப்பார் என்பது எனக்குத் தெரியும். அப்படி பண்ணக் கூடியவர்தான் இந்த ஜார்ஜ். ஆனா, நாங்களே எங்களுக்குள்ளே மண்டையைப் போட்டு உடைச்சுக்கிட்டு திண்டாடுவதற்கு பதிலா நீங்க எங்ககிட்டே ஓபனா சொல்லிடறது

நல்லது. அது, சொல்லாம நீங்க ஏற்படுத்துற குழப்பத்தையும் இருப்புக் கொள்ளாமையையும் விட கம்மியாதான் இருக்கும்! மிஸ்டர் லெமன்... நீங்க ஒத்துக்கறீங்களா இல்லையா?''

''மேடம்... நான் உங்க கருத்தோட முழுக்கவும் ஒத்துப் போகிறேன்.''

''விஷயங்களை இருட்டுலேயே வெச்சுக்கிட்டு இருந்துட முடியாது'' என்றார் பேட்டில். ''இதுதான் நான் ஜார்ஜ்கிட்டே சொன்னது. மிஸ்டர் எவர்ஸ்லே, மிஸ்டர் ஜார்ஜோட செக்ரட்டரி... அதனால எதெல்லாம் தெரிஞ்சுக்கணுமோ அதையெல்லாம் அவரும் தெரிஞ்சுக்கலாம். மிஸ்டர் கேட்டைப் பொறுத்தவரைக்கும், ஆரம்பத்திலிருந்தே இந்த குழப்ப விளையாட்டுல கொண்டு வந்து அவர் திணிக்கப்பட்டிருக்கார். ஆகவே, விஷயங்கள் என்னென்ன என்பதை தெரிந்துக் கொள்ளும் தார்மீக உரிமை அவருக்கு இருக்கு. ஆனா..''

பேட்டில் தயங்கினார்.

''எனக்கு விளங்குது'' என்றார் விர்ஜீனியா. ''பொம்பளைங்க ரகசியம் காக்கத் தெரியாதவங்க. அப்படித்தானே? இந்த ஜார்ஜ் அடிக்கடி இப்படி சொல்ல நான் கேள்விப்பட்டிருக்கேன்.''

லெமன், மிஸஸ் விர்ஜீனியாவை மிக கவனமாய் பதிந்துக் கொண்டிருந்தார். தற்சமயம் அவர் ஸ்காட்லாண்டு யார்ட் அதிகாரியை நோக்கித் திரும்பினார். கேட்டார்: ''இப்ப நீங்க மேடமை 'மிஸஸ் ரேவல்' அப்படினா கூப்பிட்டீங்க?''

''அதுதான் என் பேர்'' என்றார் விர்ஜீனியா.

''ரகசியப் பிரிவுல உங்க கணவர் இருந்தார், இல்லையா? மறைந்த ராஜா மற்றும் ராணியின் கொலைக்கு ஜஸ்ட் முன்னால நீங்க *ஹெர்ஸோஸ்லோவாக்கியாவில்* இருந்தீங்க, ஆங்?''

''யெஸ்.''

லெமன் மறுபடியும் திரும்பி பார்த்தார். ''எனக்கென்னவோ இக்கதையைக் கேட்கும் உரிமை மேடமுக்கு இருக்குனு தோணுது. நேரடியா இல்லாவிட்டாலும் மறைமுகமா இவங்க இதுல சம்பந்தப்பட்டிருக்காங்க. மேலும்...'' - அவருடைய கண்கள் சின்னதாய் மிமிட்டின. ''மேடமுடைய ரகசியம் காக்கும் திறமை, உளவுப் பிரிவுல மிகப் பிரசித்தம்.''

சிரித்தபடி "எனக்கு நற்சான்றிதழை அந்தத் துறை தந்திருப்பதைக் கேட்க சந்தோஷமாயிருக்கு" என்றார் விர்ஜீனியா. "இதுலேயிருந்து நான் வெளித் தள்ளப்படப் போவதில்லை என்பது எனக்கு மேலும் சந்தோஷமாயிருக்கு."

"ஏதாவது நொறுக்குத்தீனி?" கேட்டார் ஆண்டனி. "சந்திப்பை எங்கே வெச்சுக்கலாம்? இங்கேயே?"

"அதுதான் தேவலாம்னு எனக்குள்ளே எண்ணம் ஸார்" என்றார் பேட்டில். "இந்த ரூமை விட்டு நாளை காலை வரை போகக் கூடாதுனு ஒரு முடிவு எனக்குள்ளே. இது ஏன்னு முழு கதையையும் கேட்டு முடிச்சதும் உங்களுக்கே விளங்கும்."

"அப்ப நான் போய் ஏதாவது கொண்டு வரேன்" என்றார் ஆண்டனி.

பில்லும்அவருடன் போக, இருவரும் ஒரு ட்ரே நிறைய பாட்டில்கள், காரங்கள், மேலும் புத்துணர்ச்சிக்கு அத்தியாவசியமானவையுடன் திரும்பினார்கள்.

அமைக்கப்பட்டிருந்த இந்த சிறு குழு ஜன்னலோரமாய் இருந்த வட்ட மேஜையை சுற்றிலும் தாங்களாய் வசதி பண்ணிக் கொண்டு நிரவலாய் அமர்ந்துக் கொண்டது.

"இங்கே சொல்லப்படும் எதுவும் முழு ரகசியமாய் காக்கப்படும் - காக்கப்படணும், என்ற அறிதல் எல்லாருக்கும் இருக்கணும்" என்றார் பேட்டில். "சிறு கசிவு கூட இருந்துடக்கூடாது" என்று விட்டு ஆரம்பித்தார். "சீக்கிரமாகவே இப்படியொரு தேவை எழும்புமுனு நான் கணிச்சுதான் வெச்சிருந்தேன். லொமெக்ஸ் போன்ற எல்லாத்தையும் போர்வை போட்டு மூடி மறைச்சுடணும் என்று எண்ணும் ஜென்டில்மேன்கள், இப்படி செய்வதால, அவர்கள் நினைப்பதை விட அதிக அளவுக்கான ஆபத்தைத்தான் கையில எடுத்துக்கிறாங்க. நாம பேசப்போற பிஸினஸ் ஆரம்பிச்சது கிட்டத்தட்ட ஏழு வருடங்களுக்கு முன்னாடி. பொதுவா சொல்லப்படும் புனரமைப்பு வேலைகள் போய்க்கிட்டிருந்தது. அதிலும் குறிப்பாக நார்த் ஈஸ்ட் எனப்படும் வடகிழக்குப் பகுதிகள்ல. அந்தக் கிழ ஜென்டில்மேன் ஸ்டைல்பிச் பொம்மலாட்டக் கயிறினை ஆட்டிப் படைக்க, இங்கிலாந்திலும் நிறையவே சீர்திருத்தங்கள் நடந்தன. எல்லா பால்கன் மாகாணங்களும்

ளாக்கப்பட்டன. அந்த சமயத்துல இங்கிலாந்துல நிறைய ராஜ விசுவாசிகள் இருந்தாங்க. இதுபற்றிய அரசியல் சந்து பொந்துகளுக்குள் நான் போ போவதில்லை. ஆனா, என்னவோ ஒண்ணு காணாமப் போச்சு. அளவு நம்பவே முடியாததா இருந்தாலும், ரெண்டு விஷயங்கள் தெளிவா, வெளிப்படையா தெரிந்தன. அந்த ரெண்டு விஷயங்கள்: திருடன், ராஜ விசுவாசி அரசியல் கழகத்தை சேர்ந்தவன்; அதே சமயத்துல பக்கா திருடன் அவன். அதெல்லாம் என்ன என்பதை மிஸ்டர் லெமன் இப்ப சொல்வார்.''

பிரெஞ்சு காவலதிகாரி பவ்யமாய் வணங்கி கதையின் நுனியைப் பிடித்துக் கொண்டு தொடரலானார்.

''எங்களுக்கு தண்ணி காட்டின கிங் விக்டர் பற்றி - பிரபலமும் அற்புதமும் ஒருங்கே மிகுந்த அந்தக் கொள்ளைக்காரனைப் பற்றி - இங்கே இங்கிலாந்திலிருக்கும் நீங்க கேள்விகூட பட்டிருக்க மாட்டீங்கனு நினைக்கிறேன். அவன், நிஜப் பேர்தான் என்ன – அது ஒருத்தரும் அறியாதது. ஆனா... ஐந்து மொழிகளுக்கு மேல தெரிஞ்சு வெச்சிக்கிட்டு, மாறுவேடம் போடுவதுல ஈடு இணையற்று திகழ்ந்துக்கிட்டு, தனிப்பட்ட தைரியத்தோட துணிஞ்சு காரியத்துல இறங்கவல்ல திண்மை பெற்ற ஒரே ஆள் - இவனாத்தானிருக்க முடியும். இவனோட அப்பா ஆங்கிலேய அல்லது ஐரீஷ் ஆளா இருக்கலாம்னு கருத்துகள் இருந்தாலும் பாரீஸ்லதான் இவன் அதிக காலம் கைவரிசையைக் காட்டியிருக்கான். அங்கேதான், எட்டு வருஷத்துக்கு முன்னாடி, இவன் காப்டன் ஓ'நைல் எனும் பேர்ல அதிர வைக்கும் நகைக் கொள்ளைகளை செஞ்சுக்கிட்டு அலைஞ்சான்.''

ஒரு பிரித்தறிய முடியாத ஆச்சரியம் விர்ஜீனியாவின் முகத்திலிருந்து விடுபட்டது. மிஸ்டர் லெமன் அவர் மீது குறியாய் பார்வையைப் பதித்தார். ''மேடமை எது இப்ப கலங்கடிக்குதுனு எனக்கு விளங்குது'' என்றார். ''அது என்னனு சில நிமிடங்கள்ல நீங்க எல்லாருமே பார்க்கப் போறீங்க'' என்றபடி தொடர்ந்தார்.

''இந்தக் கட்டத்துல, நாங்க, துப்பறியும் அதிகாரிகளாய், இந்த ஓ'நைல் என்பவன் வேறு யாரும் கிடையாது.. அவன் கிங் விக்டர் தான்னு சந்தேகப்பட்டோம். ஆனா தேவைப்பட்ட சாட்சியங்களை எங்களால அடைய முடியலே. அதே சமயத்துல பாரீஸ்ல ஒரு சாதுர்யமான நடிகை

இருந்தா. ஏஞ்சலோ மேரி என்பது அவ பேர். இந்த நடிகையும் கிங் விக்டருடைய இயக்கத்துல பங்கு கொண்டிருக்கானு கொஞ்ச காலத்துக்கு நாங்க சந்தேகப்பட்டோம். ஆனா, மறுபடியும், இதை நிரூபிக்க, எந்த நிரூபணமும் முன்னாடி வந்து விழலே.

''இக்காலகட்டத்தை ஒட்டித்தான், பாரீஸ் நகரமே, *ஹெர்ஸோ-ஸ்லோவோக்கியாவின்* ராஜா நிக்கோலஸ் IV ன் வருகைக்காக தன்னை தயார்படுத்திக்கிட்டிருந்தது. மகாராஜாவின் பாதுகாப்புக் கருதி என்னென்ன பண்ணணும் என்ற ஒரு பெரிய பயிற்சியே பாரீஸின் துப்பறியும் இலாகாவான எங்களுக்குத் தரப்பட்டது. குறிப்பா, தங்களை *சிகப்புக் கை* அப்படினு அழைச்சுக்கிட்டு பிரபலமாகியிருந்த ஒரு புரட்சிகரக் கூட்டத்தை கண்ணுங்கருத்துமா கண்காணிக்கணும்னு எங்களுக்கு ஸ்பெஷல் கட்டளைகள் இருந்தன. ஏன்னா, அந்த *சிகப்புக் கை* புரட்சிகரக் கூட்டம் ஏஞ்சலோ மேரியைப் போய் சந்திச்சு அவங்க போட்டிருக்கும் திட்டத்துக்கு உடந்தையா அவ நின்னு உதவினா மாபெரும் தொகை அவளுக்குத் தரப்படும்னு பேரத்துல இறங்கியிருக்கும் தகவல் எங்களுக்குக் கிடைச்சிருந்ததே காரணம். இளைய ராஜாவைப் பாலுணர்ச்சியால் ஈர்த்து, முன்கூட்டியே இக்கூட்டம் பேசி வெச்சிருக்கும் ஓரிடத்துக்கு அப்படியே அலாக்கா அவரை தள்ளிக்கிட்டுப் போயிடணும் என்பதுதான் இவளுக்குத் தரப்பட்ட பாத்திரம். பேரத்தை ஏற்றுக்கிட்டு ஏஞ்சலோ மேரி தன் பங்கை சிறப்பாக நடிச்சுக் கொடுப்பதா சத்தியம் பண்ணித் தந்துடறா.

''ஆனா, இந்த இளம் நடிகை, இவளை பேரத்துக்கு வாங்கிய கூட்டம் நினைத்ததை விட, சாதுர்யமும் பேராசையும் கொண்டவ. யெஸ், இளைய ராஜாவைக் கவர்ந்து அடிமையாக்கி விடுவதில் வெற்றி கொண்டா இவ. அவரும், இவ காலடியே கதினு விழுந்து தங்கத்தாலும் வைடூரியத்தாலும் இவளை இழைச்சார். அப்பத்தான் அவளுக்குள்ளே அந்த ஐடியா உருபெற்றிருக்கு. இளைய ராஜாவுக்கு வைப்பா இருக்கக் கூடாது. ஆனா, ராணியா எல்லாருக்குமே தெரிஞ்சிருப்பதுபோல, தன்னுடைய திட்டத்தை அவ நிறைவேற்றினா. *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவுல* இவ ராணி வராகா என்ற பெயர்ல அறிமுகப்படுத்தப்பட... ராணி வாராகா என்ற அவதாரமெடுக்கிறா இவ. ஒரு சின்ன பாரசீக நடிகைக்கு இது போதுமில்லே! இவளுக்கிடப்பட்ட பாத்திரத்தை மிகச் சிறப்பாக இவ செஞ்சு முடிச்சா என்று நான் கேள்விப்பட்டிருக்கேன். ஆனா இந்த வெற்றி

முழுக்கம் ரொம்ப நாள் நீடிக்கலே. இவ செஞ்ச ஏமாற்று வேலையால கொதிச்சுக்கிட்டிருந்த *சிகப்புக்* கை கூட்டாளிங்க, இவ உயிரைப் பிடுங்கரெண்டு முறை முயற்சிகள் மேற்கொண்டிருக்காங்க. கடைசியா அந்த நாளே குழியில விழுமளவுக்கு ஒரு புரட்சியை வெடிக்க செஞ்ச அவனுங்க அதன் வீரியத்துல ராஜாவையும் ராணியையும் கொன்னு போட்டாங்க. கூழாய் சிதைஞ்சு அடையாளம் காண முடியாத அளவுக்கு ஆகியிருந்த அவர்களுடைய உடல்கள் கண்டெடுக்கப்பட்டன. கொதித்திருந்த பொது மக்களுக்கு இதுக்கெல்லாம் காரணம் அந்த தாழ்ந்த நடிகைதான்னு முத்திரை குத்தி தரப்பட்டது.

''கவனியுங்க... அந்த அத்தனையிலும், ராணி வராகா, விட்டு விடாம கிங் விக்டருடைய கூட்டணியை வெச்சுக்கிட்டிருந்தானுதான் படுது. இந்த தீர்மான திட்டம் முழுக்கவும் அவளுடைய கைங்கர்யம் என்பது சாத்தியமே. *ஹெர்ஸோ-ஸ்லோவாக்கியா* ராஜாங்கத்திலிருந்தபடியே, இவ, அவன் கூட ரகசிய சமிக்ஞைகள் மூலமா தொடர்புல இருந்திருக்கான்னு தெரிய வந்திருக்கு. பாதுகாப்பு கருதி ஆங்கிலத்துல கடிதங்கள் எழுதப்பட்டிருக்கு... அந்த சமயத்துல தூதரகத்திலிருந்த ஒரு பொம்பளையோட பெயரால அக்கடிதங்கள் கையொப்பமாகியிருக்கு. இதுபற்றி பிறகு ஏதாவது விசாரணை விசாரணைனு வந்தாலும், யார் பேர்ல கையொப்பம் ஆகியிருக்கோ, அவ தான் விசாரிக்கப்படுவா... கையொப்பம் அவளுது கிடையாதுனு அவ என்னதான் சொன்னாலும், அது நம்பப்படாம போகும் சாத்தியங்களே அதிகம். ஏன்னா, அக்கடிதங்கள், குற்றவுணர்வு மிகுந்த ஒரு பொண்ணு அவளுடைய காதலனுக்கு எழுதிய ரகசியக் கடிதங்கள்! உங்க பேரைத்தான் இவ உபயோகப்படுத்தியிருக்கா, மிஸஸ் ரேவல்.''

''ஐ நோ'' என்றார் விர்ஜீனியா. அவருடைய முகத்தில் வண்ணம் கூடுவதும் வெளியேறுவதுமாக இருந்தது. ''எனக்கு விளங்குது. ஆக, இதுதான் கடிதங்களின் உண்மை! இதையே நினைச்சு நினைச்சு நான் மாஞ்சுப் போயிருக்கேன்.''

''என்ன ஒரு பொறுக்கித்தனமான சூழ்ச்சி'' என்று கதறிவிட்டான் பில்.

''கடிதங்கள் பாரீஸில் ஓ'நைல் இருந்த முகவரிக்கு எழுதப் பட்டிருந்தன. ராஜாங்க கொலைகளுக்குப் பிறகு கொள்ளைக் கூட்டத்தின்

கைவசம் ஏறத்தாழ அனைத்து நகைகளும் வீழ்ந்தன என்று சொல்லவும் தேவையில்லை. பாரீஸ் வரைக்கும் அவை பயணமாகின. அங்கேதான், பத்து நகைகள்ல ஒன்பது நகைகளின் நிஜ ஆபரணங்கள் எடுக்கப்பட்டு போலி ஒட்டப்பட்டிருப்பதே தெரிய வந்தது. அதுல *ஹெர்ஸோ-ஸ்லோவோக்கியாவுக்கே* உரித்தான சில அதியற்புத ஸ்பெஷல் நகைகளும் இருந்தன என்பதை நினைவில் கொள்ளவும். ஆக, ராணி வராகாவா ஆகிய பிறகும் கூட, இவ, தன்னுடைய பழக்கத்தை விடாம தொடர்ந்துக் கிட்டுத்தான் இருந்திருக்கா.

''இப்ப நாம எவ்ளோ தூரம் கதையை நகர்த்தியிருக்கோம்னு விளங்குது இல்லையா?'' என்று கேட்டுக் கொண்ட பிரெஞ்சு டிடெக்டிவ் தொடரலானார்.

''ராஜா நிக்கோலஸ் IV மற்றும் ராணி வராகா ஆகிய இருவரும், அப்போதைய வெளியுறவு அமைச்சக செயலாளராக இருந்த மறைந்த கேட்டர்ஹாம் அழைப்பை ஏற்றுக் கொண்டு விருந்தினர்களாக இங்கிலாந்துக்கு வந்திருக்காங்க. *ஹெர்ஸோ -ஸ்லோவாக்கியா* ஒரு சின்ன பிரதேசமாக இருக்கலாம்... ஆனா கண்டுக்காம விட்டுட முடியாது. ராணி வராகா முக்கியத்துவம் தந்து வரவேற்கப்பட்டிருக்காங்க, இங்கே, இந்த தருணத்துல நம்ம முன்னாடி, ஒரு ராணியும் இருக்கா.. அதே நேரத்துல, அவளே ஒரு கைதேர்ந்த திருடியும்! ஒரு விஷயத்துல இப்ப சந்தேகமே கிடையாது. கைதேர்ந்த ஆசாரி ஒருத்தனால மட்டுமே கண்டுபிடிக்கப்படும் அளவுக்கு மாற்று நகைகள் ஆச்சரியப்பட வைக்கும்படி மாற்றி வைக்கப்பட்ட திட்டத்தை வடிவமைச்சது கிங் விக்டராதானிருக்க வேண்டும். சொல்லப் போனா துணிச்சலாய் முகத்திலறையும்படி செயல்படுத்தபடுத்தப்பட்ட இந்தத் திட்டத்திலுள்ள வீர தீரத்தைப் பார்க்கும்போது, இதை முழுக்க எழுதி இயக்கியவன் கிங் விக்டரே அப்படினு சந்தேகமற தானா விளங்கிடும்.''

''அப்புறம் என்னதான் பண்ணினீங்க?'' கேட்டார் விர்ஜீனியா.

''மூடி புதைச்சிட்டோம்'' என்று சுருக்கமாய் சொல்லி முடித்தார் பேட்டில். ''இன்னிக்கு வரைக்கும் அதைப் பற்றி என்ன விதமான சேதிகளும் விளம்பரப்படுத்தப்படலே. மூச்! யெஸ் மூச்சு காட்டாம இந்த சமாச்சாரத்தை எவ்ளோ இருட்டுல பண்ண முடியுமோ அப்படி கையாண்டோம். அது நீங்க நினைக்கிற மாதிரி அத்தனை சுலபம்

கிடையாது, ஆங்! துளி கசியாம பார்த்துக்க திண்டாடினோம். ஒண்ணு சொல்லிக்க விரும்பறேன். அந்த நகைகள், இங்கிலாந்தை விட்டுக் கிளம்பிப் போன ராணியுடன் *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* போகலே. அந்த மகாராணியார் அத்தனையையும் எங்கேயோ மறைச்சு வெச்சுட்டாங்க. ஆனா எங்கே என்பதைத்தான் எங்களால கண்டு பிடிக்க முடியாம ஆகிடுச்சு. ஆனா அது இங்கே இந்த அறையில எங்கேயாவது இருந்தால்....'' சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் அறை முழுக்க ஒருமுறை நிதானமாய் பார்வையை மேய விட்டார். ''நான் ஆச்சரியப்பட மாட்டேன்.''

ஆண்டனி குதித்தெழுந்து விட்டார். ''என்ன? இங்கேயோ? இத்தனை வருஷங்களுக்கு அப்புறமா?'' அடக்க முடியாமல் கத்தினார். ''இம்பாஸிபிள்.''

''விசித்திரமாய் இடம் பெற்ற சூழ்நிலைகள் பற்றியெல்லாம் உங்களுக்குத் தெரியாது, ஸார்'' என்று துரிதமாய் சொன்னபடி பிரெஞ்சு துப்பறியும் அதிகாரி முன்வந்தார். ''ஓரிரு வாரத்துலேயே *ஹெர்ஸோ-ஸ்லோவாக்கியாவுல* புரட்சி வெடிச்சது... ராஜாவும் ராணியும் கொல்லப்பட்டார்கள். மேலும் கேப்டன் ஓ'நைல் பாரீஸ்ல கைது செய்யப்பட்டு சின்ன குற்றச்சாட்டுக்காக தண்டனையளிக்கப்பட்டான். அவன் வீட்டில அந்த சந்தேகக் குறிப்புகளோடு எழுதப்பட்ட கடிதங்கள் கிடைக்கும்னு நாங்க நம்பினோம்... ஆனா அவை, யாரோ ஒரு *ஹெர்ஸோ- ஸ்லோவாக்கியாவின்* வழிபோக்கனால களவாடப்பட்டதா தெரியுது. அந்த ஆளு புரட்சி வெடிக்கும் ஜஸ்ட் சில நாட்கள் முன்னாடி *ஹெர்ஸோ -ஸ்லோவாக்கியாவுல* காணப்பட்டிருக்கான். ஆனா அப்புறம் அவன் முழுக்கவும் காணாமப் போயிட்டான்.''

''வெளிநாடு போயிருக்கலாம் அவன்'' என சிந்தனையோடே சொன்னார் ஆண்டனி. ''ஆப்பிரிக்கா! அந்தக் கடிதங்கள் அவனுக்குக் கிடைத்திட்ட தங்க முட்டை போடும் வாத்து. ஆஹ்... சமாச்சாரங்கள் விதவிதமா வடிவம் கொள்வதைப் பார்க்கும்போது ரொம்ப விசித்திரமாயிருக்கு... அங்கே அவன் ஒரு டச்சுக்காரன் அல்லது அதுக்கு இணையான நபரா அறியப்பட்டிருக்கலாம்.''

சூப்பரின்டெண்டெண்ட் பேட்டிலின் உணர்ச்சிகளற்ற பார்வை தன் மீது பதிந்து கிடப்பதைக் கவனித்த ஆண்டனி, பதிலுக்கு சிரித்தார். ''நான்

ஞானதிருஷ்டியால இப்படி சொல்லலே, பேட்டில். ஆனா உங்களுக்கு அப்படி படலாம்!''

''நீங்க விளக்காத இன்னுமொரு விஷயமிருக்கு'' என்றார் விர்ஜீனியா. ''இந்த கூத்தெல்லாம் எந்த கட்டத்துல வாழ்க்கை வரலாறுடன் இணைஞ்சு நிக்குது? எனக்கு இது விளங்கலே. ஒரு தொடர்பு இருந்தாகணும்.''

''மேடம் படு சுட்டி'' என்று ஒப்புதலாய் தலையசைத்தபடி குறிப்பிட்டார் லெமன். ''யெஸ், ஒரு தொடர்பு இருக்கத்தான் செய்யுது. அந்த சமயத்துல கவுண்ட் ஸ்டைல்பிச், சிம்னீஸ்ல தங்கியிருந்தார்.''

''அப்ப அவருக்கு இந்த சமாச்சாரம் தெரிஞ்சிருக்கும்.''

''சாத்தியம் இருக்கு.''

''அப்படியே தன்னோட வாழ்க்கை சரிதத்துல அதைப்பற்றி அவர் சொல்லியிருந்தால்..'' என்ற பேட்டில், ''நிச்சயம் அந்தத் தொகுப்பு எரிக்கப்பட்டிருக்கும்'' என்றார். ''குறிப்பாக இந்த அத்தனை சமாச்சாரமும் காதும் காதும் வெச்சா மாதிரி இப்படி பூசி மெழுகப்பட்டிருக்கும் தினுசுல, அதுதான் சாத்தியம்.''

ஆண்டனி ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார். ''கல் எங்கே பதுக்கி வைக்கப்பட்டிருக்கும் என்பது பற்றி வாழ்க்கை சரிதத்துல சின்னதா குறிப்பிட்டிருக்கக் கூட சாத்தியம் கிடையாதா என்ன?''

''வாய்ப்பு ரொம்ப கம்மி'' என்று தீர்வாய் சொன்னார் பேட்டில். ''ராணி கூட அவர் இருந்ததே கிடையாது. திருமணத்தை அடிவரை வெறுத்து தடுத்தவர் அவர். ராணியும் அவரை தனது நம்பிக்கைக்கு உகந்தவராய் எடுத்துக் கொண்டிருக்க வாய்ப்பில்லே.''

''அந்தக் கோணத்துல நான் பேசலே'' என்ற ஆண்டனி, ''என்னயிருந்தாலும் அவர் ஒரு சூழ்ச்சி பழகிய கிழ நரி. ராணிக்கு தெரியாமலேயே நகை எங்கே பதுக்கி வைக்கப்பட்டிருக்கும்னு அவர் தெரிஞ்சு வெச்சிருக்கலாமே? அப்படிதான்னா, அதை அவர் என்ன பண்ணிருக்கக் கூடும்னு நீங்க நினைக்கிறீங்க?''

கேட்கப்பட்டதை சில நொடிகள் கிரகித்துக் கொண்ட பிறகு, ''பொத்திக்கிட்டு இருந்திருப்பார்'' என்றார் பேட்டில்.

''நானும் ஒத்துக்கிறேன்'' என ஆமோதித்தார் பிரெஞ்சு துப்பறியும் அதிகாரி. ''இது கையாளுவதற்கு நுட்பமான ஒரு விஷயம் என்பதை நீங்க விளங்கிக்கணும். திரும்ப அந்தக் கல்லைக் கொண்டு போய் எடுத்த இடத்திலேயே மூச்சு காட்டாம வைப்பதென்பது பல சிரமங்களைத் தந்திருக்கும். மேலும் அந்தக் கல் எங்கிருக்கு எனும் அறிதல் அவருக்குப் பெரும்சக்தியை உண்டு பண்ணித் தந்திருக்கும் - அந்தக் கிழ மனுஷனுக்கு கையில் கிடைக்கும் சக்தி மீது மிகுந்த பேராசை உண்டு. விளங்கிக்க முடியாத ஓல்ட் மேன். இது ஒன்று மட்டும்தான் அவர் அறிந்து வைத்திருக்கவல்ல ரகசியம்னு நினைக்காதீங்க. ஓ, நோ - அவருக்குப் பல ரகசியங்கள் அத்துப்படி. கிலரி பீங்கான் பொம்மைகளைச் சேகரித்து வைப்பதைப் பொழுதுபோக்கா வெச்சிருப்பது போல, இவருக்கு ரகசியங்கள் சேகரிப்பது! அவர் மண்டையைப் போடுவதற்கு முன்னால, ஓரிரு முறை தனது மக்களிடம், தன்னால் வெளிப்படையாய் சொல்லவல்ல ரகசியங்கள் பற்றி கோடிட்டுக் காட்டிப் பேசியிருக்கார். சில சொற்ப சமயங்கள்ல அதிர வைக்கும் உண்மைகளைத் தனது வாழ்க்கை சரிதத்துல தான் வெளியிடப் போவதாகவே அவர் அறிவிச்சிருக்கார். இதுதான்..'' என்ற வறட்சியாய் சிரித்த பிரெஞ்சுக்காரர்... ''அந்த சுய சரிதத்தை எப்படியாவது கைப்பற்றிடணும் எனும் பொதுவான ஒரு படபடப்பு உருவாக காரணம். எங்களுடைய போலீஸே கூட அதை எப்படியாவது கைப்பற்றிவிட துடிச்சிருக்கு... முயன்றிருக்கு'' என்றார்.

''இருந்தாலும், இந்தக் குறிப்பிட்ட ரகசியம் அவருக்குத் தெரிஞ் சிருந்தது என்று சொல்வதற்கு எந்த சாட்சியமும் இல்லே'' என்றார் பேட்டில்.

''மன்னிக்கணும்'' என்றார் ஆண்டனி சாந்தமாய். ''இதுக்கு சாட்சியமா அவரோட சொந்த வார்த்தைகளே இருக்கு.''

''என்ன?''

தங்கள் காதுகளைத் தாங்களே நம்ப முடியாதவர்களைப் போல இரு காவலதிகாரிகளும் அவரைக் கண்ணகல முறைத்தார்கள்.

''வாழ்க்கை சரிதத்தைத் தூக்கிக்கிட்டு என்னை இங்கிலாந்துக்குப் போக சொன்னபோது, மிஸ்டர் மேக்ரத், அவர் எந்த மாதிரியான ஒரு சூழ்நிலையில கவுண்ட் ஸ்டைல்பிச்சை சந்திச்சார்னு என்கிட்டே சொன்னார். அது பாரீஸ்ல நடந்திருக்கு. அவர் உயிருக்கே ஆபத்தை

ஏற்படுத்திய சூழ்நிலை அது. சில முரட்டுப் பசங்க கைகளிலிருந்து கவுண்ட்டை மேக்ரத் காப்பாற்றினார். அப்ப கவுண்ட் தாள முடியாத உற்சாகத்துல புளகாங்கிதமா இருந்திருக்கார். அப்படியொரு தன்னிலை இழந்த சந்தோஷத்துல அவர் ரெண்டு விசித்திரமான குறிப்புகளைத் தந்திருக்கார். கோஹினூர் எங்கேயிருக்குனு தெரியும் என்பதுபோல ஒரு குறிப்பு - இதுக்கு என்னோட நண்பன் மிகுந்த ஈடுபாடு எதுவும் காட்டலே. அவரை வந்து தாக்கிய கூட்டம் கிங் விக்டரின் ஆட்கள்னு அடுத்த குறிப்பு. தனித்தனியா தொங்கும் இந்த ரெண்டு குறிப்புகளை சேர்த்து வெச்சுப் பார்த்தம்னா அதிமுக்கியமான குறிப்புகள் இவைங்கிறது புரியும்.''

''குட் லார்ட்...'' என பொங்கி விட்டார் பேட்டில். ''அதி அதி முக்கியமான குறிப்புகள்னு நான் சொல்வேன். இதனால ப்ரின்ஸ் மைக்கேலோட கொலை கூட வேற கோணம் கொள்ளுது.''

''கிங் விக்டர் என்றுமே ஓர் உயிரைக் குடிச்சவன் கிடையாது'' என்று ஞாபகப்படுத்தினார் லெமன்.

''நகையைத் தேடிக்கிட்டிருந்த போது அவன் ஆச்சரியமடைஞ் சிருந்தான்னா?'' கேட்ட பேட்டிலுக்கு பதில் வருவதற்கு ஆண்டனி கூர்மையாய் ஒரு கேள்வியை அவசரமாய் கேட்டார். ''அப்ப அவன் இங்கிலாந்துலதான் இருக்கானா?''

விசனமான ஒரு புன்னகை பிரெஞ்சு டிடெக்டிவ் முகத்தில் விளைந்தது. ''இதை தெரிஞ்சுக்கத்தான், நாங்க மல்லுக்கு நின்னோம், ஸார். ஆனா அவன் எமகாதகன்லே! எங்களுடைய முயற்சி தெரிஞ்சதும் உடனே எங்களுடைய எல்லையிலிருந்து நழுவிட்டான் அவன். உடனே! அவன் நிச்சயம் இங்கிலாந்துக்குத்தான் வந்திருக்கணும்னு நாங்க கருதினோம், ஆனா, அந்தப் பய... அந்தப் பய... எங்கே போனான்னு நினைக்கிறீங்க?''

''எங்கே?'' - கேட்டது ஆண்டனி. பிரெஞ்சு மனிதனை கண் கொத்தி பாம்பாய் பார்த்துக் கொண்டிருந்த அவருடைய கை விரல்கள், இலக்கின்றி கையிலிருந்த வத்திப் பெட்டியைச் சுற்றிய வண்ணமிருந்தன.

''அமெரிக்காவுக்கு, யுனைடெட் ஸ்டேட்ஸுக்கு.''

''என்ன?''

ஆண்டனியின் குரல் தொனியில் தாளவே முடியாத ஆச்சரியம் வெடித்தது.

''யெஸ், அங்கே போய் அவனை அவன் என்னனு சொல்லிக்கிட்டான்னு நீங்க நினைக்கிறீங்க? அங்கே அவன் என்ன பாத்திரத்தை நடிச்சான்னு நினைக்கிறீங்க? ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின் ப்ரின்ஸ் நிக்கோலஸ்''

ஆண்டனியின் கையிலிருந்த வத்திப் பெட்டி நழுவி தரையில் விழுந்துவிட, ஆனால் அவரை ஆக்கிரமித்திருந்த ஆச்சரிய எக்காளம் அதே அளவு பேட்டிலிடமிருந்து விளைந்த ஆச்சரியத்தோடு கலந்துப் போனது. அவர் சொன்னார்: ''இம்பாஸிபிள்.''

''அப்படி நினைக்காதீங்க. மை ஃபிரண்ட். உங்களுக்கே இந்த சேதி காலைல கிடைக்கும் பாருங்க. இது ஒரு மாபெரும் அண்டப் புளுகு. ஆகாசப் புளுகு. காங்கோவில் சில வருடங்களுக்கு முன்னாடியே ப்ரின்ஸ் நிக்கோலஸ் செத்தாச்சுனு ஒரு புரளியிருக்கு. நம்ம ஃப்ரண்ட் விக்டர் அதை இறுகப் பிடிச்சுக்கிறான் - அப்படியொரு மரணத்தை ஊர்ஜிதப்படுத்தி ஸ்தாபிப்பது கஷ்டம். அதனால, ப்ரின்ஸ் நிக்கோலஸை இவன் ரூபமா உயிர்த்தெழ வைக்கிறான். எதுக்காக? பற்பல அமெரிக்க டாலர்களைக் கொண்ட கரன்ஸி மூட்டையை அப்படியே கட்டி இழுத்துக்கிட்டு தலைமறைவாகி விட! இத்தனை பணமும் எண்ணெய் சலுகைகளால வந்திருக்கணும். ஆனா எதிர்பாரா விபத்து மாதிரி அவன் முகத்திரை விலக்கப்பட விறுவிறுனு நாட்டை விட்டு விலகி விட வேண்டிய நிர்ப்பந்தம் அவனுக்கு உருவாகுது. இந்த முறை அவன் இங்கிலாந்துக்கு வரான். இந்த காரணத்தாலதான் நான் இங்கே! உடனேயோ அல்லது சில காலம் கழிச்சோ அவன் சிம்னீஸ் வருவான். அதாவது - அவன் ஏற்கெனவே அவன் இங்கே இல்லை எனும் பட்சத்தில்!''

''நீங்க அப்படியா நினைக்கிறீங்க?''

''ப்ரின்ஸ் மைக்கேல் இறந்த இரவில் அவன் இங்கே இருந்திருக்கான்னு நினைக்கிறேன். மறுபடியும், நேற்றிரவும்.''

''இப்ப நேற்றிரவு நடந்தது, இன்னொரு முயற்சியா, ஆங்?''

''யெஸ். அது மற்றொரு முயற்சிதான்.''

''இங்கே மிஸ்டர் லெமனுக்கு என்ன வேலை என்பதுதான் என்னை உறுத்திக்கிட்டேயிருந்த ஒரு கேள்வி'' என்றார் பேட்டில். ''என்னோட சேர்ந்து ஒத்துழைக்க நீங்க இங்கே வருவதா எனக்கு பாரீஸிலிருந்து தகவல்

வந்தது. ஆனா அப்படி வராம அவருக்கு என்ன ஆச்சுனு நான் குழம்பிக்கிட்டிருந்தேன்.''

''இதுக்கு நான் மன்னிப்புக் கேட்டுக்கணும். ப்ளீஸ் அப்பாலஜைஸ் மீ'' என்றார் லெமன். ''கொலை நடந்த மறுநாள் காலைல நான் இங்கே வந்து சேர்ந்தேன், ஓகே! உடனேயே, காவல் துறை சார்ந்த உங்களுடைய நண்பர் எனும் அடையாளம் தெரியாமலேயே, தனியா ஏதோ ஒரு வெளியாள் மாதிரி யாருக்கும் தெரியாம நான் நின்னுக்கிட்டு இந்த சமாச்சாரத்தை உடனடியா படிக்கணும்னு எனக்குப் பட்டுது. அந்த வகையில இதை விளங்கிக் கொள்ள நிறைய சாத்தியக் கூறுகள் இருப்பதா நான் நினைச்சேன். நிச்சயம் என் மேல சந்தேகம் கவிழும்னு எனக்குத் தெரியும். இந்த எண்ணமே என்னோட திட்டத்துக்கு மேலும் வலு சேர்த்தது. ஏன்னா, இங்கேயிருப்பவர்களைக் கண்காணிச்சுக்கிட்டே நான் பின் தொடர்றேன்னு யாருக்கும் நினைப்பு வந்துடாது பாருங்க! இத்திட்டத்தின் பயனாக, கடந்த ரெண்டு நாட்களாக, ரொம்பவுமே சுவாரஸ்யமான விஷயங்களை என்னால கிரகிக்க முடிஞ்சுதுனு அடிச்சு சொல்வேன்.''

''இதெல்லாம் இருக்கட்டும்...'' என்ற பில், ''கவனியுங்க..'' என்று விட்டு கேட்டான்: ''நேற்று ராத்திரி நடந்ததுதான் என்ன?''

''உங்களுக்கு நான் ஒரு மாபெரும் எக்ஸர்ஸைஸ கொடுத்துட்டேன்னு நினைக்கிறேன்'' என்று பதில் சொன்னார் லெமன்.

''அப்ப நான் தொடர்ந்து ஓடி வந்தது, உங்களைத்தானா?''

''ஆமாம். அப்ப நடந்த அத்தனையையும் நான் உங்களுக்கு விளக்கறேன். ப்ரின்ஸ் இதே அறையிலதான் கொல்லப்பட்டார்... அதனால அந்த ரகசியம் என்னவோ அது இந்த அறையோடத்தான் சம்பந்தப்பட்டிருக்குனு முடிவான நான் இங்கே அப்படி என்னதான் நடக்குதுன்னு பார்க்க வந்தேன். வெளியில ஜன்னலையொட்டிய தாழ்வாரப் பகுதியான டெரஸ்ல நின்னேன். உடனேயே அறைக்குள்ளே நடமாட்டம் இருப்பதை என்னால உணர முடிந்தது. அவ்வப்போது வந்துபோன டாரச் ஒளியை நான் கவனிச்சேன். நடுஜன்னலை நான் தள்ள முயற்சித்தபோது, அது திறந்தே இருந்தது. யாராவது கவனிச்சுட்டாங் கன்னா தப்பிச்சு ஓட வசதியா திறந்து வெச்சிருக்கானானு எனக்கு அப்ப புரியலே. ஓசைப்படாம அதை உள் பக்கமா தொறந்த நான், உள்ளே

நழுவினேன். அடி அடியாய் வெச்சு உள்ளே முன்னேறிய நான், நான் இருப்பது கவனிக்கப்படாம நின்னுக்கிட்டு, அங்கே நடப்பவைகளைக் கண்காணிக்க வசதியான ஓரிடம் அமைஞ்சதும், நின்னேன். அவன் யார் அப்படினு என்னால துல்லியமா பார்க்க முடியலே. அவனோட பின்பக்கம்தான் எனக்குத் தெரிஞ்சது... டார்ச் வெளிச்சத்தின் பின்னணியில் அவனோட நிழலுருவம் மட்டுமே தென்பட்டது. ஆனா அவனோட நடவடிக்கைகள் என்னை ஆச்சரியத்துல ரொப்பின. அங்கிருந்த ஆயுதங்களை ஒவ்வொண்ணா எடுத்து அக்குவேறு ஆணி வேறா ஆக்கின அவன், அங்குலமங்குலமா ஒவ்வொண்ணையும் பரிசோதிச்சான். அவன் என்னத்தைத் தேடி வந்தானோ அது அங்கே கிடையாது என்பதுல அவன் திருப்தியானதும் அந்தக் குறிப்பிட்ட படத்துக்குக் கீழேயிருந்த சுவர் பகுதியை உடைப்பதில் இறங்கினான். இதுக்குப் பிறகு அவன் என்ன பண்ணியிருப்பான்? தெரியலே. இடையூறு விளைஞ்சது. நீங்க இடிபோல உள்ளே வந்துட்டீங்க..'' அவர் பில்லைச் சுட்டிக் காட்டினார்.

''நல்லதை நினைச்சு நாங்க பண்ணினது இப்படியாகிடுச்சு'' என சிந்தனையாய் சொன்னார் விர்ஜீனியா.

''ஆமாம் மேடம். அந்த ஆளு டார்ச்சை உடனடியா அணைத்துவிட, அங்கே இருப்பதுல மேற்கொண்டு எனக்கு எந்த வேலையும் கிடையாது என்பதை உணர்ந்த நான் ஜன்னலை நோக்கித் துள்ளிக் குதிச்சு ஓடினேன். இருட்டுனால, அங்கிருந்த மற்ற ரெண்டு பேர் மீதும் நேருக்கு நேரா மோதி விழுந்தேன். மறுபடியும் எழுந்து ஒரே எம்பாய் ஜன்னலை அடைஞ்ச நான், ஓடிட்டேன். நான்தான் திருடன்னு நினைச்சுக்கிட்ட ஃபவர்ஸ்லே என்னைத் துரத்திக்கிட்டே ஓடி வந்தார்.''

''நான்தான் முதல்ல, உங்களைத் தொடர்ந்தது'' என்றார் விர்ஜீனியா. ''இந்த ரேஸ்ல ரெண்டாவதா வந்தது, பில்.''

''அந்த இன்னொருத்தன் அப்படியே அசையாது நின்று நம்மளையெல்லாம் ஓட விட்டுட்டு கதவு வழியா நழுவியிருக்கான். ஆனா மேலே ஓடி வந்த கூட்டம், அவனை எப்படி பார்க்காம விட்டுட்டாங்கன்னுதான் எனக்கு ஆச்சரியமாயிருக்கு'' என்றான் பில்.

''அதுல பெரிய சிக்கல் கிடையாது'' என்றார் லெமன். ''அவனும் ஏதோ மற்றவங்களை மாதிரி காப்பாற்ற ஓடி வருவது போல் காட்டிக்கிட்டிருப்பான். தட்ஸ் ஆல்.''

''அப்ப அவன் இங்கே நாமிருக்கும் கூட்டத்துல ஒருத்தனா தான் இருக்கான்னு நீங்க நம்பறீங்களா?'' – கேட்டான் பில், அவனது கண்களில் மினுமினுப்புக் கூட.

''ஒய் நாட்? யெஸ்'' என்றார் லெமன். ''ஓர் வேலைக்காரன் மாதிரி அவன் தன்னை உள்ளே திணிச்சுக்கிட்டிருக்கலாம். அவனே கூட போலீசாயிருக்கலாம் - பிரின்ஸ் மைக்கேலுடைய நம்பகத் தன்மையான அந்தரங்க வேலையாள்.''

''விளங்கிக்க முடியாத கழுதைதான் அவன்...'' ஒப்புக் கொண்டான் பில்.

ஆனால் ஆண்டனி சிரித்துக் கொண்டிருந்தார். ' 'நீங்க நினைப்பது மடத்தனம். மிஸ்டர் லெமன்.''

லெமனும் மறுபக்கம் சிரித்தார்.

''நீங்க இப்ப அவனை உங்களோட வேலைக்காரனா ஏத்துக்கிட்டிருக் கீங்க இல்லையா மிஸ்டர் கேட்?'' என்றார் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில்.

''ஓ பேட்டில், ஹாட்ஸ் ஆஃப் டு யூ. நீங்க ஒரு பிரமாதம். எல்லாத்தையும் தெரிஞ்சு வெச்சிருக்கீங்க. ஆனா, உண்மையைச் சொல்லப் போனா, அவன்தான் என்னை அவனோட முதலாளியா எடுத்துக்கிட்டிருக்கானே தவிர, நான் அவனை என் வேலைக்காரனா எடுத்துக்கலே.''

''அது ஏன் அப்படி மிஸ்டர் கேட்? எனக்கு விளங்கலே.''

''எனக்குத் தெரியலே'' என்றார் ஆண்டனி லகுவாய். ''அது அவனோட விளக்க முடியாத விருப்பமா இருக்கலாம். ஒருவேளை என் முகஜாடை அவனுக்கு பிடிச்சிருக்கோ என்னவோ... இல்லேனா நான்தான் அவனோட ஆத்மார்த்த முதலாளியைக் கொன்னிருக்கணும்னு நினைச்சுக்கிட்டு அதுக்கு பழிவாங்க ஏதுவான சூழ்நிலை உருவாக்கிக்க இப்படி பண்றானோ என்னவோ!''

சொன்னவர், எழுந்து போய் ஜன்னலருகே நின்றுக் கொண்டு அதன் திரைச் சீலையை விலக்கி விட்டார். ''சூரியன் இருக்கு'' என்றார் சிறு கொட்டாவியுடன். ''இதுக்கு மேல இன்னிக்கு ஏதும் பரபரப்பு இருக்கப் போறதில்லே.''

லெமனும் எழுந்துக் கொண்டார். ''நான் இப்போதைக்குக் கிளம்பறேன்'' என்றார். ''அப்புறமா நாம சந்திப்போம்.''

விர்ஜீனியாவுக்கு அழகான வணக்கம் தெரிவித்துவிட்டு வெளியேறிப் போனார் அவர்.

''படுக்கணும்'' என்றார் விர்ஜீனியா, அவருக்குள் உண்டான கொட்டாவியுடன், ''நடந்த அத்தனையும் பரபரப்பானவை. கம் ஆன், பில் நல்ல பிள்ளையா படுக்கப் போ..''

ஜன்னலருகே நின்றுக் கொண்டிருந்த ஆண்டனி விடைபெற்றுப் போன லெமனின் திசையே பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்குப் பின்னாலிருந்த பேட்டில், ''உங்களுக்குத் தெரிஞ்சிருக்க நியாயமில்லே, கேட்'' என்றார். ''அவர், ப்ரான்ஸின் சாதுர்யம் மிகுந்த மிகச் சிறந்த துப்பறியும் மேதை.''

''எனக்குத் தெரிஞ்சிருக்க நியாயமில்லதான்'' என்றார் ஆண்டனி சிறு சிந்தனையுடன்.

''வெல்..'' என்ற பேட்டில், ''மிஸ்டர் கேட், ஸ்டெயின்ஸ் பகுதியில் ஒருத்தன் சுடப்பட்டுக் கிடந்த சம்பவம் பற்றி நான் சொன்னது உங்களுக்கு நினைவிருக்கா?''

''யெஸ், ஏன்?''

''நத்திங். அவனை யார்னு அடையாளம் கண்டுபிடிச்சுட்டாங்க. அவ்ளோதான். அவன் பேர் கியூசப் மணாலியாம். லண்டன் ப்ளிட்ஸ் ஓட்டல் வெயிட்டர். விசித்திரமாயிருக்கு, இல்லே?''

அத்தியாயம் 20

# பேட்டிலும் ஆண்டனியும் தந்தார்கள்

ஆண்டனி எதுவும் சொல்லவில்லை. ஜன்னலுக்கு வெளியே முறைத்துக் கொண்டிருப்பதையே அவர் தொடர்ந்த வண்ணமிருந்தார். சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் அவரது அசைவற்ற முதுகை சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு "வெல்.. குட்.. நைட், ஸார்" என்று கடைசியில் சொல்லிவிட்டு கதவு வரை நகர்ந்து விட்டார்.

ஆண்டனி சுழற்சியாய் திரும்பினார். "ஒரு நிமிஷம், பேட்டில்" என்றார்.

சூப்பரின்டெண்டெண்ட் கட்டுப்பட்டு அங்கேயே நின்றார். ஆண்டனி ஜன்னலிலிருந்து விடுபட்டார். தனது சிகரெட் பெட்டியிலிருந்து ஒரு சிகரெட்டையெடுத்து அதைக் கொளுத்தினார். பிறகு ஓரிரு புகைப் பிடித்தல்களுக்கு நடுவே பேசினார்: "ஸ்டெயின்ஸ் சமாச்சாரத்துல நீங்க ரொம்ப ஈடுபட்டிருப்பது போல தெரியுது, இஸிட்?"

"அப்படியெல்லாம் நான் எடுத்துக்கும் வழக்கம் கிடையாது, ஸார். அது கொஞ்சம் அசாதாரணமா தோணிச்சு, தட்ஸ் ஆல்."

"அந்த ஆள் கண்டெடுக்கப்பட்ட இடத்துலதான் சுடப்பட்டிருக் கணும்னு நினைக்கிறீங்களா... அல்லது வேற எங்கேயோ வெச்சு கொல்லப்பட்ட பிறகு உடல் மட்டும் அந்தக் குறிப்பிட்ட ஸ்தலத்துக்குக் கொண்டு வந்து போடப்பட்டிருப்பதா நினைக்கிறீங்களா?"

"அவன் வேற எங்கோ கொல்லப்பட்டு விட, உடல் மட்டும் ஒரு கார்ல அங்கே கொண்டு வரப்பட்டிருப்பதா நான் நினைக்கிறேன்."

"நானும் அப்படியேதான் நினைக்கிறேன்" என்றார் ஆண்டனி.

சொன்ன விதத்திலிருந்த ஒருவித அழுத்தம் டிடெக்டிவ்வைக் கூர்மையாய் நிமிர்ந்து பார்க்கும்படி செய்தது. "உங்களுக்குள்ளே ஏதாவது ஐடியா உருவாகியிருக்கா, ஸார்? யார் அங்கே கொண்டு வந்து அவனைப் போட்டது என்பது பற்றிய தகவல் ஏதாவது உங்களுக்கு தெரியுமா?"

"யெஸ்" என்றார் ஆண்டனி. "நான் செஞ்சேன்."

உலுக்கப்படாத அமைதியும் சாந்தமும் கேட்டவரிடம் இப்போதும் நிலைத்திருந்ததைக் கவனித்த ஆண்டனிக்கு சிறு எரிச்சல் மண்டியது. "இதுபோன்ற அதிர்ச்சிகளையெல்லாம் நீங்க சர்வசாதாரணமா எடுத்துக்கிறீங்க, பேட்டில்.."

"எப்போதும் உணர்ச்சிகளை மட்டும் காட்டாதே! இது எனக்கு ஒரு சமயம் சொல்லித்தரப்பட்ட கட்டளை. இது எனக்கு மிகவும் உபகாரமாய் இருப்பதாய் உணர்றேன்."

"நிச்சயமா நீங்க இந்தக் கட்டளையின்படி துளி பிசகாம இருக்கீங்க" என்றார் ஆண்டனி. "எப்போதாவது ஒரு முறையேனும் நீங்க உலுக்கப்பட்டு நான் பார்க்கலே. வெல், அந்த முழு கதையையும் நீங்க தெரிஞ்சுக்க விரும்பறீங்களா?"

"உங்களுக்கு ஆட்சேபணையில்லேனா, மிஸ்டர் ஆண்டனி கேட்..."

ஆண்டனி இரண்டு இருக்கைகளை இழுத்துப் போட, அவற்றில் ஆளுக்கொன்றாய் இரு ஆடவர்களும் உட்கார்ந்துக் கொண்டார்கள். போன வியாழனன்று இரவு நடந்தவைகளை நினைவுபடுத்திச் சொன்னார் ஆண்டனி.

பேட்டில் எண்ணம் கொஞ்சமும் சிதையாது கவனித்துக் கொண்டார். ஆண்டனி முடித்ததும் அவருடைய விழிகளில் ஒரு தொலைதூர மினுமினுப்பு இருந்தது. "அப்படின்னா..." என்ற அவர், "வெகு சீக்கிரத்தில் நீங்க அகப்படும் சாத்தியக் கூறுகள் இருக்கு, ஸார்" என்றார்.

"மறுபடியும், ரெண்டாவது தடவை, என்னை கஸ்டடிக்குள்ளே வைக்க மாட்டாங்களே?"

"நாங்க எப்பவுமே நிறைய சந்தர்ப்பங்கள் குடுத்துப் பார்ப்பம்" என்ற பேட்டில் கேட்டார்: "எனக்கு இப்ப புரியாத, விளங்காத விஷயம், இதுதான்: நீங்க எதுக்காக இந்த உண்மையைக் கொண்டு வந்து என்கிட்டே கொடுக்கணும்னு நினைச்சீங்க?"

''அதை விளங்க வைக்கிறது கொஞ்சம் கடினம்'' என்றார் ஆண்டனி. ''பேட்டில்... உங்க திறமைகளைப் பற்றி மிக உயர்ந்த கருத்துக் கொள்ளுமாறு எனக்கு இப்ப அனுபவங்கள் கிடைத்துள்ளன. சரியான நேரம் நெருங்கினவுடனே நீங்க டாண்ணு வந்து நின்னுடறீங்க. இன்னிக்கு ராத்திரிப் பொழுதையே எடுத்துக்குங்க! ஆகவே, என்னோட இந்த விஷயத்தை நான் உங்ககிட்டே சொல்லாம பதுக்கி வைப்பதால, நான் உங்களோட இந்த பிரத்யேக முத்திரையைத் தேவையில்லாம பாதிக்கிறேனோனு எனக்குப் பட்டுது. உங்களுடைய இத்தகைய உயர்ந்த திறமையின் காரணத்தால, எல்லா நிஜங்களையும் அறிந்துக் கொள்ளும் மரியாதையை நீங்க அடைஞ்சிருக்கீங்க. அது காப்பாத்தப்படணும். நான் என்னால பண்ண முடிஞ்சதெல்லாம் பண்ணியிருக்கேன்... மேலும் குழப்பியெடுத்திருக்கேன். இன்னிக்கு ராத்திரி வரைக்கும், மிஸஸ் ரேவலின் நிலை கருதி என்னால ஒரு வார்த்தை பேச முடியாம இருந்தது. ஆனா இப்ப அக்கடிதங்கள் மிஸஸ் ரேவலுடன் எவ்வகையான தொடர்பும் கொண்டவை கிடையாதுனு நிச்சயமா நிரூபணம் ஆகிவிட்டதால, அவங்களை இதோட கூட்டு சேர்ப்பதே படுமுட்டாள்தனம்னு ஆகிடுது. ஆனா நான்தான் ஆரம்பத்துலேயே அவங்களை தப்பா வழி நடத்தியிருக்கேன். இருந்தாலும், கடிதங்களை மறைப்பதற்காக - ஒரு பொழுதுபோக்கா - அந்தாளுக்கு இவங்க பணம் தந்ததா சொன்னதை நம்புவதற்கு கொஞ்சம் சிரமமாத்தானிருக்கு..'' சிறிது அவகாசம் எடுத்துக் கொண்டபிறகு கேட்டார்: ''ஆனா நீங்க இதை ரொம்ப சுலபமா ஏத்துக்கிறீங்க?''

''யூ ஸீ மிஸ்டர் கேட்'' என ஆரம்பித்தார் பேட்டில். ''என் சர்வீஸின் கிட்டத்தட்ட எல்லா அனுபவங்களும் இதுங்களைப் போன்ற ஆளுங்களுடனேயே தானிருந்திருக்கு. மேல்தட்டு மக்கள்னு சொல்றோமில்லையா.. அதுங்களோட ஏறத்தாழ எல்லாருமே, அடுத்தவங்க நம்மளைப் பற்றி என்ன நினைப்பாங்களோனு கற்பனை பண்ணிக்கிட்டே வாழறாங்க. ஆனா நாடோடிகளும் மாபெரும் ராஜவாழ்க்கை வாழறவங்களும் இப்படி கிடையாது. இந்த ரெண்டு தினுசானவங்களும் இவனுங்க மண்டைக்குள்ளே எது முதல்ல வருதோ அதை அப்படியே செய்துக் கொண்டபடி வாழ்ந்து விடுவானுங்க... இவனுங்களுக்கு அடுத்தவங்க என்ன நினைப்பாங்க என்னும் நினைப்பே இருக்காது. வேலையற்ற பணக்காரங்களை - அதாவது பொழுது

போகலைனா பார்ட்டி குடுத்துக்கிட்டு அலையும் பணக்காரங்களை நா குறிப்பிடலே - தலைமுறை தலைமுறையா தனி ராஜாவாக வாழும்படி பிறந்த காரணத்தால, மற்றவர்களுடைய கருத்தே தேவை கிடையாதுனு வாழறவங்களைப் பற்றி சொல்றேன். இப்படிப்பட்ட மேல் நாட்டுக்கள் எல்லாமே ஒரே மாதிரிதானிருக்கு. பயமற்று, சில சமயங்கள்ல அசாதாரண முட்டாள்களா!''

''இது ஒரு செம இண்ட்ரஸ்டிங் விரிவுரை, பேட்டில். நீங்க உங்களுடைய அனுபவங்களை மையமா வெச்சு ஒரு புத்தகம் எழுதலாம்னு நினைக்கிறேன். படிக்க வேண்டிய தொகுப்பா அது நிச்சயமா அமையும்.''

இந்தப் பாராட்டுதலை ஒரு சிறு சிரிப்புடன் ஏற்றுக் கொண்ட டிடெக்டிவ் ஆனால் மறுபதில் ஏதும் தரவில்லை.

''ஆங்.. இப்ப உங்களை ஒரு கேள்வி கேட்கப் பிரியப்படறேன்'' என்றார் ஆண்டனி. ''நீங்க என்னை அந்த ஸ்டெயின்ஸ் விவகாரத்தோட இணைச்சு வெச்சுப் பார்த்திங்களா? உங்க நடவடிக்கைகளை வெச்சு, யெஸ்... நீங்க அப்படித்தான் பண்றீங்கனு நான் நினைச்சேன்.''

''ரொம்ப சரி.. எனக்குள்ளே அப்படியொரு முன்னெச்சரிக்கை எண்ணம் இருந்தது. ஆனா மேற்கொண்டு போக உறுதியா எதுவும் கிடைக்கலே. உங்களுடைய நடவடிக்கைகள் ரொம்ப நிறைவா இருந்தது, மிஸ்டர் கேட். நீங்க எதையும் மிகைப்படுத்திக் காட்டிடலே.''

''கேட்கவே சந்தோஷமாயிருக்கு'' என்றார் ஆண்டனி. ''நான் உங்களை என்னிக்குப் பார்த்தேனோ அன்னிலேர்ந்து எனக்காக நீங்க பொறி விரிச்சு வெச்சிருக்கீங்கனே எனக்குள்ளே ஓர் எண்ணம். அதுக்குள்ளே விழுந்துடாம இருக்க நான் எத்தனையோ பெரு முயற்சிகள் செய்ய வேண்டியிருந்தது. அத்தனையும் உடலுக்கும் மனதுக்கும் பலத்த திருகுவலி.''

பேட்டில் அதிகார தோரணையில் சிரித்தார். ''இப்படிப்பட்ட வழியிலதான் குற்றவாளியை நாங்க இறுதியா மடங்கிப் பிடிப்போம், ஸார்: அவனை முன்னும் பின்னும் இடமும் வலமும், திரும்பியும் முட்டிக்கிட்டும் ஓட விட்டு..! உடனேயோ அல்லது சற்று காலந் தாழ்த்தியோ அவனோட வேகமெல்லாம் இற்றும் அற்றும் போயிடும். அப்போ - உங்க கையில அகப்படுவான் அவன்.''

''நீங்க ஒரு சுவாரஸ்யமான ஆள், பேட்டில். இந்த வழியில என்னை எப்ப நீங்க பிடிப்பீங்கனு காத்திருக்கேன்.''

''நிறைய ஓட விட்டுடணும், ஸார்'' - தனது பொன் மொழியை மறுபடியும் சுட்டிக் காட்டினார் சூப்பரின்டெண்டெண்ட். ''நிறையவே ஓட விடணும்.''

''ஓகே ஓகே, ஓட விடுங்க. அதுக்கு நடுவுல'' என்ற ஆண்டனி, ''இந்த வழக்குல, நான் இன்னும், முறையான பயிற்சி பெறாத, உங்களுடைய டிடெக்டிவ் அஸிஸ்டெண்ட் தானே?'' என கேட்டார்.

''அது அப்படியே தான், மிஸ்டர் கேட். மாற்றம் கிடையாது.''

''ஷெர்லக் ஹோம்ஸ் எனும் முறையான துப்பறியும் மேதையோடே இருக்கும் முறையான பயிற்சி பெறாத வாட்ஸன் போல - ஆங்?''

''டிடெக்டிவ் கதைகள் எல்லாமே வெறும் வெத்து வேட்டுகள், ஸார்'' என்றார் பேட்டில் எவ்வித பாவமுமற்று. பின், சிறு சிந்தனைக்கு பிறகு ''இருந்தாலும் அவை வாசகர்களைப் பரபரப்பாக்குது'' என்றார். ''கொலையெல்லாம் வருதுல்லே! இதுவும் எங்களுக்கு ஒருவகையில உதவியாத்தானிருக்கு.''

''எவ்வகையில?'' ஆர்வமாய் கேட்டார் ஆண்டனி.

''போலீஸ்ங்கனா முட்டாள் அப்படினு ஒரு சர்வதேச கருத்தை இக் கதைகள் பரப்பிடுது இல்லையா? ஆகவே கொலைகளைத் தீர்க்க வல்லவர்கள் துப்பறியும் அதிகாரிகள்னு ஒரு கானல் நிலைச்சிடுது இல்லே!''

ஆண்டனி அவரையே சில நிமிடங்கள் மவுனமாய் பார்த்துக் கொண்டிருந்தார். தனது சதுரமான உயிர்ச்சியிழந்த முகத்தில் எவ்வித பாவங்களையும் காட்டாமல் அவ்வப்போது சிறு சிறு கண் துடிப்புகளுடன் மட்டும் அமர்ந்திருந்தார் பேட்டில். தற்சமயம் அவர் எழுந்துக் கொண்டார்.

''இப்ப படுக்கப் போய் ஒண்ணும் ஆகப் போவது கிடையாது. லார்ட் கேட்டர்ஹாம் எழுந்ததுமே அவர்கிட்ட சில முக்கியமான விஷயங் களைச் சொல்லிடப் போறேன். யார்க்கெல்லாம் வீட்டை விட்டுக் கிளம்பணும்னு தோணுதோ அவங்கள்லாம் அப்படி பண்ணிக்கலாம். இருந்தாலும்கூட அவங்ககிட்டே எல்லாரும் இங்கேயே தங்கினா நலம்னு அவர் நினைப்பதா லார்ட் ஓர் அழைப்பு விடுத்தார்னா நான் லார்டுக்கு

ரொம்பவும் கடமைப்பட்டவனா இருப்பேன். இப்படி ஓர் அழைப்பை நீங்க ஏத்துப்பீங்கன்னு நினைக்கிறேன், மிஸ்டர் கேட்? மிஸஸ் ரேவலும் ஏத்துக்கணும்."

"அந்த ரிவால்வரை நீங்க கண்டுபிடிச்சாச்சா?" திடுதிப்பென்று கேட்டார் ஆண்டனி.

"எது? ப்ரின்ஸ் மைக்கேலைச் சுட்டதையா? நோ, நான் இன்னும் அதைக் கண்டுபிடிக்கலே. அது வீட்டுக்குள்ளேயே இருக்கணும்... அப்படியில்லைனா வெளியில. உங்கிட்டேயிருந்து குறிப்புகள் வாங்கிக்கிட்டு சில பசங்களை பறவை கூட்டுக்குள்ளே கூட தேடும் வரை அனுப்பி வெச்சுடறேன், கேட்! நினைவூட்டினதுக்கு தேங்க்ஸ். ரிவால்வர் மட்டும் என் கைக்குக் கிடைச்சுட்டா நம்மால சில அடிகள் முன்னேற முடியும். கூடவே அந்தக் கொத்துக் கடிதங்கள். அக்கடிதங்களுடன் சிம்னீஸிலிருந்து எழுதப்பட்ட ஒரு கடிதமும் இருந்ததுனு சொன்னீங்க இல்லையா? அதுதான் கடைசியா எழுதப்பட்ட கடிதம்னு வெச்சுப்போம்... அப்படினா, வைரங்களைக் கண்டுபிடிக்க உதவும் சங்கேதக் குறிப்புகள் அதுல இருக்கும்."

"கியூசப் பய கொல்லப்பட்டிருப்பது குறித்த உங்களோட கோட்பாடு என்ன?" கேட்டார் ஆண்டனி.

"அவன் ஒரு ரெகுலர் திருடன்னுதான் நான் சொல்வேன். கிங் விக்டர், அப்படியில்லன்னா சிகப்புக் கை... இந்த ரெண்டு பேர்ல யாரோ ஒருத்தர்கிட்டே அவன் அகப்பட்டிருக்கணும். அவங்க இவனை நியமிச்சிருக்கணும். எதுக்கு? திருட்டுக்கு. ரெண்டு அமைப்புகளும் பணத்துல முடையில்லாமல் மிதந்தாலும், மூளை என்பதே இல்லாதவனுங்க. கியூசப்புக்கு தரப்பட்டிருந்த வேலை· சுயசரிதையைத் திருடுவது. உங்கிட்டே கடிதங்களும் இருந்திருப்பது அங்கே ஒருத்தருக்கும் தெரிஞ்சிருக்காது. கியூசப் உட்பட! ஆங்... அக்கடிதங்கள் உங்ககிட்டே இருக்கணும் என்பது ஒரு விளங்காத புதிர், யெஸ்."

"எனக்குத் தெரியும்" என்றார் ஆண்டனி. "அதைப் பற்றி நினைச்சாலே ஆச்சரியமாத்தானிருக்கும்."

"ஸோ, சுயசரிதைக்கு பதிலா கடிதங்கள் திருடப்பட்டுது. ஆரம்பத்துல அது மாபெரும் ஏமாற்றமாத்தானிருக்கும். அப்புறம் பேப்பர் நறுக்கினைப் பார்க்க... அவனுக்கே உரிய ப்ளாக் மெயில் பிஸினஸை அந்தப்

பொம்பிளைக் கிட்டே செலுத்தி கடிதங்களைப் பணமாக்கிடும் புத்திசாலித்தனமான திட்டம் அவனுக்குள்ளே உதிக்குது. அக்கடிதங்களின் உட் பொருளும் முக்கியத்துவமும், பாவம்.. அவனுக்குத் தெரியாது. *சிகப்புக் கை கூட்டாளி*ங்களுக்கு இவன் என்ன பண்றான்னு தெரிஞ்சுடுது.. கொடுத்தது ஒண்ணு பண்றது ஒண்ணு என்பது புரிஞ்சுடுது.. போட்டுத் தள்ள முடிவு பண்ணிடுறானுங்க. ஏமாற்றுபவர்களைக் கொல்வதில் அவனுங்களுக்கு எப்பவுமே தனி சுவை உண்டு. அதுல ஒரு கலைநயமான திருப்தியிருக்கு அவனுங்களுக்கு. அதை அவனுங்க ரொம்ப ரசிப்பாங்க. இதுல எனக்கு விளங்காதது ஏதுனா, விர்ஜீனியானு பெயர் பொறிக்கப்பட்டிருந்த அந்த துப்பாக்கி. இதனால, இந்தக் கொலைல *சிகப்புக் கை கூட்டாளி*ங்களைப் பொருத்திப் பார்க்கவே முடியாம போயிடுது. வழக்கமா *'இது சிகப்புக் கை கூட்டாளிகளின் வேலை'* அப்படினுதான் அவனுங்க பொறிக்க விரும்புவானுங்க. அப்படித்தான் ஏமாற்ற நினைக்கும் மற்றவங்களுக்கு அது ஒரு பாடமா அமையும் என்பது அவனுங்களோட நினைப்பு. ஆகவே, இந்தக் கட்டத்துல, ஒருவேளை கிங் விக்டர் உள்ளே நுழையறானோனு எனக்குப்படுது. ஆனா இப்படிப்பண்ண அவனுக்கிருக்கும் இலக்கு? எனக்குத் தெரியாது. மிஸஸ் ரேவலை இக்கொலை வழக்கோடு பின்னிப் பிணைச்சுப் போட வேண்டுமென்றே எடுக்கப்பட்ட ஒரு முயற்சியாதான் இது இருக்கு. இதுலேயும், மேலோட்டமா பார்த்தா எனக்கு ஒரு காரணமும் பிடிபடலே.''

''எனக்கு ஒரு தியரி இருந்தது'' என்றார் ஆண்டனி. ''ஆனா அது இப்ப வேலை பண்ண மாட்டேங்குது. யெஸ் - ஒத்து வரலே.''

விர்ஜீனியா உடனடியாய் மைக்கேலை அடையாளம் கண்டு கொண்டதை சொன்னார் ஆண்டனி. பேட்டில் ஆமோதித்துத் தலையசைத்துக் கொண்டிருந்தார்.

''ஆங், ஆண்டனி... ஓல்ட் பேரானுக்கு உங்க மேலே மிகச் சிறந்த கருத்து இருக்கு. உங்களைப் பற்றி சொன்னாலே உற்சாகமா பேசறார்.''

''அவருக்கு என் நன்றிகள். வர்ற புதன்கிழமைக்குள்ளே அந்த வாழ்க்கை சரிதத்தை நான் எப்படியாவது கைப்பற்றிடுவேன்னு அடிச்சு சத்தியம் பண்ணித் தந்ததாலே இருக்கும்.''

''அதை முடிக்கணும்னா நீங்க ஒரு வேலையை முன் கூட்டியே பண்ண வேண்டியிருக்கு.''

''யெஸ். நீங்களும் அப்படித்தான் நினைக்கிறீங்களா? கிங் விக்டர் அமைப்புத்தான் அந்த சரிதத்தை வெச்சிருப்பதா என் ஊகம்.''

பேட்டில் ஒப்புக் கொண்டார். ''அன்னிக்கு, பாண்ட் சாலையில், கியூசப்பிடமிருந்து பிடுங்கிக்கிட்டு ஓடியிருக்கானுங்க. மாபெரும் திட்டமிடல் நடந்திருக்கு, அதை முடிக்க. யெஸ்... அவனுங்க வசம்தான் அது இருக்கு. அதிலிருக்கும் சங்கேதக் குறிப்புகளை அவனுங்க சரியா மொழிப்படுத்தியாச்சு. ஸோ, எங்கே போய் தேடணும்னு அவனுங்களுக்கு இப்ப துல்லியமா தெரியும்.''

இரு ஆண்களும் அறையை விட்டு வெளியேறும் தறுவாயில் இருந்தார்கள். அப்போது தனது தலையை வெடுக்கென்று திருப்பி, ''இங்கேயா?'' என்று கேட்டார்.

''கரெக்ட், இங்கேயே! ஆனா அந்த விலைமதிப்பற்ற சமாச்சாரத்தை அவனுங்க இன்னும் அடையலே. என்ன ஆனாலும் பரவாயில்லைனு அதை அடைய அவனுங்க முயற்சி பண்ணத்தான் போறாங்க.''

''ஓ, அப்படின்னா...'' என்ற ஆண்டனி, ''உங்களுடைய அந்த சாதுர்யம் மிக்க தலையின் அடியில ஏதோ மறைமுக திட்டம் வெச்சிருப்பீங்கன்னு நினைக்கிறேன்'' என்றார்.

இதற்கு பேட்டில் எந்த மறுபதிலையும் வீசவில்லை. கல் போல புத்தியற்ற ஒருவனின் பார்வையை வீசிக் கொண்டிருந்தார் அவர். பிறகு, மிக மெதுவாக அவர் கண்ணசைத்தார்.

''என் உதவி தேவைப்படுமா?'' கேட்டார் ஆண்டனி.

''தேவைப்படுது. இன்னொருத்தரின் உதவியும் எனக்கு வேணும்.''

''யாரது?''

''மிஸஸ் ரேவல். நீங்க கவனிச்சிருக்கீங்களா, இல்லையானு எனக்குத் தெரியாது மிஸ்டர் கேட்... ஆனா அவங்களுக்குள்ளே தந்திரமா ஏமாற்றும் கலை நிரம்பியிருக்கு.''

''நானும் கவனிச்சிருக்கேன்.''

கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டு ''குளத்துல போய் ஒரு குளியல் போட்டுட்டு கொஞ்ச நேரம் தலை சாய்க்கலாம்னு

நினைக்கிறேன் பேட்டில்'' என்றார் ஆண்டனி. ''இப்போதைக்கு சிற்றுண்டி எதுவும் வேணாம் போல இருக்கு.''

ஓசையெழுப்பாது மாடியிலிருந்த அவருடைய படுக்கையறை பகுதிக்கு ஓடினார் ஆண்டனி. தனக்குள் சீட்டியடித்துக் கொண்டு, தனது உடைகளைக் களைந்தெறிந்த அவர், குளியலுக்கு உகந்த உடைகளையும் டவலையும் எடுத்துக் கொண்டார்.

பிறகு, ட்ரெஸ்ஸிங் மேஜைக்கு முன்னால், அங்கிருந்த கண்ணாடியிலும் பிரதிபலித்தபடியிருந்த பொருளைக் கண்டு, அப்படியே மூச்சடைத்துப் பேச்சற்றவராய் நின்று போனார் அவர். சில கணங்கள் அவருடைய கண்களையே அவரால் நம்ப முடியாமல் ஆயிற்று. அதனை கையிலெடுத்துக் கொண்ட அவர் அருகில் வைத்துப் பரிசோதித்தார். ஆமாம், அவருடைய நினைப்பில் தவறு இல்லை.

அது, விர்ஜீனியா ரேவல் என கையொப்பமிட்டிருந்த கடிதங்களின் கொத்து. அவை அப்படியே திரும்பியிருந்தன. ஒன்று கூடத் தவறி யிருக்கவில்லை.

அங்கிருந்த நாற்காலியில் அப்படியே விழுந்தார் ஆண்டனி. கைகளில் கடிதங்களோடு.

''தலையை சுத்துது'' என முணுமுணுத்துக் கொண்டார். ''இந்த வீட்டுல என்னதான் நடக்குதுனு என்னால ஒரு துளி புரிஞ்சுக்க முடியலே. எந்த வானத்துலேந்து இப்படி குதிச்சு மறுபடியும் கடுதாசிங்க என் கைக்கே திரும்பணும்? யார் வந்து என் டிரஸ்ஸிங் டேபிள்ல இதுங்களைப் போட்டுட்டுப் போனது? ஏன்?''

இந்த அனைத்து முக்கியமான கேள்விகளுக்கும் அவரால் திருப்தியளிக்கும் விடைகளை அறிய முடியவில்லை.

அத்தியாயம் 21

# மிஸ்டர் ஜஸக்மனின் பெட்டி

அன்று காலை பத்து மணிக்கு லார்ட் கேட்டர்ஹாமும் அவருடைய மகளும் சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். பண்டில் மிகுந்த சிந்தனையில் இருப்பவளாய்த் தோன்றினாள்.

கடைசியாய், ''அப்பா'' என்றாள் அவள்.

கையிலிருந்த டைம்ஸ் பத்திரிகையில் மூழ்கியிருந்த அவர் பதில் தரவில்லை.

''அப்பா'' என்றாள் பண்டில் இரண்டாவது முறையாய், கூர்மையாய்.

வரவிருக்கும் அரிதான புத்தகங்களின் விற்பனை பற்றிய கட்டுரை யிலிருந்து நினைவு அகற்றி ''ம்..'' என்ற லார்ட், ''கூப்டியா?'' என்றார், தாளிலிருந்து கண்களை அகற்றாமல்.

''ஆமாம், நமக்கு முன்னாடியே இங்கே வந்து ப்ரேக் ஃபாஸ்ட் பண்ணிட்டுப் போயிருப்பது யார்?''

அங்கு ஏற்கெனவே யாரோ வந்து உட்கார்ந்து போயிருந்தது போல தோன்றிய ஓர் இருக்கையை அவள் சுட்டிக் காட்டி பேசினாள். மீதமிருந்த டைனிங் டேபிள் இருக்கைகள் அனைத்தும் விருந்தினருக்காக காத்திருந்தன.

''ஓ.. அவன்.. அவன்.. அவன்..''

''குண்டனா?''

ஒருத்தருக்கொருத்தர் புரிந்துக் கொள்ள முடியாமல் போய்க் கொண்டிருக்கும் சம்பாஷணையால் இருவருக்குமிடையே பரிதாபம் முளைத்திருந்தது.

''அவனே'' என்றார் அவர்.

''அதிருக்கட்டும். இன்னிக்கு இங்கே சாப்பிட வர்றதுக்கு முன்னாடி நீங்க பேசிக்கிட்டிருந்தது அந்த டிடெக்டிவ்கிட்டேயா?''

''யெஸ். அவர்தான் என்னைக் கையும் களவுமாக பிடிச்சது மாதிரி நிறுத்தி வெச்சது. சாப்பிடுவதற்கு முன்னாடி அமைதியா இருக்கணும்னு எதிர்பார்ப்பவன் நான். நான் வெளிநாடு போக வேண்டியிருக்கு. அந்த படபடப்பே என் நரம்பு முழுக்க..''

கொடூரமாய் இடைபுகுந்தாள் பண்டில். ''புலம்பல் வேணாம். அவர் என்ன சொன்னார்?''

''யார்லாம் போகணும்னு பிரியப்படறாங்களோ அவங்கள்லாம் போகலாம்னார்.''

''வெல்'' என்றாள் பண்டில். ''இதுக்குத்தானே நீங்க காத்திருந்தது?''

''எனக்கும் அது தெரியும். ஆனா அவர் இத்தோட நிறுத்தித் தொலைக்கலையே. நான் எல்லாரையும் போகாம இருங்க, இருங்கன்னு சொல்லணும்னு இல்லே அவர் கழுத்தறுத்தார்.''

அரித்த மூக்கைப் புறங்கையால் அழுந்த கசக்கியபடி ''எனக்கு விளங்கலே'' என்றாள் பண்டில்.

''குழப்பும் மற்றும் புலம்ப வைக்கும் வார்த்தைகள்'' என குற்றஞ் சுமத்தினார் லார்ட். ''அதுவும் காலைல எதுவும் சாப்பிடுவதற்கு முன்னாடியே!''

''நீங்க என்ன சொன்னீங்க?''

''என்னத்தை செய்ய - ஒத்துக்கிட்டேன். இந்த மனுஷங்களோட வாக்குவாதம் பண்ணி விளையப் போவது ஒண்ணும் கிடையாது. அதுவும் வயித்துக்கு பச்சைத் தண்ணி காட்றதுக்கு முன்னாடியே'' என்று தன்னுடைய குறையை இன்னுமொருமுறை முன் வைத்து குறிப்பிட்டார்.

''யாரையெல்லாம் நீங்க இதுவரைக்கும் அப்படி இருக்கச் சொல்லியிருக்கீங்க?''

''கேட். இன்னிக்கு அதிகாலையில அவர் எழுந்திருந்தார். அவர் போகப் போவதில்லையாம். என்னால அவரை முழுசா விளங்கிக்க முடியலே - ஆனா ரொம்ப பிடிச்சிருக்கு. ஐ லைக் ஹிம் வெரி மச்.''

''இதேபோலவே விர்ஜீனியாவும் விரும்பறாங்க'' என்றாள் பண்டில், கையிலிருந்த முள் கரண்டியால் மேஜையில் ஒரு கற்பனை உருவத்தைத் தீட்டியபடி.

''ஆங்?''

''ஆனா இதெல்லாம் விட்டுருவோம், அப்புறம்?''

''ஐஸக்டீனைக் கேட்டேன்.''

''ஓஹோ!''

''ஆனா அதிர்ஷ்டவசமா அவர் கிளம்பறேன்னுட்டார். டவுனுக்குப் போயே ஆகணுமாம். 10.50 ட்ரெயினைப் பிடிக்க ஒரு காருக்கு சொல்லணும்... மறந்துடாதே.''

''ஆல் ரைட்.''

''இப்ப, பாக்கியிருக்கிற இந்த ஃபிஷ் கிட்டேயிருந்து மட்டும் எனக்கு விடுதலை கிடைச்சுட்டா..'' என்று, இதை சொல்லும்போதே உற்சாகம் கூடுபவராய் காட்டிக் கொண்டார் லார்ட்.

''மடிச வாடை அடிக்கும் உங்களுடைய பழைய புத்தகங்கள் பற்றியெல்லாம் அவர்கிட்டே பேசுவதை நீங்க ரொம்ப விரும்புவதா இல்லே நான் நினைச்சுக்கிட்டிருக்கேன்..''

''அப்படியே தான், அப்படியேதான். இப்பவும். ஆனா ரெண்டு பேர்ல ஒருத்தன் மட்டுமே எப்பவும் பேசிக்கிட்டே இருப்பது போல ஆகி விடுவது ஒரு தண்டனை போல ஆகிடுது. இந்த சமாச்சாரத்துல ஃபிஷ் இஷ்டம் காட்டினாலும் ஒரு வார்த்தை - ஒரேயொரு வார்த்தை பேச மாட்டேங்கிறாரே..''

''பேசுவதை விட கேட்பதே சுகம்'' என்றாள் பண்டில். ''நம்ம ஜார்ஜ் கிட்டே அனுபவிப்பது போல.''

தனது நினைவுக்குள் வந்த ஜார்ஜுடனான அனுபவத்தை உணர்ந்ததும் நடுநடுங்கிப் போனார் லார்ட் கேட்டர்ஹாம்.

''விர்ஜீனியா'' என்றாள் பண்டில். ''அவங்களும் இருக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளாரா?''

''பேட்டில் எல்லாரையும் இப்படி கேட்டுக்கிட்டிருக்கார்!''

''அவர் கிடக்கட்டும்! நீங்க? நீங்க அவங்களை எனக்கு சித்தியா வர முடியுமானு கேட்டாச்சா?''

வருத்தமாய் ''அதனால எந்த பிரயோஜனமும் விளையும்னு எனக்குத் தோணலே'' என்றார். ''நேற்று ராத்திரி அந்தம்மா என்னை டார்லிங்னு கூப்பிட்டிருந்தாலும் சொல்றேன்! இப்படி பேசும் பாசம் பொங்கும் வார்த்தைகள்தான் இந்த மாதிரியான கவர்ச்சி நிறைந்த பெண்களிடம் உள்ள ஆபத்தே. என்னவெல்லாமோ சொல்லுங்க - ஆனா நிஜத்துல அப்படி மனசால துளியும் நினைக்காம!''

''நோ'' என மறுத்தாள் பண்டில். ''ஒருவேளை, அவங்க உங்க மேல் பூட்ஸைத் தூக்கி எறிஞ்சு கோபப்பட்டிருந்தாலோ அல்லது கை ஓங்கி அடிக்க தலைப்பட்டிருந்தாலோ - அது, சிறப்பா வொர்க் அவுட் ஆகி காதல்ல முடிஞ்சிருக்கும்.''

''காதல் என்பது பற்றி உன்னைப் போன்ற விடலைங்கள்லாம் இப்படித்தான் அசிங்கமான எதிர்பார்ப்பை சுமந்துக்கிட்டு காத்திருக்கீங்க.''

எழுந்துக் கொண்ட பண்டில் தனது அப்பாவின் முன்நெற்றியில் செல்லமாய் முத்தம் பதித்து விட்டு ''டியர் ஓல்ட் டாடி'' என்றாள். ''ஒரு நாகரீக விஷயமும் தெரியாதுப்பா உங்களுக்கு.''

சொல்லிவிட்டு வெளியேறி விட்டாள்.

லார்ட் கேட்டர்ஹாம் வெளியேறியபோது அவரது பெயரிட்டு அழைக்கப்பட்டதைக் கேட்டு துணுக்குற்று திரும்பினார். தனக்கே உரிய ஓசையெழுப்பாத முறையில் அங்கே நுழைந்திருந்தார் மிஸ்டர் ஃபிஷ்.

''குட் மார்னிங், லார்ட் கேட்டர்ஹாம்.''

''ஓ, குட் மார்னிங், குட் மார்னிங். நைஸ் டே.''

''சீதோஷ்ணம் அமர்க்களமா இருக்கு.''

''யெஸ். மேலும் இன்பகரமா இருக்கும். நீங்க மட்டும் இங்கே தொடர்ந்து தங்கினால்'' என தன்னையுமறியாமல் சொல்லிவிட்டார் லார்ட்.

''ஏன்? ஏன், லார்ட் கேட்டர்ஹாம்?''

''இந்த முறை, ரொம்பவும் களேபரம் நிறைந்த ஒரு சந்திப்பா ஆகிடுச்சு. அதனால உங்களை உடனே மூட்டை கட்டிடுங்கனு சொல்லவே எனக்கு என்னவோ மாதிரியிருக்கு.''

''நீங்க என்னை தப்பா புரிஞ்சுக்கிட்டீங்க, லார்ட் கேட்டர்ஹாம். நிலைமைகள் வலி நிறைந்ததாதான் போச்சு - இதை யாரும் மறுக்க முடியாது. ஆனா ஆங்கிலேயே மாட மாளிகைகள்ல தங்கும் ஆனந்தம், என்னிக்குமே என்னை ஈர்க்கும் அம்சம். இது, எங்க அமெரிக்காவுல கிடைக்கவே கிடைக்காது. அதனால உங்களோட கனிவான இன்விடேஷனை ஏற்று திரும்பாமல் தங்கிடத்தான் போறேன்.''

''ஓ, நல்லது நல்லது'' என்றார் கேட்டர்ஹாம். ''காரியம் முடிஞ்சது, எனக்கு எத்தனை சந்தோஷமாயிருக்கு தெரியுமா? நண்பா... முழுக்க சந்தோஷம்தான் போங்க.''

ஒப்புக்கு நிறைவினைக் காட்டியபடி அறையை விட்டு வெளியேறினார் லார்ட். ஹாலில், மாடிப்படிகளிலிருந்து இறங்கி வந்துக் கொண்டிருந்த விர்ஜீனியாவைப் பார்த்தார் அவர்.

''நான் உங்களோட ப்ரேக் ஃபாஸ்ட்ல சேர்ந்துக்கலாமா?'' என்று தளிராய் கேட்டார் கேட்டர்ஹாம்.

கொட்டாவி விட்டார் அவர்.

''படுமோசமான இரவு, இல்லையா?'' என்றார் லார்ட்.

''அப்படி பொதுவா சொல்லிட முடியாது. ஒரு பக்கம் பார்த்தா, அது ஒரு நல்ல இரவேதான். ஓ, லார்ட் கேட்டர்ஹாம்..'' என்ற விர்ஜீனியா அவருடைய உள்ளங்கைகளுக்குள் தன் கையைப் புகுத்தி பிழிவது போல் அமுக்கினார். ''நான் கொண்டாட்டத்துல இருக்கேன். என்கூட சாப்பிட வரேன்னு சொன்ன நீங்க, என் டார்லிங்.''

''அப்ப நீங்க இருனா இருந்திடுவீங்க இல்லையா? பேட்டில் எல்லார்கிட்டேயும் இப்படி கேட்க சொன்னார். ஆனா நான் உங்கிட்டே குறிப்பிட்டுக் கேட்கிறேன். பண்டிலுக்கும் இப்படி கோரிக்கை வைப்பதுல இஷ்டமே.''

''நிச்சயமா, நான் தங்கிடறேன். இப்படி என்னைக் கேட்கும் நீங்க ரொம்ப இனிமையானவர், ஆங்!''

''ஆஹ்'' என்ற கேட்டர்ஹாம் நீண்ட பெருமூச்சு விட்டார்.

''உங்களுடைய ரகசிய துக்கம்தான் என்ன? யாராவது உங்களை அடிச்சுட்டாங்களா?'' கேட்டது, விர்ஜீனியா.

''அதே தான்'' என்றார் அவர் வருத்தமாய்.

புதிர் போடப்பட்டவராய் ஆனார் விர்ஜீனியா. ''பூட்ஸால என்னை அடிக்கனும்னு உங்களுக்கு ஒரு தடவை கூட தோணினதே கிடையாதா? நோ - உங்களுக்கு அப்படி தோணலேனு எனக்குப் புரியுது! சரி விட்டுடுங்க.''

லார்ட் கேட்டர்ஹாம் வருத்தமாய் நழுவிவிட, அவர் முதுகையே புருவ முடிச்சுகளோடு பார்த்துக் கொண்டிருந்த விர்ஜீனியா பிறகு பக்கவாட்டுக் கதவின் வழியாக தோட்டத்துக்குள் இறங்கினார்.

நடுக்கத்திலேயே இருக்கும் ஒருத்தருக்கு மாபெரும் புத்துணர்ச்சியைத் தரவல்லதாய் அமைந்திருந்த நறுமணமிகு அக்டோபர் மாதத்து இளவேனில் காற்றினை நெஞ்சுக்கூடு வரை இழுத்து நின்றார் அவர்.

மேற்கொண்டு ஓரடி எடுத்து வைக்க அவர் முன்னேறியபோது அவருடைய மணிக் கட்டைப் பிடித்தபடி சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் இருப்பதை உணர்ந்தார். துளியும் சமிக்கைளுயின்றி வேற்றுலகத்திலிருந்து குதித்தவரைப் போல வரும் அசாதாரண தந்திரம் மிகுந்த மனுஷன் என அவரை நினைத்துக் கொண்டார் விர்ஜீனியா.

''குட் மார்னிங், மிஸஸ் ரேவல்... ரொம்ப களைப்பா ஆகலே போல தெரியுது?'' என்றார் அவர்.

விர்ஜீனியா மறுத்து தலையசைத்தார். ''அது ஒரு மிக பரபரப்பான இரவு. கொஞ்சம் தூக்கத்தை அதுக்காக தியாகம் பண்ணினதுல ஒண்ணும் குறைஞ்சு போயிடலே. அந்த அனுபவத்துக்குப் பிறகு இன்னிக்கு உப்பு சப்பில்லாம இருக்கு என்பதுதான் ஒரே குறை.''

''அங்கிருக்கும் மரத்துக்குக் கீழே ஒரு நல்ல பதுங்குமிடம் போன்ற பகுதியிருக்கு'' என்று குறிப்பிட்டார் சூப்பரின்டெண்டெண்ட். ''அங்கே உங்களுக்காக நான் ஒரு சேர் கொண்டு வந்து போடட்டுமா?''

''ஓ! அவ்ளோ தனிமையில நீங்களும் நானும் பேச வேண்டியிருக்கா?''

''நீங்க கற்பூரம், மிஸஸ் ரேவல். யெஸ்... நீங்க சொல்றதுதான் நிறம். எனக்கு உங்ககூட ஓரிரு வார்த்தைகள் பேச வேண்டியிருக்கு.''

ஒரு பெரிய கை வைத்த நாற்காலியைத் தூக்கிக் கொண்டு தாழ்வாரப் பகுதியில் நடந்து போனார், பேட்டில். கையிடுக்கில் ஒரு சின்ன தலையணையைச் சுமந்தபடி பின்னாலேயே தொடர்ந்தார் விர்ஜீனியா.

''அந்த டெரஸ், தனிப்பட்ட உரையாடல்களுக்கு ரொம்பவும் ஆபத்தான ஒரு பகுதி'' என்றார் பேட்டில்.

''நான் மறுபடியும் பரபரப்பாறேன், மிஸ்டர் பேட்டில்.''

''ஓ, இப்ப பேசப் போவதுல எந்த முக்கியத்துவமும் கிடையாது'' என்ற அவர் சட்டைப் பையிலிருந்து ஒரு பெரிய கைக்கடிகாரத்தை எடுத்து மணி பார்த்தார். ''மணி பத்தரை. இன்னும் பத்தே நிமிஷத்துல அப்பேயிலிருக்கும் மிஸ்டர் லொமெக்சைப் பார்க்க நான் புறப்பட்டாகணும். நான் கேட்க வேண்டிய விஷயத்துக்கு இது அதிகபட்ச நேரம். எனக்கு நீங்க மிஸ்டர் கேட் பற்றி இன்னும் அதிகமான தகவல்கள் தரமுடியுமா என்பதுதான் என் எதிர்பார்ப்பு..''

''கேட்?'' - விர்ஜீனியா முழித்தார்.

''யெஸ். அவரை நீங்க எங்கே முதல்ல சந்திச்சீங்க? எத்தனை காலமா உங்களுக்கு அவரை தெரியும்.. இதுகுறித்தெல்லாம்..''

பேட்டிலின் அணுகுமுறை மிக சுளுவானதாகவும் போதுமான அளவுக்கு இனிமை ததும்புவதாகவும் அமைந்திருந்தது. விர்ஜீனியாவை நேருக்கு நேர் பார்ப்பதைக் கூட அவர் வடிகட்டிக் கொள்ள இதுவே அப்பெண்மணிக்கு ஒரு சின்ன இருப்புக் கொள்ளாமையை உண்டு பண்ணித் தந்தது.

''நீங்க நினைப்பதைப் போல இது அத்தனை சுலபமா சொல்லிடக் கூடிய சங்கதி இல்லே''என்று கடைசியாய் சொன்னார் அவர். ''எனக்கு அவர் ஒருமுறை பேருதவி பண்ணியிருக்கார்.''

பேட்டில் இங்கு இடைபுகுந்தார். ''மேற்கொண்டு நீங்க எதை பற்றியும் சொல்வதற்கு முன்னாடி, மேடம், நான் கொஞ்சம் பேசிட விரும்பறேன். நேற்றிரவு, நீங்களும் மிஸ்டர் எவர்ஸ்லேயும் தூங்கப் போன பிறகு, அந்தக் கடிதங்கள் மற்றும் உங்க வீட்டுல கொல்லப் பட்டிருந்த ஆசாமி இதெல்லாம் பற்றி என்கிட்டே மிஸ்டர் கேட் சொல்லிட்டார்.''

''அப்படியா செஞ்சார்?'' - மூச்சுக் காற்றுக்கு தவிக்கும்படி ஆயிற்று விர்ஜீனியாவுக்கு.

''யெஸ். அதுவும் மிக புத்திசாலித்தனம். அது, பல தப்பபிப்ராயங்களைத் தவிர்க்குது. ஒரேயொரு விஷயத்தைத்தான் அவர் சொல்லலே - எத்தனை

நாளா அவருக்கு உங்களைத் தெரியும்? இப்ப அதுபற்றி எனக்குள்ளே ஒரு சின்ன ஐடியா உருவாகியிருக்கு. எனக்கென்னவோ, அன்னிக்கு, பாண்ட் சாலைல இருக்கும் உங்க வீட்டுக்கு அவர் வந்தபோதுதான் நீங்க அவரை முதன் முறையாகவே பார்த்தீங்களோனு தோணுது. ஆஹ்! என் ஊகம் சரினு ஊர்ஜிதமாகிடுச்சு. அப்படித்தான் - ஓகே?''

விர்ஜீனியா ஒன்றும் சொல்லவில்லை. முதன் முறையாக, இந்த இரும்பு மனிதனை நினைத்து... முகபாவமே அற்ற இந்த மரம் போன்ற மனிதனை நினைத்து... பயந்தார் அவர்.

''அவரோட வாழ்க்கையைப் பற்றி எப்பவுமே எதுவுமே அவர் உங்ககிட்டே சொல்லலியா?'' – தொடர்ந்துக் கொண்டிருந்தார் டிடெக்டிவ். ''அவர் தென் ஆப்பிரிக்காவுக்கு வர்றதுக்கு முன்னாடி காலகட்டத்தை நான் கேட்கிறேன். கனடா? அல்லது இதுக்கும் முன்னால, சூடான்? அல்லது அவருடைய சிறு பிராயம் பற்றி ஏதாவது?''

விர்ஜீனியாவால் வெறுமனே மறுத்துத் தலையை அசைக்க மட்டும்தான் முடிந்தது.

''இருந்தாலும், அவர்கிட்டே, விலைமதிப்பற்ற விஷயம் ஏதோ இருக்கும்னு நான் பந்தயம் கட்டுவேன்'' என்றார் பேட்டில். ''தைரியமா, வீரதீர சாகசங்கள் நிறைஞ்ச வாழ்க்கையை வாழ்ந்த ஒருத்தனுடைய முகத்தை நாம அவ்ளோ குறைவா எடை போட்டுட முடியாதே! அவரா நினைச்சா நிச்சயமா அவரால சில விறுவிறுப்பான சம்பவங்களை உங்களுக்கு சொல்ல முடியும்.''

''அவரோட கடந்த கால வாழ்க்கையைப் பற்றி உங்களுக்குத் தெரிஞ்சுதான் ஆகணும்னா, ஏன் நீங்க அவரோட நண்பரான மேக்ரத்துக்கு தந்தி அனுப்பிடக் கூடாது.''

''ஓ, அதை நாங்க செஞ்சுட்டோம். ஆனா அவர் வெளியூர் எங்கயோ போயிருப்பதா தகவல். இத்தனை இருந்தாலும், புலவாயோவில தான் இருந்ததா ஆண்டனி சொல்லும் சமயத்துல அவர் அங்கேதான் இருந்திருக்கார். இதுல குழப்பம் இல்லே. ஆனா அவர் தென் ஆப்பிரிக்கா வர்றதுக்கு முன்னாடி என்ன பண்ணிக்கிட்டிருந்தார் என்பதுலதான் என் சிந்தனை. அந்த சுற்றுலா அலுவலகத்துல அவர் ஒரு மாசமாத்தான் இருந்திருக்கார்'' என்றவர், கைக்கடியாரத்தைப் பார்த்தார். ''ஓ, நான் கிளம்பியாகணும், கார் காத்திருக்கும்.''

வீடு நோக்கி அவர் போவதைப் பார்த்துக் கொண்டிருந்தார் விர்ஜீனியா. ஆனால் அவர் உட்கார்ந்திருந்த நாற்காலியிலிருந்து நகரவில்லை. நகர முடியவில்லை. ஆண்டனி தோன்றி தன்னுடன் இணைந்துக் கொள்வார் என்ற எதிர்பார்ப்பிலிருந்தார் அவர். மாறாக பில் எவர்ஸ்லே அவருக்கே உரிய கொட்டாவியுடன் வந்து சேர்ந்துக் கொண்டார்.

''நன்றி கடவுளே. ஒரு வழியா கடைசியா உங்க கூட பேசும் ஒரு சந்தர்ப்பம் எனக்கு அமைஞ்சது'' என்றார், குற்றம் கூறும் தொனியில்.

''பில் டார்லிங்... என்கிட்டே கொஞ்சம் அன்பா பேசுங்க ப்ளீஸ். இல்லேனா வெடிச்சு அழுதிடுவேன்.''

''என்ன, உங்களை அந்த அளவுக்கு யாராவது வாரி விட்டிருக்காங் களா?''

''வாரி விட்டதா சொல்ல மாட்டேன். ஆனா என் மூளைக்குள்ளே புகுந்து, அதை குடைஞ்சு, தலைகுப்புற ஆக்கி... ஒரு யானை என் மேல ஏறிட்ட மாதிரியிருக்கு.''

''பேட்டில் கிடையாதே?''

''பேட்டிலே தான். அவர் ஒரு பயங்கரமான ஆளு - நிச்சயமா.''

''வெல்.. அந்த ஆளை விட்டுடுங்க. கவனியுங்க விர்ஜீனியா... நான் உங்களைப் பைத்தியமா காதலிக்கிறேன்.''

''இப்ப வேணாம் பில்! விட்டுடு! எனக்கு இதைக் கேட்க தெம்பில்லே..'' விர்ஜீனியா நடுநடுங்கினார், ''பில், ப்ளீஸ், கொஞ்சம் புத்திசாலித்தனமான நடந்துக்க முடியுமா? எனக்கு இப்ப உன்னோட அறிவுரை வேணும்.''

''ஒரேயடியா என்னைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன் அப்படினு நீங்க உங்க மனசுல முடிவைக் கொண்டு வந்துட்டீங்கன்னா, இப்படி குழப்பமே இல்லாம, படு நிம்மதியா ஆகிடலாம். நிச்சயமா! சந்தோஷம் மேலும் குழப்பமற்ற நிம்மதி, என்ன சொல்றீங்க?''

''மண். கவனியேன், பில். என்னைக் கலியாணம் பண்ணிக்கத் தொணதொணப்பது உன்னோட சமீபத்திய தீரா வியாதி. பேசிப் பேசி போரடிச்ச பிறகு அப்புறம் மேற்கொண்டு பண்றதுக்கு ஒண்ணுமே கிடையாதுனு முட்டிக்கிட்டு நிக்கும்போது ஒவ்வொரு ஆம்பிளையும் பண்ணுவது இதைத்தான். என் வயசையும் விதவைக் கோலத்தையும்

கொஞ்சம் நினைச்சுப்பாரு. கிளம்பிப் போய் முழுசும் இளசாயிருக்கிற ஒரு கன்னிப் பெண் கூட, காதல் பண்ணு.''

''மை டார்லிங் விர்ஜீனியா... என்ன மாதிரியான குண்டைத் தூக்கித் தலையில போட்டுட்டீங்க! ஓ எல்லாம் போச்சு, அதோ அங்கே பாருங்க... அந்த பிரெஞ்சு படு முட்டாள் நம்ம மேலே விழறாப்போல வரான்.''

யெஸ், அது லெமன்தான். கறுப்பு தாடியுடனும் எப்போதும் போன்ற அதே பேய் முகத்துடனும்...

''குட் மார்னிங்! மேடம்'' என்றார் அவர். ''களைப்பா இல்லே போல தெரியுது?''

''ம்ம்ம்..''

''அது தான் எக்ஸலண்ட்! குட் மார்னிங், மிஸ்டர் எவர்ஸ்லே'' என்று விட்டு, ''பொழுதுபோக்கா ஓர் உல்லாச நடை போயிட்டு வந்தா எப்படியிருக்கும்? நம்ம மூணு பேரையும்தான் சொல்றேன்'' - ஆலோசித்தார் பிரெஞ்சுமேன்.

''என்ன சொல்றே, பில்?''

''ஓ, பரவாயில்லே'' என வேண்டா வெறுப்பாய் ஒப்புக் கொண்டு விர்ஜீனியா பக்கமாய் நகர்ந்துக் கொண்டான் பில்.

உட்கார்ந்திருந்த புல் தரையிலிருந்து அவன் எழுந்துக் கொள்ள, இரு ஆண்களுக்கும் நடுவில் விர்ஜீனியா வருமாறு, மூவரும், மெதுவாய் நடை பயில ஆரம்பித்தார்கள். பிரெஞ்சு மனிதனுக்கு உள்ளே ஒரு விளக்கவொண்ணா, மின்சார ஓட்டம் கிளர்ந்தெழுந்ததை உடனேயே உணர்ந்தார் விர்ஜீனியா. அது உருவாக என்ன காரணம் என்பது அவருக்கு தெரியாது.

தனக்கே உரித்தான குணாதிசயத்தை பயன்படுத்தி, அவரிடம் கேள்விகள் கேட்டு வரும் பதில்களை ஆர்வமாய் கவனித்து அவற்றை பாராட்டி... என, துரிதமாகவே அவருக்குள்ளிருந்த கிளர்ச்சியைக் கொஞ்சங் கொஞ்சமாய் விலக்கி சாதாரணமாக்கி விட்டார் விர்ஜீனியா. தற்சமயம் இருவரிடமும் கிங் விக்டர் பற்றி பேசிக் கொண்டிருந்தார் லெமன். கோவையாய் பேசினார். பிரெஞ்சு துப்பறியும் துறையே பலமுறை அவனால் ஏமாற்றப்பட்ட விவரங்களை வருத்தம் தோய சொன்னார்.

இப்படி நடந்துக் கொண்டிருந்த நேரம் நெடுகிலும், பேசும் சமாச்சாரத்தை ஈடுபாட்டோடு அவர் விளக்கிக் கொண்டிருந்த போதிலு அவர் பேச நினைத்து வந்திருப்பதென்னவோ முழுக்கவும் வேறுபட்ட மற்றொரு விஷயத்தைப் பற்றி என்ற கருத்தில் விர்ஜீனியா விசித்திரமாயிருந்தார். மேலும், இப்படி ஒரு கதையை சொல்லும் போர்வைக்குள்ளிருந்தபடி, இந்த பார்க்கில் லெமன் நினைத்து வந்திருக்கும் எதையோ செயல்படுத்திக் கொண்டுதானிருக்கின்றார் என்றே தீர்மானித்தார் விர்ஜீனியா. இது ஒன்றும் வெறும் உல்லாச பொடிநடை கிடையாது. வெளிப்படையாகவே, ஏதோ ஓர் இலக்கு நோக்கி லெமன் இவ்விருவரையும் வழிநடத்திப் போய்க் கொண்டிருக்கிறார்.

திடீரென்று தன்னுடைய கதையை அப்படியே நிறுத்திக் கொண்ட அவர், சுற்றும் முற்றும் பார்த்தார். கும்பல் கும்பலாயிருந்த மரக்காட்டுப் பகுதிக்குத் திரும்பும் ஒரு கூரான திருப்பத்துக்கு முன்னால், வீட்டிலிருந்து வரும் நடை பாதையும் பார்க்கும் சந்திக்கும் பகுதியில் இவர்கள் மூவரும் நின்றுக் கொண்டிருந்தார்கள். வீட்டுப் பகுதியிலிருந்து இவர்களை நோக்கி வந்துக் கொண்டிருந்த ஓர் ஊர்தியை முறைத்தார் லெமன்.

விர்ஜீனியாவின் கண்களும் அவரது பார்வையைத் தொடர்ந்து போயின. ''அது ஒரு லக்கேஜ் தூக்கிப் போகும் வண்டி'' என்றார் அவர். ''சர் ஐஸக்டீனுடைய லக்கேஜையும் அவரோட உதவியாளரையும் தூக்கிட்டு போகுது அது.''

''அப்படியா?'' என்றார் லெமன். அவருடைய மணிக்கட்டிலிருந்த கைக்கடியாரத்தைப் பார்த்துத் துணுக்குற்றார். ''மன்னிக்கனும், ரொம்ப நேரமா நான் இங்கேயே உங்களிருவரின் வசீகரமான கம்பெனியில இருந்துட்டேன். அந்த வண்டியிலே, கிராமத்துக்குள்ளே போக எனக்கு லிஃப்ட் கிடைக்கும்னு நினைக்கிறீங்களா?''

சட்டென்று பாதைக்குள் குதித்து இறங்கிவிட்ட அவர் கட்டை விரல் தூக்கி திசை காட்டி லிஃப்ட் வேண்டினார். லக்கேஜ் வண்டி நிற்க, ஓரிரு வார்த்தைகள் விளக்கங்களுக்குப் பிறகு, அவர் பின்பக்கத்தில் தொற்றிக் கொண்டார். தனது தொப்பியை சாந்தமாய் தூக்கி விர்ஜீனியாவிடம் காட்டி விட்டு வெளியேறிக் கொண்டிருந்தார் லெமன்.

மறைந்துக் கொண்டிருந்த ஊர்தியை புதிராய் பார்த்தபடி ஏனைய இருவரும் நின்றுக் கொண்டிருந்தார்கள். ஜஸ்ட், அங்கிருந்த கூரான

திருப்பத்தில் வண்டி திரும்பியபோது, அதிலிருந்த ஒரு சூட்கேஸ் பாதையில் தவறி விழுந்தது. வண்டி போய்விட்டது.

''கம் ஆன்'' என பில்லிடம் சொன்னார் விர்ஜீனியா. ''நாம விறுவிறுப்பான எதையோ இப்ப பார்க்கப் போறோம். யெஸ். அந்த சூட்கேஸ் தூக்கி வீசப்பட்டது, ஆங்.''

''அப்படி செஞ்சதை வேற யாரும் கவனிக்கலே'' என்றார் பில்.

விழுந்திருந்த லக்கேஜ் நோக்கி இருவரும் பாதையில் விரைந்தார்கள். அவர்கள் அதை நெருங்கிய அதே சமயத்தில், வளைவிலிருந்து உள்பக்கமாய் லெமன் நடந்து வந்துக் கொண்டிருந்தார்! வேகமாய் நடந்து வந்ததில் கரபுரவென்றிருந்தார் அவர்.

''எதையோ விட்டுட்டுக் கிளம்பிட்டேன்னு நினைவுக்கு வந்தது.''

''இதையா?'' - சூட்கேஸைச் சுட்டிக் காட்டி கேட்டான் பில்.

அது நல்ல வசதியான சூட்கேஸ். அதில் 111 என்ற இன்ஷியல்கள் பொறிக்கப்பட்டிருந்தன.

''ஓ!'' என்றார் லெமன். ''அதிலிருந்து தவறி விழுந்திருக்கணும். அதை நாம எடுப்போமா?''

இதற்கான மறுபதிலுக்காகக் காத்திருக்காமல் அதனை எடுத்து சுமந்தபடி மர வளையம் நோக்கி நடந்தார். அதை குனிந்து பார்த்தார். அவர் கையில் என்னவோ டாலடித்து மறைய, அதன் பூட்டு திறந்துக் கொண்டது. ''கார் வர்ற நேரமிது'' என்றார் அவர். ''கண்ணுக்கெட்டின தூரத்துல கார் தெரியுமா?''

விர்ஜீனியா திரும்பி வீடு நோக்கி பார்த்தார், ''நோ.''

''குட்.''

பெட்டிக்குள்ளிருந்து சாமான்களை அவர் வெளியில் கொட்டினார். தங்க மூடி போட்ட பாட்டில், பட்டு பைஜாமாக்கள், வகை வகையான லாக்ஸ். திடுமென்று அவரது முழு உருவமும் உறைந்துப் போனது. பொட்டலமாய் மடித்து சுற்றப்பட்ட பட்டினாலான கீழ் உள்ளாடை போல இருந்த ஒன்றினை எடுத்திருந்தார் அவர். அதனை வேகமாய் பிரித்துத் திறந்தார்.

பில்லிடமிருந்து ஒரு சிறு ஆச்சரிய எக்காளம் விளைந்து நிறைந்தது. அந்தப் பொட்டலத்தின் மையத்தில் ஒரு கனமான ரிவால்வர்.

''கார் வர்ற சத்தம் கேட்குது'' என்றார் விர்ஜீனியா.

மின்னல் வேகத்தில் மறுபடியும் சூட்கேஸினை அடுக்கினார் லெமன். ரிவால்வரை மட்டும் அவருடைய வழுவழு கைக்குட்டையால் மூடி அவருடைய பேக்கட்டுக்குள் போட்டுக் கொண்டார். அதன் பூட்டுகளை அழுக்கப் பூட்டி விட்டு வேகமாய் பின் நோக்கி திரும்பினார்.

''இதை எடுத்துக்குங்க... மேடம் உங்க கூட இருப்பாங்க. காரை நிறுத்துங்க. லக்கேஜ் வண்டியிலிருந்து விழுந்ததுனு சொல்லுங்க, என்னைப் பற்றி எதுவும் குறிப்பிட வேண்டாம்.''

உள்ளேயிருந்து ஐஸக்டீனின் பெரிய லான்செஸ்டர் கார் வந்துக் கொண்டிருந்த அதே சமயத்தில் பாதையின் கீழ் பக்கம் நடந்துப் போய் விட்டிருந்தார் லெமன்.

கார் வேகம் குறைக்கப்பட, பெட்டியைத் தூக்கி ஆட்டிக் காட்டினான் பில். ''லக்கேஜ் வண்டியிலிருந்து விழுந்துடுச்சு'' என்றான், ''அதை நாங்க பார்த்தோம்.''

அறைந்தது போன்று ஆன அந்த மஞ்சள் நிற முகத்தின் காட்சி சடுதியில் தென்பட்டு மறைய... கார் மேற்கொண்டு பிரயாணிக்க ஆரம்பித்தது.

இருவரும் மீண்டும் லெமன் நோக்கிப் போனார்கள். அங்கே, கையில் துப்பாக்கியுடன் முகத்தில் திருப்தியுடனும் நின்றுக் கொண்டிருந்தார் லெமன்.

அத்தியாயம் 22

# ரெட் சிக்னல்

அப்பேயில் படிக்குமறையில் நின்றுக் கொண்டிருந்தார், சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில்.

முழுக்கவும் தாள்களால் நிறைக்கப்பட்டிருந்த டேபிளின் முன்னால் உட்கார்ந்திருந்த லொமெக்ஸ், ஆச்சரியம் ஒரு பக்கமும் எரிச்சல் இன்னொரு பக்கமுமாய் இருந்தார்.

போலீஸ்தனமான சுருக்கமான முறையில் பேச்சினை ஆரம்பித்து வைத்தார் பேட்டில். ஆரம்பித்தவுடனேயே முழு உரையாடலும் ஜார்ஜின் மேலேயே விழுந்துவிட, வழக்கமாய் எதிராளியின் கேள்விகளுக்கு பட்டும் படாமல் ஓரிரு வார்த்தை பதில் மட்டும் தரும் தன்னுடைய பாணியில் கிடந்தார் பேட்டில்.

டேபிளில், ஜார்ஜுக்கு முன்னால், ஆண்டனி அவரது ட்ரஸ்ஸிங் டேபிளில் பார்த்த கடிதங்கள் அடங்கிய பாக்கெட் இருந்தது. அந்தப் பாக்கெட்டை எடுக்கும்போதே ''இதுல எனக்கு ஒரு எழவும் விளங்கலே'' என்றார் ஜார்ஜ். எரிச்சலாய், ''புரிஞ்சுக்க முடியாத சமிக்ஞை மொழியில இருப்பதாகவா சொல்றீங்க?''

''அப்படியே, மிஸ்டர் லொமெக்ஸ்.''

''இதை எங்கே பார்த்தேன்னு அவர் சொன்னார் - அவரோட டிரெஸ்ஸிங் டேபிள் மேலயா?''

இக்கடிதங்களை மறுபடியும் தான் பெறுமாறு நேர்ந்த சம்பவத்தை, ஆண்டனி எப்படி விளக்கியிருந்தாரோ, வார்த்தைக்கு வார்த்தை அப்படியே சொல்லி முடித்தார் பேட்டில்.

''உடனே தூக்கிக்கிட்டு அவர் உங்கிட்டே வந்துட்டாரா? அதுதான் ரொம்ப சரி - ரொம்ப சரி. ஆனா யார் அவரோட அறையில கொண்டு போய் வெச்சிருக்க முடியும்?''

பேட்டில் மறுப்பாய் தலையசைத்தார்.

''இந்த மாதிரி சமாச்சாரங்களைத் தெரிஞ்சுப்பதுதானே உங்களோட தொழில்?'' என குற்றஞ்சுமத்தினார் ஜார்ஜ். ''இந்த சம்பவம், கழுவுற மீன்ல நழுவுற மீனா எனக்குப் படுது. யெஸ். இதிருக்கட்டும்... இந்த கேட் மனுஷனைப் பற்றி நமக்கு என்ன தெரியும்? ரொம்பவும் மர்மமானவரா அவர் தெரியறார். அவரைப் பற்றி எதுவுமே... எதுவுமே நமக்கு தெரியாது. ஒண்ணு தெரியுமா... அவருடைய எந்த நடவடிக்கை பற்றியும் நான் துளி சட்டை செய்வது கிடையாது. நீங்க அவரைப் பற்றி விசாரிச்சிருப்பீங்கன்னு நினைக்கிறேன், ஆங்?''

ஒரு சிறு புன்னகை தனது முகத்திலிருந்து வெளியேற அனுமதித்தார் பேட்டில். ''தென் ஆப்பிரிக்காவுடன் தொடர்பு கொண்டோம். அவர் பற்றி அவரே சொன்ன கதை முழுக்க இம்மி பிசகாம நிஜந்தான்னு ஊர்ஜிதமாயிடுச்சு. புலாவோவுல மிஸ்டர் மேகரத்துடன் இருந்ததா இவர் சொன்ன அதே காலகட்டத்துல, அப்படி அங்கேதான் இருந்திருக்கார் இவர். இவருடைய சந்திப்புக்கு முன்னாடி ஒரு டூரிஸ்ட் கம்பெனியில வேலை.''

''இதையேதான் நான் நினைச்சிருந்தேன்'' என்றார் ஜார்ஜ். ''ஆனா இந்தக் கடிதங்களைப் பொறுத்தமட்டில், உடனே நடவடிக்கைகள் எடுத்தாகணும். உடனே, உடனேயே..''

கொத்து மூச்சினை வெளியிட்ட அந்தப் பெரும்புள்ளி தான் சொன்னது முக்கியம் என்பது போல் முழித்துக் கொண்டிருந்தார்.

எதற்காகவோ, சூப்பரின்டெண்டெண்ட் வாய் திறந்தார். ஆனால் ஜார்ஜ் முந்திக் கொண்டு விட்டார். ''இதுல காலந்தாழ்த்திடவே கூடாது. காலம் கடந்துவிடுமுன் இக்கடிதங்கள் சொல்பவை என்னன்னு தெரிஞ்சுக்கணும். ஆங், இப்படி புரியாத சமிக்ஞை மொழிகளைத் தரம் பிரித்து விளக்கும் அந்த நிபுணர்கள் பேர் என்ன? ஆங், அவர் பேர்.. அவர் பேர்..? பிரிட்டிஷ் மியூசியத்தோட தொடர்புள்ள ஆள் அவர். சமிக்ஞை மொழிகளை நம் மொழியா மாற்றித் தந்திடுவார் ஸார், அவர் பேர் தான்..? போர்க் காலங்களில் கூட இப்படி நமக்கு உதவ ராப்பகலா உழைச்சவர்.

எங்கே போனா இந்த ஆஸ்கர்? என்னவோ வின் அப்படினு வரும், வின் - வின்..?''

''ப்ரொஃபஸர் வின் வுட்?''

''அப்படிப் போடு. அதே அதே! இப்ப துல்லியமா எனக்கு நினைவுக்கு வந்துடுச்சு. அவரை உடனே வரச் சொல்லி தகவல் அனுப்பிடணும்.''

''ஒரு மணி நேரத்துக்கு முன்னாடியே நான் அதை பண்ணியாச்சு, மிஸ்டர் லொமெக்ஸ். 12 மணிக்கு அப்புறமா உடனே வந்துடுவார்.''

''எமகாதகன்யா நீர். என் மண்டையிலேயிருந்த பெரிய பாரம் எறங்கிட்டா மாதிரியிருக்கு. நான் இன்னிக்கு டவுன்ல இருந்தாக வேண்டிய நிர்ப்பந்தத்துல இருக்கேன். நான் இல்லாம இதை நீங்க சமாளிச்சுடுவீங்கன்னு நினைக்கிறேன்.''

''ஐ திங் ஸோ.''

''வெல்.. முடிஞ்ச வரைக்கும் திறமையா பண்ணிடுங்க பேட்டில். நான் உடனே கிளம்பி ஓட வேண்டியுள்ளது.''

''ஆகட்டும்.''

''ஆங்.. உங்ககூட பில் எவர்ஸ்லே வரலே?''

''இன்னும் தூங்கிக்கிட்டிருக்கான். ரா முழுக்க நாங்க முழிச்சுக்கிட்டிருந்தோம்லே!''

''ஓ, ஆமாமாம். இப்பல்லாம் பல ராத்திரிகள் நான் ரொம்ப நேரம் முழிச்சிருக்க வேண்டியிருப்பதால எனக்கு பெரிய வித்தியாசம் தெரிவதில்லே. முப்பத்தாறு மணி நேரத்துல பண்ண வேண்டியவைகளை இருபத்து நாலு மணி நேரத்துல முடிச்சுடணும் என்பதே என் தினந்தோறும் இலக்கு. மிஸ்டர் எவர்ஸ்லேயைப் பார்த்தா உடனடியா இங்கே கொஞ்சம் வந்துட்டுப் போகச் சொல்ல முடியுமா, மிஸ்டர் பேட்டில்?''

''அவரண்டை சொல்லிடறேன், ஸார்.''

''தேங்க் யூ... மிஸ்டர் பேட்டில். நீங்க அவனை உங்களுடைய நம்பிக்கை வட்டத்துக்குள்ளே வெச்சுக்கிட்டுத்தான் ஆகணும்னு என்னால விளங்கிக்க முடியுது. ஆனா, இதேபோல, அந்த மிஸஸ் ரேவல் பொம்பளையையுமா நீங்க உங்களுடைய நம்பிக்கை வட்டத்துக்குள்ளே கொண்டு வரணும்?''

''அந்தக் கடிதங்கள்ல போடப்பட்டிருக்கும் கையெழுத்து சொல்லும் பெயரின் காரணமா - நான் இப்படி பண்ண வேண்டியுள்ளது, லொமெக்ஸ்.''

கிடந்த கொத்துக் கடிதங்களை இருண்ட முகத்துடன் பார்த்தபடி ''அப்படிப் பண்ண எத்தனை துணிச்சல் இருந்திருக்கணும்'' என முணுமுணுத்தார் ஜார்ஜ். ''ஹெர்ஸோ -ஸ்வோலோக்கியாவின் மறைந்த ராஜாவை இப்ப நினைக்கிறேன். வசீகரமானவன்தான் - ஆனா பலஹீனம்... முழு பலஹீனம். விபரீதமான பெண்ணொருத்தியின் கைகளில் பகடைக்காயாகி விட்ட ஜீவன், ப்ச்! மிஸ்டர் கேட் கைவசம் இந்தக் கடுதாசிகள் எப்படி வந்திருக்கும் என்பதை விளக்க உங்களுக்கு ஏதாவது ஊகங்கள் இருக்கா?''

''ஒரு வழியில போய் வெற்றி காண முடியலைனா மற்றொரு வழியில போய் எப்படியாவது வெற்றி அடைஞ்சுடணும்னு துடிப்பது, பொதுவான மனித இயல்பு. இதுதான் என்னோட தாழ்மையான ஊகம்.''

''விளங்கலே.''

''இந்தக் கிறுக்குப் பய, கிங் விக்டர், இவனுக்கு, அந்த மீட்டிங் அறை இப்ப கண் கொத்திப் பாம்பா கண்காணிக்கப்படுவது நல்லா தெரிஞ்சிருக்கும். ஆகவே அவன் கடிதங்களை நம்மகிட்டே கொடுத்துட்டான்... நாமே அதன் சமிக்ஞைகள் சரியான மொழியில் மாற்றட்டும்னு விட்டுக் கொடுத்திருக்கான்... அதன்படி எங்கே பதுக்கி வைக்கப்பட்டிருக்குன்னு நம்மையே அவன் அறியும்படியும் செஞ்சிருக்கான். இதெல்லாம் முடிஞ்சதும் குழப்பமேற்படுத்தி அதுல லாபம் அடைய வருவான்! ஆனா நானும் லெமனும் அப்படி ஒரு மண்ணும் நடக்காம பார்த்துக்குவோம்!''

''அப்ப ஒரு திட்டம் வெச்சிருக்கீங்க, ஆங்?''

''அதை ஒரு திட்டம்னு பிரகடனப்படுத்துமளவுக்கு நான் போக விரும்பலே. ஆனா எனக்குள்ளே ஒரு ஐடியா இருக்கு. சில சமயங்கள்ல சிறப்பா தோள் தந்து உதவும் - இந்த ஐடியாக்கள்.''

இதற்குப் பிறகு சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் கிளம்பி விட்டார். இதற்கு மேலும் ஜார்ஜிடம் ரகசியங்களைப் பகிர்ந்துக் கொள்வதில் அவருக்கு நாட்டமில்லை.

திரும்பிக் கொண்டிருக்கையில் வழியில் ஆண்டனியைக் கடந்து போன பேட்டில் அப்படியே வண்டியை நிறுத்தினார். ''எனக்கு வீடு வரை லிஃப்ட் தரப் போறீங்களா?'' என்றார் ஆண்டனி. ''குட்.''

''எங்கே போயிட்டு வரீங்க, மிஸ்டர் கேட்?''

''ட்ரெயின் வந்து போகும் நேரங்களைக் கேட்க ஸ்டேஷன் வரைக்கும்.''

புருவங்களை நன்கு உயர்த்தி விட்ட பேட்டில், ''என்ன மறுபடியும் எங்களை விட்டுட்டு டூர் போக விருப்பமா?'' என்று விசாரித்தார்.

''இப்போதைக்கு இல்லே'' என்று விட்டு சிரித்தார் ஆண்டனி. ''ஆங், ஐஸக்டீனை, எதுவோ தலைகீழா ஆக்கியிருக்கு... என்னது அது? நான் வெளியே வரும்போதுதான் அவர் கார்ல வந்து எறங்கினார். நாலு பேர் சேர்த்து வெச்சு உலுக்கின மாதிரி இருந்தார் அவர்.''

''மிஸ்டர் ஐசக்டீனா?''

''யெஸ்..''

''நம்ப முடியலே. அவரையும் ஒருத்தர் உலுக்கணும்னா நிறைய மெனக்கெடணும்பேன்.''

''ஒத்துக்கிறேன்'' என ஏற்றுக் கொண்டார் ஆண்டனி. ''அவர் மிகவும் அரிதா நாம பார்க்க கிடைக்கும் சாந்தமான, அதே சமயம் இறுகிய, இரும்பு மனிதன்.''

அப்போது திடீரென்று முன்னுக்கு வளைந்து வந்து டிரைவரின் தோளைத் தொட்டார் பேட்டில். ''நிறுத்த முடியுமா? நான் வர வரைக்கும் கொஞ்சம் காத்திருக்கணும்.''

ஆண்டனி ஆச்சரியப்படும் வகையில் காரிலிருந்து குதித்திறங்கினார் அவர். ஆனால் ஓரிரு நிமிடங்களில் மிஸ்டர் லெமன் முன்னால் விரைந்து வந்து அந்த ஆங்கிலேய டிடெக்டிவ்வை ஏற்றுக் கொண்டார். ஆக, லெமனிடமிருந்து வந்த ஒரு சமிக்ஞைதான் இவரின் கவனத்தைக் கவர்ந்து நிறுத்தியுள்ளது.

இருவருக்குள்ளும் ஏதோவொரு துரித சம்பாஷணை நடந்து முடிய, திரும்பி வந்து காருக்குள் குதித்தேறிய பேட்டில், டிரைவரின் தோளை மறுபடியும் தொட்டு இம்முறை ஓட்ட சொன்னார்.

அவருடைய 'பாவங்கள்' முழுக்கவும் மாறிப் போயிருந்தன.

சுருக்கமாயும் திடுதிப்பென்னும் ''அவங்க ரிவால்வரைக் கண்டுபிடிச்சுட்டாங்க'' என்றார் அவர்.

''என்ன?'' - பெரும் ஆச்சரியத்தாடு அவரை விழுங்கி விடுவது போல பார்த்தார் ஆண்டனி. பின், கேட்டார் ''எங்கே?''

''ஐஸக்டினின் பெட்டிக்குள்ளே?''

''ஓ, இம்பாஸிபிள்.''

''ம்ம், எதுவும் முடியாதது கிடையாது'' என்றார் பேட்டில். ''எனக்கே இது முதல்ல தட்டுப்பட்டிருக்கணும், ச்சே.''

நிமிர்ந்து அசையாது உட்கார்ந்துக் கொண்ட அவர், கால் முட்டிகளைத் தாளமிட்டார்.

''யார் இதைக் கண்டுபிடிச்சது?''

பாராட்டும் தொனியில் பெருசாய் தலையசைத்தார் பேட்டில். ''லெமன். படு புத்திசாலி. பிரான்ஸுல இவருடைய புத்திசாலித்தனத்துக்கு மூர் எல்லையே கிடையாதுனு நினைக்க ஆரம்பிச்சாச்சு.''

''அப்ப இது உங்களுடைய ஐடியாக்களை சீர்குலைக்கலையா?''

''நோ'' என்றார் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் மெல்லமாய். ''அப்படி என் ஊகங்களை இது மாற்றுவதா எனக்குத் தோணலே. இது கொஞ்சம் ஆச்சரியமாயிருந்தது முதல்ல. ஒத்துக்கிறேன். ஆனா இது என்னோட ஒரு ஐடியாவோட அற்புதமா பொருந்தி நிக்குது.''

''என்ன ஐடியா அது?''

ஆனால் சூப்பரின்டெண்டெண்ட் முழுவதும் வித்தியாசமான ஒரு விஷயத்துக்கு கிளை தாவி விட்டார்.

''எனக்காக மிஸ்டர் எவர்ஸ்லேவை நீங்க கொஞ்சம்போய் பார்க்க முடியுமா, ஸார்? மிஸ்டர் ஜார்ஜ் கிட்டேயிருந்து அவருக்கு சொல்ல ஒரு சேதியிருக்கு. அவர் உடனடியா கிளம்பி *அப்பே* போகணும்.''

''ஆல் ரைட்'' என்றார் ஆண்டனி. வாசல் கேட்டினைக் கார் இப்போது கடந்து நுழைந்துக் கொண்டிருந்தது. ''இன்னும் அவர் பெட்லதான் இருக்கணும்.''

''அப்படி கிடையாதுனு நினைக்கிறேன்'' என்றார் டிடெக்டிவ். ''கொஞ்சம் அங்கே பார்த்தீங்கன்னா, அவர் மிஸஸ் ரேவல் கூட மரக் காட்டுக்குள்ளே இருப்பது விளங்கும்.''

''பாம்பு கண்ணு,ஆங்!'' என்றபடி கிளம்பினார் ஆண்டனி.

தர வேண்டிய சேதியை அவர் பில்லிடம் தர அவன் முழுக்கவும் எரிச்சல் கொண்டான்.

வீடு நோக்கித் திரும்பிய அவன் ''எல்லாம் மண்ணாக போக'' என சபித்தான். ''அந்த முண்டைக் கண்ணன் என்னை ஏன் கொஞ்சம் தனியா இருக்க விடக்கூடாது? இந்த வேலையற்ற காவலதிகாரிகள் ஏன் அவங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள காலனியிலேயே சும்மா விழுந்துக் கிடக்கக்கூடாது? எதுக்காக இங்கே வந்து குவிந்து எல்லா அழகான பொண்ணுகளையும் கொத்திக்கப் பார்க்கணும்? வெறுத்துப் போகுதுப்பா.''

இவ்வாறாக அவன் கிளம்பிப் போனதும், ''ரிவால்வர் பற்றி கேள்விப்பட்டியா?'' என்று ஆண்டனியைக் கேட்டார் விர்ஜீனியா.

''பேட்டில் சொன்னார். உலுக்குது இல்லே? உடனடியா கிளம்பிடணும்னு நேற்று ஐஸக்டீன் துடிச்சுக்கிட்டு இருந்தார். இங்கே நடந்து முடிந்துள்ள கூத்துலேர்ந்து நகன்று விடத்தான் அவர் பதறார்னு நினைச்சேன். சந்தேகத்துக்கு அப்பாற்பட்டவர்னு நான் பட்டியல் போட்டா அதில் வரக்கூடிய முதல் நபர் அவர். ப்ரின்ஸ் மைக்கேல் அகற்றப் பட்டுணும்னு அவர் நினைக்கும்படி ஏதாவது இலக்கு உங்களுக்குத் தென்படுதா?''

''அந்தக் கேள்வியே இந்த வழக்குல எங்கேயும் பொருந்தலே'' என்றார் அவர் சிந்தித்தபடி.

''இது மட்டுமா, எதுவுமே எங்கேயுமே பொருந்தலே'' என்றார் ஆண்டனி சாந்தமில்லாமல். ''இந்த வழக்குல என்னை நானே ஒரு அமெச்சூர் டிடெக்டிவ்வா எடுத்துக்கிட்டுதான் முதல்ல் எறங்கினேன்.. இதுல அந்த பிரெஞ்சு வேலைக்காரியைப் பற்றி தேவையில்லாம பிரயாணிச்சுதான் சேகரித்து வந்த சேதிகள்தான் மிச்சம்!'

''இதுக்காகத்தான் நீ பிரான்ஸ் போய் வந்தியா?''

''யெஸ், ஆனா அத்தனையும் விழலுக்கிறைத்த நீர்.''

''யுனார்டின் ப்ருட்டயில் ராணி, சந்தேகங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவங்க. அவங்களைப் பற்றி எனக்கு நல்லாவே தெரியும்... அரண்மனையிலேயே கூட நான் அவங்களைப் பார்த்திருக்கக் கூடும்னு நினைக்கிறேன். அவங்களோட முகம் - அது எனக்கு பரிச்சயமே. ட்ரெயினுக்கு எதுக்க வந்து ஒருத்தர் உட்கார்ந்தா 'எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கே'னு புருவத்தை நெளிப்போமே... அந்த அளவுக்கு! ஆனா அப்படி எதுக்க உட்கார்றவங்களை முறைச்சு முறைச்சுப் பார்ப்பது அநாகரீகம். அப்படி நான் பண்ணுவதே இல்லை. நீ?''

''அசாதாரண அழகா இருந்தால் மட்டும்!'' - ஒப்புக் கொண்டார் ஆண்டனி.

''வெல், இந்த வழக்குல..''என்ற அவர், உடனடியாய் நிறுத்தும்படி ஆயிற்று. ''என்ன ஆச்சு?''

ஆண்டனி, மரக்காட்டுக்குள்ளிருந்து தற்சமயம் வெளியே வந்து அங்கிருந்த சமவெளியில் கஞ்சி போட்டாற் போன்று விறைப்பாய் நின்றுக் கொண்டிருந்த ஓர் உருவத்தைக் கவனித்துக் கொண்டிருந்தார். அது ஹெர்ஸோ - ஸ்லோவோக்கியானா போரீஸ்.

''எக்ஸ்க்யூஸ் மீ'' என்றார் விர்ஜீனியாவிடம், ''என் நாய் கூட நான் ஒரு நிமிஷம் பேச வேண்டியிருக்கு.''

குறுக்காய் நடந்து போரீஸ் நின்றுக் கொண்டிருந்த இடத்துக்கு ஆண்டனி போனார். ''என்ன சமாச்சாரம்? உனக்கென்ன வேணும்?''

''மாஸ்டர்'' என்றான் அவன், பவ்யமாய் முதுகு வளைத்து.

''ப்ச். அதெல்லாம் இருக்கட்டும். ஆனா நீ இதுபோல என் பின்னாடியே தொடர்ந்துக்கிட்டு அலையக் கூடாது. பார்க்க கண்றாவியா இருக்கு.''

இதற்கெல்லாம் எவ்வித மறு பதிலும் சொல்லாத போரீஸ், ஒரு கடிதத்திலிருந்து கிழித்தெடுத்ததைப் போலயிருந்த ஒரு துண்டுக் காகிதத்தை ஆண்டனியிடம் தந்தான்.

''இதென்னது?''

அத்துண்டுக் காகிதத்தில் ஒரு முகவரி கிறுக்கப்பட்டிருந்தது. வேறொன்றும் கிடையாது.

''அவன் கீழே தவற விட்டான்'' என விறைப்பாய் சொன்னான். ''நான் மாஸ்டர்கிட்டே எடுத்துக்கிட்டு வந்திருக்கேன்.''

''யார் தவற விட்டது? மெஷின் மாதிரி பேசாம, விளக்கு.''

''அந்த அயல்நாட்டுக்காரன்.''

''இதை எதுக்கு என்கிட்டே தூக்கிட்டு வந்திருக்கே.''

இதற்கு போரீஸ் அவரை வருத்தமாய் பார்த்தான்.

''வெல், என்ன கருமமோ, போய் ஒழி'' என்றார் ஆண்டனி. ''நான் பிஸியா இருக்கேன்.''

போரீஸ் ஸல்யூட் வைத்தான். கறாராய் திரும்பியவன் பட்டாளத்தான் நடை நடந்து போய் விட்டான். அந்தத் தாளைத் தனது பாக்கெட்டுக்குள் திணித்துக் கொண்டு ஆண்டனி மீண்டும் விர்ஜீனியாவுடன் வந்து இணைந்துக் கொண்டார்.

''என்ன வேணுமாம் அவனுக்கு?'' என ஆர்வமாய் கேட்டார் விர்ஜீனியா. ''அவனை எதுக்காக நாய்னு குறிப்பிட்டீங்க?''

''ஏன்னா அவன் அதைப் போலத்தான் நடந்துக்கிறான்'' என்று, இரண்டாவதாக கேட்கப்பட்ட கேள்விக்கு முதலில் பதில் தந்தார் ஆண்டனி. ''போன ஜென்மத்துல தபால்காரனா இருந்திருக்கணும் அவன். அந்த அயல்நாட்டுக்காரன் கீழே போட்டான்னு சொல்லிக்கிட்டு ஒரு துண்டுக் காகிதத்தைக் கொண்டு வந்து தரான். லெமனைத் தான் குறிப்பிடறான்னு நினைக்கிறேன்.''

''நானும் அப்படித்தான் நினைக்கிறேன்.''

''எப்பப்பாரும் அவன் என்னையே தொடர்ந்துக்கிட்டு இருக்கான்'' என தொடர்ந்தார் ஆண்டனி. ''நாய் போல. வாயைத் தொறந்து ஒரு மண்ணும் பேசித் தொலைக்க மாட்டேங்கிறான். அவனோட குண்டு குண்டு கண்களால என்னை முறைச்சு மட்டும் பார்க்கிறான். அவனை என்னால புரிஞ்சுக்க முடியலே.''

''ஒருவேளை அவன் ஐஸக்டீனை மனசுல வெச்சுக்கிட்டு சொல்லியிருப்பானோ?'' என இப்போது ஆலோசித்தார் விர்ஜீனியா. ''ஐஸக்டீனும் பார்க்க இங்கிலீஷ்காரன் போல இல்லாம அயல்நாட்டான் போலத்தான் தெரியறார். ம், எல்லாம் கடவுளுக்கே வெளிச்சம்.''

''ஐஸக்டீன்'' என்று பொறுமையற்று முணுமுணுத்தார் ஆண்டனி. ''யார் இவன்? எங்கிருந்து வந்து குதிச்சிருக்கான்?'

''என்ன எரிச்சல் திடீர்னு? இந்த சிக்கல்ல வந்து மாட்டிக்கிட்டோமோனு இருக்கா?''

''நெவர், நெவர். இதைநான் விரும்பறேன். இப்படி ஏதாவது சிக்கல் அகப்படாதானு தேடித் தேடியே நான் என் வாழ்க்கையைக் கழிச்சிருக்கேன், தெரியுமா! சொல்லப் போனா, நான் என்ன எதிர்பார்த்திருந்தேனோ அதையும் விட கொஞ்சம் சுவாரஸ்யமாகவே இந்த வழக்கு என் கையில அகப்பட்டிருக்குனு நான் சொல்வேன்.''

இருவரும் அமைதியாய் ஓரிரு நிமிடங்கள் நடந்தபடியே இருக்க, ''சில ஆளுங்க இருக்காங்க... சமிக்ஞைகளுக்குக் கட்டுப்படாம..'' என அமைதியை ஆண்டனி தகர்த்தார். முக்கியத்துவம் தந்து தனது உரையாடலைத் தொடர ஆரம்பித்தார். ''முன்னாடி எரியும் சிகப்பு விளக்கைப் பார்த்ததும் ஒரு ஆர்டினரி வண்டி இழுத்துக்கிட்டு மெதுவாகி நின்னுடுது. எனக்கு ஒருவேளை பிறவி நிறக்குருடு இருக்கோ என்னவோ ரெட் சிக்னலைப் பார்த்தால்தான் வேகத்தையே கூட்டறேன்! இதை என்னால தவிர்க்க முடியலே. விளைவு - முட்டிக்கிட்டு நிற்பது. வேறென்ன நடக்கும்? இப்படிப்பட்ட குணாதிசயம் போக்குவரத்துக்கு உகந்ததல்ல, ஆங்!''

''உங்க வாழ்க்கையில நீங்க ரொம்ப துணிச்சலான கட்டங்களை சந்திச்சிருக்கீங்கனு தோணுது?'' என கேட்டார் விர்ஜீனியா.

''எத்தனை துணிச்சலான கட்டங்கள் இருக்கோ அத்தனையையும் - கல்யாணத்தைத் தவிர!''

''பயமோ?''

''எனக்கு அது சரிப்பட்டு வராது, கல்யாணம் - இருக்கிற எல்லா வீரதீர சாகசங்களையும் விட மாபெரும் சாகசம்.''

''ஆனாலும் எனக்கு இந்த சாகசம்தான் பிடிச்சிருக்கு'' என்று அவருடைய கருத்தைப் புறந்தள்ளும் பாணியில் சொன்னார்.

''நான் மணந்தால், ஒரேயொரு வகையான பெண்ணைத்தான் மணக்க முன்வருவேன். என்னைப் போன்ற வாழ்க்கையை வாழாமல் முழுக்கவும் வேறுபட்ட பெண்ணாக அமையணும்! அப்ப நாங்க என்ன பண்ணுவோம்.

ம்? நான் அவ வாழ்க்கையை வாழ ஆரம்பிப்பேனா? அல்லது அவ என்னோட வாழ்க்கையை வாழ்வாளா?''

''அவ உங்களை மனப்பூர்வமா விரும்பினால்..?''

''இது ஸென்டிமென்ட் மிஸஸ் ரேவல். இது தேவையா? நம்மைச் சுற்றியிருக்கும் எல்லாத்தையும் கை நழுவவிட்டு விடும் குருடனாய் மாறுவதற்கான மயக்க மருந்தாகவா நாம காதலை எடுத்துக்கணும்? நம்மை சார்ந்தவருக்காக நம் இஷ்டங்களையெல்லாம் துறந்து இப்படி ஒரு குருடனா நாம மாறலாம். ஆனா அது எத்தனை பரிதாபம்! இதை விடவும் காதல் மிக உன்னத உயரமானதாக இருக்கலாம், தெரியுமா! கலியாணம் ஆகி ஓரிரு வருடங்களுக்குப் பிறகு ராஜாவும் அவர் கொண்டு வந்து ஏழ்மை மிகும் ராணியும் கலியாண வாழ்க்கை பற்றி என்ன நினைச்சிருப்பாங்கன்னு நீங்க நினைக்கிறீங்க? அவ வாழ்ந்த சந்தடி மிக்க வாழ்க்கை போயிடுச்சேனு... அவ உடுத்தியிருந்த கந்தை துணி கோலங்கள் போயிடுச்சேனு.. வெறும் கால்ல மைல் மைலா நடந்த சுகம் போயிடுச்சேனு.. எவ்வித பொறுப்புமில்லாம வாழ்ந்த நாடோடி இன்பம் போயிடுச்சேனு.. அவ கலங்கியிருக்க மாட்டானா நினைக்கிறீங்க? பந்தயம் வெக்கறேன் - துடிச்சிருப்பா. அவளோட இந்த ஏக்கத்துக்காக தனது மணி மகுடத்தைத் துறந்துட்டு ராஜா கந்தை உடுத்தி நாடோடியா இறங்கியிருப்பாரா? ம்ம்... மாட்டார். ஆனா சொல்ல முடியாது. காதல் வீரியம் தலை தூக்க அவர் துணிஞ்சாலும் துணிஞ்சிருக்கலாம். அதை இந்த ஏழை ராணி வரவேற்றிருப்பாளா? நெவர். தனக்காக தன்னுடைய ராஜாங்க கணவர் ஏழையாவதை எந்தப் பெண்ணும் விரும்ப மாட்டா. ஊஃப் குழப்பம். இதுவே கலியாணம்.''

மிருதுவாய் சிரித்தார் விர்ஜீனியா. மிருதுவாகவே கேட்டார்: ''நீங்க எப்பவாவது ஓர் ஏழை மீது காதல்ல விழுந்ததுண்டா, மிஸ்டர் கேட்.''

''என் விஷயத்துல நீங்க கேட்பதற்கு நேர் மாறா நடந்தது. ஆனா, சாராம்சம் என்னவோ நான் மேலே சொன்னது போலத்தான்!''

''அப்ப இதிலேர்ந்து தப்பிப்பே கிடையாதா?'' - கேட்டார் விர்ஜீனியா.

''எதிலும் ஒரு தப்பிப்பு இருந்தே தீரும்'' என்றார் ஆன்டனி பனிமூட்டமாய். ''என்கிட்டே ஒரு தியரி இருக்கு. ஒருத்தனுக்கு என்ன வேணுமோ அதை அப்படியே பெற்றுக் கொள்ளும் தியரி அது - ஆனா

அதற்குண்டான விலையைக் கொடுத்து! அந்த விலை, பத்து கேஸ்ல மூன்பது கேஸ்கள் தர வேண்டிய அந்த விலை, என்னனு தெரியணுமா? அது காம்ப்ரமைஸ், அதாவது விட்டுக் கொடுத்தல். ஒரு கொடுமையான விஷயம் - விட்டுக் கொடுத்தல். அது நம்மை நாமே திருடக் கொடுப்பது போன்றது. யெஸ்.''

விர்ஜீனியா சிரித்து விட்டார்.

''என் வாசல் வரை ஒரு தொழில் - ட்ரேட் வந்து கதவைத் தட்டியது தெரியுமா?'' - கேட்டார் ஆண்டனி.

''நீங்க அதை மறந்துட்டீங்க, ஆங்?''

''யெஸ்.''

''ஏன்?''

''அப்படிப்பட்டது என் கொள்கை.''

''ஓ!''

இதற்கு சட்டென்று அவர் பக்கமாய் திரும்பிய ஆண்டனி ''நீங்க ஓர் அசாதாரணமான பொம்பிளைங்க'' என்றார்.

''ஏன் அப்படி?''

''கேள்விகள் கேட்பதிலிருந்து உங்களால விலகிட முடியாது.''

''அது என்ன ட்ரேட் அப்படினு நான் கேட்காததை சொல்றீங்களா?''

''ஜஸ்ட், அதே.''

மீண்டும் இருவரும் அமைதியில நடந்துக் கொண்டிருந்தார்கள். வாசனையைக் காற்றில் தூவியிருந்த இனிப்பான ரோஜாத் தோட்டத்தைக் கடந்து கொண்டு வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

இப்போதும், ''ஓர் ஆடவன் உங்களைக் காதலிக்கிறான்னா, அதை நுணுக்கமா அறிந்துக் கொள்ளக் கூடிய ஆள்தான் நீங்க?'' என்று குறிப்பு தந்தபடி அமைதியை உடைத்தது ஆண்டனிதான். ''அவனோட ஹேர் சுத்தனும், பிக்னிக் போக்னும் இப்படியெல்லாம் நீங்க அசிங்கமா நினைப்பீங்கன்னு நான் சொல்ல வரலே... ஆனா, ஓ காட், உங்களுக்கு அவன் மனசுல உங்க மேல காதல் இருக்கு என்பது எப்படியும் தெரிஞ்சுடும். அப்படி நீங்க என்னை நினைக்கணும்னு நான் விரும்பறேன்.''

ஓசையற்ற குரலில், ''அப்படி என்னை நீங்க ஆக்கிட முடியும்னு நினைக்கிறீங்களா?'' என கேட்டார் விர்ஜீனியா.

''முடியாதுனுதான் நினைக்கிறேன்.. ஆனா விடாம முயற்சித்தால்?''

திடீரென்று விர்ஜீனியா கேட்டார்: ''என்னை ஏன் பார்த்தோம்னு நீங்க வருந்தறீங்களா?''

''கடவுளே, நோ. இங்கே மறுபடியும் தெரியுது ரெட் சிக்னல். உங்களை பாண்ட் சாலையில முதன் முதலா பார்த்தபோது - இந்த சந்திப்பால சுவாரஸ்யமான நிகழ்வுகள் தொடரப் போகுதுனு உள்ளூர நினைச்சேன். உங்க முகம் இப்படியொரு எண்ணத்தைத்தான் எனக்குள்ளே பிரதிபலிச்சது. உங்க தலையிலிருந்து பாதம் வரை மேஜிக் இருக்கு... பல பெண்களுக்கு இந்த வரம் அமைஞ்சிருந்தாலும் உங்களுக்கு இருக்கிற மாதிரி வேற எந்தப் பொண்ணுகிட்டேயும் நான் இப்படியொரு மாயக் காந்தத்தைப் பார்த்ததில்லே. நீங்க மதிப்பும் மரியாதையும் புகழும் நிறைஞ்ச ஒருத்தரா பார்த்துக் கலியாணம் கட்டிக்கலாம்... நானும் என்னோட ஒழுங்கற்ற வாழ்க்கையை மேற்கொண்டு தொடர்ந்தபடி எங்காவது போயிடலாம்... ஆனா விர்ஜீனியா, உங்களுக்கு ஒரு தடவையாவது அழுத்தமா முத்தம் தராம நான் கிளம்ப மாட்டேன்.''

''அதை இப்ப உங்களால பண்ணிட முடியாது'' என மிருதுவாய் எச்சரித்தார் விர்ஜீனியா. ''சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் அவரோட படிக்குமறை ஜன்னல் வழியா நம்மைப் பார்த்துக்கிட்டிருக்கார்.''

ஆண்டனி கூர்மையாய் விர்ஜீனியாவை பார்த்தார். ''நீங்க ஒரு எமன் விர்ஜீனியா'' என்று வர்ணித்தார் பச்சாதபமற்று. ''கூடவே அழகியும் வேற, அழகிய எமன்.''

பிறகு தனது கையைக் காற்றிலாட்டி பேட்டிலுக்கு சைகை தந்தார் ஆண்டனி. ''இன்னிக்குக் காலையில ஏதாவது குற்றவாளி அகப்பட்டானா பேட்டில்?''

''இதுவரைக்கும் இல்லே, மிஸ்டர் கேட்.''

இறுக்கமான முகபாவம் மாறாது திறந்திருந்த கம்பிகளற்ற பிரெஞ்சு ஜன்னல் வழியாக எகிறிக் குதித்து டெரஸுக்குள் இறங்கினார் பேட்டில்.

''ப்ரொஃபஸர் வின்-வுட் வந்திருக்கார்'' என கிசுகிசுப்பாய் சொன்னார். ''இந்த நிமிஷந்தான் வந்தார். லெட்டரைப் படிச்சு அர்த்தப்படுத்திக் கிட்டார். அவர் எப்படி பண்றார்னு கவனிக்கணுமா?''

வித்தைக்காரன் தன் வித்தையைப் பற்றிப் போற்றித் தரும் அறிமுக போலிருந்தது பேட்டில் கேட்டது. இருவரிடமிருந்தும் வந்த ஒப்புதலை ஏற்று ஜன்னல் வரை அவர்களைக் கொண்டு போய் உள்ளே எட்டிப் பார்க்க அனுமதித்தார்.

ஒரு டேபிளுக்கு முன்னால் பற்பல கடிதங்களை விரித்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தபடி, ஒரு பெரிய தாளில் அவ்வப்போது குறிப்பெழுதிக் கொண்டிருந்த அந்த சிகப்புக்கேச மனிதர், நடுத்தர வயதினர் ஆவார். எழுதும் போதெல்லாம் எரிச்சலாய் அவ்வப்போது உறுமிக் கொண்டார் அவர். மேலும் தனது புறங்கையால் அடிக்கடி மூக்கின் நுனியை அழுந்தக் கசக்கிக் கொண்டார், அது, அவருடைய கேசம் போலவே சிகப்பாகும் வரை.

தற்சமயம் அவர் நிமிர்ந்து பார்த்தார்.

''ஓ, பேட்டிலா? இந்த பைசா பெயராத விஷயத்தைத் துப்புத் துலக்கவா என்னை நீங்க தேவையில்லாம வரவழைச்சீங்க? இடுப்புல தூக்கி வைக்கப்பட்டிருக்கும் சின்ன குழந்தை தருமய்யா இதற்கான பதில்களை! இதைப் போய் சங்கேத மொழினு சொல்றீங்க, ஆங்? உள்ளங்கை நெல்லிக்கனிய்யா.''

''இப்படி கேட்கவே சந்தோஷமாயிருக்கு, ஸார்'' என்றார் பேட்டில். ''ஆனா நாங்க உங்களைப் போல அதிபுத்திசாலி கிடையாது, பாருங்க.''

''இதுக்கு புத்திசாலித்தனமெல்லாம் தேவை கிடையாது'' என அடித்தார் வின்-வுட். ''இந்த முழு கட்டும் விளக்கப்படணும்னு எதிர்பார்க்கிறீங்களா? அப்படினா அது நீளமான வேலையா போகும். விளங்குதா? புத்திசாலித்தனம் தராம, கவனமும் சிதையா ஈடுபாடும் கொடுத்து உழைக்கணும். நீங்க சிம்னீஸ் அப்படினு போட்டதுதான் முக்கியமானதுனு சொன்னதால அதை நான் முடிச்சுட்டேன். மீதியெல்லாத்தையும் லண்டனுக்குத் தூக்கிட்டுப் போய் என் சுமாரான அஸிஸ்டெண்ட் எவனாவது ஒருத்தன் கிட்டே தர ஆட்சேபணை கிடையாது. என்னால் உட்கார்ந்து நேரத்தை விரயமாக்க முடியாது. நெஜமாகவே ஒரு முக்கியமான ரகசியத்தைப் பாதியில விட்டுட்டு வந்திருக்கேன்... அதை நான் தொடர்ந்தாகணும்.''

அவரது கண்கள் கொஞ்சமாய் வெறுப்பை உமிழ்ந்தன.

''வெரி வெல், ப்ரொஃபஸர்!'' என இறங்கி வந்தார் பேட்டில். ''இதைக் கூட புரிஞ்சுக்க முடியாத முட்டாள்களா நாங்க இருப்பதற்கு வருந்தறேன். நான் மிஸ்டர் லொமெக்ஸுக்கு விளக்கிடறேன். அந்த ஒரேயொரு கடிதத்தின் மேலதான் எங்களோட முழு அவசரமும். லார்ட் கேட்டர்ஹாம், நீங்க லஞ்சுக்கும் இருக்கணும்னு பிரியப்படறார்.''

''பாழாப் போச்சு'' என்றார் பேராசிரியர். ''லஞ்சே சாப்பிடக் கூடாது. கெட்ட பழக்கம், லஞ்ச். ஒரு வாழைப்பழம் மற்றும் ரெண்டு பிஸ்கெட்... இவைதான் நிஜமா உழைக்கும் எந்த மனுஷனுக்கும் ஒரு நாளின் நடுப் பொழுதுல வேண்டுபவை.''

ஒரு சேரின் பின்பக்கத்தில் போடப்பட்டிருந்த அவருடைய மேல் கோட்டைப் பிடுங்குவது போல வாரிக் கொண்டார் அவர். பேட்டில் அவருடன் கூட வீட்டின் வாசல் வரை போக சில நிமிடங்களில் கார் ஒன்று விரைந்து வெளியேறுவதை ஆண்டனியும் விர்ஜீனியாவும் கேட்டனர்.

கையில் ப்ரொஃபஸர் தந்திருந்த ஓர் அரைத்தாளைச் சுமந்தபடி திரும்பியிருந்தார் பேட்டில். விடைபெற்றிருந்த பேராசிரியரைக் குறிப்பிட்டு, ''அந்தாளு எப்பவுமே இப்படித்தான்'' என்றார். ''அவசரம்தான் எப்பவுமே. ஆனாலும் படு சாதுர்யம்... புத்திசாலி, ராணியம்மா இதுல என்ன எழுதியிருக்காங்கனு பார்ப்போம். வறீங்களா?''

விர்ஜீனியா அத்தாளுக்காக கையை நீட்ட, ஆண்டனி அவருடைய தோளின் வழியே பார்த்தார். அது ஒரு நீளமான சாட்சியம்... அன்பும் அழுகையும் கலந்து, வின்-வுட்டின் புலமையான அனுபவம் அக்கடிதத்தினை அலுவலக நடையில் மாற்றித் தந்திருந்தது.

''அத்தனை வேலையும் திருப்திகரமாக முடிக்கப்பட்டன. ஆனால் S தேவையில்லாமல் மூக்கை நுழைத்தான். கல், ஒளித்து வைத்திருந்த இடத்திலிருந்து அகற்றப்பட்டு விட்டது. அவர் அறையில் இல்லை. நான் தேடி விட்டேன். பின்வரும் குறிப்புதான் கிடைத்தது. இக்குறிப்பு அக்கல் பதுக்கப்பட்டிருக்கும் இடத்தைச் சுட்டுவதாக நினைக்கிறேன்: ரிச்மண்ட் ஏழு நேராய், எட்டு இடது, மூன்று வலது.''

''S?'' என்றார் ஆண்டனி. ''ஸ்டைல்பிச்தான். தந்திரம் மிகுந்த கிழ நாய். அவன்தான் கல் பதுக்கியிருந்த இடத்தை மாற்றியிருக்கான்.''

''ரிச்மண்ட்'' என்றார் விர்ஜீனியா சிந்தனையாய். ''ஒருவேளை ரிச்மண்ட்ல இந்த கல் பதுக்கப்பட்டிருக்குமா?''

''ரிச்மண்ட் நாட்டுப்பற்றுள்ள பெரும் புள்ளிகள் சேரும் பிரபலமான ஓரிடம்.''

''ம்ம்'' - பேட்டில் மறுத்துத் தலையசைத்தார். ''அது இந்த வீட்டிலிருக்கும் எதையோதான் சுட்டிக் காட்டுதுனு நான் இன்னமும் நினைக்கிறேன்...''

''எனக்குத் தெரியும்'' என திடீரென கதறினார் விர்ஜீனியா.

இரு ஆடவர்களும் அவரைத் திரும்பிப் பார்த்தார்கள்.

''மீட்டிங் அறையிலிருக்கும் அந்தப் பெரிய படம். அதுக்கு கீழேதான் ராத்திரி வந்தவனுங்க தட்டிக்கிட்டிருந்தானுங்க. அது, ரிச்மண்ட் பிரதேச ஆங்கிலப் பிரபுவின் படம்!''

''கொன்னுட்டீங்க'' என்று தனது தொடையைத் தட்டிக் கொண்டு குறிப்பிட்டார் பேட்டில்.

எப்போதுமில்லாது, தனது உற்சாகம் வெளியே தெரியுமாறு பேச ஆரம்பித்தார் பேட்டில். ''இதுதான் ஆரம்பப் புள்ளி. படம். அந்தப் படத்தைப் பற்றி நமக்கு என்ன தெரியுமோ... ஒண்ணுந் தெரியாது என்பது ஒருபுறமிருக்கட்டும்- இந்த அளவு கூட வந்தவனுங்களுக்குத் தெரியாது. ஆயுதம் வெச்சுக்கிட்டு நிற்கும் அந்த ரெண்டு பேரும் நேரா படத்துக்குக் கீழே வருவதால வைரம் அந்த சிலைகளுக்குள்ளேதான் எங்கேயோ ஒளிச்சு வைக்கப்பட்டிருக்குனு அவங்களுக்குள்ளே ஓர் ஊகம் கிளம்புது. அந்த முயற்சி தோக்குது. அடுத்தது: ஒரு ரகசிய அறை அல்லது வழி. அல்லது தள்ளுக் கதவு மாதிரி ஏதாவது சுவரிலிருந்து திறக்கும் கதவு மற்றும் அது காட்டும் ஒரு ரகசிய பாதை. அப்படி ஏதாவது இங்கே உங்களுக்குத் தெரியுமா, மிஸஸ் ரேவல்?'

விர்ஜீனியா மறுத்துத் தலையசைத்தார். ''ஒரு பதுங்குக் குழி... மறைந்தபட்சம் ஒரு ரகசிய பாதை... இவை இருப்பது தெரியும். இதெல்லாம் எனக்குக் காட்டப்பட்ட ஞாபகமும் இருக்கு. ஆனா அதெல்லாம் எனக்கு இப்ப நினைவில்லே. இதோ பண்டில்... அவளுக்குத் தெரியும்.''

இவர்களை நோக்கி வேகமாய் டெரஸில் வந்துக் கொண்டிருந்தாள் பண்டில். "லஞ்சுக்குப் பிறகு நான் டவுன் வரைக்கும் போறேன். யாராவது வரீங்களா? உங்களுக்கு வர விருப்பமில்லையா மிஸ்டர் கேட்? டின்னரின் போது நாம திரும்பிடலாம்."

"நோ, நன்றி" என்றார் ஆண்டனி. "நான் இங்கே சந்தோஷமாயிருக்கேன். தவிர பிஸியாவும் இருக்கேன்."

"அவருக்கு என்னைக் கண்டாலே பயம்" என்றாள் பண்டில். "என் டிரைவிங், இல்லேனா யார் மேலயாவது மோதிவிடும் என் குணம்... இதைக் கண்டுதான்! எது ஆண்டனி?"

"கடைசியில சொன்னது" என்றார் அவர். "ஒவ்வொரு தடவையும்.."

"பண்டில் டியர்" என்றழைத்து விஷயத்துக்குள் நுழைந்த விர்ஜீனியா, "மீட்டிங் அறையிலிருந்து ரகசியமா வெளியேற ஏதாவது வழி அல்லது பாதை அல்லது ரகசிய கதவு இதுபோல ஏதாவது அங்கேயிருக்கா?"

"பின்னே! ஆனா அது அப்படியே அந்த அறையின் ஒரு பகுதியா இருப்பது மாதிரி மறைமுகமா செய்யப்பட்டிருக்கும். சிம்னீஸில் தொடங்கி அப்பே வரைக்கும் போகுமாறு வடிவமைக்கப்பட்டது. பழங்காலத்துல அப்படி இருந்த பாதை அது. ஆனா இப்ப அதெல்லாம் மூடப்பட்டாச்சு. இந்த மூலையிலிருந்து சும்மா ஒரு நூறு கெஜ தூரம் வரைக்கும் நீங்க உள்ளே பிரயாணிக்கலாம். அவ்ளோதான். பதுங்குக் குழியும் அப்படித்தான். மாடியில கேலரியில ஒண்ணுயிருக்கு. அது எப்பவுமே எனக்கு அதிசயமானதுதான்."

"ஒரு கலைஞனுடைய கோணத்துல நின்னு இதெல்லாம் நாங்க கேட்கலே" என்றார் விர்ஜீனியா. "இது ஒரு பிஸினஸ் விஷயமா. ஆங்.. மீட்டிங் அறையில ஒண்ணு இருக்குனு சொன்னியே, அதுக்குள்ளே எப்படி போவது?"

"தள்ளுக்கதவு மாதிரி ஒண்ணு உண்டு. அதைத் தள்ளித் தொறந்து. லஞ்ச் முடிஞ்சதும் காட்டறேனே."

"நன்றி" என்றார் பேட்டில். "2.30னு வெச்சுகலாமா?"

பண்டிலின் புருவங்கள் உயர்ந்தன. புன்னகை அவள் முகத்தில்.

தற்போது டெரஸில் தோன்றிய ட்ரெட்வெல் அறிவித்தான்:

"லஞ்ச் பரிமாறத் தயார், மை லேடி."

அத்தியாயம் 23

# ரோஜா தோட்டத்தில் நடந்த சந்திப்பு

2.30க்கு ஒரு சின்னக் கூட்டம் மீட்டிங் அறையில் கூடியது. பண்டில், விர்ஜீனியா, சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில், லெமன் மற்றும் ஆண்டனி கேட்.

''லொமெக்ஸ் வர்ற வரைக்கும் நாம காத்திருப்பதுல பிரயோஜனம் ஒண்ணும் விளைஞ்சுடப் போவதில்லே'' என்றார் பேட்டில். ''இது, விறுவிறுனு பண்ணி முடிக்க வேண்டிய சமாச்சாரங்களில் ஒன்று.''

''இப்படிப்பட்ட ஏதோ ஒரு வழியாத்தான் கொலைகாரன் வந்து ப்ரின்ஸ் மைக்கேலைக் கொன்னு போட்டிருக்கான்னு நீங்க நினைச்சா, அது தப்பு'' என்றாள் பண்டில். ''இப்படி பண்ண முடியாது. இதன் அடுத்த எதிர்புறத்து மூலை முழுக்கவும் அடைக்கப்பட்டிருக்கு.''

''நீங்க சொல்ற மாதிரி யாரும் நினைக்கலே மிஸ் பண்டில்'' என்று வேகமாய் சொன்னார் லெமன். ''நாங்க செய்யும் இத்தேடல் - வேற.''

''ஏதாவது கிடைக்குமானு தேடறீங்க, இல்லையா?'' என்று வேகமாய் மறு கேள்வி கேட்டாள் பண்டில். ''பழையவை? ச்சே.. பேர் சட்டுனு நினைவுக்கு வர மாட்டேங்குது.''

''விவரி பண்டில்''' என்றார் விர்ஜீனியா ஊக்கப்படுத்தும் விதமாய். ''நீ நினைச்சா உன்னால முடியும்.''

''என்ன பேர்னு தான் சொல்ல வரலே'' என்றாள் பண்டில். ''வரலாற்று சிறப்புமிக்க கருஞ்சிவப்பு வைரம்! எனக்கு விவரம் தெரிய ஆரம்பிப்பதற்கு முன்னாடியே கிள்ளியெடுக்கப்பட்டு விட்ட ஒன்று.''

''இதை யார் உன்கிட்டே சொன்னது, மிஸ் எய்லீன்?'' - கேட்டார் பேட்டில்.

''எனக்கு எப்பவோ இது தெரியும். எனக்கு 12 வயசு இருக்கும்போது ஒரு வேலைக்காரன் சொன்னான்.''

''ஒரு வேலைக்காரன்'' என்று சொல்லிக் கொண்டார் பேட்டில். ''கடவுளே! இதை லொமெக்ஸ் கேட்டிருக்கணும்!''

''ஆஹ்ம்.. இது ஜார்ஜ் பொத்திப் பாதுகாக்கும் ரகசியங்கள்ல ஒன்றா?'' - கேட்டாள் பண்டில்.''என்ன கூத்து! இதெல்லாம் உண்மைனு நான் என்னிக்குமே நினைச்சது கிடையாது. ஜார்ஜ் ஓ மடவாத்து - அவருக்கு, வேலைக்காரனுங்களுக்கு எல்லாம் தெரியுங்கிறது தெரிஞ்சிருக்கணும்.''

சுவரிலிருந்து அந்தப் படம் வரை போனாள் பண்டில். அதன் பக்கத்தில் அதனையொட்டி மறைவாயிருந்த ஒரு ஸ்பிரிங்கைத் தொட்டாள். உடனேயே, கறீச்சிடும் சப்தத்தோடு, அப்படத்தின் ஒரு பகுதி உள்பக்கமாய் ஊஞ்சலாய் செல்ல ஓர் இருட்டு நுழைவு தென்பட்டது.

''லேடீஸ் அண்ட் ஜென்டில்மேன்... வாசல் திறந்தது'' என்றாள் பண்டில். ''வாங்க, வாங்க வாங்க டியர், இந்த ஸீஸனின் மிகச் சிறந்த சர்க்கஸ், இதுதான்!''

லெமனிடமும் பேட்டிலிடமும் டார்ச் விளக்குகள் இருந்தன. அவர்களிருவரும் அந்தக் கரும் இருட்டுப் பிரதேசத்தில் முதலில் நுழைய, அவர்கள் அடிகளையொற்றி ஏனையவர்களும் கிளம்பினார்கள்.

''இங்கே மடிச வாடையடிக்காம நல்லா புதுசாயிருக்கு'' என்று குறிப்பிட்டார் பேட்டில். ''எப்படியோ இங்கே காற்றோட்டம் இருக்கு.''

அவர் முன்னேறி நடந்துக் கொண்டிருந்தார். தரை சமமற்று கற்களால் ஆகியிருக்க, சுவர் செங்கற்களால் எழுதப்பட்டிருந்தது. பண்டில் சொல்லியிருந்தது போலவே அப்பாதை நூறு கெஜம் அளவுக்குத்தான் நீண்டு போனது. பிறகு எதிர்பாராமல் முட்டிக் கொண்டு முடிந்து போனது. அங்கு மலையாய் கற்களும் சரளைகளும் குவிந்திருந்தன. இதைத்தாண்டி வழியே கிடையாது என்பதில் திருப்தி கொண்டார் பேட்டில். பிறகு தனது தோளின் வழியே அவர் பேசினார்.

''போதும்னா நாம திரும்பலாம். நான் வெளியில கொஞ்சம் பரீட்சிக்கணும்.''

சில நிமிடங்களில் படத்துக்கருகே உருவாகியிருந்த வாயிலுக்கே அவர்கள் திரும்பியிருந்தார்கள். அப்போது பேட்டில் சொன்னார்: "நாம இங்கிருந்து தொடங்குவோம். நேராய் ஏழு, எட்டு இடது, மூன்று வலது: ம்.. ஆரம்பிப்போம்."

ஏழடிகள் ஜாக்கிரதையாய் எடுத்து வைத்துப் போனார். நின்றார். அங்கு தரையை கவனமாய் பரீட்சித்தார். "இங்கே, எப்போதோ ஒரு முறை, சாக்பீஸால குறிக்கப்பட்டிருக்கு. சரி இப்ப எட்டு இடது. ஆஹ்... இங்கே மேற்கொண்டு இடப்புறத்துல நடக்கவே இடமில்லையே. அப்ப அது 'அடிகளா' இருக்காது."

"செங்கற்களா இருக்குமோ?" என ஆலோசித்தார் ஆண்டனி.

"ரொம்ப சரி, மிஸ்டர் கேட். இடப்புறத்தில் ஏழு செங்கற்கள் - மேலிருந்து அல்லது கீழிருந்து, கீழேயிருந்த முயற்சி பண்ணுங்க. அதுதான் ஈஸி."

அவர் எட்டு செங்கற்களை மேல்நோக்கிக் கூட்டினார்.

"இப்ப வலப்பக்கம் மூணு, ஒண்ணு - ரெண்டு - மூணு. ஏய், ஹல்லோ, ஹல்லோ, என்னது இது?"

"என்ன திரில்லிங்கா போகுது! நான் கத்திடப் போறேன் பாருங்க. என்னது அது?" துறுதுறுவானாள் பண்டில்.

அந்த செங்கல்லோடு தன் கையிலிருந்த கத்தியை வைத்துக் கொண்டு என்னவோ பண்ணிக் கொண்டிருந்தார் பேட்டில். அவருடைய பழக்கப்பட்ட கழுகுக் கண்கள் அந்த ஒரு குறிப்பிட்ட செங்கல் மீதி செங்கற்களிலிருந்து தனித்து நிற்பது தெரிந்து விட்டது. ஓரிரு நிமிடங்கள் வேலைக்குப் பிறகு அவரால் அச்செங்கல்லை சிரமமின்றி வெளியே எடுத்துவிட முடிந்தது. அதற்கு பின்னால் ஒரு கருந்துளை. அதற்குள் பேட்டில் தனது கையைத் திணித்தார்.

மூச்சடைத்த எதிர்பார்ப்பில் அனைவரும் காத்திருந்தார்கள்.

பேட்டில் தனது கையை வெளியே எடுத்தார். அவர் ஆச்சரியமும் கோபமும் கலந்த எக்காளத்தை எழுப்பினார்.

மீதமிருந்த அனைவரும் அவரை சூழ்ந்துக் கொண்டு அவர் கையில் வைத்திருப்பதை என்ன என்று விளக்கயியலாமல் அவற்றையே முறைத்துப் பார்த்தார்கள். அவர்களது கண்களே அவர்களை ஏமாற்று கின்றனவோ என்று கூட கண நேரம் நினைத்தார்கள்.

முத்து பட்டன்கள் நிறைந்த ஒரு சின்ன அட்டை; சதுர வடிவிலான இறுக்கமான ஒரு தையல் வேலை. மற்றும் பெரிய எழுத்து F வரிசையாய் கிறுக்கப்பட்ட ஒரு துண்டுச் சீட்டு!

''வெறுத்துட்டேம்பா'' என்றார் பேட்டில் கடைசியாய். ''இதுக்கெல்லாம் என்னப்பா அர்த்தம்?''

''இதுக்கெல்லாம் என்னதான் அர்த்தம்?'' என்று பயந்து போய் அலறினார் விர்ஜீனியா.

''அர்த்தமா?'' என்று கேட்டார் ஆண்டனி. ''ஒரே ஓர் அர்த்தம் இதுக்கெல்லாம் இருக்க முடியும். காலஞ் சென்ற ஸ்டைல்பிச்சுக்கு நகைச்சுவை உணர்வு நிறைய இருக்கணும். இது அப்படிப்பட்ட ஹாஸ்யங்களுக்கு ஓர் உதாரணம்.''

''நீங்க என்ன சொல்ல வரீங்க என்பதை இன்னும் கொஞ்சம் விளக்கமா சொல்ல முடியுமா, ஸார்?'' என்றார் பேட்டில்.

''நிச்சயமா. இது கவுண்ட் பண்ணியிருக்கும் ஒரு சின்ன விளையாட்டு. அவர் இந்தக் குறிப்புகளெல்லாம் படிக்கப்பட்டிருக்கும்னு சந்தேகப் பட்டிருக்கணும். கொள்ளையர்கள் நகை தேடி இங்கே வந்து தோண்டும்போது இப்படிப்பட்ட ஒரு ஜோக்கைத்தான் பார்க்கணும். இது அவரோட துன்பத்தில் இன்பம் தேடும் ஒரு ஹாஸ்யம்.''

''அப்ப இதுக்கு அர்த்தமிருக்குனா சொல்றீங்க?''

''சந்தேகமில்லாம.''

''கொஞ்சம் தைக்கப்பட்ட சங்கதி! சில பெரிய E க்கள்! மற்றும்நிறைய பட்டன்கள்!'' - திருப்தியற்று உரைத்தார் பேட்டில்.

''என்ன நடக்குதப்பா இங்கே?'' என கோபமானார் லெமன்.

''ஒண்ணுமில்லே. ரெண்டாவது முறையா கிடைத்திருக்கும் சங்கேதக் குறிப்புகள்'' என்றார் ஆண்டனி. ''இந்த முறையும் ப்ரொஃபஸர் வின்-விட் நமக்குப் பிரயோஜனப்படுவாரானு பார்க்கணும்.''

''இந்த வழி கடைசி முறையா எப்ப பயன்படுத்தப்பட்டது?'' என்று கேட்டார் பிரெஞ்சு விருந்தாளி, பண்டிலிடம்.

பண்டில் சற்று சிந்தித்தாள். ''ரெண்டு வருஷமா இந்தப் பாதைக்குள்ளே யாரும் நுழைஞ்சிருக்க முடியாதுனு நினைக்கிறேன். பதுங்கு குழிதான்.

வருகிற அமெரிக்க மற்றும் சுற்றுலா பயணிகளுக்குக் காட்டப்படும் ஒரு சுற்றுலா பொருள்.''

''ஆச்சரியம்'' என முணுமுணுத்தார் ப்ரெஞ்சு மனிதர்.

''இதுலஎன்ன ஆச்சரியம் கிடக்கு?''

லெமன் குனிந்து தரையில் கிடந்த ஒரு சின்ன பொருளை எடுத்தார். ''இதனால'' என்று கேள்விக்கு பதில் தந்தார். ''இந்த தீக்குச்சி இங்கே இரண்டு வருஷமா கிடக்கலே. ரெண்டு நாள் கூட ஆகியிருக்காது, இது இங்கே விழுந்து'' பிறகு அவர் கேட்டார். ''உங்கள்ல யாராவது இதை இங்கே போட்டீங்களா?''

அனைவரிடத்திலிருந்தும் மறுப்பான பதிலே அவரை அடைந்தது.

''வெல், அப்ப..'' என்ற பேட்டில், ''இங்கே என்னத்தையெல்லாம் பார்க்கணுமோ அவையனைத்தையும் நாம பார்த்தாச்சு. இங்கிருந்து வெளியேறி விடுவது நல்லது'' என்றார்.

இந்த ஏற்பாடு அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அந்தத் தள்ளுக் கதவு உள்ளிருந்து எப்படி தாளிடப்படுகின்றது என்பதைக் காட்டிய பண்டில், தாளினைத் திறந்து அதனைத் தள்ளி ஓசையேற்படாது திறந்தாள். அதன் வழியாக மீட்டிங் அறைக்குள் அவள் குதித்திறங்க, அமைதியாய் கிடந்த அவ்வறையில் ஒரு பேரிடி விழுந்தது போன்ற ஓசை எழுந்தது.

சாந்தமாய் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த லார்ட் கேட்டர்ஹாம். ''எந்த முட்டாள்டா?'' என்றபடி திடுக்கிட்டு துள்ளியெழுந்தார்.

''பாவம் அப்பா'' என்றாள் பண்டில். ''பயமுறுத்திட்டேனாப்பா?''

''இந்தக் காலத்துல, சாப்பிட்டு முடிச்சதும் ஏன் ஒருத்தரும் அமைதியா கொஞ்ச நேரம் ஆடாம அசையாம உட்கார மாட்டேங்கிறாங்கனு எனக்குத் தெரியலே'' என்றார் அவர். ''இந்தப் பழக்கம் ஒரு கடந்தக் காலத்து கலையாகிடுச்சு. யெஸ், சிம்னீஸ் எத்தனை பெரிய அரண்மனை என்பது எல்லாரறிஞ்ச சங்கதி... ஆனா இதுல சாந்தமா உட்கார எனக்கு ஒரு ஆறடி கிடைக்க மாட்டேங்குது. கடவுளே, இதென்ன இத்தனை கூட்டம்?''

''சங்கடப்படாதீங்கப்பா..'' என்று அவரருகே போய் அவரது நெற்றியை வருடி விட்ட பண்டில், ''ரகசியப் பாதைகளைச் சும்மா பார்த்துக் கிட்டிருக்கோம். தட்ஸ் ஆல்'' என்றாள்.

''இப்பல்லாம் ரகசிய பாதைகள் பற்றி தெரிஞ்சுக்க நிறைய பேருக்கு ஆவல் பிறக்குதுனு நினைக்கிறேன்'' என்றார் அவர். ''இன்னிக்கு காலைல அந்த பய ஃபிஷ்ஜைக் கூட்டிக்கிட்டு போய் எல்லா ரகசிய பாதைகளையும் நான் காட்ட வேண்டியிருந்தது'' என்றார், அப்போது உணர்ந்த சங்கடம் இன்னும் குறையாமல்.

''இதெப்ப நடந்தது?'' என்றாள் பண்டில் விரைவாய்.

''ஜஸ்ட் லஞ்சுக்கு முன்னாடி. இப்படியெல்லாம் ரகசியங்கள் இங்கே இருக்குனு அவர் கேள்விப்பட்டாராம். கூட்டிட்டுப் போனேன். இதைக் காட்டினேன். அப்புறம் பதுங்குக் குழி, அதுக்கப்புறம் மாடி. ஆனா ஆரம்பத்துல இருந்த விறுவிறுப்பு அவர்கிட்டே வடிஞ்சு போயிருந்தது. போரடிச்ச மாதிரி தெரிஞ்சார். ஆனா நான் விடாம எல்லாத்தையும் காட்டிட்டேன்'' - நினைவுபடுத்திக் கொண்ட வெறுப்பில் 'ப்ச்' என சூள் கொட்டினார் அவர்.

ஆண்டனி லெமனின் உள்ளங்கைக்குள் தன்னுடையதை நுழைத்தார். ''வெளியே வாங்க'' என்றார் மிருதுவாய். ''உங்ககிட்டே நான் பேசணும்.''

இரு ஆடவர்களும் பிரெஞ்சு ஜன்னல் வழியாக வெளியேறிப் போனார்கள். இருவரும் வீட்டின் பார்வையிலிருந்து தேவையான அளவு விலகிப் போன பிறகு போரீஸ் காலையில் கொடுத்திருந்த துண்டுக் காகிதத்தைத் தன்னுடைய பாக்கெட்டிலிருந்து எடுத்தார் ஆண்டனி.

''இதைப் பாருங்க'' என்றார் அவர். ''இதை நீங்க கீழே போட்டீங்களா?''

அதை பெற்றுக் கொண்டு சிறு ஈடுபாட்டோடு அதனைப் பார்த்தார் லெமன். ''நோ'' என்றார் பிறகு. ''இதை நான் முன்னாடி பார்த்ததே கிடையாது. ஏன்?''

''நிச்சயமா?''

''நிச்சயமா, ஸார்.''

''குழப்புது.''

போரீஸ் என்ன சொல்லியிருந்தானோ அதை அப்படியே திருப்பி லெமனிடம் சொன்னார் அவர். முழு கவனம் பதித்து மற்றவர் கேட்டுக் கொண்டார்.

''நோ, நான் இதை தவற விடலே. மரக் காட்டுக்கு நடுவுல பார்த்ததாகவா அவன் சொல்றான்?''

"வெல், நானா அப்படி எடுத்துக்கிட்டேன். குறிப்பிட்டு அவன் அப்படி சொல்லலே."

"ஐஸக்டீன் சூட்கேஸ்லிருந்து இது பறந்துப் போயிருக்கும் வாய்ப்பு இருக்கு. போரீஸை மறுபடியும் கேட்டுப் பாருங்க". அவர் மறுபடியும் அக்கடுதாசியை ஆண்டனியிடம் ஒப்படைத்து விட்டார். சில கணங்கள் கழித்து அவர் சொன்னார்: "இந்த போரீஸ் ஆளைப் பற்றி உங்களுக்கு சரியா என்னவெல்லாம் தெரியும்?"

ஆண்டனி தனது தோள்களைக் குலுக்கி காட்டினார். "இவன், மறைந்த பிரின்ஸ் மைக்கேலுடைய நம்பிக்கைக்கு உகந்த வேலைக்காரன் என்று எனக்குத் தெரியும்."

"இருக்கலாம். ஆனா அப்படித்தானானு கண்டு தெரிஞ்சுக்க வேண்டியது உங்களோட பிஸினஸ். அவனைப் பற்றி தெரிஞ்ச யாரிடமாவது கேளுங்க - உதாரணத்துக்கு பேரான் லாலோப்ரெட்ஜ்! இந்த ஆள் சில வாரங்களுக்கு முன்னாடிதான் நியமிக்கப்பட்டிருக்கான் போலிருக்கு. ஒண்ணு தெரிஞ்சுக்குங்க... ஒரு நொடிக்குள்ளே தன்னை நம்பிக்கைக்குகந்த வேலைக்காரனா மாற்றிக்கிட்டு உலா வர இந்த விக்டரால முடியும்."

"அப்ப - அப்ப - நீங்க நினைப்பது.."

லெமன் அவர் பேசுவதை இடைமறித்தார். "நான் வெளிப்படையாக இருப்பவன், என் மண்டையைக் குடைஞ்சுக்கிட்டிருப்பவன், கிங் விக்டர். வேற எதையும் நினைக்க முடியாம வெறியா திண்டாடிக்கிட்டிருக்கேன். - அவனைப் பிடிக்க. அவனையே தான் நான் எங்கும் பார்க்கிறேன். இப்ப நான் என்னையே என்ன கேட்டுக்கிட்டிருக்கேன் தெரியுமா: இதோ என்னிடம் பேசிக்கிட்டிருக்கும் இந்த ஆசாமி, மிஸ்டர் கேட், இவன் கிங் விக்டரா இருக்க சாத்தியமா?"

"ஓ கடவுளே" என்றார் ஆண்டனி. "மனசாழத்துக்கு எடுத்துக்கிட்டு குழம்பிப் போயிருக்கீங்க, ஸார்."

"எனக்கெதுக்கு வைரமும் வைடூரியமும்? அதைக் கைப்பற்றவா நான் அலைஞ்சுக்கிட்டிருக்கேன்? இல்லே, பிரின்ஸ் மைக்கேலைக் கொன்னவனைப் பிடிக்கவா? ம்ம்! இதெல்லாம் என் ஸ்காட்லாண்ட் யார்ட் நண்பர்களுடைய வேலை. நான், இங்கே, இங்கிலாந்துல, ஒரேயொரு இலக்குக்காகத்தான், ஒரேயொரு குறிக்கோளுக்காகத்தான் வந்திருக்கேன். கிங் விக்டரைப் பிடி, கையும் களவுமா பிடி. வேறெதுவும் என்னைக் கட்டுப்படுத்தாது."

சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்தபடி "இது உங்களால முடியும்னு நினைக்கிறீங்களா?" என்றார் ஆண்டனி.

திடீர் கழிவிரக்கத்தோடு, "அதெப்படி என்னால சொல்ல முடியும்?" என்றார் லெமன்.

"ஹ்ம்"

இருவரும் டெரஸுக்கு திரும்பியிருந்தார்கள். மரம் போன்ற பாவனையில் பிரெஞ்சு ஜன்னலுக்கருகே நின்றுக் கொண்டிருந்தார் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில், "பாவப்பட்ட பேட்டிலைப் பாருங்களேன்" என்றார் ஆண்டனி. சற்று தாமதித்து விட்டு பிறகு சொன்னார்: "சில சமயங்கள்ல நீங்க விளங்கிக் கொள்ள முடியாத - கழுவுற மீன்ல நழுவுற மீன், மிஸ்டர் லெமன்."

"எப்படி இப்படி சொல்றீங்க, மிஸ்டர் கேட்?"

"நான் உங்க நிலைமையில இருந்திருந்தால், காட்டப்பட்ட முகவரியைக் குறித்துக் கொள்ளும் ஆசை எனக்குள்ளே உருவாகியிருக்கும். அட்லீஸ்ட் சுருக்கமாகவேணும்."

கண்ணிமைக்காமல் ஆண்டனியை சில நிமிடங்கள் பார்த்த வண்ணமிருந்தார் லெமன். பின், சிரித்தார். தனது மேல் கோட்டின் வலப்புறத்தை விலக்கி உள்ளேயிருந்த சட்டையைக் காட்டினார். அங்கு, பென்சிலில் ஒரு முகவரி: "*ஹர்ஸ்ட் - மியர், லாங்லி சாலை, டொவர்.*"

"மன்னிச்சுடுங்க" என்றார் ஆண்டனி. "தோத்துட்டேன்" - விலகிப் போய் பேட்டிலுடன் இணைந்துக் கொண்டார். "ஆழ்ந்த யோசனையும் விசாரமும் சேர்ந்து கலவையா தெரியறீங்க, பேட்டில்" என்றார்.

"மாற்றி மாற்றி யோசிக்க வேண்டியிருக்கு, கேட்."

"யெஸ், அப்படித்தான் பண்ணிக்கிட்டிருக்கீங்கனு தெரியுது."

"சமாச்சாரங்க, சேர்ந்து இணைஞ்சு உதவ மாட்டேங்குது. உதவவே மாட்டேங்குது."

"அதுக்காக ரொம்ப முயற்சி பண்றீங்க" என்று வருத்தப்பட்டு சொன்னார் ஆண்டனி. "ரொம்ப குழப்பிக்காதீங்க பேட்டில். அப்படி முடியவே முடியாம இக்கட்டு உருவானா, நான் இருக்கவே இருக்கேன். என்னைக் கைது பண்ணிக்குங்க. உங்களுக்கு சாதகமா என்னோட குற்றமுள்ள காலடித் தடங்கள், சாட்சியம் சொல்லும்."

இதற்கு சூப்பரின்டெண்டெண்ட் சிரிக்கவில்லை.

''இங்கே, நீங்க அறிஞ்சு உங்களோட விரோதிங்க யாராவது இருக்காங்களா, மிஸ்டர் கேட்?''

''வேலைக்காரங்கள்ல ஒருத்தனுக்கு என்னைக் கண்டாலே பிடிக்கலேனு எனக்குள்ளே ஓர் ஊகமிருக்கு!'' என லகுவாய் பதில் தந்தார் அவர்.

இதனைப் புறந்தள்ளிய பேட்டில், ''எனக்கு மொட்டைக் கடுதாசிங்க வருது'' என்றார்.

''என்னைப் பற்றியா, ஆங்?''

இதற்குப் பதில் தராமல் தன்னுடைய பாக்கெட்டிலிருந்த ஒரு மக்கிய நோட்டுப் புத்தகத்தாளை வெளியிலெடுத்த பேட்டில் அதனை ஆண்டனியிடம் கொடுத்தார். அதில் படிப்பறிவற்ற தினுசில் கிறுக்கலாய் போயிருந்த வார்த்தைகள்:

**மிஸ்டர் கேட் மேல கண்ணு வெச்சுக்கிட்டேயிருங்க.**
**நேர்ல தெரியற மாதிரி கெடையாது அவரு நெசத்துல.**

சிறு சிரிப்புடன் அதனை திருப்பி அவரிடமே தந்தார் ஆண்டனி.

''இவ்ளோதானே? இதுக்கேன் குழம்பறீங்க? ஜாலியா இருங்க, பேட்டில். ஒண்ணு தெரியுமா... மாறு வேடம் போடறதுல நான் புலி. ஆஹ்ஹாஹ்ஹா..''

சின்னதாய் விசிலடித்தபடி நடந்து வீட்டுக்குள் போனார் அவர். ஆனால் அவருடைய பெட்ரூமுக்குள் நுழைந்து கதவினை அறைந்து சாற்றிய மறு நொடி அவரது முகம் முழுவதும் மாறிப் போனது.அது நிலைநிறுத்தப்பட்டு இறுகிப் போன முகமாய் ஆனது. படுக்கையின் நுனியில் உட்கார்ந்துக் கொண்டு நிம்மதி குலைந்தவராய் தரையையே பார்க்கலானார்.

''விஷயங்கள் மோசமாகிக்கிட்டு போகுது'' என தனக்குள் ஆண்டனி சொல்லிக் கொண்டார். ''ஏதாவது இதுக்கு பண்ணியாகணும். எல்லாம் தப்பு தப்பாகுது.''

அப்படியே ஓரிரு நிமிடங்கள் உட்கார்ந்திருந்தார். பிறகு ஜன்னல் நோக்கி விரைந்து போய் நின்றார். சற்று நேரம் இலக்கின்றி அப்படியே

நின்றுக் கொண்டிருந்தவரின் கண்கள் திடுமென்று ஒரு குறிப்பிட்ட ஸ்தலம் நோக்கிக் குவிய அவருடைய முகம் பிரகாசம் கண்டது.

''அதானே'' என்று சொல்லிக் கொண்டார். ''ரோஜாப் பூந்தோட்டம்! அதே தான்! ரோஜாப் பூந்தோட்டம்.''

மளமளவென மறுபடியும் கீழிறங்கிய அவர் ஒரு பக்கவாட்டுக் கதவின் வழியாக தோட்டத்துக்குள் புகுந்தார். ஒரு சுற்றுப்பாதை வழியாக ரோஜாப் பூந்தோட்டப் பகுதியை அவர் அடைந்தார். அதில், இரு புறங்களிலும் சின்ன கேட்டுகள் இருந்தன. தள்ளியிருந்த கேட் வழியாக அவர் உள்ளே நுழைந்து, பூந்தோட்டத்தின் மத்தியில் சற்றே உயரமாய் குன்று போல அமைந்திருந்த ஓரிடத்தில் உட்காருவதற்கு போடப்பட்டிருந்த பகுதியை நோக்கிப் போனார்.

அந்த உயரத்தை எட்டியதும் மூச்சே நின்றது போல ஆனார் ஆண்டனி. ஏற்கெனவே அங்கு வந்து உட்கார்ந்திருந்த இன்னொருவர் ஆண்டனியைக் கண்ட மாத்திரத்தில் ஆண்டனிக்கு சமமாய் மூச்சடைத்து விக்கித்துப் போனார்.

''உங்களுக்கும் ரோஜாக்கள் மீது இஷ்டம் உண்டுனு எனக்குத் தெரியாது, மிஸ்டர் ஃபிஷ்'' மிருதுவாகவே பேசினார் ஆண்டனி.

''ஸார்..'' என விளித்த ஃபிஷ் ''எனக்கு ரோஜாக்கள் மீது கொள்ளைப் பிரியம் உண்டு'' என்றார்.

லஜ்ஜையாய் ஒருவரை மற்றொருவர் பார்த்துக் கொண்டார்கள். குத்துச் சண்டையில் எதிராளியின் பலத்தைக் கண்களால் கணிப்பது போலிருந்தது இருவரின் பார்வையும்.

''எனக்கும் அப்படியே தான்'' என்றார் ஆண்டனி.

''ஓ, அப்படியா?''

''சொல்லப் போனால், ரோஜாக்கள் மேல எனக்கு பைத்தியம்.''

மிஸ்டர் ஃபிஷ்ஷின் இதழ்களின் மீது ஒரு சிறு புன்னகை மேவி படர்ந்தடங்கியது. அதற்கு உடனே ஆண்டனியும் புன்முறுவிக் காட்டினார். உண்டாகயிருந்த இறுக்கம் தளர்வதாய் பட்டது.

மிக அழகாய் புதிதாய் மலர்ந்திருந்த ஒரு மலரை நோக்கிப் பாதி குனிந்து, ''இந்த அழகைப் பாருங்க'' என்றார் ஃபிஷ். ''இதுக்கு பேர் அபெல் அப்படினு நினைக்கிறேன்... யெஸ். அபெல்தான், ஐ ஆம் கரெக்ட். போர்க்காலத்துக்கு முன்னாடி இந்த வெள்ளை ரோஜாக்கள் கார்ள்

ட்ரஸ்க்கி எனும் பெயர்ல அத்தனை பிரசித்தம். போருக்கு அப்புறம் பேரை மாத்திட்டாங்க. தொட்டாசிணுங்கி, ஆனா, நாட்டுப் பற்றின் சின்னம்! ஓ அதோ, அது லா ஃபிரான்ஸ். தொட்டாசிணுங்கியெல்லாம் அது கிடையாது. அதனால் நல்ல பிரசித்தம். ஆங், சிகப்பு ரோஜாக்கள் உங்களுக்குப் பிடிக்குமா, மிஸ்டர் கேட்?''

மிஸ்டர் ஃபிஷ்ஷின் மெலிதான மூழ்கிப் போயிருந்த குரல் பங்களிப்புக்கு, இடையூறு நேர்ந்தது. முதல் தள ஜன்னல் வழியாக குனிந்து எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள் பண்டில்.

''டவுனுக்குப் போய் ஒரு சுற்று சுற்றிட்டு வரலாமா, மிஸ்டர் ஃபிஷ்? நான் கிளம்பிட்டே இருக்கேன்.''

''தேங்க்யூ மை லேடி. எனக்கு இங்கேயே நிறைய வேலையிருக்கு.''

''நீங்க மிஸ்டர் கேட்... உங்க மனசை மாத்திக்கிற மாதிரியில்லையா?''

ஆண்டனி சிரித்துவிட்டு, மறுப்பாய் தலையசைத்தார். பண்டில் மறைந்தாள்.

நீண்ட கொட்டாவிக்கு நடுவே ''தூக்கம் எனக்கு சொக்குது'' என்றார் ஆண்டனி. ''உண்ட களைப்பு தொண்டருக்கும்'' என்றவர், ஒரு சிகரெட்டை எடுத்துக் கொண்டு, ''வத்தி?'' என கேட்டார்.

மிஸ்டர் ஃபிஷ் அவரிடம் ஒரு வத்திப் பெட்டியைத் தந்தார். சிகரெட்டைத் தானே பற்ற வைத்துக் கொண்ட அவர் நன்றி எனும் வார்த்தையையும் சேர்த்து வத்திப்பெட்டியைத் திருப்பித் தந்தார்.

''என்னதான் ரோஜாக்களின் அழகு என்னைக் கவர்ந்து இழுப்பதாயிருந்தாலும்...'' என்றவர், ''இன்னிக்கு என்னவோ எனக்கு தோட்ட வேலையில மனசு போக மாட்டேங்குது'' என்றார்.

வாசலில் இடியோசை போன்ற சப்தமொன்று எழுந்தது. ''நல்ல சக்தி வாய்ந்த எஞ்சின் போட்டு வெச்சிருக்காங்க போல பண்டில்.. அவங்க கார்ல!'' என குறிப்பிட்டார் ஆண்டனி, ''எப்படி கௌம்புது!''

வாசலிலிருந்த கார் பாதையில் அது நகரத் துவங்கியதை இருவரும் இங்கிருந்து பார்த்தார்கள்.

ஆண்டனி மறுபடியும் கொட்டாவி விட்டுவிட்டு, வீடு நோக்கி போய்விட்டார்.

வீட்டுக்குள்ளே கதவு வழியாக நுழைந்தார். உள்ளே வந்ததும் உடனேயே ஓட்டப் பந்தய வீரர் போல ஆனார் அவர். ஹாலைக் கடந்து

விறுவிறுவென ஓடிய அவர் எதிர்ப்பக்க பிரெஞ்சு ஜன்னலொன்றின் வழியாக வெளியே தாவிக் குதித்தார். இறங்கினார். பார்க்குக்குள் விழுந்து ஓட்டமாய் ஓடினார். வீட்டின் எதிர் கோடி காம்பவுண்ட் கேட் வரை போய் அங்கு ஒரு நீண்ட வட்டமடித்துத்தான் காரை வெளியே கொண்டுவர வேண்டும் என்றும் அப்படி வந்த பிறகும் பார்க்கின் நீளம் முழுக்க சுற்றி வீட்டின் பின்புற சாலைப் பகுதியை அது அடைய நேரமாகும் என்றும் ஆண்டனிக்குத் தெரியும்.

வேறு மாற்று வழியே கிடையாது என்றறிந்து ஓடினார். காலத்தை நழுவ விட்டு விடக்கூடாது என்கிற இலக்கினை முன் வைத்த ஓட்டம். பார்க்கின் பின்புறச் சுவர் ஏறிக் குதித்து சாலையில் நிலையானார்... பின்னாலேயே காரின் இடியோசை!

ஒரு குதி குதித்து சாலையின் மையத்துக்குப் போனார்.

''ஹை!'' - கைகளிரண்டையும் தூக்கியாட்டிக் கத்தினார்.

ஆச்சரியம் தாளாது போட்ட பிரேக்கில் வேகம் தாளாது சாலையில் சிறு அரை வட்டமடித்து விட்டது கார். விபத்து நேராமல் எப்படியோ சமாளித்து விட்டார். காருக்குப் பின்னாலேயே ஓடிய ஆண்டனி நின்றிருந்த அதன் கதவைத் திறந்து குதித்தேறி பண்டிலின் அருகே உட்கார்ந்துக் கொண்டார். அவளைப் பார்த்து புன்னகைத்தார். ''நான் உங்களோட லண்டன் வரேன்'' என்றார். ''முதல்லேயே திட்டமிட்டி ருந்தேன்.''

''அசாதாரண மனுஷன்யா'' என்றாள் பண்டில். ''அதென்ன உங்க கைல?''

''வெறும் தீக்குச்சி.''

அதனை சிந்தனையோடு இப்போது கவனித்தார். அது பிங்க் நிறத்தில் மஞ்சள் தலை கொண்டிருந்த தீக்குச்சி. தனது கையிலிருந்த கொளுத்தப்படாத சிகரெட்டைச் சுண்டி வெளியிலெறிந்த ஆண்டனி, தீக்குச்சியை ஜாக்கிரதையாய் சட்டைப் பைக்குள் நழுவவிட்டுக் கொண்டார்.

அத்தியாயம் 24

# டொவரில் இருந்த வீடு

"நான் வண்டியை வேகமா ஓட்டுறதுல உங்களுக்கு ஒண்ணும் சிரமமிருக்காதுன்னு நினைக்கிறேன்" என்றாள் பண்டில். "கிளம்புறதுல லேட்டாக்கிட்டேன்."

ஏற்கெனவே தலைதெறிக்கும் விதத்தில் அவர்கள் பறந்துக் கொண்டிருப்பதாய் உணர்ந்தார் ஆண்டனி. ஆனால், உடனேயே, இன்னும் வேகமாய் ஓட்ட வேண்டும் என்று பண்டில் முடிவெடுத்தால் அதனை எதாலும் தடுக்க முடியாது என்பதையும் அவர் உணர்ந்து கொண்டார்.

"பலருக்கு.." என்றபடி, கும்பலைக் கடக்க வண்டியின் வேகத்தை சற்று தாழ்த்தியபோது குறிப்பிட்ட பண்டில், "... என் காரோட்டத்தைக் கேட்டாலே, பயம். ஓர் உதாரணத்துக்கு பரிதாபத்துக்குரிய அப்பா! எந்த மந்திரத்தாலும் அவரை நான் ஓட்டும் கார்ல ஏத்த முடியாது."

லார்ட் கேட்டர்ஹாமின் முடிவுதான் சரி என்று மனதுக்குள் எண்ணிக் கொண்டார் ஆண்டனி. பயந்த சுபாவம் கொண்ட மற்றும் நரம்பதிரும் முதியவர்கள், பண்டிலின் காரோட்டத்தை விளையாட்டாய் நினைத்துக் கொண்டு ஏறிவிடக் கூடாது.

"ஆனா உங்களுக்கு என்கூட பிரயாணிப்பதுல துளி பயம் இருப்பதா தெரியலே" என்று தொடர்ந்தாள் பண்டில், காரின் இரண்டே சக்கரங்களைக் கொண்டு வேகம் குறையாமல் ஒரு கூரான வளைவில் திரும்பியபடி.

''இந்த மாதிரியான வேகமான டிரைவிங்ல எனக்கு நல்ல ட்ரெயினிங் உண்டு'' என்றார் ஆண்டனி. ''மேலும்..'' என்று ஒரு கூடுதல் தகவல் தந்தார்: ''நான் இப்ப மிகுந்த அவசரத்துல இருக்கேன்.''

''அப்ப இவளை நான் இன்னும் கொஞ்சம் வேகமா விரட்டட்டுமா?''

''ஓ கடவுளே நோ'' என்றார் ஆண்டனி அவசரமாய். ''இப்பவே எழுபதுல இருக்கோம்.''

''இப்படி திடீர்னு அவசர அவசரமா எங்கே கிளம்பிட்டீங்கன்னு தெரிஞ்சுக்க துடிக்கிறேன்.'' எதிரே இருந்த சின்ன கூடாரத்தை எச்சரிக்க காரின் ஹாரனைப் படு மோசமாக கத்தவிட்டுக் கொண்டிருந்தபோது கேட்டாள் பண்டில். ''நான் கேட்கலாமானு தெரியலே... இருந்தாலும் கேட்கிறேன்... நீங்க ஒண்ணும் நீதியின் பிடியிலிருந்து தப்பிச்சுக்கிட்டு ஓடலியே?''

''எனக்கு நிச்சயமா தெரியலே'' என்றார் ஆண்டனி சிந்தனையாய். ''ஆனா கூடிய சீக்கிரத்துல தெரிஞ்சுப்பேன்.''

தற்போது, ''அந்த ஸ்காட்லாண்ட் யார்ட் ஆள் நான் நினைச்ச மாதிரி ஒண்ணும் முயல் கிடையாது, புலி'' என்றாள் அவள் சிந்தனையாய்.

''பேட்டில் ஒரு நல்ல மனுஷன்'' என ஒப்புக் கொண்டார் ஆண்டனி.

''நீங்க ரகசியப் பாதுகாப்புத் துறையில் பணியாற்ற வேண்டிய ஆளு'' என்றாள் பண்டில். ''தெரிஞ்சு வைத்துள்ள விஷயங்களை நீங்க பகிர்ந்துக்கிறது கிடையாது, இல்லையா?''

''நான் நிறைய உளறிக் கொட்டுபவன் எனும் கருத்துல இல்ல நான் இருக்கேன்!''

இங்கு ஏதோ சிந்தனையில் பண்டில் இருக்க, அப்போது குறைந்த வேகத்தால் மூன்று கார்கள் இவளைக் கடந்து போயின. பிறகு அவள் திடுமென கேட்டாள்.

''உங்களுக்கு எத்தனை நாளா விர்ஜீனியாவைத் தெரியும்?''

''இது விடை தர கொஞ்சம் சங்கடமான கேள்வி'' என்று உண்மையாய் சொன்னார் ஆண்டனி. ''அவங்களை நான் அடிக்கடி சந்திச்சவன் கிடையாது... இருந்தாலும் ஏதோ பல காலம் பழகின மாதிரி இருக்கு.''

பண்டில் ஒப்புதலாய் தலையசைத்தாள்.

''விர்ஜீனியா மூளையுள்ளவ'' என தொடர்பின்றி குறிப்பிட்டாள் பண்டில். ''எப்பவும் முட்டாள்தனமா பேசுவது போல தெரியும்.. ஆனா அப்படி கிடையாது. அவங்களுக்கு மூளை இருக்கு. அவங்க *ஹெர்ஸோஸ்லோவோக்கியாவுல* இருந்தபோது ஒப்பிட முடியாத சாதுர்யத்தோட இருந்தவங்க; எனக்குத் தெரியும். டிம் ரேவல் இருந்திருந்தால், பிரமாதமான வாழ்க்கையை வாழ்ந்திருப்பார் - எல்லாம் மிஸஸ் ரேவலால. அவருக்காக விர்ஜீனியா தலை முதல் பாதம் வரை சிரமப்படுத்திக்கிட்டு உழைச்சிருக்காங்க. அவருக்காக என்ன பண்ணனுமோ அவையத் தனையையும் உடல் வருத்திக்கிட்டு அவங்க செஞ்சு தந்திருக்காங்க - அது ஏன்னு எனக்குத் தெரியும்.''

''ஏன்னா, விர்ஜீனியா, அவரோட கணவரை தீவிரமா விரும்பியிருக்காங்க, அதனால?'' - தனக்கு முன் விரிந்த சாலையைப் பார்த்தபடி நெட்டைக் குத்தலாய் உட்கார்ந்துக் கொண்ட ஆண்டனி, கேட்டார்.

''நோ! அவங்க அவரை அப்படி விரும்பலே, அதனால! விளங்கலே? விர்ஜீனியா அவரை காதலிக்கலே... இவர் அவரை என்றுமே காதலிச்சதும் கிடையாது. இதை ஈடுகட்டவே என்னவெல்லாம் எப்படியெல்லாம் அவருக்கு உதவ முடியுமோ அப்படியெல்லாம் விர்ஜீனியா உதவியிருக்கார். விர்ஜீனியா, தனது உடலின் ஒவ்வோர் அங்குலமும் இப்படித்தான். ஆனா அதுக்காக அவங்களைத் தப்பா எடை போட்டுட வேணாம். விர்ஜீனியா, டிம் மீது, என்றுமே காதலில் இருந்தவர் கிடையாது. அந்த அளவு, தெரிஞ்சுக்கிட்டா போதும்.''

''இதுல ரொம்ப நிச்சயமா இருப்பது மாதிரி தெரியுது'' என்று அவளைத் திரும்பி பார்த்தபடி குறிப்பிட்டார் ஆண்டனி.

பண்டிலின் வெண்டரி விரல்கள் ஸ்டீரிங் வளையத்தை இறுகப் பிடித்திருக்க, அவரது நிமிர்ந்த முகவாய் தீர்மானமாய் இருந்தது.

''எனக்கு ஒருசில சமாச்சாரங்கள் தெரியும். அவங்க கல்யாணத்தின் போது நான் சின்னப் பொண்ணு... அப்ப சில விஷயங்களை நான் கேள்விப்பட்டேன். விர்ஜீனியா பற்றி தெரிய வந்ததும், தெரிஞ்ச விஷயத்தையும் இவங்களையும் சுலபமா என்னால சேர்த்துப் போட்டு பார்க்க முடிஞ்சது. டிம் ரேவல் இந்த விர்ஜீனியாவால் பந்தாடப் பட்டிருக்கிறார். காதலில்! அவர் ஐரீஷ்காரர், அதனால, படு வசீகரமானவர். கவர்ச்சியானவர். மற்றவர்களை ஈர்க்கும்படி தன்னை அழகா

முன்னிருத்திக் கொள்ளும் ப்க்குவம் தெரிஞ்சவர். அப்ப விர்ஜீனியா மிக இளைய கன்னி. பதினெட்டுதான். டிம்ம விட்டு இப்படி அப்படி போக முடியாத இக்கட்டான சூழ்நிலைல இருந்தாங்க அவங்க. ஏன்? அப்படி தினமும் தன்னை வந்து பார்க்கலைனா தன்னைத் தானே சுட்டுப்பேன். அல்லது விஷம் குடிச்சிடுவேன்னு பயமுறுத்தி வெச்சிருந்தார் டிம். தன்னைக் கல்யாணம் பண்ணிக்கலேனா நிச்சயமா தன்னை உயிரோட பார்க்க முடியாதுனு வேற விர்ஜீனியாவை மிரட்டியிருந்தார் அவர். எத்தனைதான் பெண் முன்னேற்றம் அது இதுனு நாம முன்னேறிக் கிட்டிருந்தாலும் இதுபோன்ற மிரட்டல்களைப் பெண்கள் நம்புவது தொடர்ந்துக்கிட்டுத்தானிருக்கு. தன் அழகு டிம்மை மயக்கியிருக்கு என்பது போன்ற தற்பெருமையான எண்ணத்துக்கு அடிமையாறாங்க விர்ஜீனியா. சாத்தானான விர்ஜீனியா தன்னை தேவதையா வர்ணிச்சிக் கிறாங்க!'' இங்கு சற்று நிறுத்திய பண்டில், ''ஒண்ணு சொல்லிக்கிறேன்'' என்றார்: ''அவங்க விரும்புவது சுதந்திரத்தை. அதிலிருந்து அவங்களை விலக்க நினைப்பவங்க ரொம்ப அனுபவிக்க நேரிடும்.''

''இதெல்லாத்தையும் கொண்டு வந்து இப்ப எதுக்காக நீங்க என்கிட்டே சொல்றீங்கன்னு எனக்கு விளங்கலே'' என்றார் ஆண்டனி மெதுவாய்.

''மனிதர்களைப் பற்றி தெரிந்துக் கொள்வது சுவையானது இல்லையா? குறிப்பா, இதுபோன்ற மனிதர்களை!''

''எனக்கு அந்த விருப்பம் உண்டு'' என்று ஏற்றுக் கொண்டார் ஆண்டனி.

''இதெல்லாம் நீங்க நிச்சயமா அவங்க வாயாலேயே கேட்டிருக்க முடியாது. இன்னொரு டிப் தரப் போறேன், அவங்களைப் பற்றி. இதை நீங்க நம்பணும். விர்ஜீனியா, ஒரு டார்லிங். பெண்களே கூட அவங்களை அதிகம் நாடுவாங்க. ஏன்னா அவங்ககிட்டே பூனை குணம் கிடையாது. முன்னாடி ஒண்ணு பேசிட்டு பின்னாலே வேறொண்ணைப் பேசறதை சொல்றேன்.''

ஆயினும் இன்னமும் புதிர்ப் போடப்பட்டவராய்தான் கிடந்தார் ஆண்டனி. இத்தனை தகவல்களை கேட்காமலேயே தன்னிடம் சொல்லுமாறு எது பண்டிலைத் துரத்திக் கொண்டிருக்கிறது என ஆச்சரியத்திலிருந்தார் ஆண்டனி. ஆயினும் இத்தனை தகவல்கள் வந்து

விழுவதில் அவர் திருப்தியாய் தானிருந்தார் - இடையில் மறுத்து நிறுத்தாமல்!

ட்ராம் வண்டிகள் எதிர்படும்போது அலுத்துக் கொண்டு வேகத்தை பண்டில் குறைத்துக் கொள்ள, குறைந்த காரோட்டத்தையும் பண்டிலையும் சேர்த்துப் பார்க்க முடியாமல் ரசித்துக் கொண்டார் ஆண்டனி. இறுதியாய் சந்தடி மிகுந்த ஆக்ஸ்ஃபோர்ட் சாலையை அடைந்தது கார்.

''ரொம்ப லேட் ஆகிடலே'' என்றாள் பண்டில் பெருமையாய் கைக்கடியாரத்தைப் பார்த்தபடி. பிறகு: ''உங்களை எங்கு இறக்கி விடணும்?'' என்றாள்.

''எங்கே வேணும்னாலும், நீங்க எந்தப் பக்கமா போறீங்க?''

''நைட் ஃபிரிட்ஜ்.''

''அப்ப சரி... என்னை பார்க் சதுக்கத்துல எறக்கிடுங்க.''

குறிப்பிடப்பட்ட இடத்தை அடைந்ததும் ''குட் பை'' என்றாள் பண்டில். ''எப்படி திரும்பறதா உத்தேசம்?''

''நான் அதை பார்த்துக்கிறேன், தேங்க் யூ வெரி மச்.''

''நான் உங்களை பயமுறுத்திட்டேன்'' என்று தனது காரோட்டத்தைக் குறிப்பிட்டாள் பண்டில்.

''வயசான நரம்பதிர்வு பேர்வழிகள் உங்களோட கார்ல வரக் கூடாதுனு ஒத்துக்கிறேன். ஆனா, இன்னிக்கு நான் ரொம்பவே என்ஜாய் பண்ணேன். இந்த அளவுக்கு படபடப்பு கடைசியா எனக்கு எப்ப நேர்ந்தது தெரியுமா? ஒருமுறை காட்டுல சில மத யானைகள் கிட்ட மாட்டிக்கிட்ட போது.''

''கொழுப்புதான் மேன் உங்களுக்கு. இன்னிக்கு ஒரு சின்ன குதியல் கூட இல்லாம ஐஸ் ஸ்கேட்டிங் போல காரை நான் ஓட்டிக்கிட்டு வந்திருக்கேன், தெரியுமா?''

''இப்படியெல்லாம் வேற நெனைப்பா?''

''ச்சே, ஆண்களுக்கு பெண்ணின் தைரியத்தை ஒத்துக்கும் வீரமே கிடையாதுப்பா.''

''இது தப்பான கருத்து.''

''நான் மனசு புண்பட்டுக் கிளம்பறேன்'' - இப்படி சொல்லிவிட்டு களுக்கென்று சிரித்தபடி காரை விர்ரென்று ஓடித்துக் கொண்டு விடைபெற்றுப் போனாள்.

கீழேயிறங்கியிருந்த ஆண்டனி அந்தப் பக்கமாய் கடந்து போன ஒரு டாக்ஸியை அமர்த்திக் கொண்டார். அதனுள்ளே நுழையும்போது ''விக்டோரியா ஸ்டேஷன்'' என்றார்.

ஸ்டேஷன் வந்ததும் காசு கொடுத்துக் காரினை அனுப்பி விட்டு டொவர் பகுதிக்கான அடுத்த ரயில் பற்றி விசாரித்தார். துரதிர்ஷ்டவசமாக அப்போதுதான் புறப்பட்டு போயிருந்த ரயிலை அவர் விட்டிருக்கிறார்.

ஒரு மணி நேரம் காத்திருக்க வேண்டியதுதான் என்று ஊர்ஜிதமாகியதும், புருவங்களிரண்டும் முடிச்சிட்டு சிக்கிக் கொள்ளும் வண்ணம், மேலும் கீழும் நடந்தபடியிருந்தார் அவர். ஓரிரு முறை பொறுமையிழந்தவராய் தனது தலையை மறுத்து அசைத்துக் கொண்டார்.

டொவருக்கான பிரயாணம் அப்படியொன்றும் சொல்லிக் கொள்ளும்படி அமையவில்லை. அங்கு சேர்ந்ததும் துரிதமாய் ஸ்டேஷனை விட்டு வெளியேறிய ஆண்டனி, என்னவோ திடீரென்று நினைவு வந்தவரைப் போல் பின்பக்கமாய் திரும்பினார். அவரது உதடுகளில் சிறு புன்னகை விளைந்திருக்க, ஹர்ஸ்ட் மியர், லாங்லி சாலைக்கு வழிகாட்டுமாறு கேட்டுக் கொண்டார்.

வழிகாட்டப்பட்ட சாலை மிக நீளமான ஒன்றாயிருந்தது. ஊரை விட்டு வெளிப்புறமாய் அது போய்க் கொண்டேயிருந்தது. போர்ட்டரின் வழிகாட்டுதலின்படி, ஹர்ஸ்ட் மியர்தான் கடைசி வீடு. ஆண்டனி மெல்லமாய் நடக்க ஆரம்பித்தார். அவருடைய நடவடிக்கைகளில் புது குதூகல நிலை உருவாகியிருந்தது. ஆபத்து கையருகில் வந்ததும் அவருக்குள் எப்போதும் வெடிக்கும் ஆர்ப்பாட்டமிது.

போர்ட்டர் சொன்னது போவே, ஹர்ஸ்ட் - மியர் லாங்லி சாலையின் கடைசி வீடாயிருந்தது. காடாய் மண்டியிருந்த புதர்ச் செடிகளுக்கு மத்தியில் தன்னுடைய நிலத்தில் நன்கு பின்னுக்குத் தள்ளி அமைந்திருந்தது அவ்வீடு. இந்த இடம் சில வருடங்களாய் காலியாகவே இருந்திருக்க வேண்டும் என தீர்மானித்தார் ஆண்டனி. காம்பவுண்ட் சுவரில் பாதி தொங்கியபடி இருந்தது துருப்பிடித்த கேட்... அதில் இருந்த போர்டு சிதிலமடைந்து பாதி அழிந்திருந்தது.

''தனிமையான வீடு'' என முணுமுணுத்துக் கொண்டார் ஆண்டனி. ''சரியாத்தான் தேர்ந்தெடுத்திருக்காங்க.''

சில நிமிடங்கள் தயங்கி சாலையிலேயே இருந்தார். பாலைவனமாய் கிடந்த சாலையை இடமும் வலமுமாய் ஒருமுறை பரீட்சித்துக் கொண்டார். பிறகு புதர் வளர்ந்துக் கிடந்த வீட்டின் முன் பகுதிக்குள் நழுவி நுழைந்தார். சிறிது தூரம் வரை உள்ளே நடந்து போன அவர் எதையோ கேட்பது போல அப்படியே அங்கு நின்றார். வீட்டிலிருந்து இன்னும் சிறிது தூரத்தில்தான் ஆண்டனி நின்றுக் கொண்டிருந்தார். சுற்று வட்டாரத்தில் எங்கும் சின்ன ஓசையைக் கூட கேட்க முடியவில்லை. பழுத்திருந்த இலைகள் சில அங்கிருந்த மரத்திலிருந்து தானாய் நழுவி கரகரவென ஓசையெழுப்பியபடி கீழே விழுந்தபோது, குண்டூசி விழுந்தால் கேட்குமளவுக்கு இருந்த அமைதி கலைக்கப்பட்டு மரண ஓலம் எழுந்தது. ஆண்டனி துணுக்குற்றார். பிறகு சிரித்துக் கொண்டார்.

''நடுக்கம்!'' என தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டார். ''இப்படியெல்லாம்கூட எனக்கு நடுங்கத் தெரியும்னு முன்னாடியே தெரியாம போச்சே!''

நடை பாதையில் மேற்கொண்டு நடந்துப் போய்க் கொண்டிருந்தார் அவர். தற்சமயம் நடைபாதை சிறு வளைவு கொண்டு தொடர்ந்த பகுதியில்,அவர் புதருக்குள் தன்னை இழுத்துப் போட்டுக் கொண்டு வீட்டிலிருக்கும் ஒருவரும் பார்த்துவிடா வண்ணம் அப்படியே அதன் மறைவில் நடக்கலானார். சட்டென, புதரிடுக்கின் வழியாக உன்னிப்பாய் கவனித்தபடி அப்படியே நின்று விட்டார் ஆண்டனி. சற்று தொலைவில் எங்கோ நாயொன்று குரைத்தது. ஆனால், கைக்கெட்டும் தூரத்தில் ஏற்பட்ட ஒரு சப்தம்தான் அவருடைய கவனத்தை கைது செய்திருந்தது.

அவருடைய கூர்மையான காதின் கணிப்பு தப்பவில்லை. குட்டையாய், ஒல்லியாய், விறைப்பாயிருந்த ஓர் ஆள் பாதையின் வளைவில் திரும்பிக் கொண்டிருந்தான். அயல் நாட்டான் போன்ற தோற்றம். அவன் நிற்கவில்லை... ஒரே சுருதியில் வீட்டை வட்டமிட்டபடி நடந்துக் கொண்டிருந்தான் அவன்.

ஆண்டனி தனக்குத்தானே ஒப்புதலாய் தலையசைத்துக் கொண்டார். ''காவல்காரன்'' என முணுமுணுத்துக் கொண்டார். ''இவனுங்க வேலையைத் துல்லியமா கவனிப்பானுங்க.''

அவன் கண் பார்வையிலிருந்து மறைந்ததும், இடப்பக்கமாய் பாதையை மாற்றிக் கொண்டு, கடந்துபோன காவல்காரனின் அடியொற்றி அமையுமாறு நடக்கலானார் ஆண்டனி.

அவருடைய காலடித் தடங்கள் கிஞ்சித்தும் அரவம் எழுப்பவில்லை.

தற்சமயம் சரளைப் போடப்பட்டிருந்த பாதையில் கொத்து வெளிச்சம் வந்து விழுமாறு இருந்த இடத்துக்கு வந்திருந்தார் ஆண்டனி. பல மனிதர்கள் ஒன்றாகப் பேசிக் கொண்டிருக்கும் ஓசை துல்லியமாய் கேட்டது.

''அடக்கடவுளே! எப்படியாப்பட்ட மர மண்டைங்க இவனுங்க!'' முணுமுணுத்துக் கொண்டார் அவர். ''இவனுங்களை திடுதிப்புனு போய் பயமுறுத்துவதுதான் சரி.''

ஜன்னல் வரை போயிருந்த ஆண்டனி அங்கு உள்ளிருக்கும் யாருக்கும் தான் தெரிந்து விடாவண்ணம் சற்று குனிந்துக் கொண்டார். பின், வெகு ஜாக்கிரதையாய் தன் தலையை மட்டும் ஜன்னலின் அடி மரச்சட்டம் வரை தூக்கிக் கொண்ட அவர், உள்ளே நடப்பவற்றை பார்க்கலானார்.

அரை டஸன் பேர் அங்கிருந்த மேஜையைச் சுற்றி உட்கார்ந்திருந் தார்கள். நாலு பேர் தூக்கிக் கொண்டு நிற்கும் முகவாய் எலும்புகளால் ஆஜானுபாகுவாய் கொழுத்திருந்தவர்கள்... அவர்களது கண்கள் கீழ் நோக்கி இழுத்து விட்டதைப் போல பொங்கி உப்பியிருந்தன. மீதி இரண்டு பேரும் எலி போல தோற்றம் கொண்ட, அது போலவே துறுதுறுப்பாகவும் இருந்தவர்கள். பேசிய மொழி பிரெஞ்சாக இருந்தாலும் அந்த நன்கு கொழுத்த மனிதர்களும் பன்றி உறுமும் குரலில் அம்மொழியை மிகவும் கொச்சையாக பேசிக் கொண்டிருந்தார்கள்.

''பாஸ்?'' என்று கேட்டான் உறுமலாய், நால்வரில் ஒருத்தன். ''அவர் எப்ப வருவார்?''

எலி மனிதனின் ஒருவன் தோள்களைக் குலுக்கிக் காட்டினான். ''எந்த நொடியிலும்.''

''அப்ப வர்ர நேரம்தான்'' என்று உறுமினான் முதலில் பேசியவன். ''நான் அவரைப் பார்த்ததே கிடையாது. உங்க பாஸைத்தான் சொல்றேன். ஓ, இப்படி வெறுமனே காத்துக் கிடக்கும் காலகட்டத்துல, எத்தனை பெரிய மற்றும் வெற்றிகரமான வேலைகளை நாம செஞ்சு முடிச்சிருக்கலாம்!''

''முட்டாளே'' என்றான் எலி மனிதன் அடிப்பவனைப் போல். ''நீங்களும் உங்க கூட்டமும் போலீஸ்காரன்கிட்டே மாட்டிக்கிட்டு முட்டிக்கு முட்டு வாங்கியிருக்கிற பெரிய வேலையைத்தான் வெற்றிகரமா செஞ்சிருப்பீங்க, கொரில்லா குரங்குகள்!''

இதற்கு இன்னொரு கொழுத்திருந்த ஆள், ''ஆஹாஹா'' என கோபமாய் உறுமினான். ''நீ கூட்டாளியைப் பழிக்கிறாயா? நான் கூடிய

சீக்கிரத்துல சிகப்புக் கையின் குறியீட்டை உன் தொண்டையில பதிக்கிறேனா இல்லையானு பார்.''

அவன், முட்டாள் என்றவன் மீது பாய பாதி எழுந்துவிட அவனுடனிருந்த இன்னொருவன் அவனை அப்படியே பிடித்திழுத்து உட்கார வைத்தான். ''கைகலப்புக் கூடாது'' என்றான் அவன் உறுமலாய். ''நாம ஒண்ணா ஒத்துழைக்க வேண்டியிருக்கு. இந்தக் கட்டளையிலிருந்து நாம விலகிவிடக் கூடாது. கட்டளைகளை மீறுவது கிங் விக்டருக்கு பிடிக்கவே பிடிக்காதுனு கேள்விப்பட்டிருக்கேன்.''

இருட்டில், சுற்றிக் கொண்டிருக்கும் காவல்காரனின் காலடி ஓசைகள் மறுபடியும் கேட்க ஆரம்பிப்பதை ஆண்டனி கேட்க, அவர் தன்னை மீண்டும் ஒரு புதருக்குப் பின்னால் இழுத்துக் கொண்டார்.

''யாரது அங்கே?'' என்றான் உள்ளிருந்த ஒருவன்.

''கார்லோ - காவல் செஞ்சுக்கிட்டிருக்கான்.''

''ஓ! ஆங்.. நம்ம கைதிக்கு என்ன ஆச்சு?''

''அவன் பரவாயில்லாம ஆகிட்டான். சீக்கிரமாகவே குணமாகிடுவான். நாம கொடுத்ததுல அவன் மண்டையில ஏற்பட்ட விரிசலிலிருந்து மளமளனு தேறிட்டான்.''

ஆண்டனி அலுங்காமல் வெளியேறினார்.

''காட்! என்ன கூட்டமிது!'' என முணுமுணுத்தார். ''ஜன்னக் கதவு திறந்திருக்க திட்டம் தீட்டறானுங்க! இந்த அழகுல கார்லோனு ஒருத்தன், ரகசியம் கசியாம பார்த்துக்க! இந்த லட்சணத்தில் *ஹெர்ஸோஸ்லோவாக்கியன்களும்* பிரெஞ்சுக்காரர்களும் ஏறக்குறைய அடித்துக் கொள்ளும் கட்டம் வரை வந்து விட்டார்கள். இதுதான் கிங் விக்டரின் தலைமை அலுவலகம்! ஆஹ், இதுங்களுக்கு ஒரு பாடம் கற்றுத்தர நல்ல சான்ஸ்! இது, எனக்கு அதிசய அனுபவமாய் அமையும்.. மறக்க முடியாத அதிசய அனுபவமாய்!'' எண்ணிக் கொண்டார் ஆண்டனி.

இதனால் தனக்குத்தானே சிரித்துக் கொண்டு, அடுத்து என்ன பண்ணலாம் என்பது விளங்காமல் சில நிமிடங்கள் நின்றுக் கொண்டிருந்தார் அவர்.

அவரது தலைக்கு மேற்பகுதியிலிருந்து நடுங்கும் உறுமல் வந்தது. ஆண்டனி நிமிர்ந்து மேற் பக்கம் பார்த்தார். அந்த முனகலான உறுமல் மீண்டும் வந்தது.

ஆண்டனி வேகமாய் இடமும் வலமும் பார்த்தார். இப்போது மட்டோடியாய் தனது ரவுண்டின்படி கார்லோ இங்கு வர மாட்டான்.

கனமாய் நெருங்கிக் கொண்டிருந்த புதரின் ஒரு கிளையைப் பிடித்துக் கொண்டு பாம்பு போல அதில் நழுவி ஏறிய அவர் அப்படியே ஒரு ஜன்னலின் மரச் சட்டம் வரை போயிருந்தார். ஜன்னல் மூடப்பட்டிருந்தது. ஆனாலும், தன்னிடமிருந்த உபகரணம் ஒன்றின் பயனாக அவரால் அதனை திறந்துவிட முடிந்தது.

கவனிப்பதற்காக சற்று தயங்கிய அவர் பிறகு ஓசைப்படாது அவ்வறைக்குள் குதித்திறங்கினார். அங்கு எதிர் மூலையில் ஒரு படுக்கை இருக்க அதில் இருட்டின காரணத்தால் யாரென்று சட்டென அடையாளம் கண்டு கொள்ள முடியாத ஒரு ஆள் படுத்திருந்தான்.

அப்படுக்கை வரை போன ஆண்டனி கையிலிருந்த சின்ன டார்ச்சினை அவன் முகத்தில் அடித்தார். வெளிறிப் போய் களையிழந்திருந்த ஓர் அயல்நாட்டு முகம் அது. தலை, பெரிய பெரிய கட்டுகளால் சுற்றப்பட்டிருந்தது.

கைகளும் கால்களும் அவனுக்குக் கட்டப்பட்டிருந்தன. முழிப்பவனைப் போல் அவன் ஆண்டனியைக் கண்ணகலப் பார்த்தான்.

அவனை நோக்கி ஆண்டனி வளைந்து குனிய, அப்போது உடன் பின்பக்கத்திலிருந்து ஏதோ சப்தம் உருவாவதைக் கேட்டுவிட்ட அவர் அரை வட்டமாய் சட்டென்று திரும்பினார், அவரது கைகள் தன்னிச்சையாய் அவருடைய கோட் பாக்கெட் நோக்கி பிரயாணிக்க!

ஆனால் ஒரு கறாரான கட்டளை அவரை மேற்கொண்டு எதுவும் பண்ண விடாமல் முடக்கியது.

"ஹாண்ட்ஸ் அப். என்னை நீங்க இங்கே எதிர்பார்த்திருக்க மாட்டீங்க.. ஆனா நீங்க விக்டோரியா ஸ்டேஷன்ல ஏறிய அதே ட்ரெயின்ல நானும் ஏறும்படி ஆச்சு."

அறையின் நுழைவாயிலில் நின்றுக் கொண்டிருந்தது, மிஸ்டர் ஹராம் ஃபிஷ். அவர் சிரித்தார்... அவருடைய கையில் ஒரு பெரிய நீல துப்பாக்கி.

அத்தியாயம் 25

# செவ்வாய் இரவு, சிம்னிலில்

---

டின்னர் முடித்த பிறகு படிக்குமறையில் லார்ட் கேட்டர்ஹாம், விர்ஜீனியா மற்றும் பண்டில் ஆகியோர் அமர்ந்திருந்தார்கள். அது செவ்வாய் இரவு. திடுதிப்பென்று விசித்திரமான முறையில் ஆண்டனி காணாமல் போய் கிட்டத்தட்ட முப்பது மணி நேரங்கள் கடந்திருந்தன.

பார்க் சதுக்கப் பகுதியிலிருந்து கடைசியாய் பிரியும்போது ஆண்டனி சொன்ன வார்த்தைகளை பண்டில் ஏழெட்டு தடவை சொல்லியிருப்பாள்.

'நான் அதை பார்த்துக்கிறேன்.' இதையே விர்ஜீனியா இப்போது சிந்தனையாய் சொல்லிப் பார்த்தார். "இந்த வார்த்தைகள்ல, இத்தனை நேரம் அவர் எங்கேயாவது போய் உட்கார்ந்துக் கொள்வார்னா தெரியுது? தவிர, அவரோட எல்லா சாமான்களையும் இங்கேயேதானே விட்டு வெச்சிருக்கார்?"

"அவர் எங்கே போறார்னு உங்ககிட்டே சொல்லவேயில்லையா?"

"நோ" என்றார் விர்ஜீனியா சிந்தனையாய். "அவர் என்கிட்டே எதையுமே சொல்லலை."

இதற்குப் பிறகு அங்கு ஓரிரு நிமிடங்கள் அமைதி நிலவியது. லார்ட் கேட்டர்ஹாம்தான் முதலில் உடைத்தது. "இதையெல்லாம் பார்க்கப் போனா..." என அசூயையாய் ஆரம்பித்தவர், "இப்படி ஒரு கிராமத்து மாளிகையை வெச்சுக்கிட்டு அல்லாடுவதை விட பேசாம ஓட்டல்ல ரூமெடுத்து தங்கி வாழ்ந்துடலாம்" என்றார்.

"அப்படினா...?!"

''ஒரு சட்டம் உண்டு இல்லே.. ரூமை விட்டு வெளியேர்றவங்க மத்தியானம் 12 மணிக்குள்ளே நோட்டீஸ் தந்துடணும்.''

விர்ஜீனியா சிரித்து விட்டார்.

''நான் சொல்வது பழைய பஞ்சாங்கமா படலாம். வீட்டிலே இருந்தா, வீட்டை விட்டு எப்ப வேணும்னாலும் வெளியே போகலாம்... வரலாம் - ஒட்டல் மாதிரியே. ஆனா பில் கட்டணம் இல்லாம! இப்படி சட்ட திட்டம் துளியுமில்லாம ஃப்ரீடம்மா இருந்ததுதான், இதோ, இப்படி இக்கட்டுல கொண்டு வந்து நம்மை நிறுத்தியிருக்கு.''

''பெனாத்தாதீங்கப்பா'' என்றாள் பண்டில் எரிச்சலாய். ''இப்ப நானிருக்கேன். விர்ஜீனியா இருக்காங்க. எந்த சட்டதிட்டத்தைக் கடைப்பிடிச்சுக்கிட்டு நாங்க இருக்கோம்? 12 மணி நோட்டீஸையா? எரிச்சலாக்காதீங்க.''

''அதெல்லாம் சரிதான்'' என அவசரமாய் பேசினார் கேட்டர்ஹாம். ''நீங்க இருப்பதோ அவர் போனதோ பிரச்சினை கிடையாது. பிரின்ஸிபிள் - ஒழுக்கம்... இதை பேசிக்கிட்டிருக்கேன் நான். கடந்த 24 மணி நேரமா ஒண்ணும் நடக்கலே இங்கே... ஒத்துக்கிறேன். அமைதி - முழு அமைதி. களவு இல்லே. வேறெந்த குற்றமும் கூட இல்லே. துப்பறியும் ஆட்கள் கிடையாது. அயல்நாட்டானுங்க கிடையாது. இத்தனையிருந்தும் என்ன சொல்ல வரேன்னா - என் மனசு மட்டும் பாதுகாப்பா இந்த வீட்டை உணர்ந்திருந்தா, இந்த 24 மணி நேரத்தையும், நான் முழுக்க முழுக்க அனுபவிச்சுக் கொண்டாடியிருக்கணும். ஆனா, இந்த காலகட்டம் முழுமைக்கும் நான் எனக்குள்ளே சொல்லிக்கிட்டேயிருந்தது என்ன தெரியுமா: ''எவனோ ஒருத்தன் என்னவோ வில்லங்கம் பண்ண வரத்தான் போறான்.'' இந்த நினைப்பே எல்லாத்தையும் நாசமாக்கிடுது.''

''அப்படி ஒருத்தனும் வந்துடலே, உக்கும்'' என்று இடித்தாள் பண்டில். ''நாம கொடுமையாய் தனிமைப்படுத்தப்படிருக்கோம்- சொல்லப் போனா, ஒதுக்கப்பட்டிருக்கோம். இந்த ஃபிஷ் காணாம போனது ஒரு பக்கம் விளக்க முடியாததா நிக்குது. அவரும் ஒண்ணும் சொல்லலையா?''

''ஒத்தை வார்த்தை சொல்லலே. கடைசியா நான் அவரைப் பார்த்தபோது அவரோட நாத்தம் பிடிச்ச அந்த சிகரெட்டைப் பிடிச்சுக்கிட்டே ரோஜாப் பூந்தோட்டத்துல மேலும் கீழுமா நடந்துக்

கிட்டிருந்தார். அதுக்குப் பிறகு அந்தத் தோட்டத்து அலங்காரங்களுக்குள்ளேயே அவர் உருகி மறைஞ்சுட்டதாப்படுது.''

''அவரை யாராவது கடத்திக்கிட்டுப் போயிருக்கணும்'' என்றாள் பண்டில், நம்பிக்கையாய்.

''ஓ'' என்று பேயறைந்தாற் போல் ஆன அவளுடைய தந்தையாகப்பட்டவர், ''அப்படினா இன்னும் ஓரிரு நாட்கள்ல இவரோட பொணத்தை ஏரியிலிருந்து தோண்டியெடுக்க ஸ்காட்லாண்ட் யார்டு கூட்டம் வந்துடுமா?'' என்றார் பிரமையாய். ''இது எனக்கு வேணும். இந்த வயசான காலத்துல ஜார்ஜோட காட்டுத்தனமான திட்டங்களுக்குள் அகப்பட்டுடாம நான் பேசாம கிளம்பி அண்டை நாடு எதுக்காவது போய் என் ஆரோக்கியத்தை சீராக பாதுகாத்துக்கிட்டிருக்கணும்..ம்!''

இப்போது அவர் ட்ரெட்வெல்லால் இடைமறிக்கப்பட்டார். அவனிடம் எரிச்சலாய் ''என்னப்பா?'' என்றார்.

''பிரெஞ்சு துப்பறியும் அதிகாரி இங்கே வந்திருக்கார் மை லார்ட். அவருக்குக் கொஞ்ச நேரம் ஒதுக்கித் தந்தா சகாயமா போகும்கிறார்.''

''இப்ப நான் என்ன சொல்லிக்கிட்டிருந்தேன்'' என்ற லார்ட், ''நான் சொன்னதுதான் பலிக்கப் போகுது'' என்றார். ''குளத்துல நெஜ ஃபிஷ்ஷுக்கு பதிலா இந்த ஃபிஷ் பிரகஸ்பதியோட உடம்பு ரெண்டு பங்கா ஊதியிருப்பதை அதிகாரிங்க பார்த்திருப்பாங்க.''

தான் சொன்ன வார்த்தைகளின் பதிலுக்காக மட்டும் இறுக்கமாய் மரியாதை காட்டி நின்றுக் கொண்டிருந்தான் ட்ரெட்வெல். ''உங்களுக்குப் பார்க்க சம்மதம்னு நான் அவர்கிட்டே சொல்லலாமா, மை லார்ட்?''

''யெஸ், யெஸ், அவரை இங்கே அழைச்சுக்கிட்டு வா..''

ட்ரெட்வெல் மறைந்துப் போனான். ஓரிரு நிமிடங்களில் மதிப்பான குரலில் ''மிஸ்டர் லெமன்'' என அறிவித்து விட்டுப் போனான்.

வேகமாக அதே சமயம் ஓசையெழுப்பாத அடிகளெடுத்து வைத்து உள்ளே வந்தார் பிரெஞ்சு அதிகாரி. அவருடைய முகத்தை விட அவருடைய நடை அவர் எது குறித்தோ கிளர்ந்தெழுந்திருக்கிறார் என்பதை பறைசாற்றிற்று.

''குட் ஈவ்னிங் லெமன்'' என்றார் லார்ட். ''கொஞ்சம் குடிக்கிறது?''

''நன்றி. வேணாம்'' அங்கிருந்த பெண்கள் இருவருக்கும் மரியாதையை முகுது வளைத்து தெரிவித்தார். ''கடைசியில, இந்த கேஸ்ல நான் கொஞ்சம் முன்னேறியிருக்கேன். உங்களுக்கு அந்த கண்டுபிடிப்புகள் பற்றி தெரிஞ்சுடணும்னு நெனச்சேன். கடந்த இருபத்து நான்கு மணி நேரத்துல நான் கண்டறிந்துள்ள ஆழ்ந்த கண்டுபிடிப்புக்கள்.''

''எங்கேயோ ஏதோ முக்கியமான சமாச்சாரம் நடந்துக்கிட்டு தானிருக்கணும்னு நான் நெனச்சிருந்தேன்'' என்றார் லார்ட்.

''மை லார்ட்.... நேற்று மத்தியானம் நம்முடைய விருந்தாளிகள்ல ஒருத்தர் விளங்கிக் கொள்ள முடியாத தினுசுல வீட்டை விட்டு வெளியேறினார். ஆரம்பத்திலிருந்தே எனக்குள்ளே என் சந்தேகங்கள் இருந்தன என்பதை மட்டும் சொல்லிக்கிறேன். இங்கே நம்மகிட்டே ஒருத்தனிருக்கான். காட்டுப் பகுதிகளிலும் படு மோசமான சூழ்நிலைகளிலும் வாழ்ந்தவன். ரெண்டு மாசத்துக்கு முன்னாடி அவன் தென் ஆப்பிரிக்காவுல இருந்திருக்கான். அதுக்கு முன்னாடி - எங்கே?''

விர்ஜீனியா விசுக்கென்று மூச்சிழுத்து பிரமித்தார். அக்கணத்தில் பிரெஞ்சு அதிகாரியின் கண்கள் அவர் மீது சந்தேகமாய் பதிந்து நின்றன. பிறகு அவர் தொடரலானார்.

''அதுக்கு முன்னாடி - எங்கே? யாராலும் சொல்ல முடியாது. இப்படிப்பட்ட ஒரு மனிதனைத்தான் இந்த கேஸின் குற்றவாளியுடைய குணாதிசயமா பதிச்சு வெச்சு நான் தேடிக்கிட்டிருக்கேன். உல்லாசம், துணிகரம், கருணையற்ற மனம், எதையும் சந்திக்கத் தயார் எனும் நெஞ்சு. தந்திக்கு மேல தந்தி அனுப்பி விசாரிக்கிறேன்... ஆனா அவனுடைய வாழ்க்கை நகர்த்தல்கள் பற்றி எனக்கு ஒரு வார்த்தைகூட தகவல் கிடைக்கலே. பத்து வருஷத்துக்கு முன்னாடி அவன் கனடாவுல இருந்திருக்கான் - யெஸ்... ஆனா அதுக்கப்புறம்? என் சந்தேகம் இப்ப இன்னும் வலுவா வளருது. இந்த சமயத்துல, அவன் அப்பத்தான் கடந்துப் போன ஒரு பகுதியிலிருந்து நான் ஒரு துண்டுச் சீட்டைக் கண்டெடுக் கிறேன். அதுல ஒரு முகவரியிருக்கு. டொவர் பகுதியிலிருக்கும் ஒரு வீட்டின் முகவரி. பிறகு முயற்சி பண்ணிப் பார்ப்போமேனு, அதே தாளை நானும் கீழே தவற விடறேன். ஓரக் கண்ணால் பார்த்தபோது, இந்த *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* பய, போரீஸ், அதை தூக்கிக்கிட்டு அவனோட எஜமானன்கிட்டே போனதை நான் பார்க்கிறேன்.

ஆரம்பத்திலிருந்தே எனக்கு சந்தேகந்தான். இந்த போரீஸ் பய, சிகப்புக் கை கூட்டாளிகளின் கையாள். நமக்கு, இந்தக் கூட்டாளிகள், இந்தக் கேஸ்ல, கிங் விக்டருடன் இணைந்து உழைச்சுக்கிட்டிருப்பது நல்லாவே தெரியும். போரீஸ், தன்னுடைய தலைவனை மிஸ்டர் ஆண்டனி கேட் எனும் மனிதனுக்குள்ளே பார்க்கிறான்னா, அவர் ஆள்மாறி வந்திருப்பது புலப்படலே? இல்லேனா எதுக்காக அவர் முக்கியமே இல்லாத ஓர் அந்நியனுடன் தன்னை அப்படி இணைச்சு வெச்சுக்கணும்? இது சந்தேகத்துக்குட்பட்டது... நான் சொல்றேன் ஆழ்ந்த சந்தேகத்துக்குட்பட்டது.

''ஆனா என்னால ஒண்ணுமே பண்ண முடியாதபடி, அந்தத் தாளை உடனே தூக்கிக்கிட்டு, நான்தான் அதை கீழே போட்டதானு கேட்டுக்கிட்டு என்கிட்டேயே வரார், ஆண்டனி கேட். நான் சொன்னதுபோல என்னால ஒண்ணுமே பண்ண முடியலே நான் - ஆனா நூறு சதம் இல்லே! ஏன்னா அவர் பண்ணியிருப்பது ரெண்டு விஷயத்தைக் காட்டுது. ஒண்ணு நிச்சயம் அவர் குற்றமற்றவரே. இரண்டு அவர் மிக மிக புத்திசாலி. அது என்னதுமில்லை.. நான் அதை தவற விடவுமில்லைனு அவரண்டை சொல்லிடறேன். ஆனா அதே சமயத்துல விசாரணைகளையும் நான் முடுக்கி விட்டிருந்தேன். இன்னிக்குத்தான் எனக்கு சேதி கிடைச்சுது. டொவர் வீடு யாரும் போகாத அளவுக்கு ஒதுக்கப்பட்டிருந்திருக்கு... ஆனா நேற்றுதான் அதுல சில அயல்நாட்டுக்காரனுங்க கூடியிருக்காங்க. ஆக, அது கிங் விக்டருடைய தலைமையகம் என்பதுல துளி சந்தேகம் கிடையாது. இப்ப, சொல்லப் போற பாயிண்டுகளின் முக்கியத்துவத்தைக் கவனியுங்க. யாருக்கும் தெரியாம நேற்று மத்தியானம் மிஸ்டர் கேட் இங்கிருந்து நழுவறார். அந்தத் தாளை அவர் நழுவ விட்டதிலிருந்தே அவர் கண்காணிக்கப்படலாம் எனும் நிலைமை அவருக்கும் புரிஞ்சிருக்கணும். அவர் டொவர் போறார்... உடனேயே அந்தக் கூட்டம் பிரிக்கப்படுது. அடுத்த கட்ட நடவடிக்கை என்னவாயிருக்கும்? எனக்குத் தெரியாது. இதுல என்ன நாம ஸ்திரமா தெரிஞ்சுக்கலாம்னா மிஸ்டர் ஆண்டனி கேட் நிச்சயமா இங்கே வரப் போவது கிடையாது. அவர்தான் கிங் விக்டர் என்பதால், நகைக்காக மறுபடியும் ஓரிரு முறை முயற்சிகள் மேற்கொண்டு பார்க்காம அவர் ஓய மாட்டார். அந்த சந்தர்ப்பத்துலதான் நான் அவரைப் பிடிப்பேன்.''

விர்ஜீனியா சட்டென்று எழுந்துக் கொண்டார். அங்கிருந்த அலமாரி நோக்கி நகர்ந்துப் போய் நின்றுக் கொண்ட அவர் இரும்பு போல சில்லிட்டுப் போயிருந்த கூரான குரலெடுத்து தாட்சண்யமின்றி ''நீங்க ஒரு விஷயத்தைக் கணக்குல எடுத்துக்காம பேசறீங்கன்னு நினைக்கிறேன், மிஸ்டர் லெமன்'' என்றார். ''சந்தேகப்படும்படியா இங்கிருந்து நேற்று வெளியேறிப் போன ஆள், மிஸ்டர் கேட் மட்டுமில்லே.''

''என்ன சொல்ல வரீங்க மேடம்..?''

''நீங்க இப்ப சொன்ன அத்தனையும் இன்னொருத்தருக்கும் சரிசமமா பொருந்துதுனு சொல்ல வரேன். மிஸ்டர் ஃபிஷ்ஷின் இல்லாமைக்கு நீங்க என்ன கணக்கு வெச்சிருக்கீங்க?''

''ஓ, மிஸ்டர் ஃபிஷ்ஷையா?''

''யெஸ். மிஸ்டர் ஃபிஷ்ஷையே. முதல் நாள் ராத்திரிப் பொழுதுல மிஸ்டர் விக்டர் ஏற்கெனவே அமெரிக்காவிலிருந்து இங்கிலாந்துக்கு வந்தாச்சுனு நீங்க சொல்லலே? அதேபோலத்தான் மிஸ்டர் ஃபிஷ் அமெரிக்காவிலிருந்து இங்கிலாந்துக்கு வந்திருக்கார். மிகப் பிரபலமான ஒரு மனிதர்கிட்டேயிருந்து அவர் ஓர் அறிமுகக் கடிதம் வாங்கி வந்து சமர்ப்பித்தார். இல்லேங்கலே! ஆனா, இது மாதிரியான சமாச்சாரங்களை சமாளிப்பதெல்லாம் கிங் விக்டர் போன்ற அசாதாரணமானவனுங்களுக்கு ஒரு தும்பு தூசு. அவர் என்னனு தன்னைச் சொல்லிக்கிறாரோ அப்படி இல்லவே இல்லை அவர். முதல் பிரதிகள்... அவற்றின் வெளியீடுகள் இவை பற்றியெல்லாம் குறிப்பிட்ட லார்ட் கேட்டர்ஹாம், தான் எப்பவுமே மிஸ்டர் ஃபிஷ்ஷை ஒரு பார்வையானாத்தான் பார்த்திருப்ப தாய் சொன்னாரே தவிர அவரை ஒரு பேச்சாளனா பார்த்ததே கிடையாது எனும் ஒரு நிஜத்தை சொன்னார். இதேபோல பல சந்தேகத்துக்குரிய உண்மைகள் அவருக்கு எதிரா காணப்படுது. கொலை நடந்த இரவில் அவருடைய அறையில் விளக்கொன்று எரிந்திருக்கு. அன்னிக்கு சாயந்திரம் மீட்டிங் அறையில நடந்ததையே எடுத்துக்குங்க. அவரை நான் டெரஸ்ல சந்திச்சபோது அவர் முழுக்கவும் ஆடையலங்காரத்துல இருந்தார். அவரே கடிதத்தைக் கீழே தவற விட்டிருக்கலாம். அப்படி மிஸ்டர் கேட் பண்ணுவதை நீங்க பார்க்கலே. நினைவிருக்கட்டும். மிஸ்டர் கேட் டொவருக்குப் போயிருக்கலாம். அப்படி அவர் செஞ்சிருந்தால் அது வெறுமனே உள[illegible] பார்க்க[illegible] அவர் அங்கே கடத்தப்பட்டிருக்கல[illegible]

யெஸ். மிஸ்டர் கேட்டை விட மிஸ்டர் ஃபிஷ் மேலத்தான் ஏசா
சந்தேகங்கள் அப்பியிருக்குங்கறேன், நான்.''

பிரெஞ்சு அதிகாரியின் குரல் கத்தியாய் பாய்ந்தது: ''உங்க பக்கத்துக் கருத்து இதுவாயிருக்கலாம், மேடம். இதை நான் விவாதிக்க விரும்பலே. மிஸ்டர் ஃபிஷ் தன்னை என்னனு சொல்லிக்கிறாரோ அப்படி கிடையாது என்பதை நான் ஏத்துக்கிறேன்.''

''அப்புறம்? ஏன் பட்டுனு ஒத்துக்க மாட்டேங்கிறீங்க?''

''மேடம்.. மிஸ்டர் ஃபிஷ் தன்னை என்னனு சொல்லிக்கிறாரோ அப்படி கிடையாது தான். யெஸ் - அவர் ஓர் உளவுத் துறை மேன்.''

''என்னது?'' - அதீதமாய் கதறி விட்டார் லார்ட் கேட்டர்ஹாம்.

''யெஸ், மை லார்ட். கிங் விக்டர் சம்பந்தப்பட்ட விஷயங்களுக்காக மட்டுமே இங்கே வந்திருக்கும் அமெரிக்க டிடெக்டிவ் அவர். இது எனக்கும் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டிலுக்கும் கொஞ்ச காலமாகவே தெரியும்.''

விர்ஜீனியா எதுவுமே சொல்லவில்லை. மிக மெதுவாக அவர் மறுபடியும் உட்கார்ந்துக் கொண்டார். மிக ஜாக்கிரதையாக அவர் எழுப்பியிருந்த கட்டடம், மேற்குறிப்பிட்ட சில வார்த்தைகளால், அவருடைய காலடிகளுக்குக் கீழேயே விழுந்து உடைந்து நொறுங்கிப் போனது.

''கிங் விக்டர் சர்வ நிச்சயமா சிம்னீஸுக்கு வருவான்னு எங்க அத்தனை பேருக்கும் தெரியும். இந்த ஓர் இடத்துலதான் அவனைப் பிடிக்க முடியும்னு நாங்க நிச்சயமா இருந்தோம்.''

விளக்கவொண்ணா 'பாவம்' கண்களில் மின்ன நிமிர்ந்த விர்ஜீனியா கலகலவென்று சிரித்தார். ''ஆனாலும் இன்னும் நீங்க அவனைப் பிடிக்கலே'' என்று குறிப்பிட்டார்.

''நோ, மேடம். ஆனா நான் பிடிப்பேன்.''

''மக்களை சுலபமா ஏமாற்றுவதுல அவன் வல்லவன், இல்லையா?''

இந்தக் குத்தலுக்கு பிரெஞ்சு அதிகாரியின் முகம் கோபத்தால் கருத்தது. பற்களை இறுக்கிக் கொண்டு, ''இந்த தடவை அவனுக்கு அப்படி அமையாது வித்தியாசமா இருக்கப் போகுது. பாருங்க'' என்றார்.

''அவன் வசீகரமானவன்'' என்றார் லார்ட் கேட்டர்ஹாம். ''ரொம்ப. ஆனா, விர்ஜீனியா, எதனால அவன் உங்களோட ஓல்ட் ஃபிரண்ட் அப்படினு சொன்னீங்க?''

''அதனாலதான்'' என்று கமுக்கமாய் சொல்லி முடித்தார் விர்ஜீனியா. ''எனக்கென்னவோ மிஸ்டர் லெமன் தப்புப் பண்ணிக்கிட்டிருக்கார்னு படுது.''

சொன்னபோது அவருடைய கண்கள் பிரெஞ்சு டிடெக்டிவ்வின் கண்களை அசையாது சந்தித்தன. ஆனால் இதுபோன்ற கிண்டி விடுதலுக்கெல்லாம் அவர் பற்றிக் கொண்டதாய் தோன்றவில்லை. ''காலம் காட்டும், மேடம்'' என்றார் அவர், நிலைகுலையாமல்.

தற்போது, ''அவர்தான் பிரின்ஸ் மைக்கேலைச் சுட்டதுனு நம்பச் சொல்றீங்களா?'' என்றார் விர்ஜீனியா.

''ஸர்ட்டன்லீ.''

ஆனால் மறுப்பாய் அழுத்தந்திருத்தமாய் தலையசைத்தார் விர்ஜீனியா. ''ஓ நோ'' என்றார் அவசரமாய். ''ஓ, நோ! இதுல நான் நிச்சயமாயிருக்கேன். ஆண்டனி கேட், ப்ரின்ஸ் மைக்கேலைக் கொல்லலே.''

லெமன் அவரையே ஆர்வமாய் - ஆழமாய்க் கவனித்துக் கொண்டிருந்தார். ''நீங்க சொல்வதிலும் நியாயமிருக்குன்னு சொல்ல ஒரு சாத்தியக் கூறு இருக்கு மேடம்'' என்றார் மெதுவாய். ''ஒரு சாத்தியக் கூறு - அவ்ளோதான். அதுக்கு மேல ஒண்ணும் கிடையாது. அவரோட கட்டளைகளையும் மீறி, அந்த *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியா* பய போரீஸ் அவரை சுட்டிருக்கலாம். ப்ரின்ஸ் மைக்கேல் இவனுக்கு எதிரா ஏதாவது தவறு செஞ்சிருக்கலாம். இவன் வஞ்சம் தீர்த்திருக்கலாம்.''

''அவன் சரியான கொலைகாரப் பயலாத்தான் தெரியறான்'' என்றார் லார்ட் கேட்டர்ஹாம். ''அவன் நடையில நடக்கும் போதெல்லாம் அதை பார்க்கும் சில வேலைக்காரப் பொம்பளைங்க அலறியிருக்கு.''

''வெல்..'' என்ற லெமன், ''நான் இப்ப கிளம்பியாகணும். நிலைமை எந்த இடத்துல நின்னுக்கிட்டிருக்கு என்பது லார்டுக்குத் தெரிஞ்சாகணும்னு வந்தேன்'' என்றார்.

''நிச்சயமா. அதுக்கு நன்றி'' என்றார் லார்ட்.''

அவர் போன பிறகு அவருக்குப் பின்னால் கதவடைத்து சார்த்தப் பட்டதும், ''அவனோட குறுந்தாடியும், அவன் கண்ணாடியும்! அவனை கண்டாலே எரிச்சலாறேன்'' என்றாள் பண்டில். ''இதைப்பற்றியெல்லாம் நீங்க என்ன நினைக்கிறீங்க, விர்ஜீனியா?''

''எனக்குத் தெரியலே'' என்றார் அவர். ''நான் களைப்பாயிட்டேன், தூங்கப் போறேன்.''

அறையைக் கடந்து விர்ஜீனியா போனபோது அவருக்கு மிகப் பிரசித்தமான ஒருவரின் முதுகுப் பக்கம் பக்கவாட்டு அறையின் வழியாக நழுவி மறைந்தது. துளைக்கும் விதமாய் அழைத்தார்: ''சூப்பரின்டெண் டெண்ட் பேட்டில்.''

நழுவியது சூப்பரின்டெண்டெண்டாக இருந்தபடியால், விருப்பத்துக்கு எதிராக, திரும்பி வந்தார் அவர். ''யெஸ், மிஸஸ் ரேவல்?''

''லெமன் இங்கே இருந்தார். அவர் - அவர் - ஓர் அமெரிக்க துப்பறியும் அதிகாரியாமே? சொல்லுங்க, இது உண்மையா?''

சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் ஒப்புதலாய் தலையசைத்தார். ''யெஸ்... அது சரியே.''

''உங்களுக்கு இது ஆரம்பத்திலிருந்தே தெரியுமா?''

மீண்டும் சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் ஒப்புதலாய் தலையசைத்தார்.

படிக்கட்டுகள் பக்கமாய் திரும்பிக் கொண்டார் விர்ஜீனியா. ''அப்படியா விஷயம்'' என்றார் அவர். ''தேங்க் யூ.''

அந்த நிமிடம் வரை இத்தகவலை அவர் நம்ப மறுத்து வந்தார். ஆனால் இப்போது..?

அவரது அறையிலிருந்த அரிதார மேஜைக்கு முன்னால் உட்கார்ந்துக் கொண்டு, தனக்கு முன் இக்கேள்வியைப் பூதாகரமாக்கிக் கொண்டு சிந்தித்தார். இதுவரை ஆண்டனி விர்ஜீனியாவிடம் பேசியிருந்த அத்தனை வார்த்தைகளும் தற்சமயம் புது முக்கியத்துவம் கொண்டு அவர் முன்னால் விரிந்தன.

இதைத்தான் ட்ரேட் என்று அவர் அன்று குறிப்பிட்டாரோ?

அவர் விட்டுவிட்ட ட்ரேட். அப்படியானால்...

அப்போது அவருடைய ஆழ்ந்த இச்சிந்தனையைக் கூட சிதைக்கும் படி ஒரு சிறு ஓசையால் இயன்றது. துணுக்குற்றவராய் தலையை உயர்த்தினார் விர்ஜீனியா. அவரறையிலிருந்து சின்ன தங்க நிறக் கடியாரம், மணி ஒன்றைக் கடந்திருப்பதைக் காட்டியது. கிட்டத்தட்ட இரண்டு மணி நேரங்களாய் சிந்தித்தபடி மட்டும் அவர் உட்கார்ந்துக் கொண்டிருக் கின்றார்.

மறுபடியும் அதே ஓசை கேட்டது. ஜன்னல் பட்டியில் ஏதோ கரீர் என்று படும் ஓசை. ஜன்னல் வரை போன விர்ஜீனியா அதை திறந்தார். பார்த்தார். அவர் பார்த்துக் கொண்டிருந்தபோதே கீழேயிருந்த சரளைப் பாதையில் குனிந்திருந்த ஓர் உயரமான உருவம் அங்கிருந்து சரளைக் கல் ஒன்றைப் பொறுக்கி எடுத்துக் கொண்டிருந்தது. அக்கணம் விர்ஜீனியாவின் இதயத் துடிப்பு பறந்தது.. ஆனால், உடனேயே, அந்த ராட்சத உடல் *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியனான* போரீஸுடையது என்று தெரிந்ததும் துடிப்பு சீரானது.

''யெஸ்'' என்றார் ஒலியற்ற கம்மியான குரலில். ' 'என்ன விஷயம்?''

''மாஸ்டர்கிட்டேயிருந்து வரேன்'' என்றான், அவனும் விர்ஜீனியா வின் குரலுக்கு இணையாய் ஒலி குறைத்து. ''உங்களுக்காக என்னை அனுப்பியிருக்கார்.''

ஒரு தூதுவனைப் போல சேதியைச் சுமந்து வந்து சொல்லும் அலுவலக தொனியில் சொன்னான்.

''எனக்காகவா?''

''யெஸ். நான் உங்களை அவர் இடத்துக்குக் கொண்டு போகணும். ஒரு குறிப்பு எழுதியிருக்கார். அதை நான் உங்களுக்கு தூக்கிப் போடறேன்.''

விர்ஜீனியா சற்று உள்வாங்கி தள்ளி நின்றுக் கொண்டார். சரளைக் கல்லில் சுற்றப்பட்டிருந்த ஒரு பேப்பர் சரியாய் அவருடைய காலடியில் வந்து விழுந்தது. அதைப் பிரித்துப் படித்தார்.

**''மை டியர் (ஆண்டனி எழுதியிருந்தார்). நான் ஓர் இறுக்கமான இடத்தில் இருக்கிறேன். ஆனால் இதை நிச்சயம் வென்று காட்ட வேண்டும் என்று முடிவாய் இருக்கிறேன். என்னை நம்பி என்னிடம் வருவீர்களா?''**

முழுசாய் இரண்டு நிமிடங்கள் அசைவற்று அங்கே அப்படியே நின்றுக் கொண்டிருந்த விர்ஜீனியா அதே வார்த்தைகளை மீண்டும் மீண்டும் படித்துக் கொண்டிருந்தார்.

தற்சமயம் தலையை ஒரு சுற்று சுற்றி அறை முழுக்கவும் வியாபித்திருந்த கண்கவர் ஆடம்பரங்களை ஏதோ புதுக் கண்கள் கொண்டு இப்போதுதான் முதன் முறையாய் பார்ப்பதைப் போல பார்த்தார்.

பிறகு வெளியேறினார்.

''இப்போது நான் என்ன செய்வது?'' - கேட்டார்.

''டிடெக்டிவ்கள் எல்லாரும் வீட்டின் அந்தப் பக்கத்துல இருக்காங்க.. மீட்டிங் அறைக்கு எதிர்ப்புறத்துல. கீழேயிறங்கி வந்து பக்கவாட்டுக் கதவு வழியா வெளியே வந்துடுங்க. நான் அங்கே இருக்கேன். வெளியே சாலையில் கார் காத்திருக்கு.''

விர்ஜீனியா ஒப்புதலாய் தலையசைத்தார். வேகமாய் இரவு உடையினை மாற்றிக்கொண்டார். தோல் தொப்பியையும் எடுத்துக் கொண்டார்.

ஓசையேயெழுப்பாமல் நழுவலாய் கீழிறங்கி போனவர் சுற்றியிருந்த பக்கவாட்டுக் கதவின் தாழ்ப்பாள்களை அவிழ்த்து விட்டார். ஜஸ்ட் ஓரிரு கணங்கள் அவர் காத்திருந்தார்... பிறகு மதத்துக்காகப்போரிட்ட அவருடைய மூதாதையர்களின் *வெற்றி நிச்சயம்* என்ற வீறு கொண்ட நடையினை இவரும் நடந்து, கதவினைத் தாண்டினார்.

அத்தியாயம் 26

# அக்டோபர், 13

அக்டோபர் 13, புதன்கிழமை காலை பத்து மணிக்கு ஆண்டனி கேட் ஹாரிட்ஜ் ஓட்டலுக்குள் சென்று அங்கு ஓர் அறையெடுத்துத் தங்கியிருந்த பேரான் லாலோப்ரெட்ஜ்ஸெல் - ஐச் சந்திக்க வேண்டும் என்று சொன்னார்.

குறிப்பிட்ட காலதாமதத்துக்குப் பிறகு ஆண்டனி கேட் டிருந்த அறைக்கு அவர் கூட்டிப் போகப்பட்டார். விறைப்பான முறையில் அங்கு பேரான் நின்றுக் கொண்டிருந்தார். கேப்டன் ஆன்ரஸ்ஸியும் அவரைப் போன்ற போக்கிலேயே ஆனால் நாடு கடத்தப்பட்ட ஒரு தினுசில் அங்கு இருந்தார்.

சம்பிரதாயக் கைகுலுக்கல்கள், முதுகு வளைத்துத் தெரிவிக்கப்படும் பாரம்பரிய வணக்கங்கள் ஆகிய பழமையான வரவேற்புகள் இடம்பெற்று முடிந்தன. வழக்கமான போக்கில் உரையாடலில் சரளமாய் தற்போது இறங்கியிருந்தார் ஆண்டனி.

''இத்தனை சீக்கிரமா உங்களை வந்து தொந்தரவு பண்ணுவதை மன்னிப்பீங்கன்னு நினைக்கிறேன் பேரான்'' என்று தனது தொப்பி மற்றும் கைத்தடி ஆகியவற்றை அருகிலிருந்த மேஜையில் வைத்தபடி உற்சாகமாய் குறிப்பிட்டார் அவர். ''ஒரு சின்ன பிஸினஸ் பற்றிய சமாச்சாரத்தை உங்களோட ஆலோசிக்க வந்திருக்கேன்'' என்றார்.

''ஆஹ்! அப்படியா?''

ஆண்டனி மீதான ஆரம்பக்கால சந்தேகத்திலிருந்து இன்னும் விடுபடாமலேயிருக்கும் ஆன்ரஸ்ஸி அவரை சந்தேகக்கண் கொண்டு பார்த்தார்.

''இந்த பிஸினஸ்..'' என விளக்க ஆரம்பித்த ஆண்டனி, ''வழக்கமான கொடுக்கல் வாங்கல் பின்னணியிலேயே இருக்கும்'' என்றார். ''உங்களுக்கு எதுவோ வேணும், அதை இன்னொரு மனுஷன் வெச்சிருக்கான். இதுல விடுபட்டிருக்கும் ஒரேயொரு சமாச்சாரம் - விலை பேசுதல்.''

ஆண்டனியைக் கூர்மையாய்க் கவனித்துக் கொண்டிருந்தார் பேரான். ஆனால் எதுவும் பேசவில்லை.

''ஹெர்ஸோ - ஸ்லோவோக்கியாவின் ஒரு தாராள மனிதனுக்கும் இங்கிலாந்தின் ஒரு மதிப்பிற்குரிய ஜென்டில்மேனுக்கும் இடையே பேரம் சுலபமா முடிஞ்சுடும்'' என்றார் ஆண்டனி, சற்று துரிதமாய்.

இப்படிச் சொல்லி முடிந்ததுமே ஆண்டனியின் முகம் சற்று பூரித்தது. இப்படி கவிதையாய் வரிகளெல்லாம் இவர் உதட்டில் சீக்கிரம் விளையவல்லவை கிடையாது. ஆனால், முன்பு பல சந்தர்ப்பங்களில் இவ்வாறாய் அமைக்கப்படும் பதங்கள் பேரானின் மனப்போக்கில் உண்டு பண்ணவல்ல அபரிமித விளைவுகளை அனுபவித்தவராவார் ஆண்டனி. அதேபோலவே, இந்த உற்சாகத் திட்டம், இப்போதும் ஒத்துழைத்தது.

''சரி'' என்றார் பேரான் ஆமோதிப்பாய், ''ரொம்ப சரி.''

ஆன்ரஸ்ஸி கூட சற்று முன் வளைந்து வந்து ஆமோதிப்பைக் காட்டினார்.

''வெரி குட்'' என்ற ஆண்டனி, ''இந்த நொடியில Loyalist கழகமான உங்களோட ராஜ விசுவாசிகள் சமூகம், அரசியல் தலைவராக ஒரு ராஜகுமாரன் இல்லாம தத்தளிச்சுக்கிட்டிருக்கு. ஒரு இளவரசரை முன்நிறுத்த முடியாம உங்க கட்சி கடலலை மரத்துண்டு போல திசை தெரியாம தடுமாறிக்கிட்டிருக்கு. ரைட்? உங்க கட்சி - 'மைனஸ் இளவரசர்!' இப்போ ஒரு பேச்சுக்கு - பேச்சுக்கு மட்டுந்தான் சொல்றேன் - என்னால உங்களுக்கு ஓர் இளவரசை சப்ளை பண்ண முடியுதுனு வெச்சுக்குவம்.''

பேரான் முழித்தார். ''நீங்க என்ன சொல்றீங்கன்னு ஒரு துளி கூட என்னால புரிஞ்சுக்க முடியலே.''

''ஸார்..'' என்று மீசையை முறுக்கி விட்டபடி ஆண்டனியை அழைத்த ஆன்ரஸ்ஸி ''நீங்க எங்களை அவமானப்படுத்தறீங்க'' என்றார்.

''நாட் அட் ஆல்'' என்றார் ஆண்டனி. ''உதவிகரமா இருக்கத்தான் நான் முயற்சி பண்ணிக்கிட்டிருக்கேன். அத்தியாவசியத் தேவையும், அதை ஈடுகட்ட சப்ளையும் - விளங்குதா? இதெல்லாம் எங்கும் நடப்பவைதான். சகஜமானவைதான். முத்திரையில்லாத சொத்தையைக் கொண்டு வந்து நான் இளவரசர் என சப்ளை பண்ணப் போவது கிடையாது. எல்லாரும் அங்கீகரிக்க ட்ரேட் மார்க் முத்திரை அவசியம் - யெஸ், எனக்கும் அது தெரியும். நாம ஒரு முடிவுக்கு வரும்போது, என் இவ்வார்த்தைகள் புரியும். நான், உங்களுக்கு, நிஜமான, போலியற்ற பொருளை சப்ளை பண்ணக் காத்திருக்கேன்.''

''இன்னும் கூட உங்களை துளியும் என்னால விளங்கிக்கக் முடியலே'' என்றே சொன்னார் பேரான்.

''விளங்காதது ஒண்ணும் பாதகம் கிடையாது'' என்றார் ஆண்டனி கருணையாய். ''நான் சொல்லிக்கிட்டிருக்கும் ஐடியாவில் நீங்க முதல்ல புழங்கணும்னு நான் விரும்பறேன். வெளிப்படையா சொல்லணும்னா, கையோட நான் சமாச்சாரத்தைக் கொண்டு வந்திருக்கேன். புடிச்சுக்குங்க. அவ்ளோதான்! உங்களுக்கு ஒரு ராஜா வேணும். சில கண்டிஷன்களின் அடிப்படையில் அதை சப்ளை பண்ண நான் ஒத்துக்கிறேன்.''

இப்போது பேரானும் ஆன்ரஸ்ஸியும் கூட்டாக அவரைப் பார்த்து முழி முழியென முழித்தார்கள். ஆண்டனி அவருடைய தொப்பியையும் கைத்தடியையும் கையிலெடுத்துக் கொண்டு புறப்படுவதற்கு தயாரானார்.

''ஜஸ்ட், நான் சொன்னதை யோசிச்சுப் பாருங்க. இப்ப, பேரான், மேற்கொண்டு இன்னுமொரு விஷயமும் இருக்கு. இன்னிக்கு சாயந்திரம் நீங்க *சிம்னீஸ்* வரணும். கூடவே கேப்டன் ஆன்ட்ரஸ்ஸீயும்! பல விசித்திரமான சங்கதிகள் அங்கே இடம் பெறக் கூடிய சாத்தியக் கூறுகள் இருக்கு. இதுக்கு நாம ஒரு முன்பதிவு வெச்சுக்கலாமா? மீட்டிங் அறையில ஒன்பது மணிக்கு? தேங்க் யூ ஜென்டில்மேன். நீங்க அங்கே வருவீங்கன்னு நான் நம்பிக்கிட்டு கிளம்பறேன்.''

பேரான் ஓரடி முன்னுக்கு வந்து ஆண்டனியின் முகத்தைப் பெரும் தேடலோடு கவனித்தார். ''மிஸ்டர் கேட்..'' - அதே நிலையில் அமர்ந்தபடி சொன்ன அவர், ''என்னை வெச்சுக்கிட்ட காமெடி கிமெடி பண்ணலியே'' என்றார்.

தனது பார்வையை தீர்க்கமாய் திருப்பி பதிலளிக்கலானார் ஆண்டனி. ''பேரான்...'' என வித்தியாசமான ஒரு வட்டம் குரலில் தொனிக்க அழைத்த ஆண்டனி, ''இன்னிக்கு இரவு ஏற்பாடு முடிஞ்சதும் இதுல வெறும் பிஸினஸை விட அதிகமா உண்மை மாறாத உத்திரவாதம்தான் மிகுந்திருக்கு என்பதை ஒத்துக்கும் முதல் ஆளா நீங்கதான் இருப்பீங்கன்னு நினைக்கிறேன்'' என்றார்.

பிறகு இரு ஆடவர்களுக்கும் வணக்கங்களைத் தெரிவித்து விட்டு போனார் அவர்.

ஆண்டனியின் அடுத்த சந்திப்பு நகரத்திலேயே நடந்தது.. தனது அடையாள அட்டையைக் கொடுத்து மிஸ்டர் ஹெர்மன் ஐஸக்டீனைச் சந்திக்க வேண்டும் என்றார்.

சிறிது தாமதத்துக்குப் பிறகு, ''நீங்கதானே மிஸ்டர் ஐஸக்டீனைச் சந்திக்க வந்திருப்பது?'' என்று கேட்ட இளையவனால் எதிர் கொள்ளப்பட்டார். ''மன்னிக்கணும், நொடிப் பொழுது ஃப்ரீயா இல்லாம அவர் இன்று காலை முழுமைக்கும் பிஸியா இருக்கார். அந்த மீட்டிங், இந்த மீட்டிங்னு! என்னால ஏதாவது உதவி பண்ண முடியுமா?''

''அவரை நான் தனியா சந்திச்சாகணும்'' என்று அழுத்தி சொன்ன ஆண்டனி, விட்டேற்றித்தனமாய் கூடுதலாய் சொன்னார். ''சிம்னீஸிலிருந்து நேரா நான் வரேன்'' என்றார்.

சிம்னீஸ் என்று உச்சரித்ததில் இளையவன் சற்று உலுக்கப்பட்டான். ''ஓ'' என்றான் அவன் திடீர் சந்தேகத்துடன். ''அப்ப நான் ஏற்பாடு பண்ண முடியுமானு பார்க்கிறேன்.''

''முக்கியமான விஷயம்னு அவரண்டை சொல்லு.''

''லார்ட் கேட்டர்ஹாம் கொடுத்தனுப்பியுள்ள சேதி ஏதாவது'' என ஆலோசித்துப் பார்த்தான் இளையவன்.

''அதுமாதிரி ஏதோ ஒண்ணு'' என்ற ஆண்டனி, ''ஆனா நான் மிஸ்டர் ஐஸக்டீனை உடனடியா தனிமையில சந்திச்சே ஆகணும் என்பதுதான் இதுல கட்டாயமானது'' என்றார்.

இரண்டு நிமிடங்கள் கழித்து உள்ளடங்கியிருந்த ஓர் அற்புத அறைக்குள் ஆண்டனி அழைத்துப் போகப்பட்டார். அங்கு, அவ்வறையை அடைக்குமளவுக்கு போடப்பட்டிருந்த பெரிய குஷன் நாற்காலிகளைப் பார்த்ததில் ஆச்சரியமானார் அவர்.

மிஸ்டர் ஐஸக்டீன் அவர் வரவேற்க எழுந்தார்.

''இப்படி வந்து உங்க வேலைகளுக்கு நட்ட நடுவுல நுழைஞ்சு நான் உங்களை சந்திப்பதற்கு என்னை நீங்க எக்ஸ்க்யூஸ் பண்ணனும்'' என்றார் ஆண்டனி. ''எனக்குத் தேவையான அளவை விட ஒரு நொடி கூட அதிகம் நான் எடுத்துக்க மாட்டேன். இது ஒரு பிஸினஸ் பற்றிய சின்ன சமாச்சாரம்... அதை நான் உங்க முன்னாடி வெச்சுடப் பிரியப்படறேன்.''

முத்தான அவருடைய கரு விழிகளால் ஓரிரு நிமிடங்கள் சிந்தை குலையாது ஆண்டனியைக் கவனித்தார் ஐஸக்டீன். எதிர்பாரா ஒரு கணத்தில் ''சிகரெட் ஒண்ணு எடுத்துக்கங்க'' என்றார், திறந்திருந்த ஒரு முழு சிகரெட் பாக்கெட்டை நீட்டியபடி.

''தேங்க், யூ'' ஒரு சிகரெட்டை எடுத்துக் கொண்டு விட்டு, அவர் கொளுத்திய நீட்டிய தீயினை ஏற்றபடி ''இது அந்த *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின்* பிஸினஸ் பற்றியது'' என தொடர்ந்தார். இப்போது எதிரிலிருந்தவரின் கண்களில் ஏற்பட்ட நொடிப் பொழுது மினுமினுப்பினைக் கவனிக்க ஆண்டனி தவறவில்லை.

மிஸ்டர் ஐஸக்டீன் இரு புருவங்களையும் உயர தூக்கி விட்டு, ''ஆஹ்?'' என கேள்வி கேட்பவரைப் போல சொல்லியபடி விட்டத்தை நிமிர்ந்து பார்க்கலானார்.

''எண்ணெய்'' என்றார் ஆண்டனி, பாலிஷ் பண்ணி தகதகத்துக் கொண்டிருந்த மேஜையின் தளத்தை வருடியபடி. ''அதிசயிக்கத்தக்க கண்டுபிடிப்பு ஆயில்.'' இதற்கு அந்த நிதி நிர்வாகியிடம் உருவான ஒரு சிறு உந்துதலையும் கவனித்தார்.

''பேச வந்த விஷயத்துக்கு வந்துட முடியுமா, மிஸ்டர் கேட்?''

''தாராளமா, மிஸ்டர் ஐஸக்டீன்... அந்த எண்ணெய் சலுகைகள் இன்னொரு கம்பெனிக்குத் தரப்பட்டால் அதுல உங்களுக்குக் கொஞ்சமும் திருப்தியிருக்காதுனு நினைக்கிறேன்..''

''என்ன திட்டம்?'' எதிராளியை நேருக்கு நேராய் பார்த்தபடி சட்டென்று இறங்கிவிட்டார் ஐஸக்டீன்.

''ஒரு பொருத்தமான வாரிசு - பிரிட்டிஷ் ஆதரவை முழுக்கவும் பெற்றுள்ள ஒரு உரிமையாளர்.''

''யாரது? எங்கே பிடிச்சே அவனை?''

''அதுதான் என் பிஸினஸே.''

இந்த பதிலடியை சிறு புன்னகையின் மூலம் வீழ்த்தி விட்ட ஐஸக்டீனின் பார்வை இப்போது மேலும் ஆழமானதாகவும் கவனிப்பு நிறைந்ததாகவும் ஆகியிருந்தது.

''நம்பகமான சப்ளை தானா? இதுல கேலிக் கூத்தினை என்னால தாங்கிக்க முடியாது.''

''துல்லியமான அப்பழுக்கற்ற பொருள்.''

''உங்க வார்த்தை மேல நான் நம்பிக்கை வெக்கிறேன்.''

''ஓ.. அப்படினா முழுசா உங்களுக்குள்ளே இன்னும் நம்பிக்கை வரலேனு நினைக்கிறேன்..'' என சிறு ஆர்வம் தொனிக்க சொன்னார் ஆண்டனி.

ஹெர்மன் ஐஸக்டீன் சிரித்தார். ''ஒரு மனுஷன் உண்மையைப் பேசறானா இல்லே பொய் சொல்றானானு பேச்சுலேயே கண்டுபிடிக்கும் திறமை என்கிட்டேயில்லைனா நான் இப்ப இருக்கும் இந்த நிலைமைக்கு வளர்ந்திருக்கவே முடியாது' என்று ஸிம்பிளாய் மறுபதில் தந்தார். ''என்ன கண்டிஷன்கள்?''

''அதே கண்டிஷன்கள், ப்ரின்ஸ் மைக்கேலுக்கு ஒப்புக் கொள்ளப்பட்ட அதே சலுகைகள் வேணும்.''

''உங்களுக்கு?''

''இந்த நொடி வரை எதுவும் வேணாம் - நீங்க இன்னிக்கு ராத்திரி சிம்னீஸ் வரை வரணும் எனும் வேண்டுகோளைத் தவிர.''

''நோ'' என்றார் ஐஸக்டீன், உள்ளூர விளைந்த ஒரு தீர்மானத்தினால். ''அதை என்னால பண்ண முடியாது.''

''ஏன்?''

''டின்னர் வெளியில எடுத்துக்க முன் பதிவு இருக்கு - ஒரு முக்கியமான டின்னரது.''

''இருந்தாலும்...'' என்ற ஆண்டனி சூசகமாய் சொன்னார்: ''அதை நீங்க ஒதுக்கித்தான் ஆகணும் - உங்க நன்மைக்காக.''

''என்ன சொல்றீங்க நீங்க?''

மெதுவாய் பின்வரும் உரையாடலைத் தருமுன் அவரை ஒரு முழு நிமிடமும் பார்த்துக் கொண்டேயிருந்தார் ஆண்டனி. ''ப்ரின்ஸ் மைக்கேல் சுடப்பட்ட துப்பாக்கியைக் கண்டுபிடிச்சுட்டாங்க தெரியுமா? அதை எங்கேயிருந்து கண்டுபிடிச்சாங்கனு உங்களுக்குத் தெரியுமா? உங்களோட சூட் கேஸிலிருந்து.''

''என்ன?'' ஐஸக்டீன் ஏறத்தாழ சேரிலிருந்து விழுந்தே விட்டார். அவரது முகம் இருண்டது. ''என்ன சொல்றீங்க நீங்க? என்ன அர்த்தத்துல போறீங்க நீங்க?''

''விளக்கறேன்'' துப்பாக்கியைக் கண்டுபிடித்ததுடன் தொடர்புள்ள நிகழ்வுகளை ஆண்டனி பவ்யமாய்ச் சொன்னார். இவர் பேசப் பேச எதிரிலிருந்தவரின் முகம் வெளிறிப் போய் பீதியறைந்து ஆனது.

''ஆனா.. ஆனா..'' என ஆண்டனி முடித்ததும் அல்லாடியவர், ''இதெல்லாம் வெறும் பொய்'' என்று அலறினார். ''நான் அதை பெட்டிக்குள்ளே வைக்கவேயில்லை. அதுபற்றி எனக்கு ஒண்ணுமே தெரியாது. இது ஒரு இட்டுக்கட்டப்பட்டுள்ள கதை.''

''இப்படி அதிராதீங்க ப்ளீஸ்'' என்றார் ஆண்டனி இதமாய். ''நீங்க சொல்வதுதான் உண்மைனா அதை நீங்க சுலபமா நிரூபிக்கலாம்.''

''நிரூபிப்பது? எப்படி நிரூபிப்பேன்?''

''நான் உங்க நிலைமையில இருந்தால்...'' என்ற ஆண்டனி, ''நேரா இன்னிக்கு ராத்திரி நான் *சிம்னீஸ்* வருவேன்.''

''வந்து?'' - ஐஸக்டீன் அவரை சந்தேகமாய் பார்த்தார். ''இதைத்தான் நீங்க ஆலோசிக்க விரும்பறீங்களா?''

ஆண்டனி நாற்காலியினின்றும் சற்று முன் நகர்ந்து வந்து கிசுகிசுத்தார். நிதி நிர்வாகி ஆச்சரியப்பட்டுப் போய் கண்கொட்டாமல் அவரையே முறைத்த வண்ணமிருந்தார்.

''அப்ப - நீங்க - என்ன - சொல்ல வறீங்க? அதாவது...''

''வந்து பாருங்க'' என முடித்தார் ஆண்டனி.

## அத்தியாயம் 27

# அக்டோபர் 13, தொடர்ச்சி

மீட்டிங் அறையிலிருந்த கடியாரம் ஒன்பது அடித்தது. "வெல்.." என்றார் கேட்டர்ஹாம் ஆழமான பெருமூச்சோடு. "எல்லாம் திரும்பி பழையபடி என் வீட்டுக்கே வந்தாச்சு" என்றார் அலுப்புடன்... சிறு கிலியுடன்.

வருத்தமாய் அறையை ஒரு சுற்று பார்த்தார். "ஒரு பணக்கார அமெரிக்கன் என் கையில கெடச்சு அவன் தலையில இந்த சிம்னீஸைக் கட்டிட முடியும்னு ஒரு நிலை உருவானால், அதை உடனே பண்ணிட்டு, நேரா ஏதாவது ஒரு ஓட்டலுக்குப் போய் வாழ்க்கையைத் தொடர்ந்துடுவேன். அங்கே இதுபோல தொந்தரவுகள் தலை நீட்டினா நம்ம பில் என்னனு கேட்டுட்டு ஜஸ்ட் காலி பண்ணிடலாமில்லே?"

"உற்சாகத்தை இழக்காதீங்கப்பா" என்றாள் பண்டில். "ஏதோ நல்லதுக்குத்தான் நாம மிஸ்டர் ஃபிஷ்ஷை இப்ப தற்காலிமா இழந்திருக்கோம்.."

இதற்கு எதிர்மாறான மனோநிலையிலிருந்த லார்ட், "அவரை நான் எப்பவுமே ஒரு விளங்காத ஆச்சரியமானவனாத்தான் பார்த்திருக்கேன்" என்றார். பிறகு: "உன்னோட அந்தக் கவர்ச்சிமிகு இளையவன்தான் என்னைத் தூக்கிட்டு வந்து இந்த பிரச்சினைக்குள்ளே போட்டது. இந்த அலுவலக ரீதியான மீட்டிங்கை எதுக்காக நான் என் வீட்டுக்குள்ளே அனுமதிச்சிருக்கணும்? ஏன் அவன் வேற ஏதாவது நல்ல நகரத்து ஓட்டலா பார்த்துக்கிட்டுப் போய் அவனோட கம்பெனி மீட்டிங்கை நடத்திக்கக் கூடாது? ச்சே!"

"???"

''நம்மை வெச்சுக்கிட்டு எவனும் கேலி காமெடி பண்ணாம இருக்கணும்'' என்றார் அப்பா நரம்பு அதிர. ''இனிமேலும் என்னால தாங்காது'' என்றார் கிலியாய். ''நான் அந்த லெமனை நம்புவதே கிடையாது. பிரெஞ்சுப் பய, பிரெஞ்சுக்காரங்க என்ன பண்ணுவானுங் கன்னே எனக்குத் தெரியாது.''

புலம்பலைத் தடுக்கும் விதமாய், கதவு திறந்துக் கொண்டு, உள்ளே வந்த ட்ரெட்வெல் அறிவித்தான். ''மிஸ்டர் ஜார்ஜ் லொமெக்ஸ், மிஸ்டர் எவர்ஸ்லே.''

''ம்கும். கோலிக்குண்டுக் கண்ணன் மற்றும் அவனது நன்றி நாய்'' என முணுமுணுத்தாள் பண்டில்.

பொதுயிடங்களில் காட்டும் மரியாதை பொதிந்து கேட்டர்ஹாமுக்கு ஜார்ஜ் வணக்கம் வைக்க, பில் சுருக்கு வழியில் முன்னேறி பண்டிலை நெருங்கினான்.

''உங்க சேதி கிடைச்சு இங்கே வந்திருக்கேன்'' என்றார் ஜார்ஜ், லார்டின் கைகளை அழுத்திக் குலுக்கிக்கொண்டே.

''ரொம்ப நன்றி ஸார், ரொம்ப நன்றி! உங்களைப் பார்த்ததுல அத்தனை ஆனந்தம் - எனக்கு!'' பிரமாதமாய் பாராட்ட ஒன்றுமே கிடையாது எனும் பொழுதிலெல்லாம் கேட்டர்ஹாமின் மனச்சாட்சி அவரை தேவையற்று அதிகம் பாராட்ட வைக்கும். ''சொல்லப் போனா அது என்னோட நேரடி அழைப்பு கிடையாது... ஆனாலும் வந்தது பாதகமில்லே'' என்று விட்டார்.

இதற்கிடையில் பில், கீழ் ஸ்தாயியில் பண்டிலை வாரி விட்டுக் கொண்டிருந்தான்: ''ஏய், என்ன இந்தக் கூத்தெல்லாம்? விர்ஜீனியா நட்ட நடு ராத்திரியில கிளம்பிப் போயிட்டதா நான் கேள்விப்பட்டதன் அர்த்தம்தான் என்ன? அவங்க கடத்தப்படலே, இல்லே?''

''ஓ, நோ''என்றாள் பண்டில். ''பழைய பஞ்சாங்க வழக்கப்படி நடுவிலிருந்த ஒரு குஷன் நாற்காலியின் பிரதான மையத்துல ஒரு சீட்டுக் குறிப்பைப் பின் பண்ணி வெச்சுட்டுப் போயிருக்காங்க.''

''யாரோடயும் கூட்டு சேர்ந்து அவங்க வெளியேறலியே, ஆங்? அந்த கேட் பய கூட? அவனை எப்பவுமே எனக்குப் பிடிச்சது கிடையாது. அவனே கூட மோசமானவன் தான்னு ஒரு சேதி காத்துல மிதந்துக் கிட்டிருப்பதை நானே கேட்டிருக்கேன். ஆனாலும், அவன் அப்படிப்பட்டவனா இருக்க முடியுமானு எனக்கே விளங்கலே.''

''ஏன் கூடாது?''

''வெல், இந்த கிங் விக்டர் ஓ ஃபிரெஞ்சு ஆளு.. மிஸ்டர் கேட் ஆங்கிலேயன்.''

''கிங் விக்டர் ஒரு பன்மொழி வித்தகன் என்பதையும் அவன் பாதி ஐரீஷ்காரன் என்பதையும் நீ கேட்டதில்லே போல!''

''ஓ காட்! அதனாலதான் அவர் ஓர் அந்நியன் மாதிரி சராசரியா தட்டுப்படாத ஒரு தினுசா இருக்காரா?''

''அதெல்லாம் நான் கவனிக்கலேப்பா. நேற்றுக்கு முந்தைய நாள் திடீர்னு அவராகவே காணாமப் போயிட்டார். உனக்கே இது தெரியும். இன்னிக்கு அவர்கிட்டேயிருந்து ஒரு தந்தி. இன்றிரவு ஒன்பது மணிக்கு அவர் இங்கே வருவதாய். எல்லோரும் வரணும்னு கேட்டிருந்தார். அவரோட கோரிக்கையின்படி எல்லாரும் வந்தாச்சு.''

''அப்ப இது ஓர் அளவளாவல்'' என்றான் பில் சுற்றிவர பார்த்தபடி. ''ஒரு பிரெஞ்சு டிடெக்டிவ் ஜன்னலோரமாய். ஓர் ஆங்கிலேய காவலதிகாரி கனப்பு கிட்டே.''

உடனே மறுப்பாய் தலையசைத்தபடி இடைபுகுந்த பண்டில், ''மிஸ்டர் ஃபிஷ் காத்தோட காத்தாயிட்டார். விர்ஜீனியாவும் இங்கே இல்லே. மீதியெல்லாரும் கூடியாச்சு. என் எலும்பெல்லாம் பிலுபிலுனு ஓர் உணர்வு ஓடுது பில். இப்ப ஒருத்தர் திடீர்னு எழுந்து 'இதோ இவந்தான் கொலைகாரன்'னு கை நீட்டுவாங்கன்னு! ஆண்டனி வரணும்... அதுக்கு மட்டுந்தான் நாம காத்திருக்கோம்.''

''அவர் வரவே மாட்டார்'' சொன்னான் பில்.

''அப்ப, அப்பா சொல்றாப்ல - எதுக்காக இந்த கம்பெனி மீட்டிங்?''

''ஆஹ்.. இதுக்குப் பின்னாடி ஓர் ஆழமான ஏற்பாடு இருக்கு. கவனி... அவர் வேற எங்கேயோ இருக்கும்போது எல்லாரும் இங்கேயே இருக்கணும் என்பதுதான் அந்த ஏற்பாடு. இதுபோல படிச்சதில்லே?

''அப்படினா அவர் இங்கே வரவே மாட்[illegible]ன்னா சொல்றே?''

''வேற? சிங்கத்தின் வாய்க்குள்ளே கொண்டு வந்து தலையை நுழைப்பாரா என்ன? திரும்பின பக்கமெல்லாம் துப்பறியும் மேதைகளா இருக்கும் இந்த அறையே பயமாயிருக்குப்பா.''

''இதெல்லாம் கிங் விக்டரை அசைச்சுடும்னு நெனச்சேனா உனக்கு அவனைப் பற்றி முழுசா தெரியலே[illegible]தான் அர்த்தம். இதுபோன்ற

சந்தர்ப்பங்களைத்தான் அவன் வேற எந்த சந்தர்ப்பங்களை விடவும் மிகவும் அதிகமாக நேசிப்பது. இப்படிப்பட்ட சுழலிலிருந்து எப்படியாவது மேலெழுந்து தப்பித்து விடுவதும் அவனுடைய திறமையே.''

சந்தேகமாய் எர்ஸ்லே தலையை மறுத்து அசைத்தபோது, கதவு மீண்டும் திறக்கப்பட்டு ட்ரெட்வெல் வந்து நின்று அறிவித்தான்:

''மிஸ்டர் கேட்.''

ஆண்டனி நேராய் வீட்டு எஜமானனை நோக்கி வந்து நின்றார். ''லார்ட் கேட்டர்ஹாம்'' என அழைத்தவர், ''நான் உங்களுக்கு படு பயங்கரமான தொந்தரவுகள் தந்துக்கிட்டிருக்கேன். அதுக்கு வேண்டிய அளவுக்கு நான் மன்னிப்புகள் கேட்டுக்கிறேன். ஆனா, நிச்சயமா இன்றைய இரவு, இந்த மர்மத்தை உடைச்சுப் போட்டு வெளிச்சம் காட்டும்னு நான் நம்பறேன்'' என்றார்.

லார்ட் கேட்டர்ஹாமுக்கு எப்போதுமே ஆண்டனியின் மீது ரகசிய விருப்பு உண்டு. எனவே நெஞ்சார ''ஒரு கஷ்டமும் நீங்க தந்துடலே'' என்றார்.

''நீங்க ரொம்ப கனிவானவர்'' என்றார் ஆண்டனி. ''இங்க எல்லாரும் இருப்பதா தெரியுது. அப்ப நான் என்னோட சுபகாரியத்தைத் துவங்கிடலாம்னு நினைக்கிறேன்.''

''எனக்கு விளங்கலே?'' என்று இப்போது கனமாய் சொன்னார் ஜார்ஜ் லொமெக்ஸ். ''கொஞ்சங்கூட எனக்கு விளங்கலே. இதெல்லாம் கூத்தாயிருக்கு. இதுல மிஸ்டர் கேட்டுக்கு எவ்வித தொடர்பும் கிடையாது - எந்த வகையிலும் எவ்விதமான தொடர்பும் கிடையாது. சூழ்நிலையோ மிகவும் கடுமையான நுண்ணிய ஒரு சூழ்நிலை. நான் என்ன சொல்ல வரேன்னா..''

ஜார்ஜின் சாமானியத்துக்கு நிறுத்த முடியாத தொடர் சொற்பொழிவு அடக்கப்பட்டது. ''எதுவும் சொல்ல வரவேணாம்'' என்றபடி இந்த க்ரேட் மனிதனை நோக்கி வந்த சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் அவர் காதில் என்னத்தையோ கிசுகிசுப்பாய் ஓதினார். ஜார்ஜ் நடுநடுங்கி வாயடைத்துப் போனவரானார். ''நீங்க சொன்னா சரிதான்'' என்றார் கறுவியபடி. பிறகு பெருங்குரலெடுத்து ''நாம எல்லாரும் இப்ப ஆண்டனி என்ன சொல்லப் போறார்னு கேட்போம்'' என்றார்.

இதற்குப் படபடவென வந்த அங்கிருந்தோரின் பதிலுரைகளை ஒதுக்கித் தள்ளினார் ஆண்டனி.

''இது, ஜஸ்ட் என்னோட ஒரு சின்ன ஐடியா... அவ்ளோதான். சங்கேத மொழியிலிருந்த ஒரு சேதியை நாம கண்டெடுத்தோம் என்பது இங்கிருக்கும் நீங்க எல்லாரும் அறிந்த ஒன்றுதான். அதில் ரிச்மண்ட் என்ற பேரும் சில எண்களும் பிரதானமாயிருந்தன.'' இங்கு சற்று தாமதித்து நிறுத்தினார். ''இந்த சங்கேதத்தைக் கண்டுபிடிக்க நாம முயற்சி செஞ்சு தோற்றுப் போனோம். இப்ப, கவுண்ட் ஸ்டைல்பிச்சின் சுயசரிதையின் ஒரு பகுதியை நினைவூட்டிப்போம் - அதை நான் படிக்கும்படி ஆனது. அதுல ஒரு 'பூ இரவு விருந்து' எனும் விருந்து குறிப்பிடப்பட்டிருக்கு. பூவைக் குறிக்கும் பேட்ஜ் ஒன்றினை அணிந்துக் கொண்டுதான் அந்த டின்னர்ல எல்லாரும் கலந்துக்கணும் என்பது ஒரு பொதுவிதி. ரகசிய பாதையில இருந்த குழியிலிருந்து நாம கண்டெடுத்த விசித்திரமான இதனை கவுண்ட்டேகூட அணிந்துதான் விருந்துக்குப் போயிருக்கார். அதிலிருந்த மலர்: ரோஸ். Rose. ரோஜாப் பூ. கொஞ்சம் நினைவுபடுத்திப் பாருங்க... எல்லாம் *ரோஸ்,* அதாவது R O W S, Rows தான்னு - வரிசைதான்னு - உங்களுக்கு நினைவுக்கு வரும். பட்டன்கள், வரிசையான E-க்கள், வரிசையாய் கோர்க்கப்படும் தையல் வேலைப்பாடு! இப்ப ஜென்டில்மேன், rows அதாவது வரிசையை எடுத்துப்போம். இந்த வீட்டுல வரிசையா எதெல்லாம் அடுக்கப்பட்டிருக்கு? புத்தகங்கள், இல்லையா? இதை எடுத்துக்கிட்டோம்னா லார்ட் கேட்டர்ஹாமுடைய படிக்குமறையில் உள்ள புத்தக கலெக்ஷன்ல, ரிச்மண்ட் பிரபுவின் வாழ்க்கை எனும் புத்தகம் ஒண்ணு இருக்கு. இந்த க்ளூவில், அது மறைச்சு வைக்கப்பட்டிருக்கும் இடம் பற்றிய வெகு துல்லியமான ஓர் ஐடியா கிடைச்சுடும்னு நினைக்கிறேன். இந்தப் புத்தகம் அலமாரியில் உள்ள இடத்தை ஆரம்பப் புள்ளியா எடுத்துக்கிட்டு, தட்டுகளையும், புத்தகங்களையும் அந்த எண்கள் குறிப்பிடுகின்றன என்று எடுத்துக் கொண்டால், நாம அந்தப் பொருள் வெறும் ஒரு புத்தகத்துக்குள்ளே மறைச்சு வைக்கப்பட்டிருக்குனு விளங்கிப்போம்னு நினைக்கிறேன். அல்லது அந்தக் குறிப்பிட்ட புத்தகத்தின் பின்னாலிருக்கும் ஒரு குழி அல்லது அது போன்ற ஏதோவொரு மறைவிடத்தில்!''

தற்பெருமை பொங்க கரகோஷக் கைதட்டுதல்கள் கிடைக்கும் என்று சுற்றி வர ஒருமுறை பார்த்தார் ஆண்டனி.

''இதுவொரு அசாதாரண கண்டுபிடிப்பு ஆண்டனி... சத்யம் பண்றேன்'' என்றார் லார்ட்.

''மாபெரும் சாதுர்யமான கண்டுபிடிப்பு'' என்ற இறுக்கமாய் ஒப்புக் கொண்டார் ஜார்ஜ். ''ஆனா இதை நிரூபித்துப் பார்க்க வேண்டியிருக்கு.''

ஆண்டனி சிரித்தார். ''உள்ளங்கை நெல்லிக்கனியைக் காட்டுங்கறீங்க'' என்றார். ''வெல், நானதை பண்றேன்'' - சொன்னவர் துள்ளியெழுந்தார். ''நான் இப்பவே லைப்ரரிக்குப் போய்..''

இதற்கு மேல் அவர் பேச முடியவில்லை. ஓரடி எடுத்து வைக்க இயலவில்லை. ஜன்னலருகிலிருந்த லெமன் திரும்பி வந்தார். ''ஜஸ்ட் ஒன் மினிட் மிஸ்டர் கேட்'' என்றார். ''உங்க அனுமதியோட, லார்ட் கேட்டர்ஹாம்..'' என்றவர், மளமளவென டேபிளுக்குப் போய் சிறு துண்டுக் காகிதம் எடுத்து கிறுக்கலாய் என்னவோ எழுதினார். அதை ஓர் உறைக்குள் வைத்து ஒட்டியவர் மணியடித்தார். பதிலாய் ட்ரெட்வெல் வந்து நின்றான், லெமன் அக்குறிப்பினை அவனிடம் தந்தார்.

''இது உடனடியா பட்டுவாடா ஆகணும், செய்.''

''நல்லது, ஸார்.''

என்ன செய்வதென்று தெரியாமல் நின்றுப் போயிருந்த ஆண்டனி மறுபடியும் உட்கார்ந்துக் கொண்டார். ''என்ன பெரிய ஐடியா இது, லெமன்?'' என மிருதுவாய் கேட்டார்.

அங்கு சூழ்நிலையில் திடுமென இறுக்கம் கூடியது.

''நீங்க குறிப்பிடும் இடத்துலதான் அந்த நகையிருக்கு என்றால் - வெல்... ஏழு வருஷத்துக்கும் மேலாக அங்கேயே இருந்த அந்த நகை - கூடுதலா ஒரு கால் மணி நேரம் இருப்பதுல ஒண்ணும் குறைஞ்சுடாது, இல்லையா?''

''மேலே பேசுங்க'' என்றார் ஆண்டனி. ''நீங்க சொல்ல வந்தது இது மட்டும் கிடையாதுனு நினைக்கிறேன்.''

''நோ, இது மட்டும் கிடையாது. இப்போதைக்கு இது மட்டும். இந்த அறையிலிருந்து எந்த மனுஷனையும் நகர விடுவது புத்திசாலித் தனமாகாது. குறிப்பா, அந்த மனிதனின் கடந்தக் காலம் பல கேள்விக்குறிகளைத் தாங்கியிருக்கிறது என்றால்!''

தனது புருவங்களை நன்கு தூக்கிக் கொண்ட ஆண்டனி ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார். ''ஒரு வீர தீரனின் வாழ்க்கை, மரியாதையோடு பார்க்கப்படாது போல தெரியுது'' என முணுமுணுத்துக் கொண்டார்.

''மிஸ்டர் கேட்... மூணு மாதங்களுக்கு முன்னால் நீங்க தென் ஆப்பிரிக்காவில இருந்திருக்கீங்க. இது ஒப்புக் கொள்ளப்பட்டது. இதுக்கு முன்னாடி நீங்க எங்கே இருந்தீங்க?''

''கனடா, பயங்கரமான வடகிழக்கு.''

''ஒரு சிறையில நீங்க இல்லைனு சொல்ல வரீங்களா? ஒரு பிரெஞ்சு சிறையில?''

இயந்திரத்தனமாய் கதவு நோக்கி சட்டென போய் நின்றுக் கொண்டார் பேட்டில்... ஒருவேளை ஆண்டனி தப்பித்து ஓடினால் அப்படியே அவரை அமுக்கி விட. ஆனால் அப்படி ஏதும் நாடகத்தனமான செயல்கள் எதையும் ஆண்டனி செய்துவிடவில்லை.

மாறாக பிரெஞ்சு டிடெக்டிவ்வையே முறைத்துக் கொண்டிருந்த அவர் பிறகு சிரிப்பில் வெடித்து விட்டார். ''மை டியர் லெமன். உங்களுக்கு விக்டர் மேனியா பிடிச்சிருக்கு! பார்க்கும் எதுவுமே உங்களுக்கு கிங் விக்டர்தான். அதனாலதான் நானும் அந்த இண்டர்டிங் ஜென்டில்மேனா உங்களுக்குத் தெரியறேன்.''

''அப்ப நீங்க மறுக்கறீங்களா?''

தனது கோட் காலரில் விழுந்திருந்த சிறு சாம்பல் தூசியினைத் தட்டி விட்டார் ஆண்டனி. ''என்னை ஆச்சரியப்படுத்தும் எதையும் நான் கொண்டாடாமல் மறுப்பது கிடையாது'' என்றார் லகுவாய். ''இருந்தாலும் இந்தக் குற்றச்சாட்டு கேலிக் கூத்தின் உச்சம்.''

''ஆஹ்! உங்களுக்கு அப்படியா படுது?'' என்ற பிரெஞ்சு டிடெக்டிவ் முன்னுக்கு வளைந்து வந்தார். வலி கொண்டது போல அவருடைய முகம் இப்போது திருகலெடுத்தது. ஆண்டனியின் நடவடிக்கைகளில் எதுவோ அவருக்கு விளங்காமல் இருப்பது போல, அவரது முகம் படபடப்பினைப் பிரதிபலித்தது. ''ஒண்ணு தெரிஞ்சுக்குங்க, மிஸ்டர். இந்த முறை - இந்த முறை - கிங் விக்டரை நான் பிடிச்சே தீருவேன். இதிலிருந்து என்னை எதுவும் தடுக்க முடியாது.''

''கேட்கப் பிரமாதமாதானிருக்கு'' என்பது ஆண்டனியின் வர்ணிப்பாய் அமைந்தது. ''முன்னாடியும் அவனைப் பிடிக்க இப்படி நீங்க முயற்சிகள் மேற்கொண்டது உண்டு லெமன்... ஆனா பிடிக்க முடியலே. உங்களை விட ஒரு படி மேலேயே இருந்து தப்பிச்சுட்டான் அவன். அதுவே இந்த முறையும் நடக்காதுனு என்ன நிச்சயம்? அவன் கழுவும் மீனில் நழுவும் வகை.''

டிடெக்டிவ்வுக்கும் ஆண்டனிக்கும் இடையே மட்டுமே நடக்கும் ஒரு நேர்முக உரையாடல் போல ஆனது இது. அறையிலிருந்த மீதி அத்தனை பேருக்கும், உருவாகி வலுக்கும் இறுக்கும் தெரிந்தேயிருந்தது. கேஸில் உண்மையாய் உழைத்துக் கொண்டிருந்த ஒரு பிரெஞ்சு துப்பறியும் அதிகாரிக்கும் உலகத்தில் எது பற்றியும் தனக்கு அக்கறை கிடையாது என்ற தொனியில் பேசிக் கொண்டும் இப்போது போய் சாந்தமாய் சிகரெட்டினை ஊதிக் கொண்டுமிருந்த ஒருவனுக்கும் இடையே நடக்கும் ஒண்டிக்கு ஒண்டி சண்டையாய் உருமாறிக் கொண்டிருந்தது, உரையாடல்.

''உங்க நிலைமையில் நானிருந்தால்'' என தொடர்ந்த ஆண்டனி, ''நான் ரொம்ப ரொம்ப ஜாக்கிரதையா இருப்பேன். உங்களோட ஒவ்வோர் அசைவுகளையும் கண்காணிச்சுக்கிட்டு குறிச்சுக்கிட்டு...'' என சிரித்தபடி முடித்தார்.

''இந்த தடவை, ஒரு தப்பு நடக்காது.''

''இதுல நீங்க ரொம்பவும் ஸ்திரமா இருக்கிறாப்ல தோணுது. ஆனா, நிரூபிக்க சாட்சிகள்லாம் கேட்பாங்க, தெரியுமில்லே?''

லெமன் சிரிக்க அச்சிரிப்பிலிருந்து ஏதோ ஒன்று ஆண்டனியின் கவனத்தை ஈர்த்தது. நிமிர்ந்து உட்கார்ந்துக் கொண்டார். சிகரெட் சாம்பலினைத் தட்டினார்.

''இப்ப நான் ஒரு குறிப்பு எழுதிக் கொடுத்தனுப்பியதை நீங்க பார்த்தீங்க இல்லே?'' என்றார் ப்ரெஞ்சு டிடெக்டிவ். ''விடுதியில் தங்கியிருக்கும் என் ஆட்களுக்கானது அது. பிரான்ஸிலிருந்து நேற்று எனக்கு கிங் விக்டருடைய விரல் ரேகைகளும் அவனுடைய காதின் அளவுகளும் வந்தன - அதாவது கேப்டன் ஓ நீல். இங்கிருக்கும் எனக்கு அனுப்பி வைக்குமாறு நான்தான் வேண்டியிருந்தேன். இன்னும் சில நிமிடங்கள்ல நீங்கதான் அந்த மனிதனானு தெரிஞ்சுடும்!''

ஆண்டனி அசையாது அவரையே முறைத்தார். பிறகு ஒரு சிறு புன்னகை அவருடைய முகத்தில் விளைந்தது.

''நான் நினைச்சு கூட பார்த்ததில்லே லெமன்.. நீங்க மகா புத்திசாலி! டாகுமெண்ட்ஸ் இப்ப வரும். நீங்க உடனே என்னை இங்க்ல விரலை நனைக்க வெப்பீங்க, இல்லே இதுக்கு இணையா ஏதாவது அநாச்சாரத்தைப் பண்ணுவீங்க.. கைரேகை ஒப்பிடுதல்! பிறகு என்

காதுகளை அளந்து, சரி பார்த்து... அட அடா! ஒருவேளை வந்திருக்கும் முடிவுகளோடு என்னுடையவையும் ஒத்துப் போனால்...''

''வெல்.. அப்படி ஒத்துப் போயிட்டால்?''

ஆண்டனி இருக்கையினின்றும் வளைந்து முன்னுக்கு வந்தார். ''சொல்லுங்க'' என்றார். ''அப்படி இரண்டும் ஒத்துப் போய்விட்டால்? அடுத்து என்ன?''

''அடுத்து என்ன?'' என்று அதே கேள்வியைக் கேட்ட டிடெக்டிவ் பதில் தருவதற்கு பதிலாய் சற்று பின்வாங்கியதாய் பட்டது. ''வெ-ல்... நீங்கதான் கிங் விக்டர்னு நான் நிரூபிச்சதா ஆகிடும், இல்ல?''

இப்படி சொன்ன போதிலும் ஒரு நிலையற்ற படபடப்பு அவர் முகத்தில் இப்போது முதன்முறையாய் படர்ந்தது.

''சந்தேகத்துக்கிடமின்றி அது உங்களுக்கு மட்டும் ஒரு மாபெரும் திருப்தியாய் அமையும். தட்ஸ் ஆல்'' என்றார் ஆண்டனி, வேறெதுவும் பயனிருக்காது என்ற தொனியில். ''இதுல எனக்கு என்ன கெடுதல் விளையும்னு எனக்குத் தெரியலே. நீங்க என்னைப் பற்றி சொல்லும் எதையும் நான் அனுமதிக்கலே.இருந்தாலும், ஒரு பேச்சுக்கு, நான்தான் கிங் விக்டர் என்பதை நான் ஒத்துக்கிறேன்னே வெச்சுப்போம்... நான் வருந்துவேன், தெரியுமா?''

''வருந்துவீங்களா?'' ஒன்றும் விளங்காமல் கேட்டார் லெமன்.

''யெஸ். நீங்க உங்களையே கிங் விக்டருடைய இடத்துல வெச்சுப் பாருங்க லெமன், விளங்கும். உங்க கற்பனையைக் கொஞ்சம் வேலை பண்ண அனுமதியுங்க. நீங்க ஜஸ்ட் இப்பத்தான் சிறையிலிருந்து வெளியே வந்திருக்கீங்க. வாழ்க்கையோட இயைந்து இயங்க ஆரம்பிக்கிறீங்க. வீர தீர சாகச வாழ்க்கையின் முதல் பகுதியை நீங்க இழந்தாச்சு. ஓர் அழகான பொண்ணைப் பார்த்து காதல் வயப்பட்டுட்டீங்கன்னு கூட நாம சேர்ந்துக்கலாம்- பேச்சுக்கு. அதாவது உங்களுக்கு வாழ்க்கையில ஒரு பிடிப்பு வந்துடுச்சுன்னு சொல்ல இந்த இடைச் செருகல்கள். அவளைக் கல்யாணம் கட்டிக்கிட்டு ஏதாவது கிராமத்துல காய்கறி வளர்த்தாவது நிம்மதியா பொழுதுபோனால் போதும்னு ஆகிடறீங்க. இனியாவது வாழ்க்கை குற்றமற்ற ஒண்ணா அமையணும் என்பது உங்களுடைய முடிவு. இப்ப மறுபடியும் உங்களை நீங்க கிங் விக்டரின் இடத்துல வெச்சுப் பாருங்க. அகப்பட்டு விட்டால் - வருந்த மாட்டீங்க?''

''அப்படியெல்லாம் எதையும் நான் உணர மாட்டேன்'' என்றார் லெமன், இத்தனை நீண்ட விளக்கத்தை நீ தந்திருக்கவே வேண்டாம் என்ற தொனி தெறிக்க.

''நீங்க அப்படிதான் இருப்பீங்க'' என ஒப்புதலாய் குத்திக் காட்டி சொன்னார் ஆண்டனி.

''நான்ஸென்ஸ்.''

''ஓ, இது முட்டாள்தனம் கிடையாது, லெமன். கம் ஆன். நான் கிங் விக்டராவே இருந்து விட்டால் எனக்கெதிரா நீங்க என்னவெல்லாம் வெச்சிருக்கீங்க? எந்தக் காலத்திலேயோ நான் எங்கேயோ இருந்தேன்னு நீங்க நினைச்சுக்கிட்டு, அந்தக் காலத்திய சாட்சியங்களுக்கு முயற்சி பண்ணி நிரூபிக்க நினைச்சீங்கன்னா.. அந்த த்ரேதாயுக சாட்சிகளெல்லாம் உங்களுக்குக் கிடைக்கவே கிடைக்காது.

''லெமன். நான் என் தண்டனையை அனுபவிச்சாச்சு. அந்தக் கதை அவ்ளோ தான் - முடிஞ்சாச்சு. இதுக்கு மேல எனக்கெதிரா சாட்சி கட்ட நீங்க ஏதாவது முயற்சி பண்ண நினைச்சீங்கன்னா உங்க டிபார்ட்மெண்ட்டாலேயே உங்க மூக்கு உடைக்கப்படும்.''

''நீங்க ஒரு விஷயத்தை மறந்துட்டுப் பேசறீங்க'' என்றார் லெமன். ''அமெரிக்கா! உங்களை நீங்களாகவே ப்ரின்ஸ் நிக்கோலஸ் ஓப்லோவிட்சா வேடம் மாற்றி நடந்துக்கிட்டது... இப்படி செஞ்சு தப்பான முறையில் ஏகமான பணத்தை அடைய முயற்சித்தது... இதுக்கெல்லாம் என்ன சொல்லப் போறீங்க?''

''மறுபடியும் அந்த பதில்தான்.''

''என்னது அது?''

''நான்ஸென்ஸ்!''

''ஆண்டனி..''

''உஷ். அந்த சமயத்துல நான் அமெரிக்காவுக்குப் பக்கத்துப் பிரதேசங்கள்ல கூட இல்ல. இதை என்னால ரொம்ப சுலபமா நிரூபிச்சுட முடியும். கிங் விக்டர் அமெரிக்காவுல தன்னை ப்ரின்ஸ் நிக்கோலஸா மாறுவேடம் போட்டு நம்ப வெச்சிருக்கான்னா, அப்ப அந்த கிங் விக்டர் நான் கிடையாது. பரிதாபமா இப்படி ஒவ்வொரு கட்டத்துலேயும் தோற்றுக்கிட்டு இருக்கீங்களே லெமன்'' என்ற ஆண்டனி இதற்கு ஆவேசமாய் ஏதோ சொல்ல வாயெடுத்த பிரெஞ்சு டிடெக்டிவ்வைப்

பேச விடாது, ''சொல்லுங்க'' என்று கேட்டார். ''கிங் விக்டர் மாறுவேடம் போட்டார் என்பதுல நீங்க நிச்சயமா இருக்கீங்களா? அது நிஜமான ப்ரின்ஸாவே இருக்கும் வாய்ப்பு கிடையாதா?''

சூப்பரின்டெண்டெண்ட் பேட்டில் திடுமென்று இங்கு இடைபுகுந்தார். ''அவன் ஒரு மாயாவி, ஆண்டனி.''

''உங்க கருத்தை நான் எதிர்க்க விரும்பலே, பேட்டில்'' என்ற ஆண்டனி, ''எப்போதுமே சொல்பவை சரியாகவே இருக்கும்படியான அதிசய குணாதிசயம் கொண்டவர் நீங்க'' என குறிப்பிட்டார். ''இதேபோலவே, காங்கோவிலதான் ப்ரின்ஸ் நிக்கோலஸ் இறந்தார் என்பதிலும் நீங்க கரெக்ட்டாத்தான் இருக்கீங்களா?''

பேட்டில் அவரை ஆர்வமாய்ப் பார்தார். ''அப்படி என்னால சத்தியம் பண்ண முடியாது, ஸார். பொதுவான நம்பிக்கை அது.''

''பேட்டில்... உங்களுடைய கொள்கை என்ன? நிறைய வாய்ப்பு கொடு. இதுதானே, ஆஹ்... ஆமாம், சொல்லியிருக்கீங்க. உங்களோட இதே கொள்கையை நான் அப்படியே இதிலும் கடைப்பிடிச்சிருக்கேன். மிஸ்டர் லெமனுக்கு நான் போதுமான அளவுக்கு வாய்ப்புகள் தந்தேன். ஓட விட்டேன். அவர் சுமத்திய குற்றச்சாட்டுகளை நான் மறுக்கலே. இத்தனையிருந்தும் அவர் ஏமாந்துதான் போகப் போறார்னு என்னால சொல்லாம இருக்க முடியலே. எனது இன்றைய இந்த இரவு முயற்சியில இதைப்போல'' லெமனைக் குறிப்பிட்டுப் பேசினார் - ''ஏதாவது இனிமையற்ற இடையூறுகள் வரும்னு தெரிஞ்சுதான் என்னுடைய கடைசி துருப்புச் சீட்டையும் கையுடனேயே கொண்டு வந்திருக்கேன். அது -ம்ம், அவன் - மேலேயிருக்கான்.''

மிகுந்த ஈடுபாடு கொண்டு ''மாடியிலேயா?'' என்றார் லார்ட் கேட்டர்ஹாம்.

''யெஸ், முயற்சி பண்ணிக்கிட்டிருக்கணும். தலையில் கட்டு. யாரோ அவன் தலையே உடைஞ்சுப் போகுமளவிற்கு நொறுக்கியிருக்காங்க. புவர் ஃபெல்லோ. நான்தான் அவனை கவனிச்சிக்கிட்டிருந்தேன்.''

திடீரென்று ஐஸக்டீனின் ஆழ்ந்தக் குரல் ஒலித்தது. ''அது யார்னு நாம ஊகிப்போமா?''

''உங்களால முடிந்தால்!'' என்றார் ஆண்டனி. ''ஆனா..''

திடீர் ஆக்ரோஷத்துடன் லெமன் இடைபுகுந்தார். "இதெல்லாம் முட்டாள்தனம். என்னை மறுபடியும் ஏமாத்திட்டு ஓடிடலாம்னு திட்டம் போடறே நீ. நீ சொல்வது உண்மையா கூட இருக்கலாம் - அமெரிக்காவுல இல்லேனு சொன்னது. ஆனா இன்னொரு விஷயமும் இருக்கு. கொலை! யெஸ், கொலை. ப்ரின்ஸ் மைக்கேலின் கொலை. நகைகளுக்காக நீ அன்னிக்கு ராத்திரி தேடிக்கிட்டிருந்தபோது அவர் இடையூறா நுழைஞ்சிருக்கார்.."

"ரொம்ப நான்ஸென்ஸா பேசிக்கிட்டேயிருங்கீங்க... ஒரு துப்பறியும் அதிகாரியா கொஞ்சமாவது சாதுர்யமா நடந்துக்குங்க. எப்பவாவது கிங் விக்டர் கொலைல இறங்கியிருப்பதா நீங்க கேள்விப்பட்டதுண்டா?" - கேட்க ஆரம்பித்த ஆண்டனின் குரல் உயர்ந்துக் கொண்டே போனது. "என்னை விட உங்களுக்கு அது தெரியும் - அவன் ரத்தம் சிந்தும் வகை கிடையாது. கொலை அல்ல அவன் வேலை - அது கொள்ளை."

"அப்ப உன்னைத் தவிர வேற யார் அவரைக் கொன்னிருக்க முடியும்?" - ஓவென கத்தினார் லெமன். "எனக்கு அதைச் சொல்லு."

கடைசி வாக்கியம் அவர் உதடுகள் வழியாக வெளியேறி அடங்கியதும் கிறீச்சிடும் ஒரு விஸில் சப்தம் வெளியே டெரஸ் பகுதியிலிருந்து வந்தது. ஆண்டனி துள்ளியெழுந்தார். அப்படியே பறக்கும் அவசரத்தில் நின்றபடி கேட்டார்.

"யார் பிரின்ஸைக் கொன்னதுனு நீங்க கேட்கிறீங்க, இல்லையா?" குரோதத்தில் அலறலாய் பேசினார் அவர். "நான் சொல்ல மாட்டேன் - உங்களுக்கு அவனை நான் காட்டறேன். இந்த விஸில்தான் நான் இத்தனை நேரம் காத்திருந்த சமிக்ஞை. பிரின்ஸ் மைக்கேலைக் கொன்றவன் இப்ப படிக்குமறையின் லைப்ரரியில் இருக்கான்."

பிரெஞ்சு ஜன்னல் வழியாய் குதித்திறங்கி அவர் டெரஸில் விரைய அவரது பாதையை அடியொற்றி ஏனையவர்களும்ஓட, படிக்குமறையின் ஜன்னலருகே போய் அனைவரும் கூடினார்கள். ஆண்டனி ஜன்னலைத் தள்ள, அது இந்தத் தள்ளலுக்கு ஒத்துழைத்தது.

உள்ளே என்ன நடக்கிறது என்பதை ஏனையவர்களும் பார்க்கும் வண்ணம் ஜன்னலின் திரைச் சீலையை மிக மிருதுவாக அவர் விலக்கிக் கொண்டு நின்றார்.

புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்த அலமாரியின் அருகே இருந்தது ஒரு கருமையான உருவம். அங்கிருந்த குண்டு குண்டு

புத்தகங்களை இழுப்பதும் செருகுவதுமாய் முழு கவனத்தோடு அது இயங்கிக் கொண்டிருந்ததால் அதன் இயக்கத்தை வெளியில் உருவாகியிருந்த இந்த சின்னச் சின்ன அரவங்கள் திசை மாற்றவில்லை.

கருமையான அந்த நிழலுருவம் தனது கையில் சுமந்திருந்த டார்ச் வெளிச்சத்தின் தயவோடு. அது யார் என்று கண்டுபிடித்து விட இங்கு அனைவரும் கண்களைத் தீட்டிக் கொண்டு முயற்சி செய்துக் கொண்டிருக்கையில், அவர்கள் பின்னாலிருந்து யாரோ ஒருவன் சிங்கம் போல் உறுமிக் கொண்டு அந்த திறந்த பிரெஞ்சு ஜன்னலின் வழியே குதித்து உள்ளே போய் விட்டான்.

இதில் கீழே விழுந்த டார்ச் அதிர்வில் அணைந்து விட்டது. தாளமுடியாத போராட்டத் துடிப்பு தரும் சப்தம் மட்டுமே அறையை நிறைத்தது. விளக்கு சுவிட்சுகள் நோக்கி தனது நடையைத் துரிதப்படுத்திய லார்ட் கேட்டர்ஹாம் உடனடியாய் அனைத்து எலக்ட்ரிக் விளக்குகளையும் இயக்கினார்.

இரண்டு உருவங்கள் கட்டியுருண்டுக் கொண்டிருந்தன. அவர்கள் பார்த்துக் கொண்டிருந்தபோதே போராட்டத்தின் முடிவு நேர்ந்து விட்டது.

ஒரு சின்ன கூர்மையான பிஸ்டல் வெடிச் சத்தம்... குள்ள உருவம் சுருண்டு கீழே சாய்ந்தது. இன்னொரு உருவம் திரும்பி ஏனையவர்களைப் பார்த்தது - அதே போரீஸ்... அவனது கண்கள் பழிவாங்கும் துடிப்பின் சிவப்பில்.

''இவதான் என் மாஸ்டரைக் கொன்னது''- அவன் உறுமினான். ''இப்ப என்னைச் சுடப் பார்த்தாள். போராட்டத்தின் போதே இவகிட்டேயிருந்து பிஸ்டலை உருவியெடுத்து சுட்டுப் பொசுக்கியிருப்பேன்... ஆனா குழப்பத்துல இவ தானா சுட்டுக்கிட்டா. ம்ம் - செயின்ட் மைக்கேலை சுட்டுட்டார்! பேய் பிடிச்ச இவ - செத்துட்டா..''

''ஒரு பொண்ணா?'' நடுக்கமும் அலறலுமாய் சொன்னார் ஜார்ஜ் லொமெக்ஸ்.

அனைவரும் ஒன்றாய் நெருங்கிப் போனார்கள். இன்னும் கையில் பிஸ்டலைச் சுமந்தபடி முகமெங்கும் பயமுறுத்தும் வன்மம் உறைந்திருக்க தரையில் கிடந்தது- மேடம் ப்ரன்.

## அத்தியாயம் 28

# கிங் விக்டர்

"ஆரம்பத்திலிருந்தே இவளை நான் சந்தேகப்பட்டேன்" என்றார் ஆண்டனி. "கொலை நடந்த இரவு இவளோட விளக்கொன்று எரிஞ்சது. அதுக்கப்புறம் நான் அலைபாய ஆரம்பிச்சேன். இவளைப் பற்றி இவ இருந்த ஊருக்கே நேரா போய் விசாரிச்சுட்டு வந்தேன். விசாரணை யிலிருந்து இவ என்னனு தன்னை அறிமுகம் சொல்லிக்கிட்டாளோ அப்படிப்பட்டவ தான்னு திருப்தியானேன். பொய் கிடையாது. ஆனா நான் ஒரு முட்டாள். ஏன்னா, ப்ரூட்டயில் ராணி ப்ரன் அப்படினு ஒருத்தியைத்தான் வேலைக்கு அமர்த்தியிருக்கா... அவரைப் பற்றியே தான் பெருமையாவும் பேசியிருக்கா. ஆனா, இங்கே புது வேலைக்கு வந்த நிஜ ப்ரன், வரும் வழியில் கடத்தப்பட்டிருக்கலாம் என்பதும் அவருக்கு பதிலா வேற ஒருத்தி அதேபோல இங்கே வந்து தங்கியிருக்கலாம் என்பதும் எனக்கு உறைக்காம போச்சு. இப்படி தோணுவதற்கு பதிலா, என்னோட சந்தேகத்தை நான் ஃபிஷ் பக்கமா திருப்பிட்டேன். டொவர் போன என்னை பின்னாலேயே தொடர்ந்து வந்த ஃபிஷ்ஷும் நானும் அங்கு ஒருத்தருக்கொருத்தர் பரஸ்பர விளக்கங்கள் தந்துக்கிட்ட பிறகுதான் எனக்கு எல்லாமே கிளியராக ஆரம்பிச்சது. ஃபிஷ் ஒரு போலீஸ் இலாகா ஆள் என்றும் கிங் விக்டருக்குப் பின்னால தேடிக்கிட்டு அலைபவர் என்பதும் ஊர்ஜிதமானதும் என் சந்தேகங்கள் மறுபடியும் பழைய நிலைக்கே திரும்பிச்சு.

"மிஸஸ் ரேவல் சந்தேகத்துக்கு அப்பாற்பட்டு இந்தப் பொம்பிளையை அடையாளம் கண்டுக்கிட்டாங்க என்பதுதான் என்னை ரொம்பவும்

சங்கடப்படுத்திக்கிட்டேயிருந்த சங்கதி. பிறகுதான், இவ டினார்ட்டின் ப்ரூட்டயில் ராணியிடம் பணிப் பெண்ணா இருந்தவ என்ற அறிமுகம் தந்ததுக்கு அப்புறம்தான், அவங்களுக்கு திடீர்னு இப்படி ஓர் அடையாளம் தெரிஞ்சது என்பது என் நினைவுக்கு வந்தது. மேலும், இந்தப் பெண்ணுடைய முகம் தனக்குப் பரிச்சயமா இருக்கு என்ற ஒரேயொரு நிஜம் மட்டுந்தான் அவங்க சொன்னதன் சாராம்சம். *சிம்னீஸு*க்கு வருவதிலிருந்து மிஸஸ் ரேவலை எப்படியாவது தள்ளி வெச்சுடணும் என்று வெளிப்படையா ஒரு திட்டம் வகுக்கப்பட்டிருக்கு. இதை சூப்பரின்டெண்டெண்ட் பேட்டிலைக் கேட்டீங்கன்னா விளாவாரியா தெரிஞ்சுக்கலாம். ஒரு பொணத்தை வெச்சு இந்த நாடகத்தை வெற்றிகரமா நடத்தியிருக்காங்க. கொலையுண்ட அந்த ஆளு ஏமாற்றி விட்டான் எனும் காரணத்தால் அவன் *சிகப்புக் கை* கூட்டாளிகளால் தண்டிக்கப்பட்டி ருந்தாலும், அது அரங்கேறியிருந்த விதம் மற்றும் *சிகப்புக்கை* அறிகுறி உடலில் இல்லாதது இவையெல்லாம் வேற ஏதோ சூட்டிகையான இன்டெலிஜன்ட் மூளையின் கைவரிசையை ஆலோசித்தன. ஆரம்பத்திலிருந்தே இதுல ஹெர்ஸோ ஸ்லோவாக்கியாவின் தொடர்பு இருப்பதா எனக்கு சந்தேகம் வலுவா இருந்தது. இந்த வீட்டுல கனெக்ஷன் இருக்கு. ஆரம்பத்துல நான், யாரோ வேற ஒருத்தர்தான் ப்ரின்ஸ் மைக்கேலா அவரோட இடத்துல போய் இருக்கிறதா சந்தேகப்பட்டேன். ஆனா அது முழுக்கவும் தவறான ஊகம் என்பது உடனடியாகவே ஊர்ஜிதமாயிடுச்சு. மேடம் ப்ரன்னுக்குப் பதிலாக இந்தப் பொம்பிளை இங்கே நடப்பட்டிருக்கும் சாத்தியக்கூறு இருக்குனு நான் உணர ஆரம்பிச்சதும் - கூடவே இவளோட முகம் மிஸஸ் ரேவலுக்கு பிரபலமாயிருக்கு எனும் தகவலும் உதவியதுல - எனக்கு வெளிச்சம் தெரிய ஆரம்பிச்சது. இந்தக் கட்டத்துல இவ யார்னு அடையாளம் கண்டுபிடிக்கப்பட்டுடக் கூடாது என்பது எனக்கு மிக முக்கியமான தேவையாக ஆனது. இவளை அடையாளம் காணக் கூடிய ஒரே ஆள், மிஸஸ் ரேவல்.''

''இப்ப இவ யார்?'' - கேட்டது, லார்ட் கேட்டர்ஹாம். ''மிஸஸ் ரேவலுக்கு *ஹெர்ஸோ - ஸ்லோவோக்கியாவுல* அறிமுகமாகியிருந்த யாரோ ஒருத்தரா?''

''இதுக்குப் பதிலை பேரானால சொல்ல முடியும்னு நினைக்கிறேன்'' என்றார் ஆண்டனி.

''நானா?'' பேரான் அவரைப் பார்த்து முழித்தார்... பிறகு கீழே கிடந்த சலனமற்ற உடலை, ''நல்லா கவனியுங்க'' என்ற ஆண்டனி, ''அரிதாரத்தைப் பார்த்து முடிவு பண்ணாதீங்க. அதுக்கும் உள்ளே தேடுங்க. ஒரு காலத்துல இவ ஒரு நடிகை, நினைவுக்கு வருதா?'' என கேட்டார்.

இன்னும் முழித்துக் கொண்டிருந்தார் பேரான். பிறகு திடீரென்று துணுக்குற்றார். ''ஓ, கடவுளே'' என்றார் நெஞ்சடைக்க. ''இது சாத்தியமே இல்லை.''

''எது சாத்தியமில்லை?'' என்று கேட்டது, ஜார்ஜ். ''என்ன நடக்குது இங்கே? யாரிந்தப் பொம்பிளை? அடையாளம் காணமுடியுதா பேரான்? இழுக்காதீங்க, ப்ளீஸ்!''

''நோ, நோ, இது சாத்தியமேயில்லை'' என தொடர்ந்து முணுமுணுத்துக் கொண்டிருந்தார் பேரான். ''அவ கொல்லப்பட்டாச்சு. அவங்க ரெண்டு பேருமே கொல்லப்பட்டாச்சு. அரண்மனையின் படிக்கட்டுகள்ல. பல சாட்சிகள் உண்டு இதுக்கு. அவளோட உடல் கூட கண்டெடுக்கப்பட்டது.''

''சிதிலமடைந்து... அடையாளம் காண முடியாத அளவுக்கு...'' நினைவூட்டினார் ஆண்டனி. ''உலகையே ஏமாத்த முடிஞ்சிருக்கு இவளால! அமெரிக்காவுக்குத் தப்பிச்சு ஓடியிருக்கணும்னு நினைக்கிறேன். அங்கே, சிகப்புக் கை கூட்டாளிங்களின் பயத்தாலேயே, இருக்குமிடம் வெளியே தெரிஞ்சுடாம பாதாளத்துக்குள்ளே இருந்திருக்கணும். புரட்சி வெடிச்சது. கிங் விக்டரும் விடுதலையானான். ரெண்டு மடையன்களும் ஒண்ணா சேர்ந்து நகைகளைக் கொள்ளையடிக்க திட்டமிட்டிருக்காங்க. அன்னிக்கு ராத்திரி இவ அந்த நகையைத்தான் தேடிக்கிட்டிருந்திருக்கா... அப்பத்தான் திடீர்னு ப்ரின்ஸ் மைக்கேலைப் பார்க்கும்படி ஆகியிருக்கு. முகத்துக்கு முகம் - நேருக்கு நேர். அவர் இவளை அடையாளம் கண்டுடறார். இதை இவ துளியும் எதிர்பார்த்திருக்க மாட்டா. கையும் களவுமா அகப்பட்டு விட்ட இவ, பின்விளைவுகளைக் கண நேரத்துல கணக்கிட்டுட்டு - அவரை சுட்டுட்டா. ஐஸக்டீனின் சூட்கேஸ்ல அந்த ரிவால்வரை மறுபடியும் கொண்டு வெச்சது இவதான். வழக்கின் போக்கைக் குழப்ப. கடிதங்களை மீண்டும் திருப்பி வெச்சதும் இவளே.''

லெமன் இப்போது முன்னுக்கு நடந்து வந்தார். ''அன்னிக்கு ராத்திரி நகையைத் தேடுவதற்காக இவ கீழே இறங்கி வந்திருப்பதா நீங்க

சொல்றீங்க'' என்ற அவர், ''ஆனா, அதுக்குப் பதிலா, இவளோட கூட்டாளியான கிங் விக்டரை சந்திப்பதற்காக இவ வீட்டுக்கு வெளியே வந்திருக்கக் கூடாதா, ஆங்? இதுக்கு நீங்க என்ன சொல்றீங்க?'' என்றார்.

ஆண்டனி பெருமூச்சு விட்டார். ''இன்னும் அதையே விடாம பிடிச்சுக்கிட்டு இருக்கீங்களா, லெமன்? என்ன பிடிவாதக்காரர் நீங்க! என் கையில ஒரு துருப்புச் சீட்டு இருக்குனு நான் சொல்வதை நீங்க இன்னும் மனசுல எடுத்துக்கலையா? அதை நான் கடைசியா உபயோகப்படுத்தத்தான் போறேன்னு சொல்வதை நீங்க நம்பலையா?''

ஆனால் மூளை சற்று மெதுவாக ஒத்துழைக்கும் ஜார்ஜ், இப்போதுதான் உடைந்தார். ''நான் இன்னமும் நடுக்கடல்ல தத்தளிச்சுக்கிட்டிருக்கேன். இந்தப் பொம்பளை யார்னு சொல்லுங்க, பேரான்? நீங்க இவளை அடையாளம் கண்டுக்கிட்டது மாதிரி தெரியுது.''

ஆனால் பேரான் தானாய் எழுந்து நெட்டைக் குத்தலாயும் விறைப்பாயும் நின்றுக் கொண்டார். ''உங்க கருத்து தவறு மிஸ்டர் லொமெக்ஸ். நான் இந்தப் பொண்ணை முன்னே பின்னே பார்த்தது கிடையாது. இவ எனக்கு முழுக்கமுழுக்க ஓர் அந்நியன்.''

''ஆனா..'' - பயந்துப் போய் அவரையே முறைத்தார் ஜார்ஜ்.

தற்போது அவரை அறையின் ஒரு மூலைக்குத் தள்ளிக் கொண்டு போன பேரான், அவருடைய காதுகளுக்கு மட்டும் என்னத்தையோ முணுமுணுத்தார். ஜார்ஜின் முகம் மெதுமெதுவாய் சிவக்க ஆரம்பிப்பதையும் அவருடைய உருண்டையான கண்கள் பிதுங்கிக் கொண்டு வெளியேறுவதையும் வலிப்பு வந்துவிடும் என்பது போல அவரது உடல் திருகிக் கொள்வதையும், கொண்டாட்டமாய் பார்த்துக் கொண்டிருந்தார் ஆண்டனி. ஜார்ஜின் தொண்டையிலிருந்து சப்தமாய் பேசினாலும் முணுமுணுப்பாய் வந்த குரல்: ''நிச்சயமா... நிச்சயமா... பார்ட்டன்லீ... இதை நீங்க சொல்லத் தேவையில்லே... எப்படியானாலும் பார்த்துக்கிறேன்... ஆ! ஆ!ஆ!... கசியவே கசியாது.''

''ஆஹ்!'' லெமன் டேபிளை உக்கிரமாய் குத்தினார். ''எனக்கு இதை ரகசியமா வெக்கணும் என்பதுல எல்லாம் அக்கறை கிடையாது. ப்ரின்ஸ் மைக்கேலின் கொலை - அது கிடையாது என்னுடைய இலக்கு. எனக்குத் தேவை கிங் விக்டர்.''

ஆண்டனி நிதானமாய் மறுத்துத் தலையசைத்தார். ''உங்களுக்காக நான் வருந்துகிறேன், லெமன். நீங்க நெஜமாவே ஒரு பிரமாதமான ஆளு. இருந்தாலும் நீங்க உங்களோட திட்டத்துல தோற்கப் போறீங்க. ஸாரி,நான் என்னோட துருப்புச் சீட்டை உபயோகிக்கும் நேரம் வந்தாச்சு.''

சொல்லிவிட்டு சட்டென்று அறைக்குக் குறுக்காய் போன அவர் அழைப்பு மணியை அடித்தார். ட்ரெட்வெல் இதற்குப் பதிலாய் வந்து நின்றான்.

''என்னோட கூட ஒரு ஜென்டில்மேன் இன்னிக்கு சாயந்திரம் வந்தார், ட்ரெட்வெல்.''

''யெஸ், ஸார். ஒரு ஃபாரின் ஜென்டில்மேன்.''

''கரெக்ட். அவரை, எவ்ளோ சீக்கிரத்துல முடியுமோ வந்து எங்களோட இணைஞ்சுக்க சொல்ல முடியுமா?''

''யெஸ் ஸார்'' - ட்ரெட்வெல் பவ்யமாய் உருவிக் கொண்டான்.

''இன்னும் எல்லோருக்கும் மர்மமாயிருக்கும் அந்த ஜென்டில்மேன் எக்ஸ் நுழையப் போகிறார்'' என குறிப்பிட்டார் ஆண்டனி. ''யாரது? இங்கே யாராவது ஊகிக்க முடியுமா?''

''இன்னிக்குக் காலையில நீங்க தந்த மர்மமான குறிப்பிலிருந்தும் இன்னிக்கு மத்தியானம் நீங்க நடந்துக் கொண்ட முறையிலிருந்தும் சொல்றேன்..'' என்றார் ஐஸக்டீன்: ''எப்படியோ நீங்க *ஹெர்ஸோ - ஸ்லோவாக்கியாவின்* ப்ரின்ஸ் நிக்கோலஸை கையகப்படுத்தியிருக்கீங்க.''

''நீங்க இப்படியா நினைக்கிறீங்க, பேரான்?''

''ஆமாம். இன்னுமோர் ஆள் மாறாட்டத்தைப் பற்றி நீங்க பேசாதவரைக்கும் நான் நினைப்பது இதைத்தான். அப்படி ஏதும் இருப்பதா எனக்குப் படலே. என்னைப் பொறுத்தவரைக்கும் உங்களோட திறமைகள் - மதிப்பிற்குரியவை.''

''தேங்க் யூ, பேரான். இந்த வார்த்தைகளை நான் மறக்கவே மாட்டேன். ஆக, நீங்க எல்லாரும், பேரானின் மேற்சொன்ன கருத்தை ஒத்துக்கறீங்க?''

காத்திருக்கும் முகங்களை ஒரு வட்டமடித்துப் பார்த்தது, ஆண்டனியின் பார்வை. லெமன் மட்டும்தான் இதற்கு பதிலேதும் தரவில்லை... மரமாய், மேஜையின் மையத்தையே தன்னையிழந்து பார்த்தபடியிருந்தார்.

ஆண்டனியின் சக்திமிகு காதுகள் அறைக்கு வெளியே உருவாகியிருந்த காலடிச் சத்தங்களைக் கிரகித்தது. ''இன்னும் கூட...'' என்று விளங்கா புன்னகையை உதிர்த்தபடி சொன்ன அவர், ''நீங்க எல்லாரும் தப்பு'' என்றார்.

துரிதமாய் கதவினை நெருங்கி மூடியிருந்த அதனை திறந்து விட்டார் அவர்.

ஒரு மனிதன் நுழைவாயிலில் நின்றுக் கொண்டிருந்தான். கறுப்பு தாடி வைத்திருந்த மனிதனவன். கண்ணில் கண்ணாடி, ஒடிந்து விடும் தேகம். தலையில் பெரிய பாண்டேஜ் கட்டு.

''உங்க அனைவருக்கும் நிஜ துப்பறியும் மேதையை அறிமுகப்படுத்தும் வாய்ப்பினை எனக்கு தரனும்.''

ஒருவரையொருவர் முண்டியடித்துக் கொள்ளும் தள்ளல்களும் அமளியும் அறையில் விளைந்தன. பிறகு ஜன்னல் பகுதியிலிருந்து மிஸ்டர் ஹிராம் ஃபிஷ்ஷின் விநயமான குரல் ''இந்தப் பக்கத்துல குதிச்சு தப்பிச்சுட முடியாது மகனே..'' என்று ஒலித்தது. அவரே சாந்தமாய் தொடர்ந்தார்: ''இந்த வழியா நீ தப்பிப்பதைத் தடுப்பதற்காகவே இன்று சாயந்திரம் முழுக்க நான் இங்கேயே நிறுத்தி வெக்கப்பட்டிருக்கேன். ஓகே! என் துப்பாக்கி உன்னையே துல்லியமா குறி பார்த்துக் கொண்டிருப்பதை புரிஞ்சுக்கோ. நான் என்னைப் பிடிக்கவே இங்கு வந்தேன் - இப்ப உன்னை நான் பிடிச்சுட்டேன். யெஸ் - *நீதான் நான் தேடும் ஆள்!''*

அத்தியாயம் 29

# மேலும் விளக்கங்கள்

---

அன்றைய இரவுப் பொழுதில், "நீங்க எங்களுக்கு ஒரு விளக்கம் தரக் கடமைப்பட்டிருக்கீங்க, மிஸ்டர் கேட்" என்றார் ஹெர்மன் ஐஸக்டீன்.

"இதுல விளக்க ரொம்ப விஷயங்கள் கிடையாதே" என பெருந்தன்மையாய் குறிப்பிட்டார் ஆண்டனி. "நான் டொவர்க்குக் கிளம்பிப் போனேன். நாந்தான் கிங் விக்டர் எனும் எண்ணத்தாலே மிஸ்டர் ஃபிஷ்ஷூம் என்னைப் பின்தொடர்ந்துக்கிட்டே வந்திருக்கார். அங்கே, ரெண்டு பேருமா சேர்ந்து, ஒரு மர்ம மனிதன் சிறை வைக்கப்பட்டிருப்பதைப் பார்த்தோம். அவரோட கதையை முழுக்கக் கேட்டு வாங்கியிருக்கார்."

"ஆஹ்!" அலறினார் பேரான். "கைரேகைகள். அந்த பொறுக்கிப்பய சொன்ன அங்க அடையாளங்கள்.."

"அது ஒரு புத்திசாலித்தனமான ஐடியா" என்றார் ஆண்டனி. "இப்படியொரு ஐடியாவ அவன் உருவாக்கி விட்டதை மனசார பாராட்டிய நான் அதனாலேயே அதைத் தொடர்ந்து விளையாடிப் பார்ப்பதில் இறங்கினேன். இது, அந்தப் பொய் லெமனை, எக்கச்சக்கமாய் புதிராக்கிச்சு. நான் அந்த rows பற்றிய குறிப்புகள் தந்து, அதன்படி நகைகள் எங்கே பதுக்கி வைக்கப்பட்டிருக்கும்னு விளக்கினவுடனேயே, அந்த செய்தியை, அவன் அவனுடைய கூட்டாளிக்கு அனுப்பத் துடிச்சான் - நம்மையெல்லாம் அறையை விட்டு அகலாமல் அப்படியே அங்கேயே இருக்க வெச்சு! அவன் எழுதிய குறிப்பு நெஜமா பார்க்கப் போனா மேடம் ப்ரன்னுக்கு. உடனடியா அதை ஒப்படைக்கும்படி டரெட்வெல்கிட்டே அவன் சொல்ல, வேலைக்காரனும் மாடிக்குக் கொண்டு போய்

தாமதிக்காம கொடுத்திருக்கான். என்னையே கிங் விக்டர்னு (பொய்) லெமன் குற்றம் சாட்டினான் - அப்படி செய்வதன்மூலம் அறையிலிருக்கு அனைவரையும் இங்கே அங்கே நகர விடாமல் செய்வதற்காக! நாம எல்லோரும் பேச வேண்டியது முடிஞ்சு படிக்குமறை பக்கமா போனவுடனேயே, நகையோ கற்களோ அங்கே இருக்காது என்பதை அவர் புரிஞ்சுக்கிட்டார்.''

ஜார்ஜ் செருமினார். பகட்டாய் சொன்னார்: ''மிஸ்டர் கேட்... நீங்க செய்திருக்கும் அனைத்துமே கண்டிக்கத்தக்கதுனு நான் சொல்ல வேண்டியிருக்கு. உங்க திட்டத்துல ஒரு சின்ன தடுமாற்றம் நேர்ந்திருந் தாலும், நம் நாட்டின் முக்கியமான சொத்து ஒன்று கண்டுபிடிக்கவே முடியாத அளவுக்குப் பறிபோயிருக்கும். நீங்க செய்துள்ளவை முட்டாள்தனமானவை மிஸ்டர் கேட்... வன்மையாய் கண்டிக்கத்தக்க அளவுக்கு முட்டாள்தனமானவை.''

''நீங்க இன்னும் எங்களோட திட்டத்தின் அடியாழம் வரை புரிஞ்சுக்கலைனு நினைக்கிறேன், மிஸ்டர் லொமெக்ஸ்'' என்றார் மிஸ்டர் ஃபிஷ். ''அந்த வரலாற்றுச் சிறப்புமிக்க வைரம், லைப்ரரியில் கிடையவே கிடையாது.''

''நெவர்?''

''நெவர்!''

''ஆஹ்!''

''கவனியுங்க'' என மீண்டுமொரு சிறு விளக்கத்துக்குத் தயாரானார் ஆண்டனி. ''கவுண்ட் ஸ்டைல்பிட்ச்சின் அந்தக் குறிப்புகள் ஆரம்பத்துல ஏதை விளக்கிச்சோ அதைத்தான் குறித்து நின்றன- ரோஸ். Rose. ரோஜா. திங்கள்கிழமை மத்தியானம் இது என் மூளைக்குள் தீவிரமாய் முடிவானதும் நான் நேரா ரோஜாத் தோட்டத்துக்குள் போனேன். இதே யோசனைக்குள் ஏற்கெனவே மிஸ்டர் ஃபிஷ்ஷும் வந்திருப்பதைக் கவனிக்கணும். அங்கிருக்கும் உட்காரும் திட்டுக்கு முதுகு காட்டிக் கொண்டு, நீங்க நின்றால்... ஏழடி முன்னுக்கு நடந்து, பிறகு இடப்பக்கம் எட்டும் வலப்பக்கம் மூன்றும் நடந்து முடிந்தால், அங்கு பிரகாசமான சிவப்பு ரோஜா புதரை நாம் அடைவோம். இந்த ரோஜாக்களின் பெயர்: ரிச்மண்ட். சொத்துக்களைக் கண்டறிய வீடே உலுக்கப்பட்டிருக்கு... ஆனா யாரும் தோட்டத்தைப் பற்றிச் சிந்திக்கக் கூட இல்லை. நாளைக்குக்

காலையில நாம ஒரு சின்ன குழிதோண்டும் அளவளாவல் வெச்சுப்போம்.''

''அப்ப படிக்குமறையிலிருக்கும் புத்தகங்கள் பற்றிய கதை..?''

''அந்தப் பொம்பிளையை மடக்கிப் பிடிக்க நான் உருவாக்கிய பொறி. மிஸ்டர் ஃபிஷ் டெரஸ்ல நின்னபடி கண்காணிச்சுக்கிட்டே இருந்தார். அந்த உளவியல் கணம் வந்ததும், விஸில் தந்தார். நானும் ஃபிஷ்ஷுமா சேர்ந்து டொவர் வீட்டுல ஒரு ராணுவச் சட்டத்தை உடனடியா அமல்படுத்தினோம். அதன் மூலமா கூட்டாளிகள் 'பொய் லெமனுடன்' தொடர்புக் கொள்வதை முழுக்கவும் அறுத்தோம். அங்கிருந்து உடனடியா கிளம்பி விடும்படி 'பொய் லெமன்' அவனுங்களுக்கு தகவல் அனுப்பி யிருந்தார். அப்படியே பண்ணியாச்சுனு நாங்க பதில் அனுப்பினோம். அதனால தன் திட்டங்களுடன் தொகுசா பிரயாணிச்சான் அவன்.''

''ஆஹாஹா'' என்ற வார்ட் கேட்டர்ஹாம், ''எல்லாமும் சுபமாவும் திருப்திகரமாவும் க்ளியராயிடுச்சுனு நினைக்கிறேன்'' எனறார்.

''ஒன்றைத் தவிர'' என்றது, ஐஸ்லடீன்.

''என்னது அது?''

அந்தப் பெரும் நிதி நிர்வாகி, ஆண்டனியை வைத்த கண் வாங்காது முறைத்தார். ''என்னை எதற்காக நீங்க இங்கே கொண்டு வந்திருக்கீங்க? ஜஸ்ட், இந்த நாடகக் காட்சிகளையெல்லாம் பார்த்து ரசிக்கவா?''

ஆண்டனி மறுப்பாய் தலையசைத்தார்.

''நோ, மிஸ்டர் ஐஸக்டீன். நீங்க பிஸி மனிதன். ஒவ்வொரு நொடியும் உங்களுக்குப் பணம் தருபவை. ஆங்... நீங்க இங்கே எதுக்காக ஒரிஜினலா வந்தீங்க?''

''ஒரு கடன் பற்றி பேச்சுவார்த்தை நடத்த.''

''யாரோட?''

''ஹெர்ஸோ - ஸ்லோவோக்கியாவின் ப்ரின்ஸ் மைக்கேலுடன்.''

''வெகு சரி. இப்ப ப்ரின்ஸ் மைக்கேல் காலமாகியாச்சு. இந்நிலையில், அதே தொகையை, அதே சட்டதிட்டங்களுடன், அவருடைய உறவான நிக்கோலஸுக்கு உங்களால தர முடியுமா?''

''அவரை உங்களால கொண்டு வந்து நிறுத்த முடியுமா? அவர் காங்கோவில இறந்தாச்சுனுல்லே நெனச்சுக்கிட்டிருக்கேன்.''

''அவர் கொல்லப்பட்டுட்டார்தான். யெஸ், நாந்தான் அவரைக் கொன்னேன். ஓ, நோ, அப்படி பார்க்காதீங்க! நான் ஒரு கொலைக்காரன் கிடையாது. நாந்தான் அவரைக் கொன்னேன் அப்படினா - அவர் இறந்தாச்சு எனும் சேதியைப் பரப்பினது நாந்தான்னு சொல்ல வரேன். நான் ப்ரின்ஸைக் காட்டுவதாய் சத்தியம் செஞ்சு தரேன் மிஸ்டர் ஐஸக்டீன். அதை இப்பவே நான் பண்ணலாமா?''

''முடியுமா?''

''யெஸ். நான் தான் அது. நிக்கோலஸ் செர்ஜியஸ் அலெக்ஸாண்டர் ஃபெர்டினன்ட் ஓப்லோவிட்ச். ஆனா நான் வாழ நினைச்ச வாழ்க்கையை வாழ்ந்தே ஆகணும் எனும் ஒரே காரணத்தால நான் ஆண்டனியா காங்கோவிலிருந்து வெளிப்பட்டேன்.''

கேப்டன் ஆன்ரஸ்லி துள்ளியெழுந்தார். ''இது முட்டாள்தனம்'' என்றார். ''நம்ப முடியாது. நம்பவே முடியாதது. என்ன பேசறோம்னு ஜாக்கிரதையா பேசுங்க, ஸார்'' என்றார்.

''எத்தனை சாட்சிகள் வேணுமோ அத்தனை நிரூபணங்களையும் என்னால கொடுக்க முடியும்' என்றார் அவர் சாந்தமாய். ''இங்கிருக்கும் பேரானையும் என்னால சாந்தப்படுத்த முடியும்னு நினைக்கிறேன்.''

பேரான் தலையைத் தூக்கிப் பார்த்தார். ''உங்க சாட்சிகளை நானே சரிபார்க்கலாம் - யெஸ். ஆனா எனக்கு அதுலே எதுவும் வேணாம். உங்க ஒரு வார்த்தை போதுமெனக்கு. மேலும் உங்களோட ஆங்கிலேய தாயாரை அப்படியே நீங்க உரிச்சு வெச்சுக்கிட்டுப் பொறந்திருக்கீங்க. பலமுறை நான் எனக்குள்ளே சொல்லிக்கிட்டிருக்கேன். 'இவன் ஏதோ ஒர் உயர்குடில பிறந்திருக்கணும்' அதுதான் எத்தனை நிஜம்!''

''நீங்க எப்பவுமே என் வார்த்தைகளை அப்படியே நம்பியிருக்கீங்க. பேரான்'' என்றார் ஆண்டனி. ''இனிவரும் நாட்கள்ல உங்களோட இந்த நம்பிக்கையை நான் மறக்கவே மாட்டேன்னு உத்தரவாதம் தரேன்.''

பிறகு, எவ்வித உணர்ச்சிப் பெருக்குமற்றிருந்த சூப்பரின்டெண்டண்ட் பேட்டிலின் முகத்தைப் பார்த்தார் ஆண்டனி. ''என் நிலைமை நிச்சயமற்ற ஆபத்துலேயே இருந்தது என்பதை நீங்க புரிஞ்சுப்பீங்க''

என்றார். "இந்த வீட்டிலிருக்கும் எவரையும் விட ப்ரின்ஸ் மைக்கேல் வழியிலிருந்து அகற்றப்பட்டுவிட வேண்டும்னு நான்தான் அதிகமா குறி வைக்கப்பட்டிருப்பேன் என்பது சுலபமா கண்முன் விரியும் காட்சி - ஏன்னா அவருக்கு அடுத்து பீடத்துக்கு வருவது நானே. பேட்டில் குறித்து நான் அதீத பயத்துலதான் இருந்தேன். என்னை அவர் சந்தேகப்படறார் என்பதே என் மாறாத எண்ணம் - ஆனா அதுக்கு அவருக்கு ஓர் இலக்கு கிடைக்காது என்பதுல மட்டும் நான் நிம்மதியா இருக்க முடிஞ்சது."

"ஒரு நொடி கூட நீங்கதான் அவரை சுட்டதுனு நான் நெனச்சது கிடையாது, ஸார்" என்றார் பேட்டில். "இப்படிப்பட்ட கேஸ்கள்ல எங்களுக்குள்ளேயே உள்ளுணர்வுகள் எழுந்து வழிகாட்டும். ஆனா எது குறித்தோ நீங்க பயப்படறீங்கன்னு மட்டும் எனக்குத் தெரிஞ்சுது. எனக்கு நீங்க ஒரு புதிராத்தான் பட்டீங்க. நீங்க யாரென்பது எனக்கு முன்னாடியே தெரிஞ்சிருந்தா, நிச்சயமா ஏதோ சாட்சிகளைத் திரட்டி உங்களை நான் கைது பண்ணியிருப்பேன்."

"உங்க கண்களிலிருந்தும் ஒரு ரகசியத்தை என்னால மூடி மறைக்க முடிஞ்சிருக்கும்னு நினைக்கும்போது எனக்குப் பெருமையாயிருக்கு. என்கிட்டேயிருந்து மீதி அனைத்து ரகசியங்களையும் நீங்க ஸப்ஜாடா எடுத்துட்டீங்க. உங்க தொழிலில் நீங்க அடிச்சுக்க முடியாத திறமைசாலி. பேட்டில், உங்களால, ஸ்காட்லாண்ட் யார்டை நான் இனி எப்பவும் மரியாதையாகவேதான் நினைச்சுப் பார்ப்பேன்."

"மிக ஆச்சரியமானது" என முணுமுணுத்தார் ஜார்ஜ். "நான் இதுவரை கேள்விப்பட்ட கதைகளிலேயே மிக அதிசயமானது. எ-எ-என்னால இதை நம்பவே முடியலே, பேரான். இதெல்லாம் உண்மைதான்னு நீங்க..."

குரலில் சிறு கடினத் தன்மை கொண்டு வந்து "மை டியர் லொமெக்ஸ்" என அழைத்த ஆண்டனி சொன்னார்: "ஆவண சாட்சிகளை முன்னால கொண்டு வந்து வைக்காமல், பிரிட்டிஷ் வெளியுறவு அமைச்சகத்தை எனக்கு ஆதரவா பேசும்படி நான் கேட்க மாட்டேன், போதுமா? இப்போதைக்கு நாம கலையலாம் என்பது என் எண்ணம். பேரான், நான் மற்றும் ஐஸக்ஸ்டீன் மட்டும் - கடன் பற்றி பேசணும்."

எழுந்து நின்றுக் கொண்டு விறைப்பாய் கால்களிரண்டையும் சேர்த்து ஒரு ஸல்யூட் போட்ட பேரான் சொன்னார்: "ஹெர்ஸோ ஸ்லோவோக்கியாவின் ராஜாவாக உங்களைப் பார்க்கும் அந்தத் தருணம்

என் வாழ்க்கையின் பெரும் பெருமை மிகும் தருணமாய் அமையும், ஸார்.''

''ஓ, அப்புறம் பேரான்..'' என்று அவருடைய கைகளில் தன் கையைப் புகுத்தி விளையாட்டாய் நெருக்கிக் கொண்ட ஆண்டனி ''சொல்ல மறந்துட்டேனே. இதுல ஒரு முடிச்சு இருக்கு'' என்றார். ''நான் இப்ப கலியாணமானவன்.''

ஓரிரு அடிகள் பின்னுக்குப் போனார் பேரான். அவருடைய நடவடிக்கையில் அதிருப்தி கூடியது. ''ஏதோ தப்பு நடந்திருக்குனு நினைச்சேன்'' என எகிறினார். ''ஆப்பிரிக்காவுல ஏதோ கறுப்பு பொம்பிளையை மணந்திருக்கார்.''

''ஏய், ஏய்... அத்தனை தூரத்துக்கு தப்பா எதுவும் நடக்கலே'' என்றார் ஆண்டனி சிரித்தபடி. ''அவ வெள்ளைக்காரிதான், உடம்பு முழுக்க.''

''குட், யார்?''

''குழப்பிக்க வேணாம். இந்தத் தகுதிக்கு அவ ரொம்பவே பொருத்தமானவ. ஆங்கிலேயனின் மக. அவளுக்கு *ஹெர்ஸோ - ஸ்லோவோக்கியா* தெரியும் என்பது கூடுதல் அனுகூலம்.''

''மைகாட்'' என கதறிய ஜார்ஜ் - ''அது - அது - விர்ஜீனியா ரேவல் இல்லையே.''

''யெஸ்'' என்றார் ஆண்டனி. ''விர்ஜீனியா ரேவல்.''

''மை டியர்'' என கத்திய லார்ட், ''உ- உ-உங்களை வாழ்த்தறேன். யெ-ஸ். என்ன மாதிரியான ஆளுய்யா நீர்! ரொம்ப நல்ல ஜீவன் அவ.''

''தேங்க் யூ, லார்ட். நீங்க சொல்வதையும் விட சிறந்தவ - அவ.''

ஆனால் ஐஸக்டீன் அவரை ஆர்வமாய் பார்ப்பதிலேயே இருந்தார். ''இடையூறுக்கு மன்னிக்கணும் மகாராஜா! இது எப்ப நடந்தது?''

அவரைப் பார்த்து சிரித்தார் ஆண்டனி. ''இன்னிக்குக் காலையில!''

அத்தியாயம் 30

# ஆன்டனி புது வேலையை ஏற்றுக் கொள்கிறார்

''நீங்க போய்க்கிட்டேயிருங்களேன், ஜென்டில்மேன். சில நிமிஷங்கள்ல நான் வரேன்'' என்றார் ஆண்டனி.

அனைவரும் ஒருவர்பின் ஒருவராய் வெளியேறும் வரை காத்திருந்த அவர், பிறகு சுவரில் படமொன்றினைப் பரீட்சித்தபடி நின்றுக் கொண்டிருந்த பேட்டில் பக்கமாய் போனார்.

''பேட்டில்? என்னை என்னவோ கேட்க நினைக்கிறீங்க, இல்லையா?''

''வெல், ஆமாம் ஸார். ஆனா, அதெப்படி உங்களுக்குத் தெரியும்னு எனக்குத் தெரியலே. சாதுர்யம் அதிகம் செறிந்த ஓர் ஆளாத்தான் இந்தக் கூட்டத்துல உங்களை நான் தனித்துக் குறிச்சு வெச்சிருந்தேன். இறந்துப் போன பெண்மணி, குயின் வாராகானு நான் எடுத்துக்கிறேன். சரிதானே?''

''வெகு சரி, பேட்டில். இது மூடி மறைக்கப்பட்டு விடும்னு நினைக்கிறேன்.''

''இதுக்கு நீங்க மிஸ்டர் லொமெக்ஸைத் தாராளமா நம்பலாம். யாருக்கும் இது எப்பவும் தெரிய வராது. இங்கேயே பலருக்கும் இது தெரிஞ்சிருந்தாலும் அதிகாரப்பூர்வமா வெளியே கசியவே செய்யாது.''

''இதைத்தானா நீங்க என்கிட்டே கேட்க நினைத்தது?''

''நோ, ஸார்.. இது வெறும் ஆரம்பம். நான் அதிகபட்ச உரிமை எடுத்துப்பதா நீங்க நினைக்கலேனா கேட்கிறேன். எது, உங்களுடைய நிஜப் பெயரையே உதறிவிடும்படி செஞ்சது?''

"நீங்க எது வேணும்னாலும் கேட்கலாம் ஸார், நான் சொல்வேன். பரிசுத்தமான சில இலக்குகளுக்காகத்தான் நான் என்னையே கொன்னுக்கிட்டேன். பேட்டில், என் தாயார் ஆங்கிலேயர். நான் இங்கிலாந்துலதான் கல்வி கற்பிக்கப்பட்டேன். ஹெர்ஸோ - ஸ்லோவோக்கியாவை விட இங்கிலாந்து மேலதான் எனக்கு ஈர்ப்பு அதிகம். சின்னப் புள்ளையா இருந்தபோது எனக்கு ஜனநாயக ஏற்பாட்டின் மீது அதிக நம்பிக்கை விளைந்திருந்தது. அனைவரும் ஒன்றே எனும் சகோதரத்துவம்... அப்பழுக்கற்ற உயர் லட்சியங்கள் மீதான நம்பிக்கை...! ராஜா இளவரசர் போன்ற ஏற்பாட்டை நான் நம்பலே.."

"ஓ, அதுக்கப்புறம்?" - சாதுர்யமாய் கேட்டார் பேட்டில்.

"ஓ, அதுக்கப்புறம்?! நான் உலகம் பூரா சுற்றினேன். சமத்துவமே எங்கும் இல்லே. இப்பவும் கூட எனக்கு ஜனநாயகத்தின் மீதுதான் நம்பிக்கை என்பதைக் குறிச்சுக்குங்க. ஆனா இதை, ஜனநாயகத்தை, நீங்க மக்கள் மீது திணிக்க வேண்டியிருக்கு - வாயில போட்டு குச்சியால குத்தி தொண்டைக்குள்ளே செலுத்துவதைப் போல. ஆண்கள் சகோதரர்களாக இருக்க விரும்பவில்லை. பிறகாவது என்றாவது ஒருநாள் இப்படியொரு உயர் நிலை உருவாகலாம். ஆனா இப்போதைக்கு அப்படி யாருமே இல்லே. சகோதரத்துவம் எனும் வார்த்தையின் மீதான என் நம்பிக்கை போன வாரம் நான் லண்டன்ல வந்து இறங்கினவுடனேயே மடிஞ்சுப் போயிடுச்சு. ரயில்வே ஸ்டேஷன்ல ட்ரெயின்ல ஏறும் மற்றவர்களுக்கு வழிவிடாம அப்படியே கல் போல நின்னுக்கிட்டருப்பவங்களைப் பார்த்தவுடனேயே - அந்தக் குரூர குணத்தினைக் கண்டவுடனேயே - எனக்கு இப்படிப்பட்ட அவநம்பிக்கை உருவாகிடுச்சு. கெஞ்சிக் கூத்தாடி யாரையும் ஒரே இரவுல தேவதைகளா ஆக்கிட முடியாதுனு புரிஞ்சுக்கிட்டேன். இதுக்கு சட்டம் வேணும். வாழ்க்கை சக்கர சுழற்சியில ஒருத்தருக்கொருத்தர் நாகரீகமா நடந்துக் கொள்ளும் உயர் ஸ்தானத்தை உருவாக்க, அப்படிப்பட்ட நடத்தைகளைத் திணிக்கும் சட்டம் வேணும். ஒருத்தருக்கொருத்தர் சகோதரர் எனும் எண்ணத்துல எனக்கு அசையா நம்பிக்கை உண்டு - ஆனா அது இன்னமும் முளைக்கக் கூட இல்லே. இன்னும் பத்தாயிரம் வருடங்கள் கூட பிடிக்கலாம். இதுல பொறுமையிழப்பதுல அர்த்தம் கிடையாது. மாற்றம் என்பது மிக மெதுவான ஓரியக்கம்."

''உங்களுடைய இந்தப் பார்வையினுள்ளே நான் ஈர்க்கப்பட்டேன்'' என்று கண்ணடித்தபடி சொன்னார் பேட்டில். ''நான் சொல்வதுல உங்களுக்கு சங்கடமில்லைனா நீங்க நிச்சயமா ஒரு சிறப்பான ராஜாவாக அங்கே பரிமளிக்கலாம்.''

''தேங்க்யூ பேட்டில்'' என்றார் அவர் ஒரு பெருமூச்சுடன்.

''இதுல நீங்க பெரிய சந்தோஷம் அடைவது போல தெரியலியே?''

''ஓ, எனக்கு தெரியலே. எனக்கு இது ஒரு கூத்தாத்தான் இருக்கப் போகுது. இது ஒருத்தனை தினசரி நடவடிக்கைகள் எனும் ஒரு வட்டத்துக்குள் கட்டிப் போடுது. எனக்கு பிடிக்காதது இது.''

''ஆனா இதை நீங்க உங்க கடமைனு எடுத்துக்கிட்டாகணும், ஸார்.''

''ஓ கடவுளே, நோ! கடமையை நிறைவேற்ற எப்போதுமே ஒரு பொண்ணுதான் தேவை. எப்போதுமே.''

''ம்..''

''ஆங், சொல்லுங்க பேட்டில், நீங்க எப்பவாவது காதலில் விழுந்ததுண்டா?''

''நான் திருமதி பேட்டிலுடன் மிகுந்த நெருக்கம் கொண்டவன், ஆண்டனி!''

''திருமதி பேட்டிலுடன்... ஓ, அது கேட்கலே நான். இந்த விஷயமே வேற, அதாவது...''

''எக்ஸ்கியூஸ் மீ, ஆண்டனி. உங்களோட அந்த ஆள் ஜன்னலுக்கு வெளியே நின்னுக்கிட்டிருக்கான்.''

''போரீஸ்? அவன் அப்படித்தான். அவன் ஓர் ஆச்சரியமான ஆள். போராட்டத்துல பிஸ்டல் வெடிச்சு அந்தப் பொம்பிளை செத்துட்டது ஒரு வகையில நல்லதா போச்சு. இல்லேனா போரீஸ் அவளோட கழுத்தைத் திருகிக் கொன்னுட்டு அவ விதி இதுதான்னு அறிவிச்சிருப் பான். நீங்களும் அவனைத் தூக்குல தொங்கப் போட்டிருப்பீங்க. ஓப்லோவிட்ச் பரம்பரையின் மீதான அவனுடைய அர்ப்பணிப்பு குறிப்பிட வேண்டிய ஒன்று. இதுல விசித்திரமான ஒண்ணு என்னன்னா, நான் யார்னு தெரிஞ்சுக்கிறதுக்கு முன்னாடியே, மைக்கேல் காலமான உடனே தன்னை என்னுடன் சேர்த்துக்கிட்டான் அவன். யெஸ் - இது விசித்திரம்தான்.''

''உள்ளுணர்வு'' என்றார் பேட்டில். ''நாயைப் பேல''

''எனக்குள்ளும் ஓர் அசிங்கமான உள்ளுணர்வு அப்போ இருந்தது. நான் யார்னு ஏதாவது உங்களுக்குக் காட்டிக் கொடுத்துடுமோன்னு'' என்ற ஆண்டனி புன்னகைத்தபடி, ''அவனுக்கு என்ன வேணும்னு கேட்டுட்டு வந்துடறேன்'' என்றார்.

ஆண்டனி கம்பிகளற்ற பிரெஞ்சு ஜன்னலின் வழியே டெரஸுக்கு வெளியேறினார். தனியாய் விடப்பட்ட பேட்டில், போன அவரையே பார்த்திருந்து விட்டு பிறகு சுவரின் படத்தைப் பார்த்தார். ''அவர் செய்வார்'' என்றார்.

வெளியே போரீஸ், தான் வந்ததை விளக்கிக் கொண்டிருந்தான். ''மாஸ்டர்..'' என்ற அவன் டெரஸில் வழிபண்ணிக் கொண்டு மெல்ல நடந்தான், ஆண்டனியோடு. எதைக் காட்டப் போகிறான் என்று தேடுதலோடு தொடர்ந்துக் கொண்டிருந்தார் ஆண்டனி. தற்சமயம் நின்றுவிட்ட போரீஸ், சுட்டு விரலை நீட்டி சுட்டிக் காட்டினான். எங்கும் நிலவொளி. இவர்களுக்கு முன்னால் பாறைகளால் ஆன சில இருக்கைகள். அவற்றில் இரு உருவங்கள்.

அவற்றை நோக்கி ஆண்டனி முன்னுக்கு செல்ல, இருட்டில் கரைந்தான் போரீஸ். ஒன்று விர்ஜீனியா, அந்த மற்றொரு உருவம்...

''ஹலோ... ஜோ'' என்றது. மிக பரிச்சயமான குரல். ''இது உன்னோட க்ரேட் கேர்ள்.''

''ஆஆஆ... ஜிம்மி மேக்ரத்'' அலறிவிட்டார் ஆண்டனி.

''ஒண்டர்ஃபுல்... ஒண்டர்ஃபுல்... ஜிம்மி. எந்த அதிர்ஷ்டக் கொம்பைப் பிடிச்சுக்கிட்டு நீ இங்கே வந்தே? வாவ்!''

''என்கிட்டே அந்த வாழ்க்கைப் பிரதி இருக்குதுனு நினைச்சுக்கிட்டு வந்தானுங்க. இல்லேன்னேன். அன்னிக்கு ராத்திரியே ஒரு கத்திக்குத்து எனக்கு. உடனேயே நான் உனக்குக் கொடுத்துள்ள பணி மிக ஆபத்தானதுனு புரிஞ்சுக்கிட்டேன். உடனடியா அடுத்த கப்பலைப் பிடிச்சுக்கிட்டு வந்துட்டேன்.''

''என்ன நல்ல மனசு பார்த்தீங்களா!'' என்றார் விர்ஜீனியா. ஜிம்மியின் கையைப் பிழிவது போல் குலுக்கினார். ''இப்படியொரு நல்லவர் இவர்னு ஏன் நீங்க என்கிட்டே சொல்லவேயில்லை? நீங்க, ஜிம்மி, நீங்க ஒரு பர்ஃபெக்ட் டியர்!''

புன்னகைத்துக் கொண்ட ஜிம்மி, ''உன்னைப் பற்றிய சேதியை நான் துருவிக்கிட்டிருந்தபோதுதான் மேடமைப் பார்க்கும்படி ஆனது'' என்ற அவர், ''ஆக, எல்லா கூத்தும் சுபமா முடிஞ்சாச்சு... நான் பண்ண எதுவுமே இதுல கிடையாது இல்லையா?'' என்றார்.

''இருக்கு!'' என்றார் ஆண்டனி. ''ஒரு நிமிஷம்..''

இருட்டில் வீட்டுக்குள் தாவி மறைந்தார். சில நிமிடங்களில் தாள்கள் அடங்கிய ஒரு பாக்கெட்டைக் கொண்டு வந்து ஜிம்மியின் கரங்களில் ஒப்படைத்தார். ''இப்படியே வீட்டை சுற்றிக்கிட்டு போனா கேரேஜ் வரும். அங்கே காரிருக்கு. எடுத்துக்கிட்டு 17 சதுக்கம் எனும் முகவரிக்குப் போகணும். இதுதான் பால்டர்ஸனுடைய பிரத்யேக முகவரி. இதை தருவதற்காக அவர் உங்களுக்கு ஆயிரம் பவுண்டுகள் தருவார்.''

''வாட்? வாழ்க்கை சரிதமா இது, ஆங்? அது எரிச்சாச்சுனு கேள்விப்பட்டேன்.''

''என்னை என்னனு நினைச்சுக்கிட்டிருக்கீங்க?'' என்று அதிகாரமாய் கேட்டார் ஆண்டனி. ''என்கிட்டே ஒருத்தன் வந்து கட்டுக்கதை ஒண்ணை அவிழ்த்து விடுவான்... அதை நான் நம்பிக்கிட்டிருப்பேன்னா நினைச்சீங்க? உடனேயே நான் பப்ளிஷர்க்கு போன் போட்டேன். எனக்கு வந்த போன் கால் ஒரு பொய் அழைப்புனு தெரிஞ்சுக்கிட்டேன். அதுக்கேத்தாற்போல இயங்கினேன். எனக்கு அறிவுறுத்தப்பட்டபடி ஒரு பொய்யான பாக்கெட்டைப் பண்ணினேன். தந்தேன். என் கையை விட்டு உண்மையான வாழ்க்கை சரிதம் போகவேயில்லை.''

''என்ன ஆளுப்பா நீ?'' என்றார் ஜிம்மியும்.

''ஓ, ஆண்டனி'' என இப்பக்கம் கத்தி விட்டார் விர்ஜீனியா. ''அதை நீங்க பப்ளிஷ் ஆக விடப் போறீங்களா?''

''அதை தவிர்க்க முடியாது. ஆனா கவலை வேண்டாம். துளி சுவாரஸ்யம் இல்லாத எழுத்து அது. ஸ்டைல் பிட்ச்சின் எழுத்து அப்படி. கீழே உட்கார்ந்ததை நாலு பக்கத்துக்கு இழுத்திருக்கார். முழுக்கப் படிச்சேன். அதுல யாரும் குற்றம் சொல்லப்படலே. எந்த ரகசியங்களும் கொஞ்சமும் வெளியாகல. சொல்லப் போனா, அதுல, இத்தனை நாளா உலகமே பயந்தது போல ஒண்ணுமே இல்ல.''

அங்கு சிறு அமைதி நிலவியது. ஆண்டனிதான் சிறு சிரமப்பட்டு அதனை உடைத்தார். ''நான் இப்ப ஒரு உண்மையை உன்கிட்டே சொல்ல வேண்டியிருக்கு, விர்ஜீனியா.''

''ஓ, காட். ஒண்ணும் வேணாம். என்னைக் கல்யாணம் கட்டறதுக்கு முன்னாடி உனக்கிருந்த பெண் தொடர்புகள் பற்றியெல்லாம் எனக்குத் தெரிய வேண்டிய அவசியமேயில்லே!''

சிரித்து விட்டார் ஆண்டனி. ''எனக்கிருந்த பெண் தொடர்பு பற்றி ஜிம்மி கிட்ட கேளு.''

''ஒரே சமயத்துல 45 பெண்கள்.''

''ஆ!''

''யெஸ். சொத்தை. அத்தனையும் படு சொத்தை. டூருக்கு வந்ததுகளைச் சொல்றேன்'' கண்ணடித்தார் ஜிம்மி.

இப்போது ஆண்டனி, ''நான் என்னோட நிஜப் பெயரை உனக்கு சொல்லிடணும்னு விரும்பறேன்'' என்றார் விர்ஜீனியாவிடம்.

''ஆ!'' என பொய்யாய் அலறிய விர்ஜீனியா, ''ஜார்ஜுக்கு வெச்சிருக்கிற 'கோலிக்கண்ணன்' போன்ற பேரெல்லாம் கிடையாதே!'' என்றார். ''திருமதி கோலிக்கண்ணன்னு என்னை கூப்பிட்டால் அது நல்லாயிருக்காது, ஆண்டனி.''

''கவனிச்சுக்கோ, என்பேர் *ஹெர்ஸோ - ஸ்லோவோக்கியாவின்* பிரின்ஸ் நிக்கோலஸ் ஓல்லோவிட்ச்.''

''ஓ, ஆண்டனி!'' - கத்தி விட்டார் விர்ஜீனியா. ''என்ன ஆச்சரியம்! அப்படிப்பட்ட உங்களை நான் கலியாணம் பண்ணியிருக்கேன்! ஓ! மேற்கொண்டு?''

''ஹெர்ஸோ - ஸ்லோவோக்கியா போவோம். ராஜா ராணியா இருப்போம். அங்கே ராஜாக்காலம் நாலு வருஷம் என்பது ஜிம்மி தரும் தகவல். போதுமா?''

''லவ் பண்ணிக்கிட்டே இருங்க'' என்ற ஜிம்மி இருட்டில் மறைந்தார். சற்று நேரத்தில் கார் புறப்படும் ஓசை கேட்டது.

''ஏதாவது ஒரு வேலையைக் கொடுத்து ஜிம்மியை விரட்டணும்னு நினைச்சேன்'' என்றார் ஆண்டனி. ''கலியாணம் ஆச்சு. ஆனா ஒரு நிமிஷம் தனியா உன் கூட நான் இருக்கலே.''

''நாம சேர்ந்து உழைப்போம்'' என்றார் விர்ஜீனியா வானத்தைப் பார்த்தபடி. ''கொலை செய்பவர்களைக் கொலை செய்யாதேனு

போதிப்போம். கொள்ளையர்களைக் கொள்ளை அடிக்கக் கூடாதுனு மாற்றுவோம்.''

''இப்படிப்பட்ட பரிசுத்தமான கொள்கைகளைக் கேட்க எனக்கு ஆனந்தமாயிருக்கு'' என்றார் ஆண்டனி.

''நீங்க ராஜாவாக மகத்தான முறையில இயங்குவீங்க. ராஜ விசுவாசம் - அது உங்க ரத்தத்திலேயே இருக்கு. நாடே திருந்தும். சுபீட்சமாகும். யெஸ்.''

அப்படியே விர்ஜீனியாவை ஆண்டனி அள்ளிக் கொண்டார். விழி மடல்கள், மணக்கும் ப்ரவுன் நிறக் கூந்தல், இதழ்கள் என...

சுபம்

ரு வாழ்க்கை சரிதம்...

அதனை பாதுகாக்கப்படும்பாடு...

ஒரு கொலை...

அதற்கான துப்பாக்கி தரும் திருப்பங்கள்...

மறைக்கப்பட்டுள்ள அரசாங்க நகைகள்...

அவை இருக்கும் இடம் குறித்து சாதுர்ய சிந்தனைக்கு தீனியாக அமையும் சில ரகசிய சங்கேத குறிப்புகள் மேலும் அப்புதையலைக் கண்டுபிடிக்கும் மேதமை...

இளைய காளை ஒருவன், எதிர்பாராவிதமாக வெளியுறவுத் துறையின் ரகசியம் குறித்த ஒரு கசிவு, பிளாக் மெயில் மற்றும் இவையிரண்டையும் இணைக்கும் ஒரு கொலை ஆகியவற்றில் சிக்கிக்கொண்டு விட, மேற்சொன்ன துப்பறிதல்கள் எல்லாம் ஒவ்வொன்றாக முளைக்கின்றன.

கதையோடு ஒத்துவரும் திருப்பங்களும் முடிச்சுகளும் மிக அழகாக அகதாவால் வேயப்பட்டுள்ளன. அவற்றை அவர் அவிழ்க்கும் விதம், விநோதம். இத்தனை துப்பறிதல் உண்டு, இக்கதையில்...




ISBN 978-81-8402-585-9

